# பதார்த்த குணபாடம்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 329

# பதார்த்த குணபாடம்

(பதார்த்தகுண பல்பொருள் விளக்கம்)

சித்தமருத்துவக் கலைஞர்
டாக்டர். மு. சௌரிராஜன்,
சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்,
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

2006 ] [ விலை : ரூ. 160 - 00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : பதார்த்த குணபாடம் |
| பதிப்பாசிரியர் | : டாக்டர் மு. சௌரிராஜன், |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 329 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : ஜீலை 2006 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 24 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 624 |
| படிகள் | : 1000 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : மருத்துவம் |
| விலை | : ரூ. 160 - 00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தமிழின் தொன்மைபோல் தமிழ் மருத்துவமும் தொன்மையும், சிறப்பும் கொண்டது. தமிழ் மருத்துவ முறைகளைத் தோற்றுவித்த பெருமை சித்தர்களைச் சாரும். எனவே இம்மருத்துவம் சித்தமருத்துவம் எனக்கூறப் படுகிறது.

"***நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்***
***வாய்நாடி வாய்ப்பச் செயல்***" என்றார் திருவள்ளுவர்,

நோயை அறிந்து, அதன் காரணம் அறிந்து அதைப் போக்கும் வழிகண்டு போக்குதல் வேண்டும் என்பது பொருள்

வாழும் சூழல், உட்கொள்ளும் உணவு, கிட்டும் வசதிகள், உயரும் உழைப்பு இவை காரணமாக ஒவ்வொருவரின் உடலிலும் மாற்றங்கள் நிகழ்கின்றன. இவ்வுடல் பூதச்சேர்க்கைகள் ஐந்தால் இயற்றப்பட்டது. ஐம்பூத இணைப்பால் இவ்வுடல் வாத பித்த கப குற்றங்கள் எனப்படும் முக்குற்ற நிலையை அடைகின்றது. இதன் பயனாய் மனித இனம் பிணியால் பீடிக்கப்பட்டு துன்புறுகிறது.

இந்நிலையினின்றும் விடுபட்டு மனித சமுதாயம் உய்வதற்கு வழிதேடும் வகையில்தான் சித்தர்கள் ஒவ்வொரு வகையான மூலிகைகளையும், ஒவ்வொரு வகையான நோய்களைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்தி வந்தனர். "யான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுகவே" என்னும் பெரும் நோக்கத்தையும், அனுபவத்தையும் நூல் வடிவில் அவர்கள் பாடிவைத்தனர்.

அவ்வாறு பாடிவைத்த நூல்களில் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியிலிருந்து கையெழுத்துப் பிரதியாக அரியணை ஏறிய பதார்த்த குணபாடம் என்னும் இந்நூலில் உள்ள பாடல்களைத் தவறு ஏற்படா வண்ணம் மூலப்படியில் உள்ளபடியே எழுதிப் பொருள் எழுதியுள்ளார் மருத்துவர் மு.செளரிராஜன் அவர்கள்.

பதார்த்த குணபாடம் எனும் இந்நூல் தற்போது மூன்றாம் பதிப்பாக வெளிவருகிறது. இம்மூன்றாம் பதிப்பும் மருத்துவ உலகில் சிறந்த இடத்தில் வைத்துப் பேசப்படும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

இப்பதிப்பு வெளிவர உறுதுணை நின்ற நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூலக முன்னாள் வெளியீட்டு மேலாளர் திரு குடவாயில் பாலசுப்ரமணியன் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இத்தொகுதி தானியங்கி அச்சு இயந்திரத்தில் அச்சிடப்பட்டு உள்ளது குறிப்பிடத்தக்கது. இந்தப்பணியைச் சிறப்பாகச் செய்த கணினி பிரிவினருக்கும் மற்றும் துணைநின்ற ஏனையோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலினை அச்சிட நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*சா. விஜயராஜ் குமார்*, இ.ஆ.ப.,
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*

தஞ்சாவூர்,
11 -7-2006.

# பதிப்பாசிரியர் முகவுரை

உலக மொழிகளில் மிகப்பழமையானது தமிழ்மொழி. தமிழ் மருத்துவமுறையும் அத்தகையதே. இம்மருத்துவ முறைகளைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால் இம்மருத்துவத்திற்குச் சித்த மருத்துவம் என்று பெயர் அமையலாயிற்று.

பண்டைக்காலம் தொட்டு உலகில் பிறந்து, வளர்ந்து மறைகின்ற உயிரினங்களைப் பாகுபாடு செய்து ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர், ஆறறிவுயிர் என ஆறுவகைகளாக உயிரினங்களைப் பகுத்துச் சித்தர்கள் கூறியுள்ளார்கள். அவற்றுள் ஓரறிவுயிர் என்பவை உலகிலுள்ள புல், பூண்டு, மரம், செடி, கொடி ஆகிய இவற்றைக் குறிக்கும். உடம்பினால் பொருந்தி அறியக்கூடிய உற்றறிவு அல்லது தொட்டறிவு ஒன்றுமட்டும் உள்ள உயிரினங்கள் இவை. எனவேதான் "ஒன்றறிவதுவே உற்றறிதுவே" என்று பொதுவாகக் கூறியதோடு நிற்காமல்,

"புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"

என்று சிறப்பாக இந்த உயிரினங்களுக்கு இலக்கணம் கூறியுள்ளார் தொல்காப்பியர்.

இத்தகைய ஓரறிவுயிர்களான புல், பூண்டு, செடி, கொடி, மரம் ஆகிய இவைகள் மருந்திற்குப் பயன்படுவதினால் அவைகளை மூலிகைகள் என்று அழைக்கப்படுவது உலக வழக்கு. சித்தர்கள் இத்தகைய

மூலிகைகளின் இலை, தளிர், வேர், பட்டை, காய், கனி வித்து, பூ மற்றுமுள்ள பாகங்களை எல்லாம் நன்கு ஆராய்ந்ததன் பயனாக அவை அனைத்தும் மருத்துவத்திற்கு எவ்வாறெல்லாம் பயன்படுகிறது என்பதைக் கண்டுபிடிக்கப்பட்டது.

சித்த மருத்துவத்துறையில் மூலிகைகளையே மருந்திற்குப் பயன்படுத்துவார்கள் என்னும் கருத்து பரவலாகத் தமிழ்நாட்டில் உள்ளது. இக்கருத்திற்குக் காரணம் இயற்கையின் திருவருளால் நாடெங்கிலும் முளைத்து வருகின்ற செடி, கொடிகளும் பெரும்பாலும் சித்த மருத்துவத்துறைக்குப் பயன்பட்டு வருவதே யாகும். இது சித்தமருத்துவத்திற்குரிய தனிச்சிறப்பை எடுத்துக் காட்டுவதாகும்.

பண்டைய தமிழ் மக்கள் அன்றாட உணவு முறைகளில் கடைபிடித்துவந்த பழக்கங்களே அவர்கள் நீடித்த ஆயுளுடனும், திடமான உடலுறுதியுடனும் வாழ்ந்ததற்க் காரணமாகும். அறுசுவை உணவு, நளபாக உணவு என்பதெல்லாம் மனிதனின் வாழ்விற்குத் தேவையான உயிர்ச்சத்துக்கள் வேண்டிய விகிதத்தில் அமையப் பெற்றிருப்பதே ஆகும். இயற்கையாகக் கிடைக்கக்கூடிய இத்தகைய இவை, தளிர், பூ, காய், கனி, வித்து, வேர் இவைகளைத் தேவையான அளவிற்கு நாம் உட்கொண்டு வாழ்கின்ற போது நோய்கள் நம்மை நெருங்குவதில்லை. ஆனால் அவரவர்கள் வாழ்கின்ற சூழ்நிலை, வசதிகள், உழைப்பு இவைகளின் காரணமாக அவரவருடைய உடல்நிலையிலும் வெவ்வேறு விதமான மாறுதல்கள் ஏற்பட்டு ஐம்பூதங்களின் சேர்க்கையினாலான இவ்வுடல், வாத, பித்த, கப குற்றங்களான முக்குற்ற நிலையை அடைகின்றது. இதன் விளைவாகவே மனித இனம் நோயினால் பீடிக்கப்பட்டுத் துன்ப மடைகின்றது.

இந்நிலையினின்றும் விடுபட்டு மனித சமுதாயம் உய்வதற்கு வழிதேடும் வகையில்தான் சித்தர்கள் ஒவ்வொரு வகையான மூலிகைகளையும், ஒவ்வொரு வகையான நோய்களைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்தி வந்தனர். "தான்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுகவே" என்னும் பெரும் நோக்கத்தையும், அனுபவத்தையும் நூல் வடிவில் அவர்கள் பாடிவைத்தனர்.

அவ்வாறு பாடிவைத்த நூல்களில் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் ஓலைச்சுவடியிலிருந்து கையெழுத்துப் பிரதியாக அரியணை ஏரிய **பதார்த்த குணபாடம்** என்னும் இந்நூலில் உள்ள பாடல்களைத் தவறு ஏற்படா வண்ணம் மூலப்படியில் உள்ளபடியே எழுதிப்பொருள் எழுதியுள்ளேன்.

பதார்த்த குணபாடம் என்னும் இந்நூலில் மூலிகைகளின் இலை, தளிர், பூ, காய், கனி, விதை, வேர், பட்டை மற்றுமுள்ள பாகங்களையும் தேர்ந்த தெளிவுடன் எழுதப்பட்டுள்ளது. இந்நூலானது மருத்துவத்தொழில் புரியும் மருத்துவர்களுக்கும், மருத்துவம் பயிலும் மாணவர்களுக்கும், மக்களுக்கும் பயன்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூலைப் படித்து அனுபவ வாயிலாகப் பயன்படுத்தி இன்புறும் சித்த மருத்துவர்களும், பொதுமக்களும் இந்நூலின் பெருமையை உணர்ந்து கொள்வார்கள் என்பது நிச்சயம்.

இந்நூலை வெளியிடப் பொருளுதவி புரிந்த மத்திய அரசுக்கும், இந்த நூல் வெளிவர உதவிய தஞ்சைமாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் திரு. தி. சண்முக ராஜேஸ்வரன், இ.ஆ.ப., அவர்களுக்கும், நூலக நிருவாக அலுவலர் (பொறுப்பு) திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும்,

நல்லமுறையில் அச்சிட்டு வழங்கிய சிவகாமி அச்சகத்தார் அனைவருக்கும் எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூலைக் கண்ணுறும் அன்பர்களும், நண்பர்களும், அறிஞர்களும் ஏதேனும் குறைகள் காணப்படுமாயின் எடுத்துக்கூறித் திருத்த வேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடன் கேட்டுக்கொள்வதோடு, இம்முயற்சி நிறைவு காணவும் வேண்டுகிறேன்.

அன்பன்,

**சித்தமருத்துவக் கலைஞர்**
டாக்டர். **மு. சௌரிராஜன்**

*28, எட்டாவதுகுறுக்குத்தெரு,*
*செனாய் நகர் (மேற்கு)*
*சென்னை-30*
*7-4-1992.*



# பொருளடக்கம்

**பாலின் வகைகள்**

**தயிர்வகைகள்**



**வெண்ணெய் வகைகள்**

**மதுவீன் வகைகள்**



**தேன் வகைகள்**



**மரவகைகள்**

**கொடி வகைகள்**

**புல் வகைகள்**

**மரத்தின் சமூல வகை**

**செடியின் சமூல வகைகள்**



**கொடியின் சமூல வகைகள்**



**செடியின் கிழங்கு வகைகள்**

**புல்லின் கிழங்கு வகைகள்**



**மரத்தின் வேர் வகைகள்**

**செடியின் வேர் வகைகள்**



**கொடியின் வேர்க்குணம்**

**புல்லின் வேர்க்குணம்**



**மரத்தின் பட்டை வகைகள்**

**மரத்தின் பிசின் வகைகள்**



**மரத்தின் இலை வகைகள்**



**செடியின் இலை வகைகள்**

**கொடியின் இலைவகைகள்**



**கீரை வகைகள்**

**மரத்தின் புட்ப வகைகள்**

**மரத்தின் பிஞ்சு வகைகள்**



**மரத்தின் காய் வகைகள்**

**செடியின் காய் வகைகள்**



**கொடியின் காய் வகைகள்**

**மரத்தின் பழ வகைகள்**

**செடியின் பழ வகைகள்**



**கொடியின் பழவகைகள்**

**காய்த் தானிய வகைகள்**



**இறைச்சி வகைகள்**

**பறவைக் கறிவகைகள்**

**மீன் கறி வகைகள்**

**கடைச்சரக்கின் வகைகள்**

**பாஷாண வகைகள்**



**உலோக வகைகள்**

**மருந்து வகைகள்**

**பத்திய வகைகள்**

**வீட்டின் வகைகள்**



**ஸ்நான வீதி வகை**

**வஸ்திர வகை**



**புசிப்பு வகை**

**உண்கல வகை**



**சோற்றின் வகை**

**பதார்த்தங்களின் வகை**



**கஞ்சி வகை**

**பரிமள வகை**



**தாம்பூல வகை**

**வாகன வகை**



**சயன வகை**

**புணர்ச்சி வகை**

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.

# பதார்த்த குணபாடம்

## (பதார்த்தகுண பல்பொருள் விளக்கம்)

### பாயிரம்

### விநாயகர்துதி

ஆதி யுமைக்கருள்செ யற்புதகுண பாடத்தை
ஆதி யுமையருளா லம்புவியுட் - கோதறுநற்
செந்தமிழாற் கூறுதற்குச் செம்பவழ வேழமுகன்
கந்தமலர்ச் செஞ்சரணே காப்பு.

சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய பதார்த்த குணபாடத்தை உமாதேவியாரின் திருவருளைக் கொண்டு இவ்வுலகில் செந்தமிழில் சொல்லுவதற்குச் சிவந்த பவள நிறத்தையுடைய பிரணவ மூர்த்தியாகிய விநாயகக் கடவுளது வாசனை பொருந்திய செந்தாமரை மலரையொத்த சிவந்த திருவடிகள் காப்பாகும்.

சீரார் பதார்த்த குணபாடத் தைக்காணுந்
தாரார்கஜமுகனுஞ் சண்முகனு - நீராருஞ்
செஞ்சடைய னும்பரையுஞ் தேவ வயித்தியனும்
விஞ்சுசித்த நாதாக்களு மே.

திருவாத்தில் பூமாலையைச் சூடிய யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளும், ஆறுமுகங்களைக் கொண்ட குமரக்கடவுளும், கங்கையைச் சிரசில் அணிந்த, சிவந்த சடையினையுடைய பரமசிவனும், உமாதேவியாரும், சித்தர்களில் மேலாகிய பதினெட்டு சித்தர்களும் சிறப்புடைய பதார்த்த குணபாடத்திற்குச் சித்தர்களே காப்பவராக.

எல்லோராலும் காண்பதற்குரிய ஞானத்தின் மேம்பட்ட பூரணமாயும் தனது செய்கையில் யாவற்றையும் அழிக்கவும், தோற்றுவிக்கவும், வல்லமையுடைய தனக்கு ஒப்பு, உயர்வு இல்லாது தானே யாவர்க்கும் கடவுளாகியும் இருக்கின்ற மற்றைய நூல்களில் மறைந்து நிற்கும் முக்குணங்களை யுடைய ஞானசக்தியினிடத்துப் பற்றுகின்ற அநந்தம் என்னும் ஆகாயமும், அவ்வாகாயத்தில் தோன்றும் வாயுவும், அவ்வாயுவில் தேயுவும், அத்தேயுவில் அப்புவும், அவ்வப்புவில் பிருதிவியும் தோன்றி அப்பிருதிவி தோற்றுவிக்கப்பட்ட பொருள்களில் நெல் முதலிய மூலிகையில் அன்னமுண்டாகி அந்த அன்னத்தினால் உலகத்திலுள்ள உயிர்கள் நிலைபெற்றிருக்கும்படியான உயர்வை ஆராய்ந்துணர்ந்த பதார்த்த குணங்களைப் பற்றிச் சொல்வோம்.

# பஞ்ச பூதங்களின் குணம்

## பிருதிவியின் குணம்

பூச விரணம் பொருமல் போம் பொன்முதலாம்
ஆசையுள்ள பண்டமதிலுண்டாம்-நேச மதாய்த்
தின்றிடிற் பாண்டு செழிக்குமிகத் தேமொழியே
சென்றுலகில் மண் குணத்தைத் தேர்.

மண்ணையரைத்துப் பற்றுப்போடுவதால் வாதத்தினாலும், உதிரத்தினாலும் ஏற்படக்கூடிய கட்டிகள், இரணம், வாத பொருமல் முதலியவைகள் குணமாகும். மேலும் இரத்தினங்கள் பிறப்பதற்குரிய இடமாகும். இம்மண்ணை உட்கொள்ளுவோமேயானால் பாண்டு சோகை, மயக்கம், கல்லிரல், மண்ணீரல், வீக்கம் முதலிய நோய்கள் உண்டாகும்.

## அப்புவின் குணம்

காசமாறுந் தத்தங் கழலாது மேகமுதல்
வீசு மலரணியும் வீரியமாம் - வாசமென

உந்திவளார் குன்ம முதிரஞ் சொறியிவை யோடு
இந்த நூறுந் தண்ணீருக்கே.

அப்பு என்னும் தண்ணீரால் கண்களைப்பற்றிய பித்தகாசம், பித்தபிரமேகம், உடல்சூடு, பித்தகுன்மம், வெட்டுக்காயங்களிலிருந்து வரும் இரத்தம், சொறி, சிரங்கு முதலியவைகள் போகும். மேலும் பற்களுக்கு உறுதியையும் விந்து உற்பத்தியையும் அதிகப்படுத்திச் சரீரத்திற்கு அழகை உண்டாக்கும்.

## தேயுவின் குணம்

கண்டைக்கள னோயும், வலி, காதம்போங்-காய்த்தக்கால்
விண்டே பலபிணியும் விட்டேகும்-விண் டோய்
பொருப் பனைய விட்டமுலைப் பூவையே நாளு
நெருப்பினது குணங்காண்.

தேயு என்னும் நெருப்பினால் கெண்டக்காலில் ஏற்படக்கூடிய வலிநோய் குணமாகும். மேலும் சரீரக்கடுப்பு, நெஞ்சடைப்பு, குருத்திக்கேடு, வாதகாயத்தினால் ஏற்படக் கூடிய பல நோய்களும் குணமாகும் என்பதை அறியவும்.

## வாயுவின் குணம்

மேகக் கடுப்பை விளைவிக்கும் வீறிநின்ற
தாகமன விளைப்பைச் சாந்தி செய்யு-மேகத்தின்
புண் ணோய்க்கும் பொல்லாது பூவையரே ரூட்சைக்குக்
கண்ணோய்க்கு மாகாது காற்று.

வாயு என்கின்ற காற்றானது, வெள்ளை, வெட்டை, நீர்க்கடுப்பு முதலிய நோய்களை உண்டாக்கும். ஆனால் சரீர உட்டிணம், இளைப்பு ஆகியவைகளைக் குணப்படுத்தும் மதுமேகப்புண், சுரம், கண்நோய் இவைகளை உண்டாக்குவதுடன் பரவவும் செய்யும்.

### ஆகாசத்தின் குணம்

*உலமு மனமும்மலவா போடாதியு மண்ணுஞ்*
*சகலமுனலுங்காலுஞ் சாற்ற -அலகில்*
*அநந்தம் பொருமு மடங்கழிவுழி நல்கும்*
*அநந்தந் தனைக் கண்டறி.*

சகலவிதமான ஜீவராசிகளும், அன்னரசமும், பலவகைப்பட்ட மருந்துகளும், பிருதிவி, அப்பு, தேயு, வாயுக்களும் சொல்வதற்கு அளவிடமுடியாத எல்லாப் பதார்த்தங்களும் அடங்குவதற்கு இடந்தருகின்ற ஆகாசத்தின் தன்மையை நீ கண்டுகொள்ள வேண்டும். மேற்கூறப்பெற்ற ஐம்பூதங்களுள் ஒவ்வொன்றிலும் நின்று பிரிவுற்ற பேதங்களையும், அவற்றின் குணங்களையும் தனித்தனியே சொல்வோமேயானால் அதிகமாகும். ஆகையால் மற்றைய நூல்களில் காண்க.

## சித்தர்களைப் பற்றி சில குறிப்புகள்

தென்னிந்தியாவில் முப்பதுக்கு அதிகமான சித்தர்கள் பிரபல்யம் அடைந்திருக்கிறார்கள். பிரபலமில்லாம லிருந்தவர்கள் கணக்கிலடங்கார்.

மாயவரம்+கும்பகோணம் ரஸ்தாவில் மாயவரம் ரயில்வே மேம்பாலம் கடந்ததும் மூவலூர் என்ற ஊருக்கு இடையில் சித்தர்காடு என்ற சிற்றூர் உண்டு. அந்தப் பிரதேசத்தில் 41 சித்தர்கள் வரை அடங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது. அவர்களில் தலைமைச் சித்தர் பெயர் சிற்றம்பல நாடியார். திருச்செந்தூர் அகவல்பாடி அருளியது அவர்களே. நமசிவாய மூர்த்திகள் திருவாவடுதுறையில் திருமூலநாதர் சமாதியில் வெகுநாள் தவம் செய்து குருவின் ஆக்ஞையின் பேரில் திருவாடுதுறை ஆதினம் ஸ்தாபித்தார்.

இதுபோன்று வடதேசத்தில் 84 சித்தர்கள் வரை பிரபலமடைந்திருக்கிறார்கள் எனத்தெரிகிறது. ஒவ்வொரு

சித்தர்களைப்பற்றியும் வரலாறு சரியாய் அறிந்து குறிப்பு எழுதமுடியவில்லை. திருவள்ளுவரும், பட்டினத்தடிகளும், பத்ரகிரியாரும் சித்தர்களே.

கொங்கணர், போகரின் சிஷ்யர் எனக்கூறப்படுகிறது. இவர் ஒரு சமயம் திருமழிசை ஆழ்வாரிடம் சென்று குளிகை ஒன்றைக்கொடுத்து இது காணி கோடியைப் போதிப்பது எனக்கூற, திருமழிசை ஆழ்வார் தம் தேகத்தின் அழுக்கை உருட்டிக்கொடுத்து இது காணி கோடியாக்கும் என்று கூறினாராம். இது போன்று பலவுண்டு.

ஆயினும் பல பாடல்கள் பாடிச் சில சித்தர்கள் உலகுக்கு உணர்த்தியிருக்கிறார்கள். சில பாடல்களைக் கீழே காண்க. (பதினெண் சித்தர் பாடல்களிலிருந்து)

நட்ட கல்லையும் தெய்வம் என்று நாலு புட்பம் சாத்தியே
சுற்றி வந்து முணுமுணு என்று சொல்லும் மந்திரம் ஏதடா
நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ
(சிவவாக்கிய சித்தர் அருளியது)

இடைக்காட்டுச் சித்தர் பற்றி திருநெல்வேலி மாவட்டத்தில் கூறப்படுகிறது.

இடைக்காட்டுச்சித்தர் ஒரு காலத்தில் பஞ்சம் வந்ததால், தான் வளர்க்கும் ஆடு மாடுகள் உணவு தீனியில்லாமல் மடிந்துவிடலாம் என்று எண்ணி ஆடுமாடுகளுக்கு எருக்கிலையை (தழையை) உணவாகக் கொடுத்து வளர்த்துப் பழகிவிட்டார்கள். மழையில்லாத காலத்தில் நீரில்லாத நிலத்திலும் எருக்கிலைச்செடி முளைத்துக்கொண்டுதானிருக்கும். அதனால் எந்தப் பஞ்சத்திலும் தனது ஆடுமாடுகளுக்குத் தீனி தட்டுப்பாடு இருக்காது எனப் பழக்கி வைத்துவிட்டார்கள். எதிர்பார்த்த பஞ்சமும் வந்துவிட்டது எப்படியென்றால்,

ஒருபிரதேசத்தை நவக்கிரக நாயகர்கள் பூலோகத்தில் சோதனை செய்ய எண்ணித் தங்கள் வலிமையால் மழையின்மையை உண்டாக்கிவிட்டனர். பூமி வறண்டு போய்விட்டது. அந்தப் பிரதேச மக்களும் மடிந்தவர்கள் போக, மற்றவர்கள் தூரதேசம் சென்றுவிட்டார்கள். பஞ்சம் பிழைக்க, நவ நாயகர்கள் நாம் பரிசோதித்தப் பிரதேசம் எப்படியிருக்கிறது என்பதை நேரில் கண்டறிய வந்தார்கள். அந்த பிரதேசத்தில் ஓர் குடிசையும் ஓர் பெரியவரும் வாழ்ந்து வந்ததைக் கண்டு அதிசயப்பட்டு அந்த இடத்திற்கு வந்தது எப்படி ஆடுமாடுகளுடன் ஜீவிக்கிறார் என்பதை அறியக் குசலம் விசாரிக்க வந்தார்கள். இடைக்காட்டுச் சித்தர், வந்தவர்கள் யார் என்பதை ஞான திருஷ்டியில் அறிந்து புத்தி புகட்ட எண்ணித் தான் வளர்த்த ஆட்டுப்பாலையும், மாட்டுப்பாலையும் கறந்து, நவக்கிரக நாயகர்களுக்குக் கொடுத்து உபசரித்தார். அவர்கள் பால் அருந்திவிட்டார்கள். மேற்படி எருக்கிலை தழையுடன் ஆடுமாடுகளின் பாலானதால் நவநாயகர்கள் உடன் மயக்கம் வந்து வீழ்ந்து விட்டார்கள். சித்தர் அவர்களை அந்நிலையில் தக்க ஸ்தானம் கொடுத்து மல்லாக்கப் படுத்துப் புரட்டிப்படுக்க வைத்தார்கள்.

அந்த ஸ்தான அமைப்பால் உடனடியாக வருண பகவான் மழை பொழியவைத்துப் பிரதேசம் முழுக்கச் செழிக்கவைத்து எங்கும் நீர் நிறையச் செய்து விட்டார்கள். பின்னர் இடைக்காடர் நவநாயகர்களை எழுப்பிவிட்டார். அதன்பின் இடைக்காடர் யாரென்பதை நவநாயகர்கள் அறிந்து இடைக்காடர் தேசத்திற்குத் தேவையானதும் அவர்கள் கேட்ட வரங்களும் தந்து திரும்பலானார்கள்.

நந்த வனத்தில் ஓர் ஆண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி - மெத்தக்
கூத்தாடி கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி
(கடுவெளிச் சித்தர் அருளியது)

பாவம் செய்யாதிரு மனமே நாளைக்
கோபம் செய்யாதே யமன் கொண்டோடிப் போவான்
(கடுவெளிச் சித்தர் அருளியது)

ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்து
உதிரப் புனலிலே உண்டை சேர்த்து
வாய்த்த குயவனார் பண்ணும் பாண்டம்
வரையோட்டுக்கும் ஆகாது என்று ஆடுபாம்பே.
(பாம்பாட்டி சித்தர் அருளியது)

தாம் திமிதிமி தந்தக் கோனாரே
தீம் திமிதிமி திந்தக் கோனாரே.
(இடைக்காட்டுச் சித்தர்)

நஞ்சுண்ண வேண்டாவே அகப்பேய்
நாயன் தாழ் பெறவே நெஞ்சுமலையாதே அகப்பேய்
நீ ஒன்றும் சொல்லாதே.
(அகப்பைச் சித்தர்)

வெட்டவெளி தன்னை மெய்யென்று இருப்போர்க்குப்
பட்டயம் ஏதுக்கடி குதம்பாய்
பட்டயம் ஏதுக்கடி (குதம்பைச்சித்தர் பாடல்)

முத்து முகப்படியோ முச்சந்தி வீதியிலே
பத்தாம் இதழ் பரப்பிய பஞ்சணையின் மேலிருத்தி
அத்தையடக்கிய நிலை ஆருமில்லா வேளையிலே
குத்து விளக்கேற்றி என் கண்ணம்மா கோலமிட்டுப்
பாரோனோ
(அழுகினிச் சித்தர்)

அஞ்சிலே பிஞ்சிலே வஞ்சியரே நிதம்
கொஞ்சி விளையாடும் வஞ்சியரே
நெஞ்சில் ருத்ரன் சூழியிருப்பான் அவன்
நேருடனாமடி வாலைப் பெண்ணே.
(கொங்கணர் நாயனார்)

ஈசனை ஆசனாய்க் காணும் பேர்க்கு
இங்கு இன்பமுடன் கைலாசம் எய்தலாம்.
(திருமூல நாயனார்)

பொங்குகின்ற காமம் என்ன? சிவத்தின் கூறு
பொல்லாத ஆசை என்ன? மாலின் கூறு
மயங்குகின்ற மோகம் என்ன? மகேசன் கூறு.
(சட்டைமுனி பாடல்)

## ஸ்ரீ போகர்

### *ஸ்ரீ தண்டாயுதபாணி எனப் பெயர்வரக் காரணம்*

ஸ்ரீ போகர் என்ற சித்தர், பழநி மலையில் பலகாலம் தவமிருந்து சித்தராகியிருந்தார். ஸ்ரீசுப்ரமணியர் சிலை வைத்து அபிசேக ஆராதனை செய்து வந்தார். அவருக்கு ஸ்ரீ புலிப்பாணி என்ற சிஷ்யர் உண்டு. போகர் வைத்திய சாஸ்திரமும் அறிந்தவர். வைத்திய முறையை வெளியிட்டுமிருக்கின்றார். அஃது வழக்கத்தில் இருந்து வருகிறது. மூலிகைகளைக் கண்டறிந்து சேகரிக்க எண்ணினார். தன் சிஷ்யன் புலிப்பாணியைத் தினம் சண்முகநதி தீர்த்தம் கொண்டு ஸ்ரீ சுப்ரமணியருக்கு அபிசேகம் ஆராதனை செய்துவரச் சொல்லிப் பணித்தார்.

தான் மூலிகைகளைக் கண்டறிந்து சேகரிக்க எண்ணி, வடகிழக்குப் பகுதிக்குச் சென்று சில வருடங்களில் திரும்புவதாகக்கூறிக் கண மார்க்கத்தில் பறந்து சென்றார். செல்லும் மார்க்கத்தில் சீனா நாட்டின்மீது செல்லும்போது கூட்டம் கூட்டமாக மக்களிருப்பதை உற்றுக்கவனித்தார். பெண்கள் கூட்டம் இருந்ததையும் உற்றுக்கவனித்தார். பெண்கள் அழகிகளாகத் தெரியவந்தது. சற்றுத் தங்கி இந்த பெண்களுடன் தான் தங்கியபின் வந்த காரியத்தைத் தொடங்கலாம் என்று எண்ணி, இறங்கி அவர்களுடன் வாழ்க்கை நடத்த ஆரம்பித்தார். அங்கேயே தங்கிவிட்டார்.

சிஷ்யன் புலிப்பாணி அவர்கள் தன் குருநாதர் கூறிச்சென்று பலவருடங்களாகத் திரும்பாததால், அவரைக்காண எண்ணி தேடிச்செல்ல முடிவு செய்தார். இந்த சுப்ரமணியருக்கு பூஜை தினமும் நடைபெறவேண்டி தன்னிடம் மைசூரிலிருந்து வந்து தங்கித் தொண்டு செய்துவரும் உடையார் என்பவரை உபதேசித்து, சிஷ்யனாக்கித் தான் செய்து வந்ததைப் போல பூஜித்து வர உத்தரவு இட்டார். தன் குருவைக்கண்டு அழைத்து வருவதாகக்கூறித் தானும் சுகன மார்க்கத்தில் வடகிழக்குத் திசையில் சென்றார். செல்லும் வழியில் மக்கள் கூட்டம் கூட்டமாக இருப்பதைக்கண்டு, நின்று கவனித்தார். தன் குருநாதர் அழகிய பெண்களின் மத்தியிலிருப்பதைக் கண்டுகொண்டார். இந்த நிலையில் காண்பது நன்றன்று என எண்ணி மாறுரூபத்தில் தானும் அங்கு இறங்கிக் குருநாதரை அணுகிக் குசலம் கேட்டறிந்து தங்கினார். குருநாதருக்கு வந்த காரியம் மற்றும் யாவும் எடுத்துரைத்து திரும்ப வேண்டி முக்கிய காரியங்களைக் கூறி கூடவருமாறு அழைக்க, அவர் சம்மதம் தந்துவிட்டார். ஆனால் குருநாதர் தன் நிலையை எடுத்துரைத்தார். தவத்தின் மகிமையாவும் இழந்துவிட்டதால் தான் பறந்துவரும் சக்தியில்லை என்பதைக் கூறினார். (மகாசீனாசாரம் என்ற வஜ்ரோலி முத்திரையை பழகும்போது போகர் தன்சக்தி முழுவதும் இழந்துவிட்டார்) வரச் சம்மதித்தால் தானே தூக்கிச் செல்வதாகக் கூறி புலிப்பாணி அவர்கள் தன் முதுகின்மேல் அமர்ந்துக் கொள்ளச்செய்து தானே சுமந்துகொண்டு சுகன மார்க்கத்தில் வந்துவிட்டார். பழநிக்கு வந்து மேற்கொண்டு காரியங்களையும் தொடர்ந்து செய்யத் தன் சகல வலிமையையும் இழந்துவிட்டதால் மறுபடியும் குருநாதரைப் பெற்று உபதேசம் வாங்கித் தவம் செய்து முன்னிலையை அடைந்தால் அல்லது ஏதும் செய்யமுடியாது இருந்தார். குருவை எளிதில் பெற முடியாததால் சிஷ்யனைப் புலிப்பாணியையே உபதேசிக்கக் கூறினார். ஸ்ரீ குருநாதருக்கு சிஷ்யன் உபதேசிப்பது அந்த விதிகளுக்கு முரணானது என்று கூறி மறுத்தார். வேறு உபாயத்தைக் கண்டு பின் போகர்கூறினார். தண்டத்தை

வைத்து அதில் உபதேசிக்கத் தண்டத்திலிருந்து தான் உபதேசம் பெற்றுத் தவமியற்றி வர முடிவு செய்து அதன்படி புலிப்பாணி அவர்கள் தண்டத்தில் உபதேசிக்க உடன் அதிலிருந்து போகர் உபதேசம் பெற்றார். அதன்பின் பல காலம் தவமிருந்து பழைய நிலையைப் பூரணமாகப் பெற்றார் போகர்.

அதனால்தான் பழநிமலை முருகனுக்கு ஸ்ரீ தண்டாயுதபாணி என்ற பெயரும் அது காலம் தொன்று தொட்டு வழங்கலானது.

ஸ்ரீ போகர் மீண்டும் மூலிகைகளைச் சேகரிக்க வேண்டி மேற்குதிசை, மத்தியகிழக்கு நாடுகள் வழியாகச் சென்று எகிப்து, இத்தாலி முதலிய தேசம் சென்று பல மூலிகைகளைக் கொண்டுவந்தார். பழநிமலையில் சிறிய விக்ரகத்தைப் பக்கத்தில் வைத்துவிட்டு, மூலிகைகளால் நவபாஷாணத்தில் ஸ்ரீசுப்ரமணிய விக்ரகம் செய்து வைத்தார் போகர், அந்த நவபாஷாண விக்ரகம்தான் தற்போது ஸ்ரீசுப்ரமணியர், ஸ்ரீமுருகன், ஸ்ரீதண்டாயுதபாணி எனப்பெயர்களில் வழங்கிவருவதாகும்.

## எல்லாம் வல்ல சித்தர்

**ஸ்ரீவல்லப சித்தர்**

சுந்தரநாதர் என்ற சித்தர்பெருமான், திக்விஜயம் செய்து, மதுரையம்பதி வந்து, தங்கி மக்களுக்கு வியாதி, பிணிகளைத் தீர்த்துவைத்துக்கொண்டு இருந்தார். அன்னாரின் புகழ்பரவி மன்னவர் வரை தெரியவந்தது. பாண்டிய மன்னர் சித்தரைப் பரிசோதிக்க எண்ணி, நேரில் வந்து தரிசித்து உரையாடியபின், சித்தர் மனம் வைத்தால் கல்யானையையும் கரும்பு தின்ன வைக்கலாமே என கேட்க, அருகில் கல்லினால் செய்து வைக்கப்பட்ட யானைக்குக் கரும்பு கொண்டுவரச் சொல்லி மேற்படி கல்யானைக்குக் கொடுக்கப்பட்டது. அந்த யானையும் கரும்பைத் தின்றது கண்டு மன்னர் பெரியோரை பரிசோதித்ததற்கு மன்னிப்புக்கேட்டு அவர்களுக்குத் தக்க

உபசரிப்புச் செய்து கொடுத்தும், தங்கியிருக்கச் சகல உதவிகளையும் செய்துகொடுத்துவா ஆணையிட்டு எல்லாம் வல்ல சித்தர் என நாமகரணம் சூட்டப்பட்டதுடன், ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுவரர் கோவிலினுள் சுவாமி சன்னதிப் பிரகாரத்தில் ஸ்ரீ துர்க்கையம்மன் அருகில் ஸ்ரீ வல்லப சித்தர் உருவம் அமைத்து, கோவில் சன்னதியும் அமைத்து உள்ளார். அதனைப் பொதுமக்கள் இப்போதும் கண்டு தரிசிக்கலாம்.

**கோரக்கர் - ஞானேஸ்வரர்**

ஞானேஸ்வரர் என்ற சித்தர் குஜராத்தில் குக்கிராமத்தில் பிறந்து அங்கு வசித்து வந்தார். தன் இளம்பிராயத்தில் (சுமார் 16 வயதில்) சில சித்துக்கள் செய்து வந்தார். அவரது புகழ் எங்கும் பரவி வந்தது. தென்திசையிலிருந்து ஸ்ரீ கோரக்கர் திக்விஜயம் செய்து, அந்தப் பகுதிக்கும் சென்றபோது இப்படிச் சிறுவன் சித்து ஆடி வருவதையறிந்து மேற்படி கிராமத்திற்கு தானும் செல்ல எண்ணித் தகவல் அனுப்பி விட்டார்கள். அங்கு சித்து விளையாடி வருவது சிறுவனானதால், தான் புலிமேல் அமர்ந்து சென்றார். ஊர் அருகில் செல்லும் சமயம் இப்படியொரு மகான் வரும் தகவலை ஞானேஸ்வரரிடம் கூற, ஞானேஸ்வரர் ஓர் குட்டிச்சுவர் மீது குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தார். தகவல் அறிந்ததும் பெரியோர்களை எதிர்கொண்டு கௌரவிக்க வேண்டும் எனக்கூறித் தான் விளையாடிக்கொண்டிருந்த குட்டிச்சுவரைத் தட்டிவிட்டார். அந்தக் குட்டிச்சுவருடன் தெருவழியில் சென்ற ஸ்ரீ கோரக்கரை எதிர்சேவை செய்யச்சென்றார்.

ஸ்ரீ ஞானேஸ்வரர் குட்டிச்சுவருடன் குழந்தைகளுடனும் வருவதைக்கண்டதும் ஸ்ரீ கோரக்கர் புலியை வசப்படுத்திச் சவாரிசெய்தவர், உயிரற்ற சுவருடன் வருவதைக் கண்டதும் மிரண்டு புலியை விட்டு இறங்கி ஞானேஸ்வரரிடம் தன் அகந்தையை அகற்றிக் கண்திறந்த பிரபுவே என நமஸ்காரம் செய்து இருவரும் அளவளாவினார்கள். (நண்பர்களானார்கள்)

பின்னர் பல திசைச் சென்று, இறுதியில் இலங்கை சென்று திரிகோணமலையில் சித்தியாகிவிட்டார்கள் ஸ்ரீகோரக்கர்.

**சிவவாக்கியர்**

திருமழிசை ஆழ்வார் என நாமரூபத்துடன் திருமழிசையில் பிறந்து சகல ஞானமும் கடுந்தவத்தால் பெற்றுத் திகழ்ந்தார். சிவனும் பார்வதியும் பூலோகத்திற்கு திக்விஜயம் வந்து பல தவயோகிகளுக்கு அருள்புரிய வந்தபோது, திருமழிசை ஆழ்வாரை நோக்கி முன்தோன்றி அருளுரையிட சிவவாக்கியர் சில பாசுரங்களைப் பாட *(130 பாசுரம்-அதிலிரண்டு)*

*நான் முகனை நாராயணன் படைத்தான்*
*நான் முகனும் தான் முகமாய்ச் சங்கரனைப் படைத்தான்*
*யான் முகமாய் அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் யாழ்*
*பொருளைச்*
*சிந்தாமல் கொண்மீது நீர் தேர்ந்து*

*பூ நிலாய வைத்துமாய் புணர்கணிந்த நான்குமாய்த்*
*தீனிலாய மூன்றுமாய் திறந்த கால் இரண்டுமாய்*
*மீனிலாய தொண்ணுமாகி வேறு வேறு தன் மயமாய்*
*நீனிலாய வண்ண நின்னையால் நினைக்க நல்லரே.*

இந்த *(130 பாசுரம்)* பாசுரங்கள் கேட்டு சிவன் சினம்கொண்டவராய், நெற்றிக்கண் திறக்க எண்ணம் கொண்டதை அறிந்து ஆழ்வார் அவர்கள் தனக்கும் நெற்றிக்கண் உண்டு என்பதை தன் வலது கால் கட்டைவிரலில் நெற்றிக்கண் காட்ட சிவன் கோபம் தணிந்தவராக, பார்வதி தேவியருளுரைக் கூற, ஆழ்வார் அவர்கள் பின் சில வாக்கியங்களைப் பாடி ஈசனின் அன்புக்குப் பாத்திரமாக, அதுமுதல் சிவவாக்கியர் என நாமம் சூட்டப்பட்டு, மேலும் பலகாலம் பூவுலகில் வாழ்ந்து பின் பலவூர் சென்று கும்பகோணம் சேர்ந்து சித்தியாகிவிட்டார்கள்.

**திருமூலர்**

சுகன மார்க்கத்தில் ஸீந்தாரனந்தர் பூவுலகில் திக்விஜயம் செய்து வந்துகொண்டிருந்தார். திருவாவடுதுறை அருகில் வந்தபோது, ஓர் புலையன் இறந்து கிடப்பதையும், அவனைச் சுற்றி மாடுகள் கதறியழுது கொண்டு கூட்டமாக இருப்பதையும் கண்டு, மாலை நேரமாகியும் மாடுகள் ஊர்திரும்பாமலிருப்பதையும் கண்டு, மாடுகளை வீடு சேர்க்க எண்ணி (கூடுவிட்டுக் கூடு பாய்ந்தார்)

புலையன் தூங்கி எழுந்ததுபோல் எழுந்து நிற்க, மாடுகளுக்கு ஆனந்தம் தாங்காமல், அனைத்து மாடுகளும் ஊர்நோக்கி வீடு திரும்பியது. புலையன் கிராமம் சென்று மாடுகளைச் சேர்ப்பித்தும் பின் தன்வீடு செல்லாமல் சத்திரத்தின் அருகில் தங்கிவிட அதையறிந்த புலையனின் மனைவி வந்து அழைக்க வீடு திரும்ப மறுத்து தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

பல காலம் தவமிருந்த பின் எழுந்து திருமந்திரம் உலகிற்கு வழங்கிவிட்டு, பின் திருவாவடு துறையில் சித்தியாகிவிட்டார். திருமூலர் என நாமரூபத்துடன் சித்தராகிப் புகழ் வழங்கப்படுகிறார்கள்.

**கொங்கணர் - தேரையர்**

கொங்கணர் சித்தர் பெரும் வைத்திய நிபுணராகத் திகழ்ந்தார். அவரிடம் வைத்திய முறையைத் தெரிந்துகொள்ள எண்ணி, (தேரையருக்கு முற்பெயர் உண்டு அறிய முடியவில்லை, தேரையர் என்பது பின்னர் வந்த பட்டப்பெயராகும்) கொங்கணர் நல்ல பார்வையுள்ள யாரையும் சிஷ்யனாகச் சேர்த்து கொள்வதில்லை. காரணம் வைத்திய முறையைக் கற்றுக்கொண்டபின் அவர்கள் சென்று விடுவதாலும், யாரையும் நம்பாமல் சிஷ்யர்களை வைத்துக்கொள்ளாமலிருந்தார், பின்பு தேரையார் தனக்கு கண் தெரியாது எனக்கூறி குருடனாக நடித்து சிஷ்யராகச்

சேர்த்துவிட்டார். நீண்டகாலம் இருந்துவர ஒருசமயம் இந்திரனுக்கு மூளைநோய் கண்டு காய்ச்சலாகக் கொங்கணர் அவர்களை அழைத்துச் சென்றார். அங்கு இந்திரனின் சிரசை மூலிகையின் சாற்றைத் தடவி, மண்டை ஓட்டை எடுத்து மூளையைக் காண அதில் தேரை இருந்ததைக் கண்டு,சாமணத்தால் தேரையை அகற்ற எண்ணி, தேரை அருகில் சாமணத்தைக் கொண்டுசெல்ல, தேரையர் குருநாதர் தவறான முறையில் தேரையை அகற்ற முயற்சிக்கிறாரே, மூளையைப் பிய்த்துக்கொண்டல்லவா தேரை வரும் என எண்ணி சப்தமிட்டு குருநாதரிடம் அப்படி செய்யவேண்டாம் என தடுத்து, அதை எப்படி அகற்ற வேண்டுமென்பதை ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவந்து மூளை அருகில் காட்டத்தண்ணீரைக் கண்ட தேரை தானே குதித்து தண்ணீரில் விழுந்தது. பின்பு மருந்துகள் தடவி மண்டையோட்டைப் பொருத்திவிட்டுத் திரும்பினர். தன்னிடம் வந்த தேரையர் இதுகாலம் வரை குருடராக நடித்து வைத்தியத்தைக் கற்றுக்கொண்டதால் அப்போதே தன் வாசஸ்தலம் அழைத்துவந்து சினம்கொண்டு தேரையரை அக்கக்காக உடம்பைப் பிய்த்து எரிந்துவிட்டார்கள். அதற்கு முன்பே தேரையர் அவர்கள் அங்கு வாழ்ந்துவரும் இடையர்களிடம் தன் உடம்பை யார் பிய்த்தாலும், அதை இணைத்து வைத்தால் போதும், தான் உயிர் பிழைத்துவிடுவேன் எனக்கூறி இருந்தாராம். அதன்படி தேரையர் உடம்பு அங்கங்கமாகக் கிடப்பதை அறிந்ததும் முன் கூறியபடியே உடம்பை இணைத்துவைத்து விட்டார்கள். அந்த நண்பர்கள். உடன் உயிர்பெற்று எழுந்தார் தேரையர். இந்தச் சீடனை அதுமுதல் தேரையர் என்ற நாம ரூபத்துடன் வைத்தியம் தனியாய்ச் செய்து வந்தார். பலகாலம் பின் தவமிருந்து பலசித்துக்களை பெற்று அவர்களும் சித்தர்கள் ஆனார்கள்.

## நவ நாதர்கள்

நவநாத சித்தர்கள் - நவநாதர்கள் என்றும் சிறப்பித்துச் சொல்வார்கள். அவர்கள் முறையே,

1. சத்தியநாதர், 2. சதோக நாதர், 3. ஆதிநாதர், 4. அநாதி நாதர், 5. வெகுளிநாதர், 6. மதங்கநாதர், 7. கடேந்திரநாதர், 8. மச்சேந்திரநாதர், 9. கோரக்கநாதர். எனப்பேர் பெறுவார்கள். இவர்கள் ஒன்பது பேரும் மூலவர்க்கச் சித்தர்களாகிய பதினெண் சித்தர்களுக்கும் முற்பட்டவர்கள் ஆவார்கள்.

மூலவர்க்க சித்தர்கள் பதினெண்பேர்கள் ஆவார்கள். அவர்கள்

1. நந்தி (மருத்துவ பண்டித இனம்)
2. திருமூலர் (வெள்ளாள இனம்)
3. புலத்தியர் (சிங்கள இனம்)
4. இடைக்காடர் (ஆட்டிடையர்)
5. அகத்தியர் (வெள்ளாளர்)
6. புண்ணாக்கீசர் (கன்னடக்காரர்)
7. பூனைக் கண்ணர் (பிரஞ்சுப் பாதிரியார்)
8. போகர் (தமிழ்நாட்டு பொற்கொல்லர்)

(இவர் சீன நாட்டிற்குச் சென்று மண்பாத்திரம் செய்து பலசித்து வேலைகளை செய்து தமிழ்நாட்டிற்கு திரும்பியவர்)

9. புலிகேசியார் (மருத்துவ பண்டிதர்)
10. கருவூரார் (உலோகப் பாத்திரங்கள் செய்பவர்)
11. கொங்கணர் (கொங்குநாட்டு இடையர்)
12. அழுகண்ணி (மருத்துவ பண்டிதர்)
13. காலங்கி (தங்கவேலை செய்பவர்)
14. அகப்பை சித்தர் (வேளாளர்)
15. தேரையார் (மருத்துவ பண்டிதர்)
16. சட்டநாதர் (சிங்களநாட்டைச் சேர்ந்தவர்)
17. பாம்பாட்டி (ஜோகேந்திர குரவர்கள்)
18. குதம்பைச் சித்தர் (மருத்துவப் பண்டிதர்)

உலகிலுள்ள சகல ஜீவ வர்க்கங்களும் புல், பூண்டு, செடி, கொடி, மரம், புழு, பூச்சி, நடப்பன, பறப்பன, மிருகங்கள் முதல் மனிதன் ஈறாக உள்ள சகலமும் பஞ்சபூதங்களின் கூட்டுறவின் விஷேச அம்சங்களாகும். பஞ்சபூதமாவது, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்

என்பவைகளே அதாவது மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்று சொல்லப்படுபவைகளே. இந்த ஐம்பூதங்களின் பிரிவு அழிவிற்கு (மறைவிற்கு) காரணமாயும் அமையும். நம் கண்ணுக்குப் புலனாமே தெரியும். ஐம்பூதங்களின் பரிணாம தத்துவங்களை மேல்நாட்டு தத்துவ விற்பன்னர்களான இங்கர்சால், டார்வின், கலிலியோ போன்றவர்கள் கடவுளின் படைப்பு அல்ல! இயற்கையும், பஞ்சபூதங்களும் தானாகவே உண்டாகித் தானாகவே அழிந்து போகும் நிலைகளாவன. இந்த பஞ்சபூதங்கள் ஈஸ்வரனது (கடவுளது) படைக்கணங்கள் என்பதாகப் புராணங்களும், சாஸ்திரங்களும் கூறுகின்றன என்பதை திட்டவட்டமாகத் தெரிந்துகொள்ளுங்கள் என விளம்பியுள்ளனர். ஐம்பூதக் கூட்டுறவைப் பற்றியும், பிரிதலைப் பற்றியும், இன்னும் விளக்கமாகப் பார்ப்போம்.

***பிருதிவி:*** மண், எலும்பு, சதை, நரம்பு, தோல், முடி இவைகளாகும்.

***அப்பு:*** தண்ணீர், பித்தம், ரத்தம், விந்து, கசிவு, வேர்வை, கழிவுப்பொருள்கள் முதலியவைகளாகும்.

***தேயு:*** நெருப்பு, பசி, தாகம், தூக்கம், அழகு, சோம்பல் முதலியவைகளாகும்.

***வாயு:*** காற்று, சுருங்குதல், விரிதல், அசைவு முதலியவைகளாகும்.

***ஆகாயம்: (வெளி)*** வயிறு, இதயம், கழுத்து, தலை இவைகளிலுள்ள இடைவெளி ஆகும். அணு முதல் மலை ஈராக இடைவெளியில்லாத எந்தப் பொருளும் இல்லை என்பதைத் திட்டவட்டமாகத் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

சித்தர்களில் ஒருவராகிய குதம்பைச் சித்தர் தெளிவாகச் சொல்லிச் சென்றிருக்கிறார்.

"வெட்டவெளி தன்னை மெய்யென்றிருப்பார்க்கு
பட்டயம் ஏதுக்கடி குதம்பாய்"

பஞ்சபூதங்களின் செயலை தெளிவாகத் தெரிந்து கொள்ளவேண்டும். நீர், நெருப்பு, காற்று இவைகளின் செயலாகிய ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூவகைத் தொழிலின் அடிப்படையில் நடக்கும் செயலாக்கம் ஆகும். மனித உடம்பில் பஞ்சபூதங்களின் இருப்பிடங்களாவன. *(1+2)* பிருதிவி+அப்பு: உடம்பின் சதையில் பற்றி நின்று உஷ்ணத்தை எங்கும் பரவச்செய்வதற்குக் காரணமாக நின்று உடம்பை வளரச்செய்து வருகிறது. *(3)* தேய்வு அல்லது நெருப்பு. இது உடம்பிலே உஷ்ணம் எழும்புவதற்கும், உஷ்ணம் செயலாக்கம் புரிவதற்கும் அடிப்படை காரணமாக இருந்துவருகிறது. இது உட்கொண்ட உணவை இரசமாக மாற்றி, ஜீவ அணுக்களின் ஊடே செலுத்தி உடம்பைக் காப்பாற்றி வருகிறது.

*(4-5)* வாயு+ஆகாயம்: இவ்விரண்டு பூதங்களும் மூளையிலும், மூளையிலுள்ள இடைவெளியிலும், இருதயத்திலும், இருதயத்திற்குள்ளேயுள்ள இடைவெளியிலும், நுரையீரல்களிலும், நுரையீரல் பைகளில் உள்ள இடைவெளியிலும், முதகெலும்புகளின் உள்வட்டங்களிலும் மூலாதாரத்தின் உள்வட்டங்களிலுமிருந்து செயல் ஆக்கம் புரிந்து, உடம்பைக் காப்பாற்றி வருகிறது. நரம்பு மண்டலங்களிலும், எலும்புகளிலுள்ள தாதுப்பொருள்களாக இடைவெளிகொண்டு செயலாக்கம் புரிகிறது. நாம் உட்கொள்ளும் உணவு, நீர், நெருப்பு, சுவாசிக்கும் காற்று இவைகள் உயிர் சக்தியாக, ஆக்கப்பட்டு உடல் பூராவும் பரவச்செய்து உடம்பையும் உயிரையும் காப்பாற்றும் உயிர்ச்சக்தியாயிருந்து வருகிறது.

நமது முன்னோர்கள் அண்டமென்ற பூமியையும் வெளியுலகங்களையும், பிண்டமென்ற இந்த சரீரத்தையும், அதன் உள்வட்டங்களையும் ஒன்றாகக் கண்டு அனுபவித்தவர்களே மனித இன சித்தர்களாவார்கள்.

சித்தம்=மனம், மூளையின் இயக்ககத்தில் ஏற்படும் உணர்வு சக்தி, மனதைக் கண்டவனும், அம்மனதை வென்றவனும், சித்தம் கண்ட சித்தர்கள் ஆவார்கள்.

சித்தர்களால் மனித இனத்திற்கு நன்மையே என்றும் தீமையிருந்ததில்லை. அன்றுள்ள நமது முன்னோர்கள் அண்டத்திற்கு ஒத்தது. இப்பிண்டத்திற்கும் பிண்டமாகிய இந்த உடலுக்கும் உண்டு என்று கண்டு அனுபவித்து சென்றார்கள். மனிதர்களை, கடவுளுக்கு சமமானவர்களாகக் கருதும்படியாக பலமுறையும் நமது முன்னோர்கள் வற்புறுத்திச் சென்றிருக்கிறார்கள். அண்டத்திலுள்ள சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, வெள்ளி, சனி, இராகு, கேது முதலிய ஒன்பது கிரகங்களும் இன்றுள்ள கிரக மண்டலங்களும், நட்சத்திர மண்டலங்களும் ஏனைய வெளிமண்டலங்களிலுள்ள சகலமும் இந்த மனித சரீர நிலைக்கு ஒத்தவகையில் செயலாக்கம் புரிந்து வருகின்றது. இவ்வுலகத்தில் கண்ணுக்குத் தெரிந்த தூசி வட்டங்கள் முதல் கண்ணுக்குத் தெரியாத அணு சுரூபமான அனேக ரூபபேதமாக உள்ள உயிர்ச்சத்துக்களில் மனிதன் ஒருவன்தான் முற்றும் உணர்ந்தவனாகவும், பரிநாம தத்துவத்தைக் கண்டவனாகவும், பரம்பொருளைக் கண்டவனாகவும், பரம்பொருளை உணர்ந்தவனாகவும் உண்டாக்கப்பட்டுள்ளான். உலகில் உள்ள பொருள்கள் எல்லாம் சேதனபொருள் என்றும், அசேதன பொருள் என்றும், பிரித்துப் பார்த்து கண்டு உணர்ந்தவன். மனிதன்தான். அகில உலகத்தையும் தன் வசமாக்கிக்கொள்ளும் பிரமசக்தி, கட்டுப்பாடான மனித இனத்திற்கு மட்டும்தான் உண்டு என்று கண்டறிந்து அனுபவித்துச் சொன்னவர்கள் சித்தர்களே. இப்பிண்டமாகிய மனிதர்கள், அண்டமாகிய வெளி உலகையும் தம் வசப்படுத்திக்கொள்ளும் தேர்ந்த பேராற்றல் உள்ளவர்கள். சித்தம் வென்றவர் சித்தர்களே. சித்தர்களுக்கு இந்நிலைக்களன்கள் இருந்திருக்கிறது. மனிதர்கள் தனக்குள்ளிருக்கும் அண்டத்தைத் தன் உள்ளே கண்டு அனுபவிப்பவர்கள். மனமடங்கி பேரானந்த நிலையில் அண்டத்தையே தன்னுள் கண்டு அனுபவிக்கிறார்கள். இதைத்தான் நமது முன்னோர்கள் பேரானந்த நிலை என்று சொல்லிச் சென்றார்கள். கண்டாரும் சொன்னதில்லை, விண்டாரும் கண்டதில்லை.

மனிதர்கள் நோய்வாய்ப்படுவதற்குக் காரணம் இயற்கைவழி நடக்கத்தெரியாத காரணத்தாலேயே பேரறிவுடைய மனித இனம் தான் இயற்கை வழியிலும் இயற்கைக்கு மாறான வழியிலும் நடக்கும் திறன்கொண்ட இனம். இம்மனித இனமே தான் மற்ற பிராணிகளை விட சுயேச்சை தன்மையில் மனிதநோய்க்கு வெகுசுலபமாக இரையாகிவிடுகின்றான். காரணம் இயற்கையின் நிலைக்களன்களையும் மாற்றங்களையும் உணர்ந்த மனநிலை என்று இப்பிண்டமாகிய தேகத்தின் வெளி அமைப்புக் கூறுபாடு மற்றொன்று உள்ளமைப்பின் கூறுபாடு. முன்சொல்லிய ஒன்றுதான் இச்சரீரம். மற்றொன்று உடம்பின் கூறுபாடுகளைத் தெளிவுற அறிந்துவிட்டால் மூல வஸ்துவாகிய உயிர்ப்பொருளின் உண்மை நிலையையும் அதற்கேற்பட்ட நோயின் தன்மையையும் சரிவர தெரிந்துகொள்வதோடு அதை நிவர்த்திப்பதற்கும் உண்டான கூறுபாடுகளை எளிதில் தெரிந்துகொள்ளும் நிலையையும் தெரிந்துவனாகி விடுகிறான். எவன் ஒருவன் சரீர நிலையின் பஞ்சபூத தத்துவங்களின் நிலைக்களனை உள்ளூர உணர்ந்து தெரிந்துகொள்ளும் சக்தியை உடையவனாகின்றானோ அவன் வெளி உலக நிலைகளன்களையும், பஞ்ச பூத நிலைக்களங்களையும் இயற்கையிலே தெரிந்தவனா கின்றான். உலகிலுள்ள எல்லா வஸ்துக்களும், ஆதிமூலப் பொருளாகிய இயற்கையிலிருந்து தோன்றியது. ஆகவே ஏகம், கூட்டு என்ற நிலைக்களனே அல்லாது பிரிவினையே கிடையாது. உயிர்ப்பொருள் ஒன்றுதான் ஏகம். அதுவே ஆத்மா என்றும் அசை(ATOM) என்றும் சொல்வார்கள். உலகிலுள்ள மற்ற எல்லாப் பொருள்களும் கலப்புப் பொருளோ, கூட்டுப்பொருளோ அல்லாது வேறல்ல. எவன் ஒருவன்ஐம்பூதங்களின் இரகசியங்களையறிந்தவனாக

இருக்கின்றானோ, அவன் அவனது சரீரத்தை உருவாக்கிய ஐம்பூதங்களின் இரகசியங்களையும் அறிந்து உணர்ந்தவனாக இருக்கவேண்டும். அப்படிப்பட்டவன் ஒரு உலோகத்தை பிரிதொரு உலோகமாக மாற்றக்கூடிய தத்துவ குணமுடையவனாகின்றான்.

இந்தத் தேகமும் மனமும் யாதொருவித குற்றமும் இல்லாது கண்ணாடியைப் போன்ற பரிசுத்தமான நிலையிலிருந்தால் அதுபோன்ற மனநிலைக்கு சகலமும் சித்தியாகும். இதுதான் ஆதிமூலப் பொருளாகும். இதனை எவ்வளவுக்குப் பழக்கப்படுத்தி, ஒருநிலைப்படுத்திச் சித்தியடைந்த உள்ளத்தைப் பெற்றுவிடுகின்றானோ, அவனது சுற்றுப்புறமுள்ள சகல மனிதர்களும், அவன் வாழும் ஊரும், நாடும் அவனது மொழி மக்களும், பிறமொழி மக்களும், அவனது சொல்லுக்குக் கட்டுப்பட்டவர் களாவதுடன் அகில உலக மக்களும் அவனது சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்களாகின்றனர். மனிதனது அறியாமை யாலும், தொன்றுதொட்டு வரும் அறியாமையான பழக்கத்தாலும் பயத்தாலும் தனக்குத்தானே தவறாக எண்ணும் நிலைகளாலும், உலகினிடமுள்ள வெறுப்பாலும் இவ்வுலகை விட்டே போய்விட வேண்டும் என்ற எண்ண நிலைகளினாலும், இவ்வுலகிலிருந்து மனிதர்கள் மறைந்து விடுவதற்கும், இறந்து விடுவதற்கும் காரணமாகிறது. சித்தம் வென்ற சித்தர்களோ, சித்தம்கண்ட சித்தர்களோ உடம்பில் உள்ள அணுத்திறன்களால் உருவாக்கப்பட்ட சக்திகளை காலநிலைக்கும், சூழ்நிலைக்கும் தகுந்தபடி தனக்குள் கட்டுப்படுத்தப்பட்டிருக்கும் உயிர் சக்தியால் வெளிஉலக நிலைக்கு ஏற்ப ஒழுங்குபடுத்தி ஒன்றுபடுவதன் காரணமாக நோய்க் கூட்டல்களாகிய மரணத்தை தடுப்பதற்கு வேண்டிய பரமசக்தியை பரம்பரையாக எண்ணி கருதப்பட்டுவந்த வித்தையாகும். இந்த வித்தை எல்லாவிதமான காரியங்களுக்கும், சகல சௌபாக்கியங்களுக்கும், சகல சௌந்திரியங்களுக்கும், சகல வைபவங்களுக்கும் கிடைக்கும் மூல பரிபூரண உபசாந்த நிலையான வித்தையாகும்.

# சித்த வைத்தியமும் மற்ற வைத்தியமும்

நமது முன்னோர்களான ஆதி மனிதர்களால், மனித உற்பத்தி பற்றியும், இயற்கையில் ஏற்படும். மாறுபாடு களையும் அதனால் சரீரத்திற்கு ஏற்படும் வேறுபாடு களையும், கண்டறிந்து குறிப்புகள் எழுதிவைத்ததோடு நான் கற்ற மருத்துவக் கல்வியும், அதனால் ஏற்பட்ட உண்மைகளையும், அனுபவ வைத்தியம் என்று நமது முன்னோர்கள் தமிழில் நூல் எழுதிவைத்துள்ளனர். திராவிட மொழியின் தமிழில் செய்த வைத்திய நூல்களிலேயே தமிழ் வைத்தியமுறை விசாலமான நிலைக்களனை அமைத்திருக்கிறது. இதுவே திராவிடர் அறிவு வளர்ச்சிக்கும் திறமைக்கும் , நாகரீகத்திற்கும் எடுத்துக்காட்டாகும். சித்தவைத்தியம், வாதம், வைத்தியம், ஞானம் , யோகம், ஜோதிடம், மாந்திரீகம் இவைகள் ஒருங்கே ஒன்றுபட கொண்டதாகும். இதன் காரணமாகச் சித்தவைத்தியம் வளர்ச்சியடைாமல் போயிற்று. வைத்தியக் கலையானது பொருளாதாரத்தை நல்ல நிலையில் விருத்திசெய்து கொள்ளவும், நல்ல பெயரோடு வாழவும் வழிவகுத்துத் தரும் ஒரு சிறந்த நிலையும், கலையுமாகும். சித்தவைத்திய நிபுணர்களும், ஆயுர்வேத வைத்தியர்களும், யூனானி வைத்தியர்களும் இன்றுவரையில் சிறப்பாக வாழ்வதற்கு சித்தவைத்தியக் கலையின் அடிப்படையின் தனிப்பட்ட நிலைக்களனே காரணமாகும். மற்ற வைத்திய நூல்களைப் போல் சித்தவைத்தியமும் பொருளாதாரத்தில் சிறப்புமிக்க அம்சங்களை பெற்றிருந்தும் அதோடு கூட, அறிவு விருத்திக்கான வாதம், ஞானம், போகம், மாந்திரீகம், சோதிடமும் சேர்க்கப்பட்டதன் காரணமே அவை விருத்தியடையாமல் போனதற்கு அடிப்படையாகும். சித்த வைத்திய கலைக்கு பழைய காலத்தில் மன்னர்களின் உதவியும் அரசாங்கத்தின் ஆதரவும் அதற்கு இருந்த காரணத்தால் சிறக்க இருந்த அத்தொழிலானது, ஆங்கில ஆதிக்கமும், அரசாங்க நிலைக்களனும் இந்நாட்டிலே உருவான பிறகு பிரத்தியட்ச அனுபவத்திற்கு ஒத்து வரும்

ஆங்கில வைத்தியமே சிறப்பான இடத்தைப் பெற்று விட்டது. சித்த வைத்தியமானது நிலைக் குலைந்து போனதற்கு அடிப்படைக் காரணம் சித்தவைத்தியத்தோடு கூட எல்லா மக்களுக்கும் பயன் ஆக்கம் பெறும் நிலைக்களனை இழந்துவிட்ட காரணத்தாலும் மங்கிவிட்டது. இது மீண்டும் இதனுடைய பிரகாசமான இடத்தைப் பெறவேண்டுமானால், சித்தவைத்தியமுறை மருந்து, வைத்தியம் நோய்தீர்க்கும் வழிமுறைகளை மருந்து செய்யும் வழிவகைகள் இவைகளை எல்லாம் தனியாக தொடுத்து புத்தக ரூபத்தில் வெளியாகும்பொழுதுதான் இது சிறப்பான இடத்தைப்பெறும். இந்த சித்தவைத்திய தொழிலை இரண்டு வருடங்கள் மருந்துகளைத் தெரிந்து செயல்முறைகளையும், திராவகம், செந்தூரம், சுண்ணம், பற்பம், வடகம், மாத்திரைகள், தைலங்கள், லேகியங்கள் இன்னும் பல செயல்மானங்களையும், செய்யும்போது அதனால் ஏற்படும் வில்லங்கங்கள், விபரீதங்கள், கஷ்டநஷ்டங்கள் இவைகளை எல்லாம் வழிமுறையோடு தெரிந்துகொள்ளவும், மருந்துகளை செய்யும் இடமும், அவைகளைப் பாதுகாக்கும் வழிமுறைகளும் திட்ட வட்டமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். கூடுமான அளவு சித்தவைத்திய மருந்துகள்யாவற்றையும் செய்து முடித்தபின் நோய் நிலைகளை அறியும் திறன் உள்ளவனாக இருக்கவேண்டும். மனிதர்களுக்கு காலநிலை மாறுபாட்டாலும் பழக்கவழக்கங்களின் வித்தியாசத்தாலும் மக்களின் சரீரத்தில் நோய்கள் உருவாகக் காரணமாகிறது. இவைகளைப் பற்றி எல்லாம் தெரிந்துகொள்ள குறைந்தது இரண்டுவருட அவகாசம் தேவைப்படும். மேலேகண்ட மருந்துகளையும், பின்கண்ட நோய்களையும் அவற்றைத் தீர்க்கும் வழிமுறைகளையும் அறிந்து உணர்ந்து நோய்களுக்குத் தகுந்த மருந்து கொடுக்கும் அனுபவ உண்மைகளை அறிந்துகொள்ள இரண்டு ஆண்டுகளாயினும் தேவையாயிருக்கவேண்டும். மனித சரீரம் மிக உயர்ந்த நிலைக்களங்களோடும், எண்ணங்களின் அடிப்படை யோடும், உருவாக்கப்பட்ட சரீரங்களுக்கு குழந்தை முதல்

வயோதிகர்வரை எந்த வயதிலே, எந்தெந்த வியாதிகள் வரும் என்பதை எழுதிவைக்கப்பட்டிருக்கும் நூல்களைப் படித்துணர்ந்து செய்வதே சிறந்த வைத்தியமாகும். சித்தவைத்திய பழைய நூல்களை மேற்கண்ட வழிமுறைப்படி பிரித்து, பகுத்து, தொகுத்து, கணித்து வழித்துறையோடு எழுதிவைக்கவேண்டும் என்றே பெரியோர்கள் சொல்லிச்சென்றிருக்கிறார்கள். மேலே கண்ட வைத்திய நிலைக்களன்களை தெரிந்துவைத்து இருக்காவிட்டாலும், தமிழ்நாட்டில் அவைகள் எப்படி எப்படியெல்லாம் உருவாக்கப்படவேண்டும் என்று திட்டவட்டமாகச் சொல்லிச் சென்று இருக்கிறார்கள், இதன் அடிப்படையில் தான் சித்தவைத்தியத்தின் நுணுக்கங் களையும் அதனது பழையகால விபரமான தத்துவங்களையும் இன்றுவரைக்கான காலநிலைக்கேற்ப விபரம் பொதிந்த தத்துவங்களையும் வகுத்துத் தொகுத்து அளிப்பதுவே சித்தவைத்தியம் என்ற இந்த நூலின் அடிப்படைத் தத்துவமாகும். சித்தர்கள் கண்ட சித்தவைத்திய நூல்களிலே தேவையற்ற வகையில் புகுத்தப்பட்டிருக்கும் யோகம், ஞானம், மாந்திரீகம், சோதிடம் இவைகளையெல்லாம் பிரித்து அப்புறப்படுத்திவிட்டு மக்களும், நோய்களும் இயற்கையின் மாறுபாட்டாலும் விதிமுறையின் மாறுபாட்டாலும் வரும் நோய்களைத் தீர்க்கும் வழிமுறைகளைப் பற்றிய ஓர் ஆய்வுதான் இவ்வைத்திய நூல் தயாரிக்கப்படும் அடிப்படை நிலையாகும். அவர்கள் சொல்லிச் சென்ற முறைப்படியே பித்தலாட்டங்களை அப்புறப்படுத்திச் சொல்லப்படும் நூல் என்பதை திட்டவட்டமாகத் தெளிவோடு தெரிவிக்கின்றோம். சித்தர்கள்கண்ட சித்தவைத்தியத்திலே தான் பழைய காலத்திற்கு முன்பு, திராவிட இனம் தெய்வமாகக் கணித்து எடுத்துக்கொண்ட ஈஸ்வரனாகிய பரமசிவன், ஈஸ்வரிக்குச் சொல்வதைப் போலவும், அதையே ஈஸ்வரியானவள் முருகனுக்கும், முருகனால் நந்திக்கும், நந்தியால் அகத்தியருக்கும் போதிக்கப்பட்டு வந்ததாக பழைய வைத்திய புராணங்களிலும், சித்தர் நூல்களிலும்,

சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் எல்லாம் திராவிடப் பரம்பரையில் வந்தவர்களே என்பதற்கான ஆதாரங்கள் அடங்கிக்கிடக்கின்றன.

இன்னும் இத்திராவிட வைத்திய முறையான சித்தவைத்தியம் பர்மாவிலும், இலங்கையிலும், பினாங்கிலும், சிங்கப்பூர் ஆகிய கடற்கரை கீழ்த்திசைத் தீவுகளிலும், மடகாஸ்கர், பிலிப்பைன் தீவுகள் முதலான இடங்களிலும் கையாளப்பட்டு வருகின்ற வைத்திய முறைகளே என்பதை திட்டவட்டமாகத் தெரிந்து கொள்ளலாம். திராவிட இனமக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அனுபவித்து கண்டுணர்ந்த வைத்தியமுறைகள் சித்தவைத்தியமுறைகளே ஆகும்.

## சித்த வைத்தியமும், திரிதோஷ வரலாறுகளும்

திரிதோடம் என்ற வடமொழி கலந்த சொல் மனிதனுக்கு உள்ள மூன்று குணங்கள் மாறுபாடுகளைத்தான் திரிதோஷம் என்று சொன்னார்கள். நோய்கண்ட மக்களை அறிந்துணர்ந்து அவர்கள் சரீரத்தில் வந்திருக்கும் முறைகேடான குணம், குறிமாறுபாடுகளை அறிந்து உணர்வதற்குப் பொருள், நாடி பார்க்கும் நிலைகளனுக்குப் பொருள், நோயாளிகளைக் கவனமாகப் பார்த்துத் தெரிந்துகொள்வதோடு கூட அவன் கையைப் பிடித்து, நரம்புகளைத் தொட்டு, திரிதோஷ நிலைகளை அதாவது வாத, பித்த, கப, நீர், நெருப்பு, காற்று ஓட்டங்களின் நடை நிலைமுறைகளை அறிந்துணர்ந்து தெரிந்துகொள்ளும் நிலைமைக்குப் பெயரே நாடிப்பார்ப்பது. குழந்தைகள் முதல் வயதானவர்கள்வரை இப்படியாக நாடிபார்த்து நோய் தெரிந்து செய்யும் சிகிச்சைக்கு முறைப்பெயர் தான் சித்த வைத்தியமுறை என்று பெயர் பெறும். வியாதிகளின் காரணங்கள், அவ்வியாதிகள் வரும் வரலாறுகள், மனித சரீரத்தில் ஏற்படும் குணம், குறி, மாறுபாடுகள் இவைகளைக்

குறித்துத் தெரிந்துகொள்ளும் முறையே நாடி பார்க்கும் நிலையாகும்.

**"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்."**

என்று திருவள்ளுவர் அன்றே சொல்லிச் சென்றார்கள். அவைகளாவன:

**நோய் நாடி:** இன்ன நோய் என்பதை வைத்திய சாஸ்திரத்தில் படித்து உணர்ந்தவைகளையும், தனது அனுபவமாகக் கண்டுணர்ந்து வைத்திருப்பவைகளையும் அந்த நோயின் நிலைக்களனோடு சேர்த்து முடிவு செய்வதே நோய் நாடி என்பது.

**நோய் முதல் நாடி:** அந்த நோய் வந்ததன் காரணங்களின் நிலைக்களன்களை தெரிந்துகொள்ளும் வகையாகும். நோயாளியைப் பார்க்கும்போதும், அவர்களோடு பேசும் போதும் ஏற்படும் தொனியின் லட்சணங்களை அறிந்து உணர்ந்து தீர்மானிப்பதோடு அவர்கள் உட்கொண்ட ஆகாரங்களின் வழிமுறைகளையும் கேட்டு அறிந்துணர வேண்டும்.

**வாய்நாடி:** அவன் பேசும்பொழுது அவன் வாய்மொழியிலிருந்து வரும் வார்த்தைகளை எல்லாம் கேட்டும் அதிலிருந்தும் நோயின் நிலைகளன்களைப் பற்றி ஒரு முடிவுக்கு வரவேண்டும். இந்த நிலையில்தான் நோயாளிகளைப் பற்றி திரிதோஷ குணங்களை தீர்மானிக்கவேண்டும். வாத, பித்த, கப நோய்களான முப்பிணிகளும் முறை தப்பினால் நோய்க்கு காரணமாகிறது. இது மக்களுடைய உடம்பில் வாத, பித்த, கப தொழில்களைக் குறிக்கும் விபரமாகும். இந்த வார்த்தைகளின் பொருள் சாதாரண மக்களுக்குப் புலப்படாது. மக்களை குறித்து பூர்வீக நூல்களில் கண்ட விஷயங்களைப் பற்றி அறிவும், கல்வியும் அவர்களின் உயிரின் வசீகரத் தன்மையும் ஆகிய இவை முதலானவைகளைத் தெரியவேண்டும். இதை ஆயுர்

வேதத்தில் திரிதோஷம் என்றும் சித்த வைத்தியத்தில் வாத பித்த சிலேத்துமம் தத்துவ மாற்றங்கள் என்றும் கூறப்படும். அதாவது தத்துவங்களின் தொழிலையும், தொழில் இயக்கும் தன்மையையும் குறிக்கும். மனித சரீரமானது அறுபத்திநான்கு தத்துவங்களைக் கொண்ட நிலைக்களனாகும். இந்நிலைக் களனினால் கருவி காரணாதிகள் அந்தக் காரணங்கள் உயிர் தத்துவங்கள் இவைகளைக் குறிக்கும். இம் முப்பிணி தத்துவங்களின் தொழில்கள் மாறும்போது நோயாகிறது. இவைகளை ஆயுர்வேதத்தில் திரிதோஷம் என்று சொன்னார்கள். நமக்குத் தெரிந்தவரையில் ஆயுர் வேதத்திலாவது, யூனானி வைத்தியத்திலாவது அது பரவி நிற்பதற்கும் உள்ள காரண காரியங்கள் என்ன என்பதை விளக்கமாக தெரிவிக்கப்பட்டிருக்கவில்லை. மக்கள் சரீரத்திற்கு வாத, பித்த, கபங்கள்தான் உயிர்ப்பொருள். ஆதாரங்களான அம்சங்கள் எனக்கொள்ளவேண்டும். நாம் உட்கொள்ளும் உணவு, நீர் காற்று இவைகள் உட்கருவி காரணாதிகளால் சீரணமாகி அன்னப்பசையாக மாறி உடம்பைப் போஷிக்கும். ஆகவே இவைகளை நாம் கட்டிடங்களின் தூணைப்போல் காப்பாற்றவேண்டும். உடம்பைக் காத்து ரட்சித்தலால் உடம்பு ஆரோக்கிய நிலையில் இருந்து வரும். மனிதனுக்குள் 'சூக்கும சக்திகள்' மூளையிலும் முதுகெலும்புத் தண்டின் கணுக்குள்ளும் அமைந்திருக்கின்றது. இதுவே மனிதனுக்குள்ள பிராண சக்தியாகும். இப்பிராண சக்திகளோடு கூட இருக்கும் வாத, பித்த, கபங்கள் தன் நிலைக்களனில் இருந்து மாறுபடும் போதும், வேறுபடும் போதும் நோயாகிறது.

**நோய்கள்:** சித்தர் முறைப்படி மூன்றுவித அறிவு பேதங்களும், ஐம்புலக் கருவிகளும் பன்னீரண்டுவிதத் தேகக்கூறுபாடுகளும் பெற்றிருப்பதே விந்தும், நாதமும் ஆகும். பன்னீரண்டுவித தேகக்கூறுபாடுகளை தச வாயுக்களோடு கூட நாதவிந்து சேரும் போது பன்னிரண்டுவித தேகக்கூறுபாடாக மாறுகிறது. நம் சரீரத்தில் சீரணித்த வஸ்துக்களைத் தாக்கும்போது அவைகளின் சகஜமான

தொழிலியக்கம் தன்மைகள் மாறுபடுகிறது. இதைத்தான் வியாதி அல்லது நோய் என்று சொல்கிறார்கள். காலம், அறிவு, புலன்கள் இவைகள் தொழிலியற்றும் செய்கைகளில் குறைவின்றி இருந்தால் அதையே ஆரோக்கியமென்று சொல்கிறோம். நோய் என்பது உடம்பை அடுத்த தொழிலின் மாறுபாட்டால் மாத்திரமல்லாது மனோவிகற்பத்தையும் சார்ந்ததாகும் என்பதே. ஆகையால் நோய் என்பது தேகவியாதி மனோவியாதி என இரண்டும் சேர்ந்தே நோய் எனப்படுகிறது. மனமானது ஆரோக்கியமாக இருக்குமானால் அது சரீரத்தையும், ஆரோக்கியமான வழியில் இழுத்துச் செல்லும் "A Sound Mind is in A Sound Body " என்ற பழமொழியும் உண்டு. உண்மையாகவே, மனோவியாதி யானது தேக வியாதிக்கும் இடம் கொடுத்து சரீரத்திற்கும் நோய் செய்து விடுகின்றது. இதுபோலவே மனோவியாதியும் உருவாக்கி நோய் செய்து விடுகிறது. இவ்விரு விதங்களுமே, எல்லா நோய்களுக்கும் அடிப்படைக் காரணமாக இருந்துவருகிறது. நோய்களானது பரம்பரையாகவும் பழக்க வழக்கங்களின் மாறுபாட்டாலும், நோய்கள் தாய் தந்தையர்களுக்கு உருவாகி குழந்தைகளையும், அவர்களது பிற்காலத்தில் பாதித்து விடுகிறது. நோய்கள் தாதுக்களின் கோளாறுகளாலும், மாறுபாட்டாலும் வெளிக்காரண வித்தியாசங்களாலும் நோய்கள் உருவாகக் காரணமாகிறது.

1. தாதுக்கள் - முத்தோஷம்
2 தாதுப்பிரிவு - ஏழுவகைத் தாதுக்கள்
3. குணம் - மனதை நடத்தும் விதிமுறைகள்
4. மலம் - சரீர கழிவுப்பொருள்கள், சரீர கசிவுகள் (வேர்வை)

ஜீவ அணுக்களும் கண் அறைகளின் நடையும் சகஜமாக இருந்தால்தான் தாதுக்களின் சமநிலைக்கு யாதொரு கெடுதலும் உண்டாகாது. இவ்விதமாக இருப்பதற்கு உணவுப்பகுதி கணக்குப்படி இருக்கவேண்டும். அதைச் சுற்றிலும் உள்ள விஷயங்களும் அதுபோலவே சகஜமாக இருக்கவேண்டும். இதில் மாற்றமோ, தடுமாற்றமோ

ஏற்பட்டால் அதுவே நோய்கள் உருவாகக் காரணமாகி விடுகிறது. சில நோய்களின் காரணத்தைக் கண்டறிய முடியாது. அவைகள் தாய், தந்தையரிடமிருந்து அவர்களது அசந்தர்ப்ப பேதங்களினால் குழந்தைகளுக்கு ஏற்பட்டு விடுகிறது. அந்த நோய்கள் அக்குழந்தைகளின் நாற்பதாவது வயதிற்குப் பிறகே அந்த நோய்களானது வெளியரங்கமாக தெரிய ஆரம்பிக்கிறது. இவைகளைத் தான் காரண, காரியமற்ற கருமநோய்கள் என்று முன்னோர்கள் சொல்லி வைத்தார்கள்.

**வெளிக்காரண நோய்களாவன:** எதிர்பாராத நடைமுறையின் காரணங்களால் ஏற்படும் நோய்கள் ஆகும். அவையாவன:

1. அபாயம்
2. பாஷாணம்
3. மனோவசியம்
4. ரணம்
5. வெட்டுக்காயம்
6. சீதோஷ்ண நிலை மாறுதல் இடிபாடுகளால் ஏற்படும் நோய்கள்.
7. நீரில் அமிழ்ந்து விடுவதால் உண்டாகும்நோய்கள். (இதைத்தான் பேய், பூதம், பிசாசு எனக்கொள்வார்கள்)

**வாதநோய் அல்லது வாயுக்கோளாறு:** இது சரீரத்தில் உள்ள காற்று சம்பந்தப்பட்ட நோயாகும். அதாவது வாதபேதத்தால் வாதநோய்கள் உண்டாகின்றன. மூச்சு விடுவதும், இரத்தம் உடல் பூராவும் சுழல்வதும், உடலின் கழிவிக்குவதும், காது கேட்பதும், பார்ப்பதற்கு அடிப்படை காரணமாக இருப்பதும், ருசிப்பதும் முதலானவைகளும் வாதநரம்புகளின் செயலாகும்.

**வாதத்தின் நிறம் கறுப்பு:** வாதமே மிகவும் பராக்கிரமமுள்ள நரம்பு சக்தியாகும். அணுக்களுக்கும், தாதுக்களுக்கும், வலிவைக்கொடுக்கத்தக்க உட்பொருளும் அதுவேயாகும்.

**இதன் குணங்களாவன:** வறட்சி, இலேசு, சுத்தம், குளிர்ச்சி, அசைவு, சூட்சுமநிலை முதலியவைகளாகும்.

**இதன் தொழில்களாவன:** சரீரத்தில் அசைவு உண்டாக்குதல், உதானவாயுவிலிருந்து பஞ்சேந்திரங்களின் உணர்ச்சிகளை அறிவிப்பது. நாம் உட்கொள்ளும் உணவை சரியான முறையில் வயிற்றில் கொண்டு சேர்ப்பது, நமது வயிற்றில் சீரணித்த அன்னக்குழம்பிலிருந்து கழிவுப் பொருட்களைப் பிரிப்பது போன்ற சிறுநீர், விந்து முதலியவைகளை நிறுத்தி வைப்பது போன்ற காரியங்களை வாதமானது செய்கிறது. இவ்வாதம் விஷமித்துத் தொல்லைக் கொடுக்கும்போது தசையில் மரமரப்பும், சொரசொரப்பும் உண்டாகும். சரீரத்தில் கருப்புநிறம் ஏற்படும். இளைப்பு, கை, கால், நடுக்கம், உஷ்ண வஸ்துக்களின் பேரில் பிரியம் அதிகமாகும். தூக்கம் இல்லா நிலைமை, அறிவீனமான செயல்கள் முதலானவைகளை ஏற்படுத்தும். இவ்வாதத்தின் இருப்பிடமாவது இடுப்பு மட்டத்தின் உள்பாகத்தில் அமைந்திருக்கிறது. இதன் சக்திகள் பூராவும் நரம்பு மண்டலத்தைச் சேர்ந்ததாகும். நாம் சுவாசிக்கும் மூச்சுக்கு அடிப்படை தத்துவமாக அமைந்திருப்பதே வாயுவாகிய வாதம்தான். உள்ளுக்கு இழுக்கும் மூச்சு நுரையீரலுக்கு போய் தங்கி உடம்பினுள் எல்லா பாகத்திலும் கலந்து உடலுக்கு உஷ்ண சக்தியை உருவாக்குகிறது. சமரசமான தொழில் இயற்றும் போதும்தான் இதை வாதம் என்று சொல்லுகிறோம். இந்த வாதமாகிய காற்று பிராணனோடு கலந்து உடம்பிலே சமத்துவமான சூடுபரவச் செய்கிறது. இதனால்தான் இதை உயிரைக் காக்கும் வாதத்துவம் என்று சிறப்பித்துப் பேசுகிறோம். இந்நிலைகளிலிருந்து வாதமானது அதிகப்பட்டதாலோ அல்லது குறைந்தாலோ நோய்களுக்குக்

காரணமாகிவிடுகிறது. வாத தேகியானவன் சாதாரணமாக பலவீனமாக இருப்பான். அவனுக்கு தாது சக்தி மிகக் குறைச்சலாக இருக்கும். அவன் நோயை தடுத்துக்கொள்ளும் சக்தியை இழந்தவனாக வாழ்ந்துகொண்டிருக்கிறான்.

**பித்தம்:** இதை வெறும் பித்தம் எனக்கூறக் கூடாது. ஏனென்றால் இது உடம்பிற்கு உஷ்ணத்தை உண்டாக்கும். தன்மையிலும் நாம் உட்கொள்ளும் உணவு செரிமானம் அடைவதற்கும், செரிமானம் ஆன நீர், கணயத்திரவம் முதலியவைகளுக்கும் உடம்பின் தசை மூலத்திற்கும், உஷ்ணம் காரணமாகச் செல்ல உதவியாக இருந்து வருகிறது. பித்தமானது ஐந்து வகையாகுமென அறிவிற்சிறந்தோர் சித்தர்கள் என்று நூல்களில் சொல்லிச் சென்று இருக்கிறார்கள். இருதய ஸ்தானத்தில் இருக்கும் பித்தமானது இருதயத்தை எப்போதும் இயக்கிக்கொண்டேயிருக்கும். மேலே கண்ட ஐந்து வகையில் இதுவும் ஒன்றாகும். பித்த தேகியானவன் சாதாரண பலமும் வயதும் உடையவனா கின்றான். இது பஞ்ச பூதங்களில் நடுநின்று செயலாக்கம் பெறுகிறது. இது உஷ்ணத்தைக் கொடுத்து காப்பாற்றிவரும் தத்துவ நிலைகளைப் பெற்றிருக்கிறது. நாம் உட்கொள்ளும் பொருளைச் செரிக்கச் செய்யவும், பிறகு போஷணைக்காக அவ்வஸ்துவினிடமிருந்து சத்தைக் கிரகிக்கச் செய்வதும் தாம் இதன் தொழிலாகும். பித்தம் அதிகப்பட்டாலும் குறைந்தாலும் நோய் செய்யும். பித்தம் அதிகப்பட்டால் மண்ணீரலும் கல்லீரலும் பாதிக்கப்பட்டு விடுகிறது. பித்தமானது மேற்சொன்னபடி செரிமானம் ஆவதற்கு அல்லாது உடம்பு உஷ்ணத்திற்கும், சூட்டளவிற்கும் காரணமாக நின்று இராஜசம் என்ற இரஜோ குணத்தைக் காப்பாற்றி உடம்பைப் பக்குவப்படுத்தி காப்பாற்றுகிறது. உடம்பின் அழகிற்கும் சிவப்பு நிறத்திற்கும் பித்தமானது அடிப்படைக் காரணமாக இருந்து வருகிறது. பித்தத்தினால் சரீரத்தில் உள்ள அணுக்கூட்டங்கள் எங்கும் சுற்றிச் சுழன்று சுழன்று தன் நிலைகளினால் சிறப்பிடம்பெற்று வருகிறது. இச்சரீர நிலைக்களனில் பிண்டோற்பத்திற்கு அடிப்படை

காரணமாக நின்று தொழில் இயற்றி பிண்டத்தை உருவகப் படுத்துகிறது. பித்தமானது அன்னரசத்தை மாற்றி சீரணித்த உணவின் சத்தை எல்லா உறுப்புகளிலும் ஏற்றி உடம்பை வளரச்செய்வதற்கு ஓர் மூலவர்க்கமாக இப்பித்தம் செயல்படுகிறது. இப்பித்தமானது, இரத்தத்தில் தெளிவை ஏற்படுத்துவதோடு கூட அன்னரசம், அன்னரச சத்து, விந்து சத்து, இரத்தம் இவைகளின் அடிப்படையில் மறைந்து நின்று செயலாக்கம் புரிவதோடுகூட ஸ்பரிசம், பார்வை, உஷ்ணம், நுட்பம், இலேசுத்தன்மை முதலியவைகளையும் உருவாக்கிச் செயல்புரிகிறது. மேலும் உடம்புக்குச்சூடு, சீரணசக்தி, பார்வையில் தீவிரம், தாகம், பசி, உணவில் விருப்பம், பொருள்களின் நிறம், அறிவிலே தெளிவு, ஞாபகசக்தியில் சுறுசுறுப்பு, உடம்பிலே மிருதுத்தன்மை, அழகு, வசீகரம் முதலியவைகளையுண்டாக்கி உடம்பைக் காப்பாற்றும் நிலையில் செயலாக்கம் பெற்றிருக்கிறது. பித்தம் மிகுந்தாலோ, குறைந்தாலோ நோய் செய்யும்.

**மாறுதலை யடைந்த பித்தத்தின் குணங்குறிகளாவன:** உடம்பிலே எரிச்சலையும், வாந்தியையும் உண்டாக்குகிறது. சரீரத்தில் மஞ்சளான நிறத்தை உருவாக்கிவிடுகிறது. அதிகப்படியான வேர்வையை உண்டாக்கி பலவீனப் படுத்துகிறது. மலம் மஞ்சளாக சத்தற்றுப்போகிறது. சிறுநீரும் மஞ்சள்நிறமாக மாறிவிடுகிறது. உடம்பிலே உஷ்ணக்குறைவு ஏற்பட்டு, பலக்குறைவாகிவிடுகிறது. உணவு செரிமானத்தில் கோளாறுகள் ஏற்பட்டு சாப்பிடமுடியாமலும், சாப்பிட்ட ஆகாரம் வாந்தியாகும் நிலைக்களனும் வேதனை கூத்தமாக ஆகிவிடுகிறது. ஆகையினால் பித்தத்தை சமன்படுத்தி நடுநிலைப்படுத்தி உடலைக் காக்கவேண்டும்.

**கபம் அல்லது சிலேட்பனம்:** இது கபமாகிய சளி மாத்திரமல்ல சத்தும்கூட. ஆதரவாகவும், உள்ளசளி சவ்வு, எலும்பு, மூட்டு முதலியவைகளைக் காப்பாற்றி அங்கே சளித்திரவத்தை எண்ணெய்போல் வேண்டியளவு கொடுத்துக் காப்பாற்றும் தொழில் ஈடுபடச் செய்ய ஆக்கம் தருகிறது.

சாதாரணமாக வாதநேகிக்கு உள்ளதத்துவமும் நிறமும் பலமும் நீண்டகாலம் வாழக்கூடிய சிறப்பான அம்சங்களை சிலேஷ்ம தேகியான இவனுக்கும் அதில் பங்குண்டு, உடம்பில் உள்ள ஒவ்வொரு கண் அறைகளுக்கும், ஊட்டத்தையும், தத்துவத்தையும் கொடுத்து உடம்பை வளரச்செய்து காப்பாற்றுகிறது. இந்த கபமானது, கோளாறு அடையுமானால் நுரையீரல் கெட்டு, நோய்வாய்ப்படுகிறது. உடம்பிலே சதைமூலம், சளி, சவ்வு இவைகளுக்கு கசிவை உண்டாக்கி ஈரம் தாங்கவும், தேங்கவும் செய்து உடலை கெடுத்துவிடுகிறது. இது தத்துவகுணத்தின் கூறுபாட்டாலும், வேறுபாட்டாலும் இந்நிலைக்களன் ஏற்படுகிறது என்பதை திட்டவட்டமாக தெரிந்துகொள்ளவேண்டும். இதன்நிறம் வெண்மையாகும். இது உடம்பில் அணுவாதி தத்துவங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் இடம்பெற்ற மூலப்பொருளாகும். உடம்பிலுள்ள சதைப்பாகங்களை எல்லாம் கட்டி, கட்டுமஸ்தாக்கி வலிவுள்ள உடலாக இருக்கச்செய்யும் மூலப்பொருளாகிறது. வாயுவின் பரிபூரண சக்தியே கபமாகவும், பித்தமாகவும் மாறுதலைடைந்து தனித்தனியாக செயலாக்கம்பெற்று பிரிந்து வாழ்ந்து வருகிறது என்பதையும் உணரச்செய்வான் வேண்டி இங்கே திட்டவட்டமாக தெளிவுப்படுத்திக் கூறப்படுகிறது. உண்மையான உஷ்ணமே பித்தம், கபமோ பொய் உஷ்ணமாகும். உடம்பில் உஷ்ணம் ஆதரிக்கப்படுமானால் சீதளத்தில் தடுத்து நிறுத்தி அணுத்திறன்களை சமமாக்கி அசையாமல் நிறுத்திவைக்கும் தன்மையை இக்கபம் செய்து வருகிறது. உடம்பில் சீதோஷ்ண மாறுபாடுகளால் ஏற்படும் வாதகோபத்தையும், பித்த கோபத்தையும், தடுத்து நிறுத்தி ஒருநிலைப்படுத்தி, உடம்பைக் காப்பாற்றி வைத்திருக்கும் தனித்தன்மை இக்கபத்திற்கு என்றும் இருந்து வருகிறது. தாயைப்போல் எதையும் சகித்துக்கொள்ளக் கூடிய பெரும் சக்தியை தன்னிருப்பிடமாகக் கொண்டுள்ளது. இக்கபமானது, அவயவங்கள் உள்ளும் புறமும் சரிவர பக்குவம் அடைவதற்கும் உடம்பின் வலிவு சுறுசுறுப்போடும்கூட குளிர்ச்சியாக இருப்பதற்குமான நல்ல காரியங்களைச்

சரீரத்திற்கு உண்டாக்கி அந்நிலைக்களன்களுக்கு இடம் கொடுத்து பெற்றத் தாயைப்போல உடம்பைக் காப்பாற்றி வருகிறது. இதன் செயல்திறமையால் உடம்பின் அமைப்பை ஒழுங்குப்படுத்தி பார்க்கச் சிறப்பாக வைப்பதோடு கூட பருமன் இவ்வளவு என்றும் கழிவுப்பொருளும் உடம்பில் கிரகிக்கக்கூடிய செரிமானப் பொருள்கள் இவ்வளவுதான் என்கின்ற முறைமையையும் நிர்ணயித்து உடம்பை காப்பாற்றுகிறது. சரீர உள் அமைப்புகளில் உள்ள கண் அறைகளின் இடைவெளிகளை நிரம்பச் செய்து, அதுகளிலே சத்துக்களைப் பெய்து சீதள வழியாக ஒருநிலைப்படுத்தி ஒன்றுபடச்செய்து, உடம்பின் அவயவங்களில் ஏற்படும் உஷ்ணத்தினால் உண்டாகும். தகிக்கும் தன்மையை சமன்படுத்தி இக்கபமானது தொழிலாக்கம் பெற்று செயலாக்கம் புரிந்துவருகிறது. கபமானது வெண்ணிறமாக பசையைப்போல் குளிர்ச்சியாக எண்ணெய்ப்பசையோடு உள்ளதால் இதனால் கைகால்களும் ஒவ்வொரு உறுப்புகளிலுள்ள மூட்டுகளுக்கும் தனது எண்ணெய் பசையை தந்து, சக்தியும் வலுவும் உறுதித்தன்மையும் மருத்துவத்தன்மையும் தந்து உடலைக்காப்பாற்றி வருகிறது. கபமானது கோளாறு அடையுமானால் அல்லது மிகுமானால், உடல் பூராவும் இரத்தம் கெட்டு வெண்ணிறமாகிறது. இக்காரணமாக உடம்பிலுள்ள சுறுசுறுப்பானது குறைந்து மனிதன் சோம்பல் உடையவனாகிறான். எலும்பு பொருதிகளிலெல்லாம் பிடிப்பும், தளர்வும், ஏற்பட்டு விடுகிறது. ஆகையால் இதுபோன்ற சமயங்களில் கவனமாக இருந்து, நேர்ந்த வைத்தியர்களிடம் அணுகி, இந்நோய் தீர்க்கும் விதிமுறைகளை வழிமுறையோடும் செயல் முறையோடும் இந்நோயைத் தீர்த்து உடம்பை பக்குவப் படுத்திக்கொள்ள வேண்டும்.



# முக்குண தோடங்களும், சிகிச்சையும் வழிமுறையும்

நோய்களின் கூறுபாடுகளை சரிவர தெரிவதற்காகச் சோதிக்கும் வழிமுறைகள் பலவிதம் உண்டு. அவைகளாவன: ஸ்தெஸ்கோப் இருதய ஓட்டங்களின் வழிமுறைகளை அறிந்து உணர்ந்து அதன் வாயிலாக நோய்களின் கூறுபாடுகளைத் தெரிந்துகொள்வது. மற்றொன்று கையைப் பிடித்து நாடி ஓட்டங்களின் நிலையறிந்து அதன் அடிப்படையில் நோய்களைக் கணித்து நோய்களுக்குத் தகுந்த மருந்துகளைக் கொடுத்து குணப்படுத்துவது, வேறுவகையில் முழுஉடம்பின் நிலைமை, குரல், நாக்கு, கண், மலம், மூத்திரம், உடம்பைத் தொட்டுப் பார்த்து நோயாளியின் வெளித்தோற்றம் இவைகளைத் தெரிந்துகொள்ளவேண்டும். நோயாளியின் தினப்பழக்கம், தூக்கம் இல்லாத நிலைமை, பசிக்குணம், செரிமானங்கள், வெய்யிலிலும், காற்றிலும் திரிதல் இவைகளையெல்லாம் விசாரித்து அறிந்து நோய்களைக் கணித்து அறியலாம். மேற்கண்ட முறைகளில் எல்லாவிதமான வைத்தியர்களும் கையாண்டு கணித்து அறிந்து நோய்களைக் கணித்து அறிந்துகொள்கிறார்கள். நாடிபார்க்கும் விஷயத்தின் உட்பொருள் சித்தவைத்திய நிலைகளின் அடிப்படையிலிருந்தே ஆயுர்வேத நிலைக்களன்களின் ஆதரவுக்காக எடுத்துக் கொண்டதோடு, சித்தவைத்திய நிலைக்களன்களின் அடிப்படைகளை கூடுமான அளவு ஆயுர்வேதமான ஆரியமொழியிலிருந்தே சித்தவைத்தியம் வந்ததாகவும், இக்கால நிலைமைக்கேற்ற வண்ணம், மாற்றிக் காட்டி திராவிட இனத்தில் படித்த மண்டூகங்களை தன்பக்கம் இழுத்து தமிழில் எப்படி இருக்கக்கூடும் என்றுக் கேள்விக் கணையுடன் கிண்டல் செய்யும் நிலைகளினால் படித்த சமுதாயம் என்பவர்கள் வாழ்ந்து செல்கிறார்கள்.

ஆயுர்வேத நூல்களில் சரகம், சுசுருதம், அஸ்டாங்கிறாயதம் முதலிய நூல்களில் நாடி நிலைகளைப்

பற்றி பதினெண் சித்தர் நாடி சாஸ்திரங்களைப் போல விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கவில்லை. சித்தர்கள் ஒவ்வொருவரும் தங்களது நூல்களில் நாடிகளின் லட்சணங்களைப் பற்றி விரிவாகவும், விளக்கமாகவும் எழுதிச்சென்றிருக்கிறார்கள் என்பதை தெரிந்துகொள்ள வேண்டும். இந்த வகைகளிலெல்லாம் தெரிந்துகொண்ட நோய்களை தகுந்த மருந்துகளைக் கொண்டு நோய்களைக் குணப்படுத்துவதே சரியான வழி முறைகளாகும். இந்தவிதமான சோதனை முறைகள் எல்லாவற்றிலுமிருந்து தப்பித்து கட்டுப்படாத நோய்களும் சில சமயங்களில் மக்களின் மத்தியில் தென்படுகிறது. வைத்தியன் நோயாளியின் முற்போக்கு விஷயங்களைத் தெரிவதென்றால் உள்ளும் புறமுமாகத் தேகவலியும், எதனால் உடம்பிற்கு எதையும் தாங்கமுடியாத அச்சத்து ஏற்பட்டது என்றும் கண்டறிவதோடுகூட உள் அவயவங்களுக்கும் வெளித் தோற்றங்களுக்கும் உள்ள மாறுபாடுகளை கண்டறிந்து, நோய் நிலைமைகளை உணர்ந்து அறியவேண்டும். இப்படி யெல்லாம் தெரிந்துகொண்ட நோய்களைத் தக்க மருந்துகளைக் கொடுத்து நோயினை குணமாக்க வேண்டும். இன்னின்ன நோய்களுக்கு இன்னின்ன மருந்துகள் என்பதை சித்தர்கள் தங்களது சித்தவைத்திய நூல்களிலே சிறப்பாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே நோயாளிகளை குணமாக்குவதற்காக பாஷாணப்பொருட்களும், சுக்கு, மிளகு, திப்பிலி முதலிய தாவர வர்க்கங்கள் இரண்டையும் கலந்து பூரண குணம் ஆகும்படியான மருந்துகளைச் செய்து நோயாளி குணமாக்குகிறார்கள். சித்தவைத்தியத்திலே பத்திய முறையானது மிக விசேஷமான நிலைகளாகும். நம் இஷ்டமான உணவை உண்ணலாம் என்பது சித்த வைத்தியத்தின் நிலைகளுக்கு முற்றிலும் மாறுபட்டது. பத்தியத்தை எவ்வளவுக்கெவ்வளவு கடைப்பிடிக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நோய்கள் விரைவாகக் குணம் ஆகின்றன. நாம் சாப்பிடும் உணவில்தான் முக்கியமாக முப்பிணிக் கோளாறுகளும் உண்டாகின்றது என்பதை திட்டவட்டமாக ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ள

வேண்டும். ஆகையால் பத்தியபாகம் ஒவ்வொரு வியாதிக்கும் அனுசரிப்பது வேண்டும். இது பற்றி பதார்த்த பல்பொருள் விளக்கம் தகுந்த பதார்த்தங்களைப் பற்றியும் அதற்குத் தகுந்தபடியான சிகிச்சை முறைகளையும் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தில் சித்தர்கள் செய்த கவனமான பரிசீலனைகளுக்கு நாம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். சித்தவைத்திய முறைப்படி 220வகையான தாதுப் பொருள்களிலிருந்து மருந்துகள் தயாரிக்கப்டுகிறது. தாதுப்பொருட்கள்புடமிட்டும், பஸ்பம், செந்தூரங்களாகவும், சுண்ணம், மாத்திரைகளையும் வேண்டிய மருந்துகள் செய்துகொள்ள வைத்தியர்கள், மூலிகைகள் வேர்கள், சத்துக்கள், சாறுகள், விதைகள், மரத்தின் பால்கள், பிசின் ஆகியவைகளைக்கொண்டு சூரணம், லேகியம், மாத்திரைகள், வடகங்கள், கஷாயங்கள் இந்த வகையான மருந்துகளை தயாரித்து நோய்களுக்குத் தகுந்த மருந்தைக்கொடுத்து குணமாக்கலாம் என அறிந்து செய்தார்கள். பூர்வ காலத்து மருந்துகள், தூண்களைப்போல் உயர்ந்த உரங்கொண்ட மருந்துகளாகச் செயல்பட்டு வந்திருக்கின்றன. சித்தமுறைப்படி இக்காயத்தை அதாவது சரீரத்தை அழியாத நிலைக்கு மாற்றுவதோடு மற்றவர்கள் கண்ணுக்குத் தெரியாத நினைத்த இடம் கொண்டுபோகும் வழிமுறைகளையும் அவர்கள் நமக்கு நன்கு அனுபவப் பூர்வமாகச் செய்து காட்டி அவைகள் சிறப்பாக சித்தவைத்திய நூல்களிலே எழுதி வைத்து இருக்கிறார்கள். சித்தவைத்திய முறைகளிலுள்ள காயசித்திக்காக தயாரிக்கப்படும் மருந்துகள் வேறு எந்த வைத்திய முறைகளிலுமே சொல்லப் பட்டிருக்க வில்லை. இந்த மருந்துகள் நீண்ட ஆயுள்வரை இருப்பதற்கும், மரணத்தை தடுப்பதற்காகவும் வேண்டி தயாரிக்கப்பட்ட மருந்துகளாகும். இதற்காக வேண்டி இரசத்தில் இருக்கும் தத்துவங்களையும் உணர்ந்து அறிந்து அதன் சக்திகளை எண்ணம்போல் மாற்றி நெருப்புக்கு ஓடாதபடி செய்து சுண்ணமாகவும், செந்தூரமாகவும் உருவகப்படுத்தி சரீர நிலைக்கு ஏற்றவாறு சாப்பிடும் படியாகச் செய்து, அதனால் உடம்பிலுள்ள சதை

பாகங்களிலும் அதன் கண் அறைகளிலும் புகுந்து உடம்பை உருவகப்படுத்தி பார்த்த அனுபவம் கண்ட உண்மைகளாகும். இராமன் பச்சை நிறம், கிருஷ்ணன் நீலநிறம் அதனால்தான் அதனை ரகசியமாக வைத்துச் சென்றிருக்கிறார்கள். இவைகளை மீண்டும் வருங்காலத்திலாகிலும் எல்லா வற்றையும் கண்டறிந்து, திராவிட இனத்தின் சிறப்புகளை பெரியவர்கள் சொல்லிச் சென்ற வழிமுறைப்படி, எல்லாவிதமாக இரகசியங்களையும் வெளியாக்கி சித்த மருந்துகளின் தன்மைகளையும், தத்துவங்களையும், உலக மக்களை எல்லோரும் கண்டு உணரவும், கண்டு அனுபவிக்கவும், தக்கவர்களைக் கொண்டும் தகுதியானவர் களைக்கொண்டும், செயல் ஆதிக்கம் பெறவும், இனி எல்லாவிதமான முயற்சிகளைச் செய்யவேண்டும். மருந்துகளைப் பற்றி தனி நூல்கள் எழுதப்பட்டிருக்கும் காரணமாக, அவைகளைப்பற்றி அதிகமாக, விரிவாகச் சொல்லாமல், சித்தர்களைப் பற்றியும் சித்தவைத்திய நுணுக்கங்களைப் பற்றியும் மேற்கொண்டு விபரங்களைக் கண்டறியச் செல்வோம்.

## நிலத்தின் வகைகள்

### நிலங்கள் ஐந்து வகைப்படும்

நிலங்கள் ஐந்துவகைப்படும். 1. குறிஞ்சி, 2. முல்லை, 3. மருதம், 4. நெய்தல், 5. பாலை.

*குறிஞ்சி:* குறிஞ்சி நிலமானது நோய்களுக்கே இருப்பிடமாக உள்ள இடம். இவ்விடம் மலையைச் சார்ந்த நிலங்களில் இருப்பதால், இந்நிலங்களில் விளைகின்ற பொருள்கள் அதிக வன்மையுடையதாக இருக்கும். மேலும் அவ்விடத்தில் வாழ்பவர்களுக்கு இரத்தத்தை உறிஞ்சுகின்ற சுரம், வயிற்றில் ஆமைக்கட்டியும், கப சம்பந்தமான நோய்களும் வரும் என்பதை நாம் அறியவேண்டும்.

***முல்லை:*** முல்லை நிலத்தில் ஆடு, பசு, எருமை முதலியவை அதிகப்படி இருந்தாலும், அந்நிலத்தில் பித்தநோய் அதிகமாக இருக்கும். மேலும் வல்லநோய் உண்டாகும். இதனால் வாதநோயும் ஏற்படும். ஆகையால் இந்நிலத்தில் வாத சம்பந்தமான பல நோய்களும் உண்டாகும்.

***மருதம்:*** மருத நிலமானது தன்னிடத்திலுள்ள நீர் வளப்பம் ஒன்றையேக்கொண்டு வாதம் முதலிய மூக்குற்ற நோய்களையும் ஒழிக்கும். கப சம்பந்தமான நோய்களையும் பூரணமாகக் குணப்படுத்தும். இந்நிலத்தில் விளையும் அருஞ்சுவைப் பொருட்களை உட்கொள்பவராயின், அவர்கள் பெயரைச் சொன்னாலே உலகில் நோய்கள் இல்லை எனக்கூறலாம்.

***நெய்தல்:*** நெய்தல் நிலம் மிகுந்த உவர்ப்பை அகலாதிருந்தாலும் (உப்புவிளைகின்ற இடமாக இருப்பினும்) அந்நிலத்தில் அதிகமாக கொடுமையான வாதநோய்களே உண்டாகும். மேலும், அந்நிலத்தில் வாழும் மெலிந்த சரீரத்தை உடையவர்களின் உடலைப் பருக்கச்செய்யும். ஈரலைப் பெருக்கும் நோய்களையும் உண்டாக்கும். மேலும் குடலை கீழ் இறக்குகின்ற குடல் வாயு நோயையும் உண்டாக்கும். ஈஃதன்றி, இதில் வசிப்பவர்களின் நுட்ப சாதனங்களின் கப சம்பந்தமான கட்டிகளையும் உண்டாக்கும்.

***பாலை:*** பாலை நிலம் வாதம், பித்தம், கபம் இவற்றால் விளைகின்ற பிணிகளுக்கு இருப்பிடமாக இருந்தாலும், அவற்றால் உண்டாகும் நோய்கள் யாவும் இந்நிலத்தில் தோன்றும், ஆகையால், நோயினால் ஆகிய துன்பத்தை விளைவிப்பதில் இந்நிலத்திற்கு ஒப்பாக வேறு எந்த நிலமும் இல்லை எனக் கூறலாம்.

**ஐந்து நிலங்களின் பொதுக்குணம்:**

*1. சேவற்கொடியையுடைய முருகனாகிய தமிழ்க் கடவுளுக்குரிய இடம் குறிஞ்சி நிலம்.*

*2. பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் திருமால் வாசம் செய்யும் இடம் முல்லை நிலமாகும்.*

*3. மேல்திசைக்கு பாலகனாகிய வருணபகவானின் இடம் நெய்தல்.*

*4. வச்சிராயுத்தையுடைய இந்திரனின் இடம் மருதநிலம்.*

*5. வாள் மாது ஆகிய துர்க்கையின் இடம் பாலை நிலமாகும்.*



# நீரின் வகைகள்

## மாரிநீரின் குணம்

சீதமுறுங் குளிர்ச்சி சேருமே சிந்தத்துப்
போதந்தெளிவாய்ப் பொருந்துங்கா-ணாதமொடு
விந்தும் வளர்ந்துவரு மேதினியலெவ்வுயிர்க்குஞ்
சிந்துமழை நீராற் றெளி.

எல்லா உயிர்க்கும் பயன்படக்கூடிய மழை நீரை நிலத்தில் படாமல் எடுத்துக் கையாண்டால் உயிரொடு வாழும் உடலுக்குக் குளிர்ச்சி, நல்லறிவு, நாதம், விந்து ஆகிய இவ்விரண்டையும் அதிகரிக்கச் செய்து உடலுக்கு அழகையும் கொடுக்கும்.

## ஆலங்கட்டி நீரின் குணம்

வெண்மாசி மேகமுடன் வீறும் பெரும்பாடு
கண்மாசி காந்தல் கடித கற்றுந்-தண் மீறும்
விக்கற் சுவாசமுடன் மெய்ம் மயக்க மும்போக்குங்
சுக்கு மாலாங்கண்டி காண்.

ஆலங்கட்டி நீரை உட்கொள்ளுவோமாயின் அதனால் நீர் பிரமேகம், பெரும்பாடு, நீரெறிச்சல், நீர்க்குத்தல், கை, கால், உடல் முதலியவற்றின் எரிச்சல், விக்கல், சுவாசம், மயக்கம் முதலிய நோய்களைக் குணப்படுத்தி உடலுக்குக் குளிர்ச்சியையும், உற்சாகத்தையும் உண்டாக்குவதுடன், கண் புகைச்சல், கண்ணில் நீர்வடிதல், கண் கூச்சம் முதலியவைகளையும் நிவர்த்தி அடையச்செய்யும்.

## பனி நீரின் குணம்

பனிச்சலத்தை யெல்லுதயம் பானஞ்செய் வாரைத்
தனிச்சொறி சிரங்குப்டந் தாபந் - தனிவாதம்

முத்தோஷ நீரிழிவு மூடழல் கிராணியிவை
கொத்தோடு தாழ்ந்தகலுங் கூறு.

பனி நீரை சூரிய உதயத்திற்கு முன் உட்கொள்ளுவோமானால் சொறி, சிரங்கு, குட்டம், எரிச்சல், கபத்தோடு கூடிய இளைப்புநோய், வாதநோய்கள், முக்குற்ற களைப்பு நோய்கள், நீரிழிவு, சரீரம் முழுவதும் பரவக்கூடிய அழற்சி நோய், கிராணி, பேதி இந்நோய்கள் அடியோடு விலகுவதுடன் தனித்தன்மை பொருந்திய வாத நோயையும் குணப்படுத்தும்.

**குறிப்பு:** இந்நீரை மண் குடுவையில் பக்குவப்படுத்தி வைக்கப்பட்ட பனிநீரை தினமும் காலை, மாலை இருவேளையும் உட்கொள்ளுவோமானால் பாண்டுவம், வெண்மேகமும் மிகுதிப்படாத இயக்கத்தைப் போக்கும். நெடுநாள் வரையிலும் உடல் அழியாமல் இதனால் காப்பாற்றப்படும். மேலும் உடலுக்கு பெருக்கம் உண்டாகும். மேலும் உரோமங்களுக்கும் (மயிர்களுக்கும்) அதிகப்படியான வன்மைமயை உண்டாக்கும். ஆகையால் அமுதம் போன்ற இயல்புடைய இந்நீரை கல்பமாகவே பயன்படுத்தலாம்.

## தண்ணீரின் குணம்

தண்ணீர்க் குணமெல்லாந் தான்கேள் மடமயிலே
மண்ணின் குணமல்லான் மற்றுமுண்டோ - உண்ணுங்கால்
ஆறுகுள மேரிமேடு வாழ்ந்த கூபஞ் சுனையுள்
ளூறருவி யென்னு முலகு.

தண்ணீர்க் குணங்களெல்லாம் அவைகள் தேங்கி நிற்கும் மண்ணின் குணத்தைப் பெற்றிருக்குமே தவிர்த்து வேறில்லை. ஆகையால், ஆறு, குளம், ஏரி, மடுவு, கிணறு, சுனை என்னும் ஆறுவகை இடங்களில் தங்கி அவ்வவற்றின் குணங்களைப் பெற்ற நீரை உட்கொள்ளும்போது அவ்வவ்விடப் பெயர் பேரினைச் சொல்வார்.

## ஆற்றுநீரின் குணம்

ஆற்றுநீர் வாத மனலங் கபத்தோடு
தோற்றுகின்ற தாகந் தொலைக்குமே - ஹூற்றமிகுந்
தேகத்தி நோயையெல்லாஞ் சீறித் துரத்தி விடும்
போகத்திற் றாவுமாம் போற்று.

ஆற்று நீரானது வாதநோய், பித்தநோய், ஈழை, நீர்வேக்கு முதலிய நோய்களைக் குணப்படுத்துவதுடன் ஆண்மையை அதிகப்படுத்தி சரீரத்திற்கு வன்மையையும், அழகையும் கொடுக்கும். எனவே, இது மருதநில ஆறு எனப் போற்றப்படுகிறது. இனி நம் நாட்டில் பாயக்கூடிய ஆறுகளின் தன்மைகளைப் பற்றி ஆராய்வோம்.

## கங்கை நீரின் குணம்

கங்கைநதி நீர் பிறவிக் காட்டுக்கோ பேரனலாந்
துங்கமுறு வைப்புனலைத் தூய்க்குங்கால் - அந்தவெப்பு
மந்தங் கயம் பித்தம் வாயுமேகங் காந்தல்
உந்துந்தா கங்களும் போ முன்.

கங்கை நதி நீரை உட்கொள்ளுவோமானால் சரீரச் சூடு, மந்தம், காசநோய், பித்தகோப நோய், வாதத்தினால் உண்டாகக்கூடிய நோய், சீழ், மேகம், சரீர எரிச்சல், நீர்வேட்கை ஆகிய நோய்கள் குணமாகும்.

## யமுனை நீரின் குணம்

யமுனை நதி நீரா லதிசுரம் வெண்குட்டஞ்
சமனைநிகர் காசம்வெட்டை தாகம் - வமனமுறு
பித்த மிரைப்பிளைப்பு பேசரிய தாதுநட்டஞ்
சுத்தவெள்ளைப் பாண்டுவைபோஞ் சொல்.

யமுனை நதி நீரை உட்கொள்ளுவோமானால் அதிகப்படியான சுரம், வெண்குட்டம், காசம், வெள்ளை,

வெட்டை, தாகம், பித்தவாந்தி, இளைப்பு, பாண்டு, தாது நட்டம் ஆகிய நோய்கள் குணமாகும்.

**கோதாவரி நீரின் குணம்**

கோதாவரி யென்னுங் கோதிநதி நீரதனால்
வாதாதி முத்தோஷ வஞ்சினமும் - பேதாபே
தச்சொறிவு முட்சிரங்குந் தாவு குளிர்ச்சுரமு
மிச்சகு விட்டேகு மிசை.

கோதவரி நீரை பருகுவோமானால் முக்குற்றங்களினால் ஏற்படக்கூடிய கோபம், பலவகையான சொறிகள், உட்சிரங்கு, கட்டி, நலிற்சுரமும் ஆகிய இவைகள் குணமாகும்.

**துங்கபத்திரா நீரின் குணம்**

மாதுங்க பத்திராநீர் வன்றாக வெண்புருக்கி
யோதங் கரப்பானரோசிகநோய் - தாது நட்டம்
நேத்திரதோ ஷங்காச நீரடைப்பு, மெய்வண்ணக்
கோத்திரமென் றோதிவை போக்கும்.

துங்கபத்திர நதியின் நீர் கொடிய நீர்வேட்கை எலும்புருக்கி நோய், கரப்பான், தாது நட்டம், அரோசகம், கண்களில் உண்டாகும் நோய்கள், காசம், நீரடைப்பு, உடல்நிறம் வேறுநிறமாக மாறுதல் ஆகிய நோய்களை குணப்படுத்தும்.

**நருமதா நீரின் குணம்**

நருமதா வென்னு நதிப்புனலால் வாந்தி
சுரம்விக்கல் காமாலை மின்றோஷம் - பொருமலிரு
கைகா லரிவுநீர்க் கட்டுகோழைக் கட்டோ
டைவாத மென்பவைபோ மாங்கு.

நருமதா நதிநீரை உட்கொள்ளுவோமானால் வாந்தி, சுரம், விக்கல், காமாலை, வயிற்றுப்பிசம், இரண்டு

கைகால்களில் எரிச்சல், நீர்க்கட்டு, கோழைக்கட்டு, கபவாதி கூட்டுநோய்கள் ஆகியவைகளைப் போக்கும்.

**சிந்து நீரின் குணம்**

சிந்துநதிப் புனலாற் றேகத் துறுங்கடுப்பு
புத்திமயக் கம்மேகம் புண்வியர்வை - விந்து நட்டம்
அத்திசுரம் வெட்டை யடர்மூத்திரச் சிக்கல்
முற்றியதாகப்பினிபோமுன்.

சிந்துநதி நீரால் சரீரக் கடுப்பு, புத்தி மயக்கம், மேகம், புண், வியர்வை, சுக்கிலநட்டம், மூத்திரச்சிக்கல், தாகம் ஆகிய நோய்கள் குணமாகும்.

**வைகை நீரின் குணம்**

வைகை நதிப்புனலால் வாதநீர் குஷ்டமொடு
செய்கை தவிர்க்குஞ்சோகை திண்கரப்பான் - மெய்யெரிவு
தாகநடுக்க னிலந்தாது நஷ்டஞ் சில்விடமு
மேகுமிந்த வையம் விடுத்தே.

வைகை நதி நீரினால் வாதநீர், குட்டம், சோகை, கரப்பான், உடல் எரிச்சல், தாகம், நடுக்குவாதம், தாது நட்டம், சில்விட கடிகள் ஆகியவை குணமாகும்.

**சித்திர நீரின் குணம்**

சித்திரநதிப்புனற்குத் தேகத் துறுங்கடுப்பு
தொத்து கரப்பான் வாந்தி சூலைகுன்மங் - குத்துகின்ற
மூத்திர தோஷத்தோடு மூடுவா தாதிக்கங்
கோத்தவூன் வீக்கமும் போங் கூறு.

சித்திர நதி நீர் உடற்கடுப்பு, தொற்று நோய், கரப்பான், வாந்தி, முக்குற்றம், மூத்திரத்தோடம், முக்குற்றத் தோடம், சங்கவாதம், வாதத்தினால் உண்டாகும் நோய்கள், வாதவீக்கம் ஆகியநோய்களைக் குணப்படுத்தும்.

### காவேரி நீரின் குணம்

காவிரிநீ ராற்பொருமல் காச்சுவா சஞ்சோபை
நீவுதொண்டைக் கட்டிளைப்பு நீரேற்றம் - பூவுலகின்
மன்னுதிரக் கட்டியொடு வாயுலர லென்பவைபோம்
பின்னுடற்குக் காந்தியுமாம் பேசு.

காவிரி நீரை உட்கொள்ளுவோமானால் வயிற்றுப் பொருமல், இருமல், இரைப்பு, சோவை, கபகட்டு, ஆயாசம், நீர் ஏற்றல், இரத்தகுன்னம், நா வறட்சி ஆகிய நோய்களைக் குணப்படுத்தும்.

### தாம்பிரபரணி நீரின் குணம்

தாம்பிரபர ணிப்புனலாற் சர்வசுரம் பித்து விழுத்
தூம்பிரமுட்காய்ச்சல் சுவாச நோய் - ரோம்பிமிகக்
கக்குகய மென்புருக்கி கைகா லெரிவுடனே
மிக்குறு தாகங்களும் போம் வின்.

தாம்பிரபரணி நீரால் சகலசுரம், பித்த தோடம், கண்புகைச்சல், உள்காய்ச்சல், இரைப்பு, எலும்புருக்கி நோய், கைகால் எரிச்சல், அதிதாகம் ஆகிய இவைகள் குணமாகும்.

### பச்சையாற்று நீரின் குணம்

பச்சை யாற்றுப்புனலைப் பார்த்து வந்த பேர்தமக்கு
நச்சிரும் லிளைகப நண்ணுமே - நிச்சயமா
யவ்வளவோ வெண்ணி லனிலமுதிரக் கடுப்புங்
கவ்வுசுர முங்கானுங் கான்.

பச்சையாற்று நீரை பருகுவோமானால் நச்சிருமல், ஈழை, கப ஆதிக்கம், வாத கோபம், இரத்தக் கடுப்பு, சுவாசிக்கின்ற சுரம் ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

### குளத்துநீரின் குணம்

குளத்து நீர்தானே கொடிதான வாதம்
வளர்த்தி விருமப்பான் மது வாங் - குளிர்ச்சியையு
மெத்தவுண் டாக்குமென மேதினியோர் தங்களுக்கு
கொத்தலரும் பூங்குழலாய்க் கூறு.

குளத்து நீரினால் கொடிய வாத நோயையும், மதுபிரமேக நீரையும், சீதளத்தையும் அதிகமாக உண்டாக்கும்.

### தா மரைக்குளத்து நீரின் குணம்

தண்டா மரைக்குளத்திற் றங்கு புனலதனா
லுண்டாகும் வாதபித்த முண்மையே - பண்பான
வெக்கை நோய் மாறாது வீறு தபனமுமாய்
மைக்கருங் கண்மாதே வழுத்து.

குளிர்ச்சி பொருந்திய தாமரைக்குளத்து நீரினால் வாத பித்த கப நோய்கள் , நாள்பட்ட காய்ச்சல், தாகம் ஆகிய இவைகளை உண்டாக்கும்.

### அல்லிக்குளத்து நீரின் குணம்

அல்லிக் குளத்தினீர்க் கக்கினி மந்தப் பேதி
மெல்லிச் சொறிசிரங்கு வெப்புடனே - தொல்லுலகில்
தாலுதனி லட்சரமுந் தாதுநட்ட முங்கொடுக்குங்
கோல மலர்த்திருவே கூறு.

அல்லி மலர் நிறைந்த குளத்து நீரினால் அக்னி மந்திரத்தால் உண்டாகும் அசீரணப் பேதி, சொறி, சிரங்கு, நாப்புண், தாது நட்டம் ஆகிய இவைகளை உண்டாக்கும்.

### அதிகுளிர்ச்சி, சருகூறல் உள்ள குளத்துநீர்

சீதமிகுந்த கலம் தேகத்தளர்ச்சி விக்கல்
வாதகபங் கடிகள் வாந்திநளி - மோதிருமல்

வீறுகுண்ம நோயிவை விளக்குஞ் சருசவிமதில்
ஊருமெனி னோய்ப்பலவா முன்.

அதிகுளிர்ச்சி பொருந்திய குளத்து நீரானது உடல் சோர்வு, விக்கல், வாத கப நோய்கள், வண்டுகடி, சில்விஷம், வாந்தி, குளிர், காசம், குன்மநோய் ஆகிய இவைகளை உண்டாக்கும். இத்தகைய குளத்தில் இலைச்சருகும் விழுந்து ஊறுமானால் அந்நீர் பற்பல பிணிகளை உண்டாக்கும் என்பதை அறிவாயாக.

### ஏரி நீர் சுனைநீர் இவைகளின் குணம்

ஏரிசலம் வாதமிகு மதுவே துவர்ப்பாகுங்
கூறியதோர் கற்கனை நீர் கூறுங்காற் - சீரியதோர்
லாதமொடு பித்தமெழும் வைத்தொருநாம் பின்னுண்ணிற்
சீதமில்லை யுட்டினமாஞ் செப்பு.

ஏரிநீர் இளைத்த துவர்ப்புச் சுவையை உடையது. வாத நோயை வளர்க்கும் கற்களை நீர் வாததோடம், பித்ததோடம் இரண்டையும் உண்டாக்கும். இதை ஒருநாள் வைத்திருந்து மறுநாள் உட்கொண்டால் சீதம் நீங்கி உஷ்ணம் தரும்.

### ஓடைநீரின் குணம்

ஓடை தரு சலம் யுண்ணவதி தாகமுமா
மேடையெனத் தோட்பலனு மெத்தவா - மோடைமலர்க்
கண்ணா யது துவர்ப்புங் காணா மதுரமுமாம்
எந்நாளும் பாரி லியம்பு.

ஓடை நீரை உட்கொள்ளுவோமானால் சரீரத்திற்கு பலத்தைக் கொடுப்பதுடன், துவர்ப்பும் மதுரத்தன்மையும் அளிக்கவல்லது.

### கிணற்று நீரின் குணம்

ஆசாரக் கூபத் தறலா லதிதாகம்
வீசாகச் சூடுபசி மெய்க்காந்தல் - மாசூலை

மெய்வலி இடைதுளைப்பு வீழ் மயக்கஞ் சோபைபித்தம்
பைய வருமீளையரும் பார்.

குற்றமற்ற கிணற்று நீரினால் அதிதாகம், சூடு (வெப்பம்) பசி, சரீரகாந்தல், கொடிய சூலை, உடல் கடுப்பு, குடைச்சல், மயக்கம், வீக்கம், பித்தக்கோபம், நாளுக்கு நாள் அதிகப்படுகின்ற ஈளை நோய் ஆகிய இவைகளைக் குணப்படுத்தும்.

**சுனை நீரின் குணம்**

கனைப்புனலைத் துய்த்தார்க்குஞ் சூழ்ந்ததிற்
றோய்த்தார்க்குக்
சுனைப்புறுசீதச்சுரமுங் காணும் - வினைக்குரிய
வாதமுறு வத்தால் வருமே நடுகக்கலின்னும்
ஓதுபித்த கோபமுமா முன்.

சுனை நீரை உண்பவர்களுக்கும் அதில் முங்கினவர்க்கும் சீதளச்சுரம் இருமலோடு கூடிய கப வெப்பு, வலி மிகுதி, வாத நடுக்கம், பயித்திய தோடம் ஆகிய இவைகள் உண்டாக்கும்.

**ஊற்று நீரின் குணம்**

ஊற்றுகலம் பித்த மொழிக்கு மினிப்பாகும்
ஆற்றிவிடுந் தாகத்தை யப்பொழுதே கூற்றுவிழிக்
கொம்ப ரிடையாய் குணாகுணங்களைத் தெளிவாய்
நம்பி யுலகோரறிய நாட்டு.

இனிப்புத் தன்மையை உடைய ஊற்று நீரானது பித்தக் கோபத்தை ஒழிக்கும். இத்தண்ணீரை உடன் உட்கொள்வோமானால் தாகத்தைத் தணிக்கும்.

**பாறை நீரின் குணம்**

பாறைமீ தூறுகின்ற பானீயந் தன்னையுண்ணி
லேறுமுடல மெல்லா மீரிப்பே வீறுகின்ற
வாதகோபத்துடனே மாறார் சுரமுமெழும்
ஒதசனத்துண்டா முவர்ப்பு.

பாறை மீது ஊறுகின்ற நீரை உட்கொண்டால் உடல் முழுமையும் சில்லிட்டு விடும்.(குளிர்ச்சி அடையும்) வாதகோபம் மிகும். இடைவிடா சுரம் உண்டாகும். உண்கின்ற உணவுப்பொருள்களின் முடிவில் உவர்ப்புச்சுவை தோன்றும்.

**சுக்கான் பாறை நீரின் குணம்**

நீர்க் கடுப்பொடு நெஞ்சினிற் கபக்கட்டு
பார்க்கிற் பித்தம் பலபிணி சூழ்வதாந்
தீர்க்க வாயுவைத் தீர்த்திடுஞ் சிந்தைநோய்
தாக்குஞ்சுக்கான் தனிப்பாறைத் தோயமே.

சுண்ணாம்பு பாறை நீரை உட்கொண்டால் மூத்திரக் கடுப்பு, நெஞ்சிற் கோழைக்கட்டுதல், பித்த ராதிக்கம் கபத்தைப் பற்றிய சிற்சில நோய்கள், மனப்பிணி ஆகிய இந்நோய்களைக் குணப்படுத்தும். ஆனால் மேலும் வாதநோயையும் குணப்படுத்தும்.

**கரும்பாறை நீரின் குணம்**

கரும்பாறைத் தண்ணீர் கனசோபை வாந்தி
பெரும்பாடு பித்தசுரம் பீடை - யருந்தயக்க
நீர்க்கடுப்பு காகமிவை நீக்கிவித்தை புத்தியழ
கேற்கவளர்ப் பிக்குமெய்யை யெண்.

கரும்பாறையில் ஊறிய தண்ணீர் மிகுந்தச் சோகை வாந்தி, பெரும்பாடு, பித்தச்சுரம், தயக்கம், நீர்க்கடுப்பு, நீர்வேட்கை முதலியவைகளை நீக்குவதுடன் கல்வி, புத்தி, அழகு இவற்றை அடையும்படி சரீரத்தை வளர்க்கும்.

**அருவி நீரின் குணம்**

அருவிநீர் மேக மகற்றுங் கபத்தை
வருவிக்கும் ரத்தபித்த மாற்றும் - பெருமிதமாம்

வேலை யுலகின் மிகுத்துபல முண்டாக்குங்
காலைமலர் முகத்தாய் காண்.

மலை அருவி நீரினால் பிரமேகத்தையும், ரத்தப் பித்த நோய்களையும் குணப்படுத்தி சரீரத்திற்கு பலத்தைக் கொடுக்கும். ஆனால் கபத்தை உண்டாக்கும்.

### அடவி நீரின் குணம்

அடவிப்புனலா லதிசீ தாதிக்கம்
உடலிற் கனப்பிளைப்பு முண்டாம்-உடல்வயிறு
நாவிவ் விடம்வெதும்பு நண்ணுந் தலைப்பாரந்
தீவவ் வடற்சுரமாந் தேர்.

அடவி நீரினால் அதிகச் சீதளம், சரீரபாரிப்பு, இளைப்பு, உடல், வயிறு, நா ஆகிய இடங்களில் வெதும்பல், தலைப்பாரம், விஷச்சுரம் ஆகிய இவைகள் உண்டாகும்.

### சிவந்த நீரின் குணம்

காசபித் தத்தாற் காந்தியு மேகிடும்
ஊச லூட்டின முட்சுரங் காந்தலாம்
நாச தாதுவு நன்னிடு மென்றுரை
வாசமிற் சிவப்பாம்புனல் வண்மையே.

செம்மை நிறத் தண்ணீரால் பித்த காசம் உண்டாகும். இயற்கையின் நிறம் மாறும். வெம்மையும், உட்சுரமும், காந்தலும், அரற்றவமும் உண்டாகும். காது நாசமாகும்.

### கறுத்த நீரின் குணம்

கறுத்தஜலம் வாந்தி கரப்பான் வெப்புகாந்தல்
இறுத்தநெஞ்சுக் கட்டீரும்பீனை மறைப்பில்சுர
நீக்கரிய நெஞ்செரிப்பு நீள்தோவூடந் தாகநளிர்
போற்குமன லங்கொடுக்கும் போற்று.

கறுமை நிறத்தண்ணீர் வாந்தி, கரப்பான், வெப்பு, அழல், கோழைக்கட்டு, இறுமல், ஈளை, மாறல்சுரம், புளித்தேப்பம், நீர் ஏற்றல், தாகம் நளிர் ஆகியவைகளைப் போக்கி உடலுக்கு வெப்பத்தைக் கொடுக்கும்.

### வயல் நீரின் குணம்

மேகம்போந் தாகம்போம் வெட்டையுடனே சுரம்போந்
தேகங் குளிர்ச்சியுற்றுத் தேறுங்காண் சோகமெல்லா
மாறு மிரந்தகய மாறுநோய்க் கோபமிக
மாறும் வயற்புணற்கு வை.

நன்செய் வயல்களில் தங்கி நிற்கும் நீர் பிரமேகம், நீர்வேட்கை, வெட்டை, காய்ச்சல், மூர்ச்சை, ரத்தகாசம், சுரவேகம் ஆகிய இவைகளை நீக்கும். மேலும் இந்நீரால் சப்த தாதுக்களும் குளிர்ச்சி அடைந்து உடல் வலுக்கும்.

### நண்டுக் குழிநீரின் குணம்

வாத்தியறுந் தாகமறு மாறாத விக்கலறுங்
காந்தலெரிவுங் கடிதேகுந் தோய்ந்துவருங்
கண்டுக் குயர்ந்த கனிமொழியே பன்னாளு
நண்டுக் குழிநீரை நாடு.

வயல்களில் இருக்கிற நண்டுகளின் நீரால் வாந்தி, நீர்வேட்கை, நீங்காத விக்கல், உடல் அழற்சி, உடல் எரிச்சல் ஆகியவைகளை விரைவில் குணப்படுத்தும்.

### பாசிநீர் முதலிய பல நீரின் குணம்

பாசித்தண்ணீர் நோயாக்கும் பருந்தவோலைத் தெளிவூறல்
நேசித்திடவே பிணியில்லை நிலைநீர்க்குன்பாங்குடல்
வாதம், மாசித்
தண்ணீர் பித்தகற்றும் வளர்ந்தகுஞ் சுரத்தைச்சரகூரல் தேசந்
தண்ணீர்க் குணந்தன்னைத் தெளியச்சொன்னோந்
திண்ணமிதே.

பாசிப்படிந்த நீர் நோய்களை விளைவிக்கும், சருகுகள் ஊறிய நீர் சுரத்தை உண்டாக்கும். பனி மாசுகளை உடையத் தண்ணீர் பித்த நோயை விலக்கும். தேங்கிக் கிடக்கும் தண்ணீர் பெரும்பான்மையான நோய்களை உண்டாக்கி குடல் வாதத்தையும் உண்டாக்கும்.

ஆற்றுத்தண்ணீர் கடிகுண்டா மடைந்தசுனைக்கு
மகோதரமாந்
தூற்றுமாசி மெய்யிறுக்குந் துலையாக்கிணறே
கயந்திரட்டும்
மாற்றுங்குளமே வியாதியில்லை மாறாக்குளமே
வியாதியுண்டு
தோற்றுமதுர மொழிமயிலே துலங்குதண்ணீர்க்
குணங்காணே.

ஆற்று நீரானது சரீரத்திற்கு அழகைக் கொடுக்கும். சுனை நீருக்கு மகோதர நோய் உண்டாகும். மழைத் தண்ணீரினால் சரீரம் இறுகும் (பலப்படும்) கிணற்று நீரினால் கபநோய்கள் உண்டாகும். சுரப்பும் தெளிவும் உள்ள ஓடை நீர் நோய்களுக்கு இடந்தராது. இரைப்பு இல்லாத கிணற்று நீர் கபப்பிணியை உண்டாக்கும்.

**ஸ்நான பானங்களுக்குதவாத நீர்**

சந்திராதித்தர் வலி சாரதா நீர்புழுதுற்
கந்த மதிசேறு கனப்பிலை - யுதிர்ந்தநீர்
தங்கு சுவை யில்லா நீர் காற்று மிவை ஸ்நானபா
னங்களுக்குக் காகாவுறினோ யாம்.

திங்கள், ஞாயிறு இவற்றின் கதிரொளிகள் காற்று இவைகள் அணுகாததும் கிருமி துர்நாற்றம், சேறு தடித்தல், சரு உதிர்தல், சுவையின்மை என்னும் இவைகள் பொருந்தியதும் ஆகிய நீர் குளியல், குடித்தல் இவைகளுக்கு ஆகாது. இதை உட்கொண்டால் நோய் உண்டாகும்.

## நீராகார நீரின் குணம்

வாதபித்த மைய வறட்சிகளை மாற்றி விடுந்
தாதுவு முண்டாக்குந் தாகம்போம் - மாதர் மெச்சு
வாராகா ரங்கொடுக்கு மாமதுரத் தைக்கொடுக்கு
நீரா காரத் தெளிவு நீர்.

அதிக மதுரமான நீராகாரத் தெளிவு நீரானது வாத பித்த கப வறட்சிகளையும், தாகத்தையும் போக்கும். சுக்கிலத்தை அதிகப்படுத்தி அழகைக் கொடுக்கும்.

## காடி நீரின் குணம்

பித்த மயக்கமறும் பேரவுழ்தம் முறியும்
உற்றபிணி யிற்சிலவை யோடுங்காண் - சற்றும்
வழங்கா வசீரணமும் வன் பேதியும் போம்
பழங்காடிக் குள்ள பயன்.

பழைய காடி நீரினால் சோவை நோய், பித்த மயக்கம், அசீரணம், வாதாதி சாரமும் போகும் ஆனால் சிறந்த மருந்துகளின் நற்பண்புகளைக் கெடுக்கும்.

## உப்பு நீரின் குணம்

உப்புநீ ராலுலூவை யுள்ளிலோ டிக்குத்தும்
எய்ப்பசன மாம்பித்த மேறிடுங்காண் - செப்புகின்ற
வாயிலூறுஞ் சலமு மாதுவர்ப்பா மாதரசே
யோயுங் குடல் வாத மோர்.

உப்பு நீரால் சரீரத்தில் ஓடி குத்துகின்ற வாயுவும் அற்ப உண்டியும், பித்த மிகுதியும் வாயில் துவர்ப்பால் ஊறுகிற நீரும் அதிகப்படும். ஆனால் குடல் வாதத்தை குணப்படுத்தும்.

**கடல்நீரின் குணம்**

கடலின் புனலாற் கவிகை பெருநோய்
உடலின் கடுப்புதிரச் சூலை - யடர்குஷ்டம்
வாதகுன்மம் வெப்பிரத்த வாதநீ ராமை
கோதரம் பீலீகமறுங் கூறு.

கடல்நீரினால் வயிற்று - கட்டி பெருநோய்.சரீரக் கடுப்பு, ரத்தகுன்மம், உதிரச்சூலை, குஷ்டம், வாதகுன்மம், ரத்தப்பித்தம், வாத நீரானைக் கட்டி, மகோதரம், பீலிகம் ஆகிய நோய்கள் குணமாகும்.

குன்ம வாயு குடற்கரி யென்பது
வன்ம மான மலசல பந்தமுங்
கன்ம மாகும் வன்னோய்களுங் காணுமோ
நுன்மை வாரிநீர் காய்ச்சி நுகரினே.

கடல்நீரைக் காய்ச்சி, உட்கொள்ள வாதகுன்மம், குடற்கரி, மலசலக்கட்டு கன்மத்தால் விளங்கும் கன நோய்களும் நீங்கும்.

உடற் கடுப்புட னுற்றெழு கோணிதம்
நடுக்கு வாதமு நாப்பிடிப் போடுபல்
இடுக்கி ரத்தமு னிற்று விழுவதுந்
துடுக்க தாஞ்சன்னி தோஷமு மோடுமே.

உடல் கடுப்பு, சோனித வாதம், நாக்குப் பிடிப்பு, பல் இடுக்கில் ரத்தம் வடிதல், ஈறு இற்று விழுதல் ஆகிய இவைகள் நீங்கிப் போகும். இக்குணங்களைப் பொருத்திய கடல்நீர் ஆவிரூபம் அடைந்து மேகமாய் மழைப் பொழிய, அந்நீர் பூமியின் சிலபாகங்களில் ஓடியும், தங்கியும் பரவியும், சுரந்தும் நிற்கும்.

## நாவல் நீரின் குணம்

நாவல்வே ரூறுகல நாளுமதி சாரத்தை
மாவலிய மேகத்தை மாற்றுங்காண் பூவுலகில்
விந்தோ பதிசீதம் வீறுபலம் வெப்பையம்
மந்தமிவை யுண்டாக்கு மால்.

நாவல் வேரில் ஊறிய நீரினால் பித்த பெருங்கழிச்சல், நீரிழிவு(மதுமேகம்) சுக்கிலப் பெருக்கம், அதிகுளிர்ச்சி, உடல் வன்மை, வெப்பு, கபவிருத்தி, அக்கினி மந்தம் ஆகியவைகளை உண்டாக்கும்.

## கருங்காலி நீரின் குணம்

குட்டங் கபரோகங் குன்மம் பெருவயிறு
நெட்டைப் புழுவிமிரு நீரிழிவும் - விட்டே
யருங்கான கத்தேகு மஞ்சுகமே நல்ல
கருங்காலி நீரதனைக் கண்டு.

கருங்காலி நீரினால் குஷ்டம், பித்தகாசம், பித்தகுன்மம், பெருவயிறு, நீர் இழிவு முதலியவைகளை குணப்படுத்தி குடலிலுள்ள நுண்புழுக்களையும் கொன்று ரத்தத்தை சுத்திசெய்து சரீரத்திற்கு அழகைக் கொடுக்கும்.

## இலவு நீரின் குணம்

அட்டகுன்ம னீரிழிவு மற்றிடுமே தேகத்திற்
கெட்ட விரணக் கிறுமியறு - மட்டலறுங்
கூந்தன்முடி மாதரசே கோதிலில வின்புனலாற்
சேர்ந்த வழலுந் தணியுஞ் செப்பு.

இலவ மரத்தின் வேரில் ஊறிய நீரால் எண்வகை குன்மம், நீரிழிவு, ரத்தமற்ற ரணக்கிருமிகள், உட்சூடு ஆகியவை நீங்கும்.

## வாழை நீரின் குணம்

வாழைநீர் சீதவெப்பு வல்லபல முண்டாக்கும்
பேழை வயிறுடைக்கும் பெண் மயிலே - யீழுமல்லி
ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே
சிற்றிரணம் போக்குத் தெரி.

வாழைக்கிழங்கில் ஊறுகிற நீரானது பெருவயிறு, ரத்த கிரிச்சரம், எரி மூத்திரம், அர்ப்பவிரணம், மயக்கம் முதலியவைகளைக் குணப்படுத்தும்.

சோம ரோகங்க டுலையுமிளைப் புழலை
நாமமறும் பாண்டுவகை நாடாதே - பூமிதனில்
காழை யெலும்புருக்கி கானா வணங்கரசே
வாழை நீர்க் கென்றுளத்தில் வை.

சோமநோய், இளைப்பு, உழலைநோய், அயர்வு, பாண்டு, எலும்புறுக்கி ஆகியவைகளைக் குணப்படுத்தி உடலுக்கு வன்மையை உண்டாக்கும்.

## மட்டை நீரின் குணம்

மட்டை நீராகிரிச்ச மாறு மடமயிலே
யொட்டிநின்ற நீரிழிவு மோடுங்காண் - கெட்ட
பவுத்திரமும் புண்ணும் பறக்கும் பயந்தே
புவிக்குள் வயிற்றுக் கடுப்பும் போம்.

தெங்கு, பனை முதலிய மட்டைகளில் பிழிந்த நீரினால் மூத்திரக்கிரிச்சரம், பவுத்திரநோய், ரணம், வயிற்றுக்கடுப்பு ஆகியவைப் போகும்.

## இளநீரின் குணம்

இளநீரால் வாதபித்த மேகு மனதுந்
தெரிவாய்த் துலங்குமிகு திஷ்டிப் - கொளிவுங்
குளிர்ச்சியு முண்டாகுங் கொடியவன னீங்குத்
தளிர்ந்தகன நொய்தாகுஞ் சாற்று.

இளநீரினால் வாத பித்த நோய்கள் குணமாகி மனதை தெளிவாக்குவதுடன் சரீரத்திற்கு குளிர்ச்சியையும், கொடிய அனலையும் போக்கும். பித்த வாந்தி, நீர்பேதி, மூத்திரப் பெருக்கம் ஆகியவற்றை குணப்படுத்தி மலப்போக்கு உண்டாக்கும்.

என்று மிளனீர் நீ ரிறக்குங் கபமனுக்குந்
துன்றனலாஞ் சீதமெனச் சொல்லுவர்கா - ணின்றெழும்பும்
பித்தமொடு வாந்தியும்போம் பேதிகட் டிரண்டுமுண்டாங்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு.

## செவ்விளநீரின் குணம்

பித்தமொடு தாகம் பெருத்த வழி நடையா
லெய்தலா யாசமிவை யேகு - நித்தியமுஞ்
செவ்விளநீ ருண்டக்காற் றீ றும்பல கயமு
மவ்விளநீர் கொங்கைமின்னே யாய்.

நாள்தோறும் செவ்விளநீரை உட்கொண்டால் பித்த மிகுதி, நீர்வேட்கை, வழி நடையால் வரும் இளைப்பு, அயர்வு, கபநோய்கள் முதலியவற்றைப் போக்கும்.

## புதிய பழைய இளநீரின் குணம்

புதியிளநீர் புத்தமறும் பூதலத்தோ ருண்ணும்
பதமுடனே யுண்பார் பரிவாய் - நிதநிதமு
முண்ணப் பழவிளநீ ருண்டாம் பலவகைதோ
யெண்ணி நீயறி வாயினி.

இவ்விளநீரின் வழுக்கை, நீர் இவ்விரண்டையும் உண்பவர்க்கு பித்த மிகுதி விலகும்.

பழைய இளநீரை உட்கொண்டால் சளி பிடித்தல் திலக்குணம் போன்ற பற்பல நோய்களை உண்டாக்கும்.

### பச்சை இளநீரின் குணம்

பச்சிளநீர் மேகம் பழஞ்சுரங் களைப்போக்கும்
கச்சிமுலை மாதே கபமறுக்கு - மெச்ச
வயிற்றிர் கிருமியொடு வன்சொறிகள் னோயும்
அயர்த்தோடச் செய்யு மறி.

இவ்விளநீர் மேகம், நாள்பட்ட சுரம், கப ஆதிக்கம், எரிகிருமி, யானைச் சொரி, கண்நோய் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

### கேளி இளநீரின் குணம்

கேளியுண்ண மேகம்பொங் கேளாய் மயிலே
நீளகட்டுக் கிடநிலை யாவாந் - தாளாத
தாகமொடு மந்தமறுந் தானேகரப் பினும்போம்
மேக வனலுந் தணியுமே.

கேளி இளநீரை உண்பவர்க்கு ரத்தமேகம், மலக்கிருமி, பொருக்க இயலாத நீர்வேட்கை, மண்டாக்கினி, கரப்பான், காய்ச்சல் முதலிய நோய்கள் குணமாகும்.

### மஞ்சள் கச்சி இளநீரின் குணம்

பித்தம் போஞ் சோபையறும் பேருலகி வியாவருக்குந்
தொத்து கபமுந் தொலையுங்காண் - தத்து கின்ற
பொல்லாப் பழஞ்சுரமும் போகுமஞ்சட் கச்சிக்குப்
பொல்லாப் பொன்றில்லைப் புகல்.

மஞ்சள் கச்சி இளநீரை அருந்தினால் பித்த தோடம், சோவை, கபப்பெருக்கம் ஆகியவை விலகும்.

### அடுக்கிளநீரின் குணம்

அடுக்கிள நீர் கயத்தை யண்டா தகற்றும்
வடுக்கண்ணா யின்னும் வகுப்போம் - படுக்கும் பேர்

துண்டாற் சுகமெய்து முள்ளாங் கிருமியிதை
கண்டா லிறந்துவிடுங் காண்.

அடுக்கிள நீரை உட்கொண்டால் (நித்திரைக்கு முன்) கபதோடமும் மலப்பையைப் பற்றிய கிருமியும் போகும்.

### கருவிளநீரின் குணம்

மருமலர்வாழ் மானேகேள் வையகத்தோர் நித்தங்
கருவிளநீ குண்ணக் கபமுங் - கிருமிநெளி
புண்ணுங் கரப்பானும் போகு மிகக் காந்தியுறு
மெண்ணுமனப் பூரிப்பா மென்.

கருமை நிற இளநீரால் கபப்பெருக்கமும் புழு நெளிகின்ற கரப்பானும் நீங்கும். உடல் ஒளியும் மகிழ்ச்சியும் உண்டாகும்.

### சோரியிளநீரின் குணம்

காரிரும் கூந்தற் கருங்கண் மடமயிலே
சோரியிள நீரருந்தச் சோபை யருங் - கூறியதோர்
பூச்சி கிருமியறும் பொன்மேனி யாமுடலாம்
பேச்சிற் றெளிவுண்டாம் பேசு.

இரத்த வண்ண இளநீரால் வீக்கமும் வயிற்றில் உள்ள பூச்சியும், சன்னக் கிருமியும் போகும். உடல் அழகுபெறும். தெளிவற்ற சொற்கள் உண்டாகும்.

### ஆயிரங்காச்சி இளநீரின் குணம்

வேகமுறுந் தீபனமாம் விட்டோடும் வாதகப
மாகதிற் சேர்ந்த வரிப்பும் போம் - வாகுறுபுண்
வாயிரங்கு சீழும் வயிற்றுவலியுந் தொலையும்
ஆயிரங் கச்சிக் கறி.

ஆயிரங்கச்சி இளநீரால் வெப்பமும், பசியும், வாத கப துந்தமும், நமைச்சலும், சீழ் விரணம், குன்மம் முதலிய நோய்கள் குணமாகும்.

**குண்டற்கச்சி இளநீரின் குணம்**

அண்டையிலே தின்றார்க் கரோசிகெடுந் தீபனமாய்
கொண்டைவிழி மாதரசே கேளின்னுங் - கண்டபடி
குண்டற் கச்சிக்குக் கொடுத்தாக மாறிவிடும்
பண்டைப் பழமலம்போம் பார்.

குண்டர்கச்சி இளநீரால் சுவையின்மை,நீர்வேட்கை, நாள்பட்ட பழைய மலம் ஆகியவை போம். பசியை உண்டாக்கி வயிற்றில் உள்ள தீயை அதிகப்படுத்தும்.

**ஊணுக்குமுன் அருந்தும் இளநீரின் குணம்**

ஊணுக்கு முன்பிளநீ ருண்டாற் பசிபோகும்
வீணுக்குக்குன்மம் விளையுங்காண் - பேணியிதை
மாலை தனிலருந் மண்ணுபுழுச் சாகும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

காலையில் உணவு உட்கொள்வதற்குமுன் இளநீரை உட்கொண்டால் பசி நீங்கும். குன்ம நோயை உண்டாக்கும். மாலையில் உட்கொண்டால் கிருமிகள் ஒழியும்.

**உண்டபின்பு அருந்தும் இளநீரின் குணம்**

வாதபித்த மீறாது வன்பயித்தி யந்தீருங்
கோதின் மலஞ்சாயுங் கொடும்பசியா - மாதரசே
மண்டியதோர் வாராது மேனி மினுமினுக்கும்
உண்டபின்பு நல்லிளநீ ருண்.

புசித்த பிறகு இளநீரை உட்கொண்டால் வாத பித்த கோபம் தணிவது அன்றித் தனிப் பித்த தோடம் விலகும். தாராளமாய் மலங்கழியும். அதிகப் பசி உண்டாகும். நோய் அணுகாது. உடல் மினுமினுக்கும்.

## காய்ந்தாரிய இளநீர் செவ்விளநீர் கெவுளிபாத்திரை இளநீர் இவைகளின் குணம்

காய்ந்தா றியவிளநீர் காசங் கபந்நீர்க்குப்
மாய்ந்திடாத் தாகசுரமாற்றுங்காண - ஆய்ந்ததொரு
செவ்விளநீர் பித்தஞ் சிதைக்குங் கெவுளி கொண்டால்
யெவ்வளவுந் தாபமில்லை யெண்.

மட்டைமைச் சீவித் தண்ணீரில் இட்டுக் காய்ச்சி ஆறிய இளநீரானது. இருமல், ஜலதோடம், வறட்சி, சுரம் இவைகளைப் போக்கும்.

செம்மை நிறம் உள்ள இளநீர் பித்த தோடத்தை விலக்கும்.

கெவுளி பாத்திரை என்னும் இளநீரை உட்கொண்டால் ஒட்டினம் விலகும்.

## வெந்நீரின் பொதுக்குணம்

நெஞ்சதிர்ப்பு நெற்றிவலி நீங்காப் புளியேப்பம்
வஞ்சமுற வந்த வயிற்றுநோய் - விஞ்சியே
வீழாமற் கட்டோடு வெப்பிருமற் சுட்டநீர்
ஆழாக்குட் கொள்ள வரும்.

வெந்நீரினால் உணவு செரியாமை, தலைவலி, புளி ஏப்பம், குன்மம், சீதக்கட்டு, சுரம், காசம் முதலிய நோய்கள் குணமாகும்.

## காய்ந்தாறிய வெந்நீரின் குணம்

காய்ந்தாற வைத்தநீர் கட்டுழலை விக்கலொடு
வாய்ந்தவதி சாரபித்த மாற்றுங்காண் - சோர்ந்துஉரு
மூர்ச்சை விஷம்வாந்தி, முன்மயக்க மேகமதி
யூர்ச்சித முத்தோஷம் போக்கும்.

காய்ந்தாறிய வெந்நீர், உழலை நோய், விக்கல், பித்தக்கோபம், மூர்ச்சை, சில்விஷம், வாந்தி, மயக்கம், சுக்கில மேகம், முக்குற்றம் (திரிதோடம்) ஆகியவைகளைப் போக்கும்.

காய்ந்த நீ ருண்ணுங்காற் கண்செவிநோய் சூலைகுன்மந்
தோய்ந்த சுரவேகத் தொடரையும் பாய்ந்தடரும்
வாதத்தின் கோபமிவை மாறுமென லாதியருள்
வேதத்தின் வாக்கியமாம் விள்.

காய்ந்த நீரை உட்கொள்வோமேயானால் கண்நோய், செவிநோய், சூலை, குன்மம், சுரவேகம், கோழை, வாதத்தினால் ஏற்படக்கூடிய நோய்களையும் கோபத்தையும் குணப்படுத்தும்.

### கால்கூறு அரைக்கூறு காய்ந்த வெந்நீரின் குணம்

கால் கூறு காய்நீராற் காரிகையே பித்தம்போம்
மேற்கூறு பாதிசுட்ட வெந்நீரான் - மேற்கூறும்
வாதமொடு பித்தம்போம் வைத்தொருநாட் சென்றுண்டு
ரோதம் போமோடி யொளித்து.

கால்பாகம் சுண்டிய வெந்நீரால் பித்தகோபம் நீங்கும். அரைப்பாகம் சுண்டிய வெந்நீரால் வாதப்பித்த தோடம் விலகும், அதை மறுநாள் வைத்து உட்கொண்டால் திரிதோட கோபம் போகும்.

### முக்காற்கூறு காய்ந்த வெந்நீரின் குணம்

முப்பக் கறக் காய்ந்த முந்தவெந்நீரால் வாதஞ்
செப்புங் குளிர்நடுக்கல் தீச்சுரம் வெக்-கைப் பலநோய்
வாதபித்த வையமிவை மாறுஞ் சுரிகுழலே
பூதலத்து னாளும் புகல்.

முக்காற்பாகம் சுண்டிய வெந்நீரால் வாத விருத்தி, குளிர், நடுக்கல், கொடுஞ்சுரம், வெப்பம், பற்பல பேதி, திரிதோடங்கள் ஆகியவை போம்.

### ஊணுக்கு முன், பின், நடு இக்காலங்களில் அருந்தும் வெந்நீரின்குணம்

ஊணுக்கு முன்புவெந்நீ ருண்டாக்காற் றீபனம்போம்
ஊணுக்குப் பின்பருந்தி லூதியமாம் ஊணுக்குப்
பாதியி லுண்டாற்பசியும் பாதியாம் வெந்நீரே
யோது சுரவாத மகற்றும்.

உணவுக்கு முந்தி வெந்நீரைக் குடித்தால் பசி மந்தப்படும். சாப்பிடும் போது மத்தியில் அருந்தினால் பசி மத்திபமாகும். உணவு உட்கொண்ட பிறகு அருந்தினால் நன்மை உண்டாகும். மேலும் வெந்நீரின் தன்மை வாத வெப்பை நீக்குதலாகும்.

### பொற்கெண்டி வெந்நீரின் குணம்

பொற்கெண்டி தனில்வெந்நீர் பூரித்துட் கொள்ளுங்கான்
மற்கொண்ட வாயுகபம் வாயருசி - செயற்கொண்ட
மெய்யழல் வெப்புத்தணியும் விநவுநற் புத்தியொடு
மெய்யறிவு மோங்குமென விள்.

வெந்நீரைப் பொற்கெண்டியில் ஊற்றி ஆறவைத்து அருந்தினால் வாதமிகுதி, கபகோபம், சுவையின்மை, உடல் உட்டினம், வெப்பு ஆகியவைபோம். சுக்கிலத்தையும், சுரோணிதத்தையும் அதிகப்படுத்தும்.

### சரிகை வெள்ளிக்கெண்டி வெந்நீரின் குணம்

சரிகைவெள்ளிக்கெண்டி தனிலெட்டி லொன்றாகப்
பெருசுக்காய்ச் சும்புனலைப் பெய்தே - பருகுங்கால்
வெப்பொடுதா கங்குன்மம் வீறுபித்தக் காய்ச்சலும் போந்
துப்பொடுட லுஞ் செழிக்குஞ் சொல்.

எட்டிலொரு பங்காய்க் காய்ச்சிய வெந்நீரைச் சரிகை, வெள்ளிகெண்டியில் இட்டுச் சாப்பிட்டால் சூடு,

நீர்வேட்கை, குன்மம், பித்தவெடிப்பு ஆகியவைகளைக் குணப்படுத்தி உடலுக்கு வன்மையை உண்டாக்கும்.

### தாம்பரம், வெள்ளி, பஞ்சலோகம், வெண்கலம் இப்பாத்திரங்களின் வெந்நீரின் குணம்

இரவிவட்டிற் காமிரத்த பித்தங்கள் தான்போக்கும்
இரசிவட் டிற்கைய மேகும் - வருகலப்பு
வட்டிறல் முத்தோஷ மாற்றும்வெண் கலச்சலமெய்க்
சொட்டிரத்த தாதுவைச் சேர்க்கும்.

தாம்பிரக் கெண்டி வெந்நீர் கண் புகைச்சலையும், ரத்தப் பித்தப் பிணியையும் நீக்கும். வெள்ளிக் கிண்ணத்தின் நீரால் கபநோய் நீங்கும். பஞ்சலோக வட்டில் வெந்நீர் முக்குற்றத்தை விலக்கும். வெங்கலப்பாத்திர வெந்நீர் இரத்தத்தைப் பெருக்கும்.

### கெண்டி வெந்நீரின் குணம்

கெண்டிதனிற் காய்ந்திடுநீ ரானததை யாற்றியுண
அண்டிய நோயு மடர்சிரங்கும் - பண்டைக்
குடைச்சலும் கைகாலிற் குடைச்சலோடு சந்தின்
குடைச்சலும்போம் நன்றாகக் கூறு.

கெண்டியில் காய்ந்த நீரை ஆற்றி உட்கொள்ளக் காய்ச்சல், சிரங்கு, எலும்பு, கை, கால், இடுப்பு இவ்விடங்களில் ஏற்படும். குடைச்சல் ஆகியவை போம்.

### பன்னீர்ச்செம்பு வெந்நீரின் குணம்

பன்னீர்ச் செம்பிற்காய்ந்த பாணீயம் விட்டருந்த
மன்னிய சுவாசம் விக்கல் மாபிரமை - பன்னரிய
பித்த சிலேஷ்மவளி பேசரிய தாளின்வலி
யித்தரையை விட்டகலு மெண்.

பன்னீர்ச் செம்பில் காய்ந்த வெந்நீரை அருந்தினால் இரைப்பு, விக்கல், சித்தப்பிரமை, முக்குற்றம், கால்நோய் ஆகியவை குணமாகும்.

## இரும்புக்கெண்டி வெந்நீரின் குணம்

இரும்புநறுங் கெண்டிதனி லேந்திய வென்னீரை
விரும்பியுணப் பாண்டு விலகுந் - திரும்பவுமோ
தாதுவுமா நாடிகளுந் தாமுரக்குந் தேகமதிற்
சீதசுர முண்டாந் தெளி.

இரும்புக் கெண்டி வெந்நீருக்குப் பாண்டு நோய் நீங்கி, தாதுவிருத்தியும், நரம்புகளுக்கு உறுதியும், உடலில் சீதோஷ்ணமும் உண்டாகும்.



# பாலின் வகைகள்

### தாய்ப்பாலின் பொதுக்குணம்

தன்னியமென் றோதிச் சருவதோ ஷங்களும்போம்
உன்னியதாப மொழியுங்காண் - சன்னியோடு
வாதசுரம் பித்தசுரம் வன்பகச் சுரந்தணியுங்
கோதில் வலுமையுண்டாங் கூறு.

இருந்தோஷம் போக்கு மிகற் கிரிச்சந் தீர்க்கும்
அருந்து மருந்தி னனுபானம் - பொருந்தும்
அஞ்சனத்திற் கழகு மனல் வறட்சி நீங்கிவிடும்
பஞ்சினடி மாதர் முலைப்பால்.

தாய்ப் பாலினால் ஏழுவகைத் தோடங்கயையும், வெப்பம், சன்னிபாதம்,வாத பித்த கப சுரங்கள், முத்தோடங்கள், வாதக்கிரிச்சரம், நாவரட்சி ஆகிய நோய்களைக் குணப்படுத்தி உடலுக்கு உறுதியை அளிக்கும். மேலும் மருந்துகளின் துணை மருந்தாகவும், கண்களில் கலிக்கமிடுவதற்கும் மூக்குகளில் நசியமிடுவதற்கும் பயன்படும். (தன்னியம்=தாய்ப்பால்) (முலைப்பால்).

### கருமை, செம்மைநிற மாதர்களின் முலைப்பாலின் குணம்

கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் காகா - திருநிலத்துள்
நோயணுகாச் செய்ய நுடைக்கிடையார் தம் முலைப்பால்
தீயமுந் தோடம் போக்குஞ் சேர்.

கருமை நிறத்தையுடைய மாதர்களின் முலைப்பால் கண்வைத்தியத்திற்கு மட்டும் ஆகும். மற்றைய மருந்துகளுக்கு உபயோகப்படாது.

நோயில்லாத செம்மை நிறத்தையுடைய மாதர்களின் முலைப்பால் வாதத்தினால் ஏற்பட்ட முக்குற்றங்களையும் போக்கும் வல்லமையுடையது. (கீரம்-பால்)

## பரத்தையர் முலைப்பாலின் குணம்

பரத்தையர் முலைப்பாற்குப் பாரமுந் தோஷங்கள்
உரத்து வரும் வாதமுண்டாகும் - இரத்தச்
சொறி கிரந்தி புண்ணுந் தொடர் கழல்நோய் சேருங்
குறியறிந்து நீக்கிக் கொடு.

விலைமாதர்களின் முலைப்பாலினால் முக்குற்றங் களினால் ஏற்படும் நோய்கள் வாதநோய், இரத்தச்சொறி கிரந்தி, இரணம், கட்டிகள், வாதம் முதலிய நோய்கள் உண்டாகும்.

## பசுவின்பால் பொதுக்குணம்

பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணாளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர் - ஏலுமிவர்
எல்லார்க்கு மாகு மிளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய் பசுவின் பால் நாட்டு.

பசுவின்பாலானது குழந்தைகளுக்கும், வயோதி கருக்கும், பழைய சுரம், விரணம், சூலை, பிரமேகம், துர்ப்பலம் முதலிய நோய்களையுடையவர்களுக்கும் ஆகும்.

## வெண்மை, செம்மை, கருமை, கபிலை என்றும் நிறங்களையுடைய பசுக்களின் பாலின் குணங்கள்

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வண்பசுவின் பால்போக்கும் வாதத்தைக் கண்சிவந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோஷ மறுக்கும்.

வெண்மைநிறப் பசுவின்பால் பித்த நோய்களையும், செம்மைநிறப் பசுவின்பால் வாதநோய்களையும், கருமைநிறப் பசுவின்பால் கபநோய்களையும், புள்ளிகளை யுடைய பசுவின்பால் முக்குற்றங்களையும் போக்கும். (கபிலை என்பது கருமை கலந்த பொன் நிறமாகும்.)

**காராம் பசுவின் பால் குணம்**

*கண்ணோயகற்றுங் கயரோகந் தான் போக்கு*
*மண்ணிலுள்ள பால் தோஷம் மாற்றுங் காண் - பெண்ணே*
*இரத்த பித்தம் போக்கு மிராச வசிய மிகும்*
*கறுத்த பசும் பாலதனைக் காண்.*

காராம் பசுவின் பால் கண்ணோய், காசநோய், மற்றப் பாலின் தோடங்கள், ரத்தபித்த நோய் ஆகியவைகளைப் போக்கும். வசியத்திற்குப் பெரிதும் பயன்படுகிறது.

**நாரைமான் கபிலை என்னும் பசுக்களின் பாற்குணம்**

*நாரைப் பசுவின்பால் நாளுமுள னோயகற்று*
*மாரைநிறப் பசும்பால் வாயித்திடினோ - வேரையுறு*
*முப்பிணியும் போகு மொழிகபிலை யின் பாலுக்*
*கெப்பிணியும் போமே யிறங்கி.*

நாரைப்பசுவின்பால் முயல்வலி தீர்க்கும். கபிலை நிறப்பசுவின் பால் முத்தோடங்களையும், பல நோய்களையும் தீர்க்கும்.

**கொம்பசையும் பசுவின்பாற் குணம்**

*கொம்பசையு மாப்பாலோ கூறுபித்தம் போக்கிவிடும்*
*தம்பவா தத்தைத் தருவிக்கும் - வம்புமுலை*
*மானேகேள் விந்துவை வளர்ப்பிக்குங் கபத்தைத்*
*தானே யெழுப்புமெனச் சாற்று.*

அசைகின்ற கொம்புகளையுடைய பசுவின்பால் பித்த நோயைப் போக்கும். தனுஷ் தம்ப வாதம், சுக்கிலதாது, கபநோய் ஆகியவைகளை வளர்க்கும். (அதிகமாக்கும்)

**மூன்றாமீற்று நான்காமீற்றுப் பசுக்களின் பாற்குணம்**

மூன்றா மீற்றின்பான் முதிர்கபத்தைப் போக்கிவிடும்
ஏன்ற நாலாமீற் றெனும்பாலுங் கூன்றுதிரி
தோட மகலுஞ் சுகமுண்டிவ் வாப்பாற்சந்
தோட மெவர்க்கு முண்டாக்கும்.

மூன்றாம் ஈற்றுப் பசுவின் பால் நீடித்த கபநோயையும் நான்காம் ஈற்றுப் பசுவின்பால் வாதத்தினால் ஏற்படக்கூடிய மூன்று தோடங்களையும் நீக்கும். உடல் ஆரோக்கியத்தையும், மகிழ்ச்சியையும் உண்டாக்கும்.

**ஆகாப்பசுவின் பாற்குணம்**

விஞ்சுவரணை தாராநோய் மிகுத்துச் சுழல் வெண் புள்ளி
துஞ்சுயலைந்து மலமருந்தல் சுடுகாடேகி யெலும்புணலில்
வஞ்சுவகையி னாவின்பா லாகாதணுகி றறிதோஷம்
நெஞ்சிலடையங் கபநோயா விறைந்தவயதுங்
குறைந்திடுமே.

ஆகாத பசுக்கள் ஐந்துவகைப்படும். அவை ஊர் சுற்றும் பசு, மலத்தை அருந்தும் பசு, சுடுகாட்டு எலும்புகளை உட்கொள்ளும் பசு, வெண்மையான புள்ளிகளையுடைய பசு, அரணையின் வாலைப் போன்றுள்ள புள்ளிகளையுடைய பசுக்களாகும். இவைகளினால் அரணைநோய், யோனிக் கிரந்தி, வாதநோய், வாத ஆதிக்கத்தினால் முத்தோடங் களையும் உண்டாக்கிக் காசநோயை உண்டாக்கி ஆயுளைக் குறைக்கும்.

**பகற்பசுவின் பால்குணம்**

பகற்பால் சிசுக்கட்குப் பக்குவ மென்றாலும்
விகற்கமுடன் பருக மெய்யே - யெதற்குமிகத்

தீதடரச் செய்யுமிந்தாற் சேராதுட் காய்ச்சலனல்
நாதவிழும் பூங்குழலே சாற்று.

பகலில் கறக்கும் பசுவின் பால் குழந்தைகளுக்குப் பக்குவமான உணவு என்றாலும், பற்பல கபநோய்களையும், தாம்பூலம், புளிப்புமிகுதியால் உண்டாகக் கூடிய சேருமிடத்து கெடுதியையும் செய்யும். உட்சூட்டையும், வெப்பத்தையும் நீக்கும்.

## இராப்பசுவின் பாற்குணம்

பகற்பசும் பால் காய்ச்சிப் பருகின் மிக வழலும்
விகற்பழு மீளையு மிராவாம் - புகல் பித்த
வேகமும்போ மேனியெல்லா மேவியிடுந் தாதுவுமாம்
போகமிக வுண்டாம் புகல்.

இரவின்பால் நண்ணி லெழுபிணி போக்கும் பின்
பரவிய நோயும் போக்கும் பாரில் - விரகமுற்றார்க்
கத்தியம் பன்னவிழி யாயிழையே யாவருக்கும்
பத்தியமா மென்றைக்கும் பார்.

பகலில் சுரந்து இரவில் கறக்கும் பசுவின் பாலை முறைப்படிக் காய்ச்சி உட்கொண்டால் சரீரச் சூடு, அழற்சி, கபநோய்கள், சுவாசம், பித்தம், பித்தகோபம், நேத்திர நோய்கள், விந்துவின் கெடுதியால் ஏற்படும் சிலநோய்கள் குணமாகும். உடலுக்கு மினுமினுப்பும், சுக்கில, சுரோணிதப் பெருக்கங்களை அதிகரிக்கச் செய்வதுடன், பெண்களின் மேல் இச்சையையும் உண்டாக்கும். ஆண், பெண் இருபாலருக்கும் இச்சையை உண்டாக்கும்.

## எருமைப் பாற்குணம்

வாதத் திமிரை வரவழைக்கும் புத்தியினற்
தோதத் தெளிவைதனி போக்குங்காண் - கோதற்கே
யங்கத்துரு மருந்தை யன்றே முறிந்து விடும்
பங்கத்துறுமேதிப் பால்.

எருமைப்பாலைப் பருகுபவர்களுக்குத் திமிர் வாயுவை உண்டாக்கும். தெளிந்த புத்தியின் கூர்மையையும், நல்ல மருந்தின் குணங்களையும் கெடுக்கும். சரீரத்தை பருக்கச் செய்யும்.

## வெள்ளாட்டுப் பாற்குணம்

வெள்ளாட்டுப் பாலுக்கு மேவியநற் றீ பனமாந்
தள்ளாட்டு வாதபித்தஞ் சாந்தமாம் - உள்ளிரைப்புச்
சீத மதிசாரஞ் சிலேஷ்மமறும் புண்ணாறும்
வாத கிலேசமும்போ மாய்ந்து.

வெள்ளாட்டுப் பாலினால் வாத, பித்த, கப தொந்தங்களினால் ஏற்படக் கூடிய நோய்களைப் போக்குவதுடன் சுவாச காசம், சீதாதிசாரம், கபத்தோடம், விரணம், வாதத்தினால் உண்டாக்கிய வீக்கங்கள் முதலிய துன்பங்களைத் தீர்ப்பதுடன் பசியையும் உண்டாக்கும்.

என்:- இப்பாலை மஞ்சள்காமாலை நோய் உடையவர்களுக்குத் தினமும் கொடுக்க விரைவில் குணமடையும்.

## செம்மறியாட்டுப் பாற்குணம்

செம்மறிப் பால்பித் தஞ்சிலேஷ்மத்தை யுண்டாக்கும்
விம்மும் வயிறுமிக மேன்மூரச்சாங் - கொம்மை
வருமுலையாய் பத்தியத்தில் வாராது வாய்வாம்
பருகுவர்க்கு நாளு பகர்.

செம்மறி ஆட்டின் பால் பித்த கப தொந்தங்களையும், வயிற்று உப்பிசம், மேற்சுவாசம் ஆகியவற்றை உண்டாக்கும். பத்தியத்திற்கு ஆகாது. ஆனால் வாயுவை அதிகரிக்கச் செய்யும். இப்பாலிற்கு அநேக நோய்களை உண்டாக்கும் குணத்தைப்பெற்றிருக்கிறது.

## யானைப் பாற்குணம்

வாதம்போந் தாதுபுஷ்டி வந்தடரும் வன்பலமோ
யாதுபித் தங்கூடி யழகுதிக்குஞ் - தாதுமலர்த்
தேனைப்பா லிற்கலந்த தித்திப்பைப் போலிருக்கும்
யானைப்பா லுண்ணு மவர்க்கு.

தேனும் பாலும் கலந்தது போன்ற இனிப்புடைய யானைப்பாலைக் குடிப்பவர்க்கு வாதநோயைப் போக்கும். சுக்கில சுரோணிதங்களையும் அதிகப்படுத்தும். பித்த சம்பந்தமான நோய்களைக் குணப்படுத்தும். உடலுக்கு மிகுந்த வன்மையையும் அழகையும் உண்டாக்கும்.

## குதிரைப் பால் குணம்

வீரிய விருத்தி விளைக்குமழ குண்டாகுங்
காரியத்திற் காமங் கதிப்பிக்கும் - வாரார்
கரகமெனச் செப்புமுலைக் காரிகையே கேளாய்
துரகதப்பால் செய்யுந் தொழில்.

குதிரைப்பாலை உடகொள்வோர்க்குச் சுக்கிலப் பெருக்கத்தையும், சரீர வனப்பையும், புணர்ச்சியில் நிர்வாகத்தையும் உண்டாக்கும் என்க.

## ஒட்டகப்பாலின் குணம்

ஒட்டைப் பாலுக்குமந்த மூவாதம் சூலையோ
பட்டகுணக் கரப்பா னாவதன்றி - மட்டிடாக்
காதிரைச்சன் மந்தமதி காசஞ் சுவாசமுமா
மாதரைக்கு ணாளும் வழுத்து.

ஒட்டகத்தின் பாலினால் அக்கினி மந்தம், வாதசூலை, எண்விதக் கரப்பான், காது இரைச்சல், மந்தம், செவிடு, புத்திக்குறைவு, அதிக இருமல், இரைப்பு ஆகியவைகள் உண்டாகும்.

### கழுதைப்பாற் குணம்

கழுதைப்பால் வாதங் கரப்பான் விரணத்
தழுதளையுள் வித்திரதி தானே - யெழுகின்ற
ஓட்டியபுண் சீழ்மேக மோடு சொறிசிரங்கு
கட்டியிவை போக்குங் கழறு.

கழுதைப்பால் மிகுந்த ருசியை உடையது. இது வாத நோய், எண் வகைக் கரப்பான், புண் தழுதளை நோய், உள் விப்புருகிக் கட்டி, ஒட்டுக் கிறஞ்சி, சீழ்பிரமேகம், சொறி, சிரங்கு, கட்டி இவைகளைக் குணப்படுத்தும்.

கத்தபத்தின் பாற்குக் கரிய கிரந்தியறுஞ்
சித்தப் பிரமைப்பித்தந் நீருங்காண் - தத்திவரும்
ஐயமொழியு மதிக மதுரமு மாஞ்
செய்ய மடமயிலே செப்பு.

கழுதைப்பால் கருங்கிரந்தி, சித்தப்பிரமை (பயித்தியம்) பித்ததோடம், கபநோய் ஆகியவற்றைப் போக்கும்.

***குறிப்பு:-*** இப்பால் பற்று நோய்க்கும் மருந்துகள் செய்வதற்கும் உபயோகப்படுகிறது.

### பாத்திர பேதங்களினால் உண்டாகக் கூடிய பாலின் குணம்

செம்பிலிடும் பால்வாத சீதமொழிக்கும் பொன்மண்
கும்பத் தடுபால்போக் கும்பித்தை - யம்புவியுள்
வெள்ளி யறையிரும்பில் விட்டுக்காய்ச்சி சும்பாலாற்
றுள்ளி யுறையைமருஞ் சொல்.

செப்புப் பாத்திரத்தில் காய்ச்சிய பால் வாத கபத்தையும், பொன், மண் பாத்திரங்களில் காய்ச்சிய பால் பித்த தோடத்தையும், வெள்ளி, வெங்கலம், இரும்புப் பாத்திரங்களில் காய்ச்சியபால் காசநோயையும் போக்கும்.

### ஆடையெடுத்த பால்குணம்

ஆடை யெடுக்கும்பா லக்கினமந் தப்படுமே
வாடை நல்வாய் சீரணமாம் வாதமறுங் - கோடையிடி
போலுமெழுந்த பித்தம் போகுமே கூரிய சீர்
வேலனைய கண்ணாய் விதி.

ஆடையெடுத்த பால் அக்கினி மந்தமும், சீரணமும் உண்டாக்கும், வாத பித்த கப தோடங்களை நீக்கும்.

### காய்ச்சும் பாலுக்கு நீரளவை கூறல்

ஆடுபசும் பால்காய்ச்சி லஷ்டபாகம்புனலாம்
நீ பெருமை செம்மறிக்கு நேர்நேராந் - தேடறிய
சுக்குசிறு காஞ்சொறிவேர் கூட்டிச் சுவரியபா
லொக்கும்வெள் ளாட்டுப்பாற் குறை.

வெள்ளாடு, பசு இவைகளின் பாலுக்கு எட்டில் ஒரு பங்கும், எருமை, செம்மறி ஆடு இவைகளின் பாலுக்குச் சரி பங்கும் நீர்விட்டுக் காய்ச்சவேண்டும். எந்த விதப் பால்களுக்கும் சுக்கு, சிறுகாஞ்சொறிவேர் சிறிது சேர்த்துக் காய்ச்சினால் அவைகள் வெள்ளாட்டுப் பாலுக்கு ஒப்பாகும்.

### பாலேட்டின் குணம்

பாலேட்டாற் பித்தமறும் பாழ்த்தகொடும் வாந்தியும் போம்
மாலாட்டு மூர்ச்சசையும் போம் வன் பலமா - மேலாலே
தாதுமிகுந் தீபனமாந் தானேயிளைத் தவக்குக்
கோதுமறு மாமயிலே கூறு.

பாலில் உண்டாகும் ஏட்டினால் பயித்திய நோயும், கொடிய வாந்தியும், மூர்ச்சையும் நீங்கும். சரீரத்திற்கு மிகுந்த பலத்தையும் சுக்கிலத்தையும், சுரோணிதத்தையும் ஜடாக்கினியையும், அதிகப்படுத்தும் பாலின் ஏட்டைத் துர்பலமுள்ளவர்கள் உட்கொண்டால் அவர்களின் உடலிலுள்ள குற்றங்கள் நீங்கி உடல் வன்மையுறும்.

## தேங்காய்ப்பால் குணம்

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும் படருந்
தாதுவும் விருத்தியாந் தார்குழலே - யோதநல்ல
அன்ன மிறங்கு மதியுரிசை யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி.

அதிக ருசியுள்ள உணவை உட்கொள்ளச் செய்கின்ற தேங்காயின் பாலால் வாத விகாரம், பித்த ஆதிக்கம், கரப்பான், சுக்கில விருத்தியும், உண்டாக்கி சில்விடக் கடிகளையும், நுண்கிருமிகளையும் போக்கவல்லது.

## ஆலம்பாற் குணம்

ஆலம்பால் மேகமறுத் தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குவெகு குளிர்ச்சிதரும் - ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்தமதி முகத்தாய் சொல்.

ஆலம்பால் பிரமேகத்தை நீக்கும். ஆடும் பற்களை இறுகச்செய்யும். சிரசிற்குக் குளிர்ச்சியையும், தாது புஷ்டியையும் உண்டாக்கும்.

## அத்திப்பாற் குணம்

காரகமோ டுட்டினமாய் காறுகின்ற பித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ் - சேருங்
கிரிச்சரத்தைப் போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சருமப் பாலதனை வாங்கு.

காரமும், உஷ்ணமும் உள்ள அத்திப்பால், பித்தம், நீரிழிவு(மதுமேகம்), சூலை ரத்த மூத்திரம், நீர்க்கடுப்பு, நீர் எரிச்சல் இவைகளைக் குணப்படுத்தும்.

***குறிப்பு:*** பெண்களுக்கு ஏற்படும் பெரும்பாட்டு நோயை இரண்டு மூன்று தினங்களில் குணப்படுத்திவிடும்.

### பேயத்திப்பாலின் குணம்

வெடிப்பை மேகப்படையை வீறிவரு குட்டத்
தடிப்பைமுளை ரணத்தைச் சாடும் - படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே யெங்குஞ் சுணைகணிறை
மன்னமுறு பேயத்திப் பால்.

சுணைகளை உடைய பேயத்தி மரத்தின் வேரிலிருந்து கீரி எடுக்கும் பால் மிகச் சிறந்தது எனக் கருதப்படுகிறது. இப்பாலினால் பாத பேத நோய், மேகச் சொறி, குட்டம், தடிப்பு, மூளைவிரணம் ஆகிய நோய்கள் குணமாகும்.

***குறிப்பு:*** இதன் பாலினால் ரசம் பற்பமாகும்.

### மட்டிப்பாற் குணம்

தலைவலி நீரேற்றந் தனித்த வுடல்வாத
மலைவுறு மேல்வாந்தி யரோசி - நிலைகுலையும்
வட்டுப்பால் வஞ்சம்வைத்த மாமுலைமாதே மணக்கு
மட்டுப் பாலிற்கு மருண்டு.

வாசனையை உடைய மட்டிப் பாலினால் தலைவலி, சலதோடம், கபவாந்தி, அரோசிகம் முதலிய நோய்கள் குணமாகும்.

### காட்டுப்பிராய், ஈழத்தவரி இவைகளின் பாற்குணம்

காட்டுப் பிராய்ப்பாலோ காணுகின்ற பல்வலியை
நாட்டில்வைக்கா தோட்டிவிடு நங்கையே - கோட்டாரும்
ஈழத்தலரிப்பா லேறுபுரைப் புண் தொடையின்
வாழைப் புற்றும்போக்கும் வால்.

காட்டுப் பிராய் மரப்பால், பல்வலியைப் போக்கும். ஈழத்தலரிப்பால் புரைவிரணத்தையும், தொடை வாழைப் புற்றையும் குணப்படுத்தும்.

### சங்கண், முட்செடி, புங்கமரம் இவைகளின் பால் குணம்

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமில்லை - கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்.

முட்சங்கண் வேர் கட்டையை மெல்லியதாகச் சீவி இடித்துப் பிழிந்த பால் சோகை நோயையும், நீர் ஏற்றத்தையும், சுரவேகத்தையும், நீக்கும். முன்போல் பிழிந்த புங்கம் பால்கரணத்தையும் நீக்கும். உடலுக்குப் பொன் ஒளியை உண்டாக்கும்.

### தில்லை மரத்தின் பால் குணம்

பாரிசவா தஞ்சன்னி பாதச்சூலங் குஷ்டஞ்
சேருமுட வாதம்வலி சில்விஷம்போம் - பேருரைக்க
இல்லையில்லை யென்றோடு மெண்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி.

தில்லை மரப்பாலால் பக்கவாதம், சன்னிசூலை, குஷ்டம், முடவாதம், அமரகண்டம் முதலிய ஐந்துவகை வலிகள் சில்விடக்கடிகள், எண்பதுவகை வலி நோய்கள் ஆகியவை போம்.

### திருகுக்கள்ளிப்பால் குணம்

வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீத மொழியுங்கிருமி சேராவாம் - மாதே
பருபக்க நோயுடனே பாழ்ங்கரப் பான்றீந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி.

திருகுக் கள்ளிப்பாலினால் குட்டம், கடிசூலை, வாதப்பிரமேகம், வாதாதிக்கக் கிருமி, நெளிகின்ற துட்ட விரணம், கரப்பான் ஆகியவை விலகும் என்க.

## சதுரக்கள்ளிப்பால் குணம்

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாய்வு
துட்டக் கிருமியொடு தூறுபுண்ணு - முட்ட
முதிரக் கரப்பானும்போ மொய்குழலே நாளுஞ்
சதுரக்கள் ளிப்பார்க்குத் தான்.

சதுரக்கள்ளிப்பாலினால் குட்டம், கடிசூலை, வாதப் பிரமேகம், வாதாதிக்கக் கிருமி, நெளிகின்ற துட்ட விரணம், கரப்பான் ஆகியவை விலகும் என்க.

## மான்செவி கள்ளிப்பால் குணம்

மான்செவிக் கள்ளிப்பாற்கு மாறா விரணங்கள்
ஏன்கிளைக்கு நன்மல மிறக்குங்காண் - ஊண்சேர்
விரிகிரந்தி நீங்கா வறட்சி சொறியோடு
பொரிகிரந்தி யும்போம் பொரிந்து.

மான் செவிக் கள்ளிப்பாலினால் ஆறாதப் புண்கள், மாமிசத்தைப் பற்றிய வரி கிரந்தி தேக வறட்சி, படை, சொறி, கிரந்தி ஆகியவைகளை நீக்கி மலத்தை இளக்கச்செய்யும்.

## இலைக்கள்ளிப்பால் குணம்

செய்ய கரப்பான் செவிநோய்வா தம்போக்கும்
ஐயவருஞ் சூலைதனைப் பாழக்கும் - வெய்யின்மிக
ஊது கிரந்தியோ டுட்புண்ணை யாற்றிவிடு
மேதுமிலைக் கள்ளிப்பா லோர்.

இலைக்கள்ளிப் பாலினால் செங்கரப்பான், செவிநோய், வாதவிகாரம், சூலை, விசர்ப்பகிரந்தி, உள்விரணம் ஆகியவைகள் குணமாகும்.

## கொடிக்கள்ளிப்பால் குணம்

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும்போஞ்
செய்யகடி குஷ்டநோய் சேருமே - மெய்யி

வடிக்கடி யாங்குன்மவலி யத்தனையுந் தீருங்
கொடிக் கள்ளிப்பாலுக்குக் கூறு.

கொடிகள்ளிப் பாலினால் கரப்பான், சொறிசிரங்கு, பெருவிரணம், அக்கினி கீடக்கனி, குட்டம், வலிகுன்மம் ஆகியவை போம்.

## எருக்கம்பால் குணம்

எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராச் - செருக்கான
சன்னிவலி தீர்க்குஞ் சார்ந்தபல செந்தூர
முன்ன முடிக்குமென் றோர்.

எருக்கம்பால் வாதக்கட்டிகளைக் கரைப்பது அல்லாமல், வாதநோய், சன்னிநோய், ஐந்துவகை வலி ஆகியவைகளைப் போக்கும். மேலும் பற்ப செந்தூரங்களைச் செய்வதற்கும் சேர்க்கப்படுகிறது.

## வெள்ளெருக்கம்பால் குணம்

வலியின் வலிகளுக்கு மாவாதஞ் சன்னி
யெலியின் விஷஞ்சுரங்க ளெல்லாம் - வலியற்றுக்
காலைத் தொழுதே கடற்புறக்கும் வெள்ளெருக்கும்
பாலைத் தொடுவாரைப் பார்.

வெள்ளெருக்கம் பாலால் ஐந்துவகை வலி நோய்களும் மகரவாதம், சன்னிப்பாதம், எலி விஷம் ஆகியவைப் போம்.

## காட்டாமணக்கின் பால் குணம்

விழுமேக வெள்ளைகுன்ம மேல்விர ணந்தோலி
விழுமேருக் கட்டியிவை ஙயெல்லாந் - தொழுதோடுங்
கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனைக்
கொங்கைமின்னே
காட்டா மணக்கம்பாற் கண்டு.

காட்டாமணக்கின் பாலினால் மூத்திரத்தோடு விழுகின்ற மேகம், வெள்ளை, வெட்டை, வயிற்றுவலி, குரிரணம் சருமக்கட்டி ஆகியவைகளைப் போக்கும்.

**எலியாமணக்கம்பால் குணம்**

எலியா மணக்கோ வெலிவிடம் வித்துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில் - வலுபேதி
யுண்டாகச் செய்யு முயிர்பீலி கங்குன்ம
மண்டாம லோட்டுமி யாய்.

எலியாமணக்கின் பால், எலிவிஷம், விரைவீக்கம், வண்டுகடி, பீலிகநோய், வயிற்றுவலி ஆகியவைகளை நீக்குவதுடன் பேதியை உண்டாக்கச் செய்யும்.

**பிரமதண்டின் பால் குணம்**

கண்கூசல் கண்ணருகல் கண்ணொழுகல்
கண்சிவந்தலெல்லாங் கடிதேருந் - திண்ணச்
சாமதன் றளைப்பிளக்குஞ் சாயக்கண் மாதே
பிற மதன் டன்பாற்குப் பேர்ந்து.

பிரமதண்டின் பாலால் கண்கூசுதல், கண் உருகல், கண்ணீர் வடிதல், கண்வலி, கண்சிவப்பு ஆகியவை போம்.



# தயிர் வகைகள்

### பசுவின் தயிர்க்குணம்

பசுவின் றயிராற் பசிமிகவு முண்டாகு
மிசிவுறும் சீரணனோ யேகும் - பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணா மெய்யெரிவு
மேரு முலகி லியம்பு.

பசுவின் தயிரால் பசி உண்டாகும். இசிவு, ரணம், சீரண நோய், தாகம், களைப்பு, இருமல், எரிச்சல் ஆகியவை நீங்கும்.

### ஆடையெடுத்த தயிர்க்குணம்

ஆடையெடுத்த தயிர்கய மிளைப்பறுக்கும்
நாடு கிரிச்சரத்தை நாடவொட்டா - தாடொலியா
லுண்டாங் கிராணி யுறைமேகம் போக்கிவிடுந்
தண்டார் குழலணங்கே சாற்று.

ஆடையெடுத்த (ஏடு நீங்கிய) தயிரானது கபநோய், ஆயாசம், மூத்திர எரிச்சல், மூத்திரக்கடுப்பு, வாதகிராணி, மேகநோய் ஆகியவை இவைகளை நீக்கும்.

### எருமைத்தயிர் குணம்

எருமைத் தயிருக் கெவுரி பித்தம்போம்
வருமைக் கரப்பனொடு வாதம் - பெருமிதஞ்சேர்
தூல வுடலமுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோலவிழி குளிருங் கூறு.

எருமைத்தயிரினால் எரிச்சலும் பித்த நோயும் போகும். கபத்தைப் பற்றிய கரப்பான் வாதநோய், ஆதிதூல நோய், புத்தி மந்தம், கண்ணுக்குக் குளிர்ச்சி ஆகியவை உண்டாகும்.

### வெள்ளாட்டின் தயிர் மோர் இவைகளின் குணம்

வெள்ளாட் டின் வெண்ட யிரோ மிக்கனல மாகுமதற்
குள்ளாடை யான்மத்த முண்டென்பார் - வெள்ளாட் டின்
மோரரோ மேகத்தை முதிரா தடித்து விடும்
பாரோ ரறியப் பகர்.

வெள்ளாட்டின் தயிரால் அதிக உஷ்ணமும், அதன் ஏட்டால் மந்தமும் விளையும். ஆனால் மோர் பிரமேக நோயைக் குணப்படுத்தும்.

### செம்மறியாட்டுத் தயிர் குணம்

செம்மறியின் றன்தயிரைத் தின்ன மதுரமிருங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேள் - அம்ம
கரப்பான் சொறியுங் கடுப்பிரத்த வாய்வு
முரப்பா முடங்கெடுமென் றோர்.

மதுரமுள்ள செம்மறியாட்டின் தயிரை உட்கொண்டால் கரப்பான், சொரி, மூலக்கடுப்பு, ரத்தமூலம், வாதநோய் ஆகிய இவைகள் பெருகுவதன்றிச் சரீரத்திற்குத் துன்பத்தையும் உண்டாக்கும்.

### ஒட்டைத் தயிர்க்குணம்

தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாற்
பூபதி பொன்மேனி புளகிக்குந் - தாபதமாம்
ஒட்டைத் தயிர்நிதமு முண்ணவதி தாகம் பேர்ந்
துட்டக் கிருமியறுஞ் சொல்.

ஒட்டைத்தயிரைக் குடித்தால் சடராக்கினி, சிறு கரப்பான், விரணம், உடலிற்கு அழகு இவை உண்டாகும். தாகமும் மலக்கிருமி நோயும் உண்டாகும்.

**மோரின் பொதுக்குணம்:** மோரானது வாத முதலிய முக்குற்றங்களையும் அதிகரிக்க ஒட்டாமல் அடக்கி உடம்பை நாள்தோறும் காப்பாற்றும்.

# மோர்வகைகள்

### பசுமோர் குணம்

வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்கு மருந்திட்டததி சாரமொடு - கூக்குரலே
மாறாந் திரிதோஷ மந்தமனற் றாகம்போம்
வீறாவின் மோருக்கு மெய்.

பசுவின் மோரினால் வீக்கம், மகோதரம், வயிற்றுவலி, பாண்டு நோய், பித்தநோய், இடுமருந்தால் வரும் நோய்கள், பேதி, திரிதோஷம், அக்கினி மந்தம், வெப்பம், நீர்வேட்கை இவைகள் போம்.

### எருமைமோர்க் குணம்

தாகங் கிராணி சலங்கழிச்சல் காமாலை
ஆகங் குடைபுழுவு மற்றுப்போ - மோகமுறுந்
தேவா மிருதமுமாஞ் சீர்மானி டர்தமக்கு
மூலா மருந்தெருமை மோர்.

எருமை மோரினால் தாகம், கிராணிநோய், சகல கழிச்சல், காமாலை, கிருமி ஆகிய இவைகள் நீங்கும். சிறந்த மானிடர்களுக்கு இது கெடாத போக அமுதமாகும்.

### வெண்ணெயின் பொதுக்குணம்

வெண்ணெயை உட்கொண்டால் தாதுவிருத்தியையும், சரீரத்திற்குக் குளிர்ச்சியையும் பலத்தையும் உண்டு பண்ணும்.

### ஒட்டைமோர் குணம்

ஒட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்
கிட்டுமந்த நெய்ப்பெருமை கேட்பீரேல் - நெட்டுலகின்
மத்தஞ் செய்தாலும் வலிவந்து வைப்பெருக்கு
மந்தஞ்சேர் கண்ணா யறி.

ஒட்டையின் மோர் பித்த வாத தொந்தத்தைச் சாந்தி செய்யும். அதன் நெய்யானது அக்கினி மந்தம் செய்வதாயிருந்தாலும் சுக்கில சுரோணித தாதுக்களை விருத்திசெய்யும்.

# வெண்ணெய் வகைகள்

## முலைப்பால் வெண்ணெய்க் குணம்

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளி
லண்ணெரிவு மண்ணி லகன்றிடுங்காண் - தண்ணா
ரலைப்பால் மாண்பது கணிசெய்யு மாதர்
முலைப்பால் வெண்ணெய்க்கு முரிந்து.

சிறந்த மாதர் முலைப்பால் வெண்ணெய்க்குக் கண், கை கால், நாசி இவ்விடங்களில் உண்டாக்கும் எரிச்சல் நீங்கும்.

## பசுவெண்ணெய்க் குணம்

கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீளையும்போ
மென்னும் பசியு மெழும்புங்காண் - நண்ணரிய
ஆவனறும் வெண்ணெய்க் ககலும்வன் மேகமெல்லாம்
பூவினர்க் கெல்லாம் புகல்.

பசுவின் வெண்ணெயால் கண்நோய், கண் எரிச்சல், பீளைசாரம், பிரமேகம், நீர் எரிச்சல், நீர்கடுப்பு முதலிய நோய்கள் குணமாகிப் பசியை அதிகரிக்கச் செய்யும்.

## எருமை வெண்ணெய்க் குணம்

எருமைவெண் ணெய்க்கி லெரிநீ ரிழிவு
பருவமயில் கேளிப் பாரிற் - கிருமியுறு
மந்தமாம் வாதமிகு மார்க்கபங் கரப்பான்
தொந்தமா நோயடருஞ் சொல்.

எருமை வெண்ணெயினால் பித்த மூத்திரக் கிரிச்சரம் நீங்கும். மலாசயக் கிருமி, அக்கினி மந்தம், வாதநோய், மார்பில் ஏற்படும் கபம், கரப்பான், தொந்தநோய் ஆகிய இவைகள் உண்டாகும்.

### வெள்ளாட்டு வெண்ணெய்க் குணம்

வெள்ளாட்டு வெண்ணெயது வீறுசுரந் தான்போக்குந்
தள்ளாடு பித்தந் தணிக்குங்காண் - தெள்ளுமொழி
மானே பசியெழுப்பும் வன்கரப்பனைக் கடற்குட்
டானே துரத்திவிடுஞ் சாற்று.

வெள்ளாட்டு வெண்ணெய் சுரநோய், பித்தநோய், கரப்பான் ஆகிய இவைகளை நீக்கும். பசியை உண்டாக்கும்.

### ஒட்டை வெண்ணெய்க் குணம்

கட்டழகு செய்யுநற் காரிகையீர் கேண்மின்கள்
ஒட்டைவெண் ணெய்மந்த மொடுவாதங் - கிட்டவைக்கும்
நீரழிவுக் கேற்கு நிறைபித்தம் போக்கிலிடும்
பாரறியச் சொன்னோம் பகுத்து.

ஒட்டையின் வெண்ணெய்யானது நல்ல அழகையும், மந்தத்தையும், வாத நோயையும் உண்டாக்கும். நீரிழிவையும் பித்த கோபத்தையும் நீக்கும் என்க.

**நெய்யின் பொதுக்குணம்:** நெய்யை வேண்டிய அளவாய் உணவில் சேர்த்து உட்கொண்டபின் அது உண்ட உணவைச் சரிப்படுத்திச் சரீரத்திற்கு மிகுந்த பலத்தையும் புஷ்டியையும் கொடுக்கும்.

## நெய்வகைகள்

### பசுவின் நெய்க்குணம்

தாகமழ லைசுட்சம் வாந்திபித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரிவு விக்கலழல் - மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லஸ்திசுட்டஞ்
சொன்மூலம் போக்குநிறைத் துப்பு.

பசுவினது நெய்யானது தாகம், அழலைப்பிணி, அதிசுட்க நோய், வாந்தி, பித்தாதிக்கம், வாத விஷம், விரணப் பிரமேகம், வயிற்றெரிவு, பித்த வீக்கம், இருமல், வயிற்றுவலி, வறட்சி, சினைப்பு, குடல் நெரிதல், மூலாதார வறட்சி, மூலநோய் ஆகிய இவைகளைப் போக்கும்.

**காராம்பசு நெய்க்குணம்**

காராம் பசுநெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
நீரார் விழிபுருவ நெற்றிசிரச் - சூரொழியும்
மெய்யிற் குழைவு மிளிர்பொன் னிறமும்வரும்
நெய்யா லிதுமேலா நிகழ்த்து.

காராம்பசு நெய்யால் கண்களுக்கு ஒளியையும், உடல் வன்மையையும், பொற்சாயலையும் உண்டாக்கும். மேலும் கண், புருவம், நெற்றி, தலை இவைகளைப்பற்றிய நோய்கள் விலகும்.

**எருமை நெய்க் குணம்**

புத்திகெடு மெய்யழகு போதக் கெடுநயனம்
மெத்தவொளி மரறிவிடு மேதினியிற் - சத்தியமா
முறுவாத மொடுபித்த மாறாக் கரப்பானாங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு.

எருமை நெய்யால் அறிவு, அழகு, கண்ணொளி இவைகள் மத்திமமாம். வாத பித்த தோஷம் கரப்பான் ஆகிய நோய்கள் உண்டாகும்.

**வெள்ளாட்டு நெய்க்குணம்**

ஐயைப்போக் கும்வாதந் தாற்மையைக் கெடுத்துவிடு
மெய்யை வளர்க்கும்விழி யைத்துலக்கும் வையகத்திற்
பத்தியத்திற் காகும பயமிலைவெள் ளாட்டின்னெய்
நித்தியங் கொண்டாலுங் கொண்ணீ.

வெள்ளாட்டு நெய்யை உட்கொண்டால் கப ஆதிக்கத்தையும், வாத கோபத்தையும் போக்கும். சரீரத்தை வளர்ப்பது அன்றிக் கண்ணுக்கு ஒளியை உண்டாக்கும். பத்தியத்திற்கு உதவும்.

### செம்மறியாடு, பள்ளாடு இவைகளின் நெய்க்குணம்

செம்மறியி நெய்யதனைத் தின்ன மதுரமுமாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கே - ளம்முருங்காண்
பள்ளையின்னெய் பித்தொழிக்கும் பாருலகி லெல்லாருங்
கொள்ளத்தான் மந்தருங் கூறு.

மதுரமுள்ள செம்மறி ஆட்டின் நெய்யால் கப நோய்கள் அதிகரிக்கும். பள்ள ஆட்டு நெய் பித்த நோயை ஒழிக்கும். மந்தத்தை உண்டு பண்ணும்.

### கலப்பு நெய்க்குணம்

நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்த - மெய்யனலா
லுள்ளபித்த வெக்கைபோ மோங்குயிருந்த தாணிலைக்குங்
கொள்ளத் தெரியுங் குணம்.

எருமை நெய் முதலிய கலப்பு நெய்யால் சுக்கிலம் பெருகும். பசியை உண்டாக்கும். பித்த தோஷமும், தேக கொதிப்பாலாகிய பித்த சுரமும் போம். உயிரைத் தங்குகின்ற உடலும் வலுக்கும்.

***குறிப்பு:*** பன்றி நெய் சகலவிதமான அம்மை நோய்களையும் குணப்படுத்தும்.

உடும்பின் நெய் சுக்கிலத்தைப் பெருக்கி ஆண்மையை உண்டாக்கும்.

காக்கையின் நெய் காக்கை வலிப்புப் போன்ற நோய்களைக் குணப்படுத்தும்.

## பன்றி, உடும்பு, காக்கை இவைகளின் நெய்க்குணம்

பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூலத் திரத்தங்
கன்றியாவாதக் கடுப்புமுதற் றுன்றிய நோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய் காமாலைக்காங் காண்.

பன்றி நெய்யானது மூத்திரக்கடுப்பு, ரத்த மூகிராணி, மூத்திர எரிச்சல், வாதக் கடுப்பு முதலிய பிணிகளைப் போக்கும்.

உடும்பின் நெய் ரத்தக் கிராணியை நீக்கும். காக்கைநெய் காமாலைக்கு உதவும்.

## ஆமை, ஓணான், கரடி இவைகளின் நெய்க்குணம்

ஊணாமை நெய்மூல மோட்டும் ஓணானெய்க்குக்
காணாப் புறவலிநோய் காணுவாம் - பூணார்
முலையாய் கரடிநெய்க்கு முன்வாத மோடும்
புலையாருங் கால்வெடிப்பும் போல்.

ஆமை நெய் ரத்த மூலத்தை நீக்கும். ஓணான் நெய்யால் பின்னிசிவு தீரும். கரடி நெய்யால் வாத வேகமும், கால் வெடிப்பும் நீங்கும்.

## ஆமணக்கு நெய்க்குணம்

ஆமணக்கு நெய்யா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே - வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில் வரு குன்மம்போ மோர்.

உஷ்ணமுள்ள ஆமணக்கு நெய்யை முறைப்படி அளவிட்டு உட்கொண்டால் விரோசனம் (பேதி) ஆகும். இதனால் கோவாதம், குன்மம், குடல் ஏற்றம் தேகம், கண், மூக்கு, செவி, வாய் இவைகளில் உண்டாகிற எரிச்சலும் நீங்கும். சரீரத்திற்குப் பொன் நிறத்தையும், தாது விருத்தியையும் உண்டாக்கும்.

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறு
மைமம்பொறிச் சூடேறிவு மாறுங்காண் - அம்புவியிற்
பாமணக்கு மின்பமோழிப் பாவாய் நலஞ்செறிந்த
ஆமணக்கின் நெய்யும் டறு.

**சிற்றாமணக்கு நெய்க்குணம்**

மருந்தி னழலும் வளியான் மூலத்துட்
பொருந்து மழலுமறப் போக்குங் - குருத்திற்கு
நற்றா யெனவளர்க்கு நாறாமழலைத் தணிக்குஞ்
சிற்றாமணக்கிணெய் தான்றேர்.

சிற்றாமணக்கு நெய் பற்பல மருந்துகளின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்தில் உண்டாகின்ற உஷ்ணங்களையும் நீக்கும். குழந்தைகளைத் தாய் வளர்ப்பது போல உடலை வளர்க்கும்.

**எள்ளின் நெய்க்குணம்**

புத்தி நயனக் குளிர்ச்சி பூரிப்பு மெய்ப் புகைஞ்
சத்துவங் காந்தி தனியிளமை - மெத்த வுண்டாங்
கண்ணோய் செவி நோய் கபால அழல் காசநோய்
புண்ணாய் போ மெண்ணெய்யாற் போற்று.

எள்ளினது நெய்யினால் புத்திக்குத் தெளிவையும் கண்களுக்குக் குளிர்ச்சியையும், மனதிற்கு மகிழ்ச்சியையும், சரீரத்திற்கு வன்மையையும், அழகையும், வாலிபத் தன்மையும் உண்டாக்கும். கண்களில் ஏற்படும் கர்ணநோய், கபால உஷ்ணம், விரணம் ஆகிய இவைகள் நீங்கும் என்க.

**செம்மறியாடு, பள்ளாடு இவைகளின் நெய்க்குணம்**

செம்மறியி நெய்யதனைத் தின்ன மதுரமு மாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கே - ளம்முருங் காண்
பள்ளையின் னெய் பித்தொழிக்கும் பாருலகி னெல்லாருங்
கொள்ளத்தான் மந்தமருங் கூறு.

## கலப்புநெய்க் குணம்

நெய்யுட் பல நெய்க்கு நீள் சுக்கி லம்பெருகும்
வெய்ய பசி யுண்டாம் விடும்பித்த - மெய்யனலாகுங்
ஒள்ள பித்த வெக்கைபோ மோங்குயிருந் தானிலைக்
கொள்ளத் தெரியுங்குணம்.

## பன்றி, உடும்பு, காக்கை இவைகளின் நெய்க்குணம்

பன்றிநெய் நீர்க்கடுப்பு, பாயுமூலத் திரந்தங்
கன்றியாவாதக் கடுப்பு முதற் - றுன்றிய நோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய் காமாலை - காங் காண்.

## ஆமை, ஓணான், கரடி இவைகளின் நெய்க்குணம்

ஊணாமை நெய்மூல மோட்டும் ஓணா னெய்க்குக்
காணாப் புறவலி நொய் காணவாம் - பூணார்
முலையாய் கரடி நெய்க்கு முன்வாத மோடும்
புலையாருங் கால் வெடிப்பும் போம்.

## ஆமணக்கு நெய்க்குணம்

ஆமணக்கு நெய்யா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே - வாய் மணக்கக்
கொள்ளில் வயிறு விருங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில் குன்மம்போ மோர்.

## இதுவுமது

அம் பொனிற மும்வித்து மாங்குடலி னேற்றமறு
மைம் பொறிச் சூடெறிவு மாறுங்காண் - அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் நலஞ் செறிந்த
ஆமணக்கின் நெய்யுண்டது.

### சிற்றாமணக்கு நெய்க்குணம்

மருந்தி னழலும் வளியான் மூலத்துட்
பொருந்து மழலுமறப் போக்கும் - குருத்திற்கு
நற்றா யெனவளர்க்கு நாற மழலைத் தணிக்குஞ்
சிற்றா மணக்கினெய்தான் றேர்.

### எள்ளின் நெய்க்குணம்

புத்தி நயனக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்
சத்துவங் காந்தி தனியிளமை - மெத்தவுண்டோங்
கண்ணோய் செவிநோய் கபால அழல் காசநோய்
புண்ணோய் போ மெண்ணெய்யாற் போற்று.

### வாதுமை நெய்க்குணம்

அழலெல்லா மாற்று மரிய வுடம்பி
வழலோடு விந்துவை யுண்டாக்கும் - வழுவழுப்பைப்
பூண்ட கபம் போக்கும் பொறிகட் கொளி செய்யு
நீண்ட அப்பம் விதை நெய்.

வாதுமை நெய் மருந்துகளினாலும், உழைப்பினாலும் இளைத்த சரீரங்களையும் கபதோடத்தையும் நீக்கும். பஞ்சேந்திரியங்களுக்குத் தெளிவை உண்டாக்கிச் சுக்கிலத்தை உண்டாக்கும்.

### வேப்ப நெய்க்குணம்

வாதம்போம் பித்த மிகு மாறாக் கிரந்தியொடு
மேதுகரப் பான்சிரங்கு முன்னிசுவும் ஓதுடலின்
நாப்பணுறு சுரமு நாடு சன்னியுந் தொலையும்
வேப்பநெய் யென்றொரு கால் விள்.

வேம்பின் நெய்க்கு மகாவாதம், கிரந்தி, கரப்பான், தலைநோய், தம்பணவாதம், சந்திப்பூ ஆகியவை நீங்கும். பித்தத்தை உண்டாக்கும்.

## இலுப்பை நெய்க்குணம்

கரப்பான டருங் கடிசிரங்கு புண்ணு
முரப்பா மிடுப்புல்லி யோடு - கரப்பான்
பாகுமொழி மாதே பலமுண்டாந் துற்பலம்
போகுமிலுப் பையினெய்க்கே.

இலுப்பை நெய்யினால் கரப்பான், கடிவிஷம், சிரங்கு, ரணம் இவைகளின் வன்மை அதிகமாகும். சகல வாதமும், துர்ப்பலமும் நீங்கும்.

## புன்னை நெய்க்குணம்

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசன்னி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாயுவறான் - பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையு
மல்லார் குழலே யறி.

புன்னை நெய்யினால் சன்னி பாதம், மகாவாத நோய், முன்னிசைவு, பின்னிசைவு ஐந்துவகை வலிகள், ரணம், கிருமி ஆகிய இவைகள் நீங்கும்.

## புங்கின் நெய்க்குணம்

அங்கமழ கிடும்வெற்பாம் புங்கினெய் தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாந் - திங்கண்முக
மானே கரந்பான்போம் வன்சொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று.

மலைப்புங்கண் பருப்பின் நெய்யிற்கு, அழகும், ஒளியும் உண்டாகும். கரப்பானும், சொறிசிரங்கும் நீங்கும்.

## தேங்காயின் நெய்க்குணம்

தேங்காயின் நெய்யதனாற் றீயால் வருபுண்போம்
பாங்காகக் கூந்தர் படர்தேறு - நீங்காத

பல்லடியின் னோயும் படர்தா மரைசிரங்கு
மல்லர்ப் போமென் றறி.

தேங்காய் நெய்யினால் தீயால் வரும் ரணம், புண், பல்நோய், படர்தாமரை, சிரங்கு, சொறி ஆகிய இவைகள் குணமாகித் தலை மயிர் வளரும்.

**கடுகு நெய்க்குணம்**

குட்டநோய் பித்தரத்தங் குஷ்ட மடல்வாதம்
விட்டு கபமூல விரணமறும் - பூட்டின்
முடிகி யெழுசூலையொடு மொத்தநோயேகுங்
கடுகின் னெய்யாலனலாங் காண்.

அதிகச் சூடுள்ள கடுகின் நெய்யால் குன்மம், ரத்தபித்தம், குஷ்டம், மகாவாதம், காசம், மூளை விரணம்,சூலை முதலிய நோய்கள் நீங்கும்.

**நீரடிமுத்து நெய்க்குணம்**

பூசுகுடி வாதகுணம் பொங்கு கிரந்திபுடை
வீசுகுட்டஞ் சூலையிவை விட்டேரும் - நேகஞ்சச்
சீரடியை யொத்தநடைத் தெய்வ மடமயிலே
நீரடி முத்தின்நெய்யை நீ.

நீரடிமுத்தின் நெய்யை உடலில் பூசினாலும், உள்ளுக்குக் குடித்தாலும், வாத குட்டம், சொறி, சிரங்கு, பெருவியாதி, சூலை இவை நீங்கும். என்க.

**சேங்கொட்டை நெய்க்குணம்**

தாதுவும் புருணமுமாஞ் தத்துரு பரங்கிப் புண்
கோறிபுரி யிருமைக் குட்டிணங்கள் - காதுங்
கரிமுகி யூரர்கரப்பான் றிமிர்போ
மெரிமுகி நெய்யாலென் றறி.

சேங்கொட்டை நெய்யினால், தடிப்பு, பரங்கிப்புண், கருங்குட்டம் முதலிய குட்டநோய்களும், கருஞ்சோறி, கரப்பான், திமிர்வாதம் ஆகிய நோய்களும் போம். மேலும் விந்து உற்பத்தியையும், கர்ப்ப உற்பத்தியையும் உண்டாக்கும்.

## முக்கூட்டுநெய் சேர்க்கும் விதி

வெண்ணெ யண்டமெண்முத் தாமுத்தா வெண்ணெய்
மீவெண் கலாதி முறையேகேள் - மேவுநெறி
யொன்றிரண்டு மூன்றாகு மொன்றிரண்டு மூன்றாகு
மொன்றிரண்டு மூன்றாகு முற்று.

வாதம் முதலிய மூன்று தோஷங்களுக்கு கூட்ட வேண்டிய, முறைமை வாதத் தேகிகளுக்குப் பசுவின்நெய் 3பங்கு, எள் நெய் 2 பங்கு, ஆமணக்குநெய் 3 பங்கும் ஆகும். பித்த உடலினருக்கு (எள்நெய்) எண்ணெய் 1 பங்கு ஆமணக்கு நெய் 2 பங்கு, பசுவின்நெய் 3 பங்கு, கப உடலினருக்கு ஆமணக்கு நெய் 1 பங்கு, பசுவின் நெய் 2 பங்கு, எள் நெய் 3 பங்கு.

## முக்கூட்டு நெய்க்குணம்

நூவு நெய்க் கைய நுவலா நெய்க்குப் பித்தம்
மேவுமுத்து நெய்க்கனிலம் வீறாவாம் - பூவுலகில்
மூன்று மனவாய்க்காய்ச்சி மூழ்கிலந்தப் பிணியா
லுன்றுநோ யியாவும்போ மோர்.

எள்ளின் நெய், பசுவின்நெய், ஆமணக்குநெய் ஆகிய இவைகளுக்கு முறையே பித்தவாத கோபங்கள் மீறாமல் பித்தம் நிலையில் பொருந்துவனவாம். ஆகையால் இம்மூன்று வித நெய்களையும் கிரமப்படி கூட்டிக் காய்ச்சித் தலைமுழுகி வந்தால் முக்குற்றங்களால் வரும் சகலவிதமான நோய்களும் நீங்கும்.

### ஐங்கூட்டு நெய்க்குணம்

அஞ்செண் ணெய்க்காணி லாலித்த பின்னிசிவுந்
தஞ்சுமென வாய்வுந் தணியுங்காண் - பஞ்சாய்ப்
பறக்குமே சன்னிசுரம் பாரிலையைச் சேஷ்டை
யிறக்குமே நன்றா யியம்பு.

ஆமணக்கு, எள், வேம்பு, புண்ணெய், புங்கு ஆகிய இவைகளின் நெய்களைக் கலந்து தைலமாகச் செய்து உபயோகித்து வந்தால் பின்னிசிவு, முன்னிசிவு, மகாவாதம சன்னிபாத சுரம் ஆகிய இவைகள் நீங்கும்.

## சரண வகைகள்

### பசுவினது சாணத்தின் குணம்

ஆவினது சாண மடிபடுவீக் கம்முதிரந்
தாவிவரு கிருமி சார்ந்தகப - மேவுசுரந்
தங்குந் தாகம்போக்குஞ் சாற்றின்மெய்ச் சுத்தியப்பால்
தெங்கின் பாலுக்கொக்குந் தேர்.

பசுவினது சாணம் கல்லினால் அடிபட்ட வீக்கம் ஒழுகுகின்ற உதிரம், கிருமி நோய், கபதாகம் இவைகளை நீக்கும். சரீரத்திற்குச் சுத்தியை உண்டாக்கும்.

### எருமைச் சாணத்தின் குணம்

வயிற்றுப் பிரமிரத்த வாந்தி காமாலை
நியமித்த பெரும்பாடு புண்ணீங்கும் - வியந்த
கருமைச் சார்ங்கவிழிக் காரிகையே நாளும்
யெருமைச் சாணத்தி னியல்பு.

எருமைச் சாணத்தால் வயிற்றுப் பொருமல், ரத்தவாந்தி, காமாலை, பெரும்பாடு, புண் இவைகள் குணமாகும்.

### வெள்ளாட்டுப் புழுக்கையின் குணம்

உருக்கை நீறாக்கு முதரநோய் போக்குந்
திருக்கான வாதநோய் நீக்கு - நெருக்கான
நோட்டுக் குழையணங்கே தொல்புவியோர்
சொல்லிடுவெள்
ளாட்டுப் புழுக்கை யது.

வெள்ளாட்டுப் புழுக்கை, உருக்கு, எஃகு உலோகங்கள் அனைத்தையும் பற்பமாக்கும். மகோதரத்தையும் வாதநோயையும் குணப்படுத்தும். வாய் நாற்றத்தையும் போக்கும்.

## மூத்திர வகைகள்

### சிறுநீரின் குணம்

காணாக் கடியோங் கதித்தெழுந்த வீக்கமது
காணாது காயசித்தி கைக்குள நல் - பூணே
பதித்த கொங்கைமாதே பகர்மாந் தருக்கு
ளுதித்த சிறுநீருக்கென் றோர்.

அங்கியுவ ருரைசிறுநீர் வாசம்போக்கு
மதைப்பருகி லுருமலிகைப் பரத்தநோயும்
பொங்கிவரு மேகவிகாரங் கிரந்திப்
புண்களும்போ மதைநசியம் புரியிற்சூடுந்

தங்கியதோரபஸ் மாரஞ் சன்னியாசஞ்
சருவவிடம் விடசுரமுந் தவறுண்டோடும்
மிங்கதனைத் தொடலம் பிற் கண் முகங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங்காணே.

மாந்தர்களின் சிறுநீரினால் காணாக்கடி விஷமும், சோவையும், வாத தோஷமும் தீரும். அதை முறைப்படி பருகினால் இருமல், சுவாசகாசம், மேகமூத்திரம், கிரந்தி

விரணம் ஆகியவைகள் போகும், நசியம் செய்தால் சுரம், அபஸ்வமாரம் சன்னியாசம் சர்வ விஷம், விஷசுரம் ஆகியவைகள் நீங்கும். அந்த நீரால் கழுவினால் விழி, முகம், செவி இவ்விடங்களில் ஏற்படும் கட்டிகள் விலகும். அன்றியும் காயசித்திக்கும் உதவும்.

***குறிப்பு:*** மேற்கூறப்பட்ட முறைகளில் சிறுநீரைப் பயன்படுத்தி காயசித்தி ஏற்பட வேண்டுமானால் அவர்கள் வாசியோகிகளாக இருந்தால் தான் பலன் அளிக்கும்.

**பசு மூத்திரக்குணம்**

*விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல*
*விடமுதிர மாலையென மெத்தப் - புடவிதனிற்*
*பேசலக்க ணோடுதந்த பீடையுமகன்றிடுமே*
*கோசலத்தா லாரணங்கே கூறு.*

*கோவின் (பசுவின்) மூத்திரத்தால் விஷப்பாண்டு சோபை, பற்பல வீக்கங்கள் சகலவிஷம், காமாலை, யானைக்கால் நோய் போன்ற பலநோய்கள் குணமாகும்.*

**எருமை மூத்திரக் குணம்**

*உதரநோய் பாண்டோ டுரத்த காமாலை*
*விதிரவரு சோபை மேகம் - முதிர்க்கிருமி*
*யாகியேநோ யேகு மடரெருமை மூத்திரத்தால்*
*மீதிலன லுண்டாகு மே.*

எருமை மூத்திரத்தால் பெருவயிறு பாண்டு, காமாலை, மேகம், வேர்வை, கிருமி முதலியநோய்கள் குணமாகும். ஆனால் சூடு அதிகமாகும்.

**வெள்ளாட்டு மூத்திரக் குணம்**

சோபையொடு பாண்டுவைத் துரத்தும் பலவீக்க
தாகமற்றும் முதிரத்தைப் போக்குங் கோபமுடன்

உள்ளாட்டுத் துர்ச்சதை யோடோங்குதர நோயகற்றும்
வெள்ளாட்டு மூத்திரம் விரைந்து.

வெள்ளாட்டு மூத்திரம் சோபை, பாண்டு வீக்கம், எரிச்சல், ரத்தப்போக்கு, துந்மாமிசம், மகோதரம் இவைகளைக் குணப்படுத்தும்.

### யானை மூத்திரக் குணம்

அதிதூலஞ் சோபை யனிலங் கிருமி
யெதிர்விடங் கருங்கரப்பா னேகும் - அதிராத
யானையெனப் பலமு மங்கபுஷ்டியுங் கொடுக்கும்
யானைவிடு மூத்திரமென்றோது.

யானை மூத்திரத்தால் அதிதூல நோய், சோபை, வாய்வு கிருமி, விஷம், கருங்கரப்பான் ஆகியவை குணமாகும். யானையைப் போன்ற வன்மையும், சரீரபுஷ்டியும் உண்டாகும்.

### குதிரை மூத்திரக் குணம்

பாதவன் மீகம் படர்தடிப்பு நீள்கிருமி
வாதமொடு கபமு மாறுங்கா - னோவரிய
பொற்குவட்டை யொத்தமுலைப்பூவையரே சூடுடைய
நற்குதிரை மூத்திரத்தி னால்.

சூடுபொருந்திய குதிரை மூத்திரத்தால் பாதப்புத்து, கண்டு கண்டாகத் தடிக்கும் கிருமி நோய், வாதநோய், கபநோய் ஆகியவை போம்.

### ஒட்டை மூத்திரக் குணம்

மேலையூருந் தடிப்பு வீசியெழுஞ் சன்னி
சூலையுதர வர்த்தந் தொடர்குன்மஞ் - சீலைதனை
மண்டலகுஷ் டேகும் வருமொட்டை மூத்திரத்தா
லுண்ட னலமாதே யுரை.

வெப்பத்தையுடைய ஒட்டை மூத்திரத்தால் சரீரத்தில் ஒழிப்புடைகின்ற தடிப்பு, சன்னிபாதம், சூலைப்பிடிப்பு, உதிரவாதம், வயிற்றுவலி, நரம்புக்குட்டம், மண்டலக் குட்டம் முதலியவை குணமாகும்.

***குறிப்பு:*** இதன் நீரைக்கொண்டு பாஷாண மருந்துகளைச் சுத்திசெய்வதற்குப் பயன்படுத்தலாம்.

### கழுதை மூத்திரக் குணம்

வேசரி நீரால்வெப்பம் வீரியநஷ்டங் குஷ்டங்
காசமிரைப்பு விஷங் காற்கிருமி - வீசிடுபுண்
மேகம் பஸ்மாரம் வெடியச் சுரங்கிரந்தி
போகுமின்னுஞ் செய்ப்பிணியும் போம்.

கழுதை மூத்திரத்தினால் உஷ்ணம், தாதுநட்டம், குஷ்டம், காசம், இரைப்பு, சில்விஷம், கால்களில் உள்ள கிருமி, ரணம், தந்திமேகம், அபஸ்மாரம், கண்டக நோய், கிரந்தி, பாலநோய், கருங்கரப்பான், செங்கரப்பான், சொறி, சிரங்கு, திமிர் ஆகிய நோய்கள் குணமாகும்.

***குறிப்பு:*** பல பாடாணங்களைச் சுத்தி செய்வதற்கு இதன் நீர் பயன்படுகிறது.

## மதுர வகை

### செங்கரும்பு,ராதாளிக்கரும்பு, புல்லகண்ட கரும்பு இவைகளின் குணம்

செங்கரும் பதனற்சாறு நீர்த்திடும் பித்தமெல்லாம்
நோயுளெழும் வயிற்றி னோய்கலங்கு - மோயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கு
நாளு நாணற் கரும்பினால்.

செங்கரும்பின் சாறு பித்த தோடத்தை நீக்கும். ரசதாளிக் கரும்பினது சாற்றினால் தாக வெப்பம் போகும். புல்லகண்டம் என்கிற கரும்புச் சாறானது வாத தோடத்தை நீக்கும்.

### நாணற்கரும்பின் குணம்

வாயுபித்தம் வாந்திநீர் மாறுமதி தூல
நோயுளெழும் வயிற்றி னோய்கலங்கு - மோயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கு
நாளு நாணற் கரும்பினால்.

நாணற் கரும்பின் சாற்றினால் வாத பைத்தியம், வமணம், அரோசிகம், அதிதூலம், வயிற்றில் ஏற்படும் நோய் இரைப்பு, பாண்டு இவைகள் மீறாமல் சாந்தமாகும்.

### கரும்பின்சாறு வெல்லம் இவைகளின் மிதாமித குணம்

கரும்பிரச மெத்தவுண்டாற் காணும் கபநோய்
விரும்பிவெல்ல மெத்தவுண்டால் மேகந் - தருமதுதீ
ருண்டா மவைமிதமா யுண்டால் மேகபித்தம்
மிண்டாமற் சாந்தமுறும் விள்.

கரும்பின் சாற்றை அதிகமாக உண்டால், கபத்தை அதிகரிக்கச் செய்யும். கபநோய்களையும் உண்டாக்கும். வெல்லத்தை அதிகமாக உண்டால் மதுமேகத்தை உண்டாக்கும். மிதமாக உண்டால், பிரமேகம், பித்தகோபம் இவைகள் மீறாமல் அடங்கும்.

### தேன்பாகின் குணம்

அனலா லெழுந்த வருசிசர்த்தி தாழும்
புனலாருங் கோழையது பொங்குங் - கனலாருந்
தேன்பாருக் கென்றுமதைச் சேரோ ஷதியதனல்
கான்பாவ நோய்க்கூட் டங்காண்.

தேன்பாகினால் பித்த அரோசகம், வாந்தி நீங்கும், நெஞ்சில் கோழை கட்டு உண்டாகும். இதனை மருந்துகளில் சேர்த்து உட்கொண்டால் கபதோடங்களையும், மேற்கூறப்பட்ட நோய்களையும் குணப்படுத்தும்.

**மணப்பாகின் குணம்**

பித்த வருசிகெடும் பேசிலற்ப வாதமறுந்
தத்தனலம் மெள்ளவுள்ளே தாவிவரு - மெத்த
வணப்பாகை யொத்த மொழிமாதே முறுகா
மணப்பாருக் கென்றே மதி.

மணப்பாகினால், பைத்தியம், பசியின்மை வாதம் நீங்கும். மேலும் உடலில் உஷ்ணத்தை அதிகரிக்கச் செய்யும்.

## தேனின் உபயோகங்கள்

இலோகியம், பாணிதம், கட்டு, கண்மை போன்ற மருந்துகள் செய்வதற்குத் தேன் பயன்படுகிறது.

பற்பம், செந்தூரம், சூரணம், மாத்திரை, குடிநீர் போன்றவைகளுக்குத் தேன் ஒரு சிறந்த துணை மருந்தாகும். இஃது அனுபானப் பொருளாவதின்றி அவிழ்தப் பொருளுமாகி, சரீரத்தை நல்ல நிலையில் வைத்து, வாத முதலிய முக்குற்றங்களையும் போக்குகின்றது.

மருந்துகள் பலிக்க வேண்டுமானால் அனுபானப் பொருள் தேவை என்பதையும், அவ்வனுபானப் பொருள்களுள் தேனும் ஒன்று என்பதனை யாவரும் அறிதல் வேண்டும்.

குழந்தைகளின் இருமலுக்குத் தேன் 50 மில்லியுடன் விளாவின காடி அல்லது எலுமிச்சம்பழ ரசம் சம அளவு கூட்டி குறைந்த அளவில் நோய்களின் தன்மைக்கேற்ப அளவிட்டுக் கொடுத்து வர குணமளிக்கும்.

1) சுவாச காச நோயுற்ற நோயாளிகளுக்கு மலத்தைக் கழித்து கஷ்டமான சுவாசத்தை நிறுத்தச் சிற்றாமணக்கு நெய் (14 மில்லி) அரை அவுன்ஸ் தேன் 7 மில்லி, கால் அவுன்ஸ் இவை இரண்டையும் கூட்டி நன்றாய் ஒன்றுசேரக் கொடுக்க நற்பலனை அளிக்கும்.

2) தேனும், தண்ணீரும் கலந்து உட்கொள்ள வேண்டுமென்று பிரயத்தனம் செய்வதற்கு முன்பு கூறப்பட்டுள்ளது. நாட்சென்ற சீதசுரம் பயப்பட்டு ஓடும் என்று கூறப்பட்டுள்ளது.

3) தேனைத் தினமும் உட்கொண்டு வந்தால் கபநோய்கள் குணமாகும்.

4) தேனைச் சூடுள்ள பார்லி அரிசித் தண்ணீருடன் கொடுப்பதுண்டு. இதனால் மலபந்தம், செரியாமை, நீர்க்கோர்வை, இருமல், தொண்டைவிரணம், நுரையீரலைப் பற்றிய நோய்கள் முதலியன நீங்கும்.

5) கபவாத சுரத்தினால் வருத்துகின்ற நோயினருக்கும் இளைத்த உடம்பினருக்கும் இதயத்தைப் பலப்படுத்தத் தேனை வழங்கலாம்.

6) வயோதிகர்களுக்கு ஏற்படும் கோழையை அகற்றி, சரீரத்தில் உஷ்ணத்தை உண்டுபண்ணுவதற்கும், சக்தியை அதிகப்படுத்துவதற்கும் தேனைக் கொடுத்து வரலாம்.

7) மதுமேகம் நோயிற்காக வழங்கப்படும் மருந்துகளுள் தேனும் ஒரு முக்கிய பொருளாகச் சேர்க்கப்படுகிறது.

8) முலைத்தாம்பு, முலைக்காம்பு விரணத்திற்கும் பால் கட்டிற்கும் தேனை வெளிப்பிரயோகமாக உபயோகிப்பது உண்டு.

9) வயிற்று வீக்கத்தில் அதன் மீது தேனை தேய்த்து வர வலி குறைந்து வீக்கம் வடியும்.

*10)* தீச்சுட்டபுண் வெண்ணீரினால் உண்டாகும் புண் தேனை தேய்த்துக் கழுவ நீங்கும்.

*11)* அழுக்குடன் கூடிய எண்ணெய்ப்பசை உள்ளங் கையில் தேனை மேலேத் தடவ சீக்கிரத்தில் இரணம் ஆறும்.

*12)* தேனை ஒரு குறிப்பிட்ட முறையில் முகத்தில் கருப்புக்கோடுகள் உள்ள இடத்திலும் புள்ளிகள் உள்ள இடத்திலும் தடவி வெந்நீரினால் கழுவினால் கோடுகள் மறைந்து வசீகரம் உண்டாகும்.

*13)* தேனும் உட்கொள்பவர்களுக்கு மேனி அழகு அதிகப்படும். சருமத்தில் ஏற்படும் சுருக்கங்கள் விழா.

*15)* நம் முன்னோர்கள் தேனை உட்கொண்டு நீண்ட ஆயுளுடன் வாழ்ந்து வந்து இருக்கிறார்கள்.

*16)* ஆதிகாலத்தில் சவங்களை (பிணங்களைப்) பாதுகாக்கத் தேனை உபயோகித்துவந்து இருக்கின்றனர். தேன் அழுகக்கூடிய சவங்களையும் பாதுகாக்கக் கூடியதாக இருப்பதனால் அதை உட்கொள்பவர்கள் நிச்சயம் உடல் உரம்பெறுவார்கள் என்பதிலும் ஆயுள் நீடிக்கப்படுவார்கள் என்பதிலும் ஐயம் இல்லை.

## தேன் கற்கண்டு

தேனானது உறைந்து கற்கண்டாய் மாறுவது உண்டு. அக்கற்கண்டினால் கண்ணில் படருகின்ற துற்மாமிசப் படலம், சுரம், கபநோய், வாதநோய் முதலியன நீங்கி அதிகப் பசியையும் தொனியையும் உண்டுபண்ணும்.

## முதிர்ந்த பாகு, பழைய வெல்லப்பாகு இவைகளின் குணம்

முதிர்பாகு வயிற்றெரிவு மூத்திரக் கட்டோடே
யதிர்வாத மாகிய நோயாகுந் - துதிபழைய
வெல்லப்பா குக்கருசி வீறுபித்தம் பேதிவாய்
வில்லையப்பா மாதே யினி.

நல்ல வெல்லம் பித்த குன்மத்தைப் போக்கும். நெஞ்சில் கபம் கட்டும். மலாசயகிருமி, மதுமேகம் ஆகியவைகளை உண்டாக்கும்.

**உருண்டை வெல்லத்தின் குணம்**

சூலமேகங் குன்ம முட்சூலை விந்துவுமரங்
காலடர் குமட்டல்பித்தங் காசமும்போம் - நீலவரிக்
கெண்டை விழியாய் கெளுமிய நாணற்கன்ன
லுண்டைவெல்ல மிக்குண்பார்க் கோது.

நாணற் கருப்பஞ்சாற்றால் ஆகிய உருண்டை வெல்லத்திற்கு மூலமுளை மதுப்பிரமேகம், வயிற்றுநோய், பக்கநோய், சுக்கில சரோதின விருத்தி ஆகியவைகளை உண்டாக்கி வாத நோயையும், பித்தநோயையும், இருமலையும் நீக்கும்.

**தெங்கின் வெல்லம், பனைவெல்லம் இவைகளின் குணம்**

தெங்கின் வெல்லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீரு மதிகரிக்குந் - தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சன்னிநோய்
வல்லருசி குன்மமறு மால்.

தெங்கின் வெல்லத்தால் செரியா மாந்தம், வீக்கம், நீரேற்றம் இவைகள் அதிகரிக்கும். பனைவெல்லத்தால் வாத, பித்த, தொந்தம், கபதொந்தம், சன்னி பாதம், அரோசகம், வாதகுன்மம் ஆகியவை இவைகள் தீரும்.

**ஈச்சம் வெல்லத்தின் குணம்**

நீடுமே ரீச்சினியர் நின்மலப் புத்திக்குமந்த
மோடுகப வாத முட்சீத - மாடுமிதி
பித்தமுடனே பெருந் திமிர்நோய் வியாதிகளை
யித்தரையி லுண்டார்க்கு மென்.

பேரீச்சசையின் வெல்லம், புத்திமந்தம், கபவாதம், உள்சீதளம், பித்தகோபம், திமிர்வாயு ஆகியவை உண்டாக்கும்

**சருக்கரையின் குணம்**

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்தி பித்தம் போக்கும் - வந்தருசி
நீக்கும் மதிகபத்தை நின்றுமகிழ்ச் சியையுண்
டாக்கு நறுஞ் சருக்கரை.

சர்க்கரையானது மருந்துகளுக்குத் துணை மருந்தாக இருப்பதைத் தவிர வாந்தி, பித்தம், பசியின்மை ஆகியவைகளைப் போக்கும், கெட்டிப்பட கபத்தை இளக்கி மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

**சீனிச்சருக்கரையின் குணம்**

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவு - மேனிற்கு
வாந்தி யொடுகிருமி மாறாத விக்கலுமே
போந் திசையைவிட்டுப் புரண்டு.

சீனிச்சர்க்கரை வாதசுரம், வாதநோய்கள், வாந்தி, கிருமிநோய், தீராதவிக்கல் இவைகளைப் போக்கும்.

***குறிப்பு:-*** அசீரணம், புளியேப்பம் முதலியவைகளைக் குணப்படுத்தும்.

**கற்கண்டின் குணம்**

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சேராதே - தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் குழு மடவனமே
கற்கண் டெனவுரைக்குங் கால்.

கற்கண்டு பல்லரணை, காசம், வாந்தி அதிகப்படியான கபம், வெப்பம் ஆகியவைகளைப் போக்கும்.

**தெங்கின் கற்கண்டின் குணம்**

நெஞ்சிற் றிமிருஞ்செந் நீரிலழுக் கும்படையு
மஞ்சுகப வாதமொடு வாதமுமே - விஞ்சுமிளந்
தொங்கின தேர்க்க யாவுந் தூயபுத்தி மந்தமுமாந்
தெங்கினது கற்கண்டாற் றெளி.

தெங்கின் கற்கண்டு தொண்டைக்குள் ஏற்படும் திமிர் உதிரத்தில் அழுக்கு, சொறி மேகம், கபவாத தொந்தம், வாதம் இளைத்த சரீரம் உள்ளவர்களுக்கு ஏற்படும் ஆயாசம். மந்த புத்தி ஆகிய இவைகளை உண்டாக்கும்.

**பனங்கற்கண்டின் குணம்**

மேக வனலு மிக வீசும் சூரிகையா
லாகமுறு கனலு மாறுங்காண் - மோகனத்திற்
றங்கிவரு நீர்ச்சுருக்குந் தாகவெப்ப முந்தணியு
மிங்குபனங் கற்கண்டுக்கே.

பனங்கற்கண்டு மேகசுரம் சூரியனின் வெப்பத்தினால் ஏற்படும் நீர்ச்சுருக்கு, அதிதாகம் இவைகளைப் போக்கும்.

***குறிப்பு:-*** கப குற்றத்தினால் ஏற்படும் நோய்களைக் குணப்படுத்தும். ஆண்மையை அதிகரிக்கச் செய்யும்.

**ஈச்சங்கற்கண்டின் குணம்**

அரிய மருந்தையெலா மன்றே முறிக்குந்
திரிவிக கபத்தைவரச் செய்யுந் - தெரிவரிய
பன்னோய் விளைக்கும் பகரரிவை மங்கு விக்கு
மன்னோய் வீச்சங்கற்கண் டிசை.

ஈச்சங் கற்கண்டு மருந்துகளையும் அவைகளின் வேகங்களையும், அறிவையும் கெடுக்கும். மூன்றுவித காசநோய்களையும், பலவித பிணிகளையும் உண்டாக்கும்.

### தேனில் உண்டாகுங் கற்கண்டின் குணம்

தேனின் பிறந்த செழுங்கண்டாற் கண்விழிக்கு
ளூனிற் படர்படல மோடிடுங்காண் - கானத்திற்கு
காகுஞ் சுரமாகு மண்டும் பரிசு பங்கா
ணேகுஞ் சுரமேகு மெண்.

தேனினால் உண்டாகும். கற்கண்டு கண்களில் படர்கின்ற துர்மாமிசப் படத்தையும். உதராக்கினி கபநோய், வாதநோய், சுரநோய் இவைகளைக் குணப்படுத்துவதுடன் இசைப்பாட்டிற்குரிய குரல் ஒலியை உண்டாக்கும்.

***குறிப்பு:-*** இக்கற்கண்டைச் சேர்த்து மிளகு குடிநீரிட்டுப் பருகினால் குரல் கட்டைத் தீர்த்து இனிய சாரீரத்தைக் கொடுக்கும்.

## மதுவின் வகைகள்

### தெங்கின் மதுக்குணம்

நாதவிந் தூறு நளிர்பாண் டொடுசோபை
வாதபித்தங் கிராணி வன்கரப்பான் - பேதியிவை
பொங்கி யதிகரிக்கும் புத்திகொடு மேகமுண்டாந்
தெங்கின் மதுவிற்கென்றே செப்பு.

தென்னங்கள் சுக்கில சுரோதினப் பெருக்கத்தை உண்டாக்கும். பாண்டு, நோய், சோபை, வாத பித்த தொந்த நோய், ரத்தக் கழிச்சல், கரப்பான், பேதி, பிரமேகம் இவைகள் உண்டாகும்.

### பனையின் மதுக்குணம்

விந்துதிர மூறுமதி வெப்புடனே தாகம்போம்
பந்தமாந் தாதுவுமோ பாரிக்கு - முத்துபிந்தந்
தோன்றும் பாஷாணங்கள் சுத்தியுமாந் தோகை மின்னே
யேன்ற பனைமவிற் கே.

பனங்கள்ளுக்கு சுக்கில சுரோதினத்தை அதிகரிக்கும். சப்த தாதுக்களையும் உறுதிப்படுத்தும். பித்த ஆதிக்கத்தை உண்டாக்கும். சரீர உஷ்ணமும் தாகமும் நீங்கும். இதில் பாடான வகைகள் சுத்தியாகும்.

### ஈச்சமதுக் குணம்

வெப்பகலு மெய்குளிரு மேகங் கிரிச்சரம் போஞ்
செப்பருகி போம்பித்தஞ் சேருங்கா - ணைப்படியும்
பூச்சு திமிருண்டாம் பொங்கறிவுங் கெட்டிடுமே
ஈச்ச மதுவதனுக் கே.

ஈச்ச மரத்தின் கள் உள் அழலை, பிரமேகம், மூத்திரக் கிரிச்சரம், பசியின்மை, அறிவு வளர்ச்சி ஆகியவைகளைப் போக்கும். சரீரத்திற்குக் குளிர்ச்சி, பித்தக் கோபம், வீக்கம், திமிர்வாயு ஆகியவைகளை உண்டாக்கும்.

### முந்திரிகையின் மதுக்குணம்

முந்திரிகைக் கள்ளுக்கு மூடுதிரி தோலும்போம்
விந்துறு மிரத்தமுறும் வெப்பகலும் - இந்தவகைக்
கள்ளெல்லாங் காமமுறுங் காமற்றா ருண்டாக்கால்
விள்ளரி தோஷமிலை மெய்.

முந்திரிகை மது என்கிற திராட்சைப் பழ(ரசத்திற்கு) சாராயத்திற்கு வாத பித்த கபதோடங்களையும் சரீர அடர்த்தியையும் நீக்கும். விந்துவும், இரத்த தாதுவும் விருத்தியாகும். இந்த மதுவர்க்கம் காமத்தை உண்டாக்கும். ஆதலால் காமமற்ற பெரியோர்கள் உட்கொள்ளுதல் குற்றமில்லை.

### அரிசி, வேலம்பட்டை, தெங்கு இவைகளின் மதுக்குணம்

சாலிமது வாதத்தாற் சளிநீருடண் டாக்கும்
வேலின்மது பித்தமழைக்கும் வேண்டாவாஞ் - சாலவுயர்

தெங்கின் மதுசீதந் திரிதோஷ முண்டாக்கு
மங்குவிடு கள்குலையே யாம்.

அரிசியில் இரக்கிய சாராயம். வாதகபத்தையும், நீர் ஏற்றத்தையும் உண்டாக்கும். வேலம்பட்டைச்சாராயம் பித்த கோபத்தை வருவிக்கும். உயர்ந்த தென்னங்கள்ளின் சாராயம் குளிர்ச்சியையும் வாத பித்த கப தோடங்களையும் உண்டாக்கும்.

**அத்தி மரத்தின் மதுக்குணம்**

அத்திமே கஞ்சூ டதிமயக்கந் தாகமும்போ
மத்திமர வேரிலுண் டாமதுவில் - நித்தியமுஞ்
சீனியெனும் பேயன் செங்கனியே னுங்கலந்தே
பானுவுதயங் குடித்துப் பார்.

அத்திமர வேரில் இறக்கிய கள்ளில் சீனிச் சர்க்கரையையாவது, பேயன் வாழைக்கனியையாவது கலந்து தினமும் சூரிய உதயத்திற்கு முன்பு உட்கொண்டுவந்தால் மூலாதாரக் குறிப்பி மேகம், உட்சூடு, மூர்ச்சை, தாகம், வெள்ளை, வெட்டை ஆகிய நோய்களைக் குணப்படுத்தும்.

# தேன் வகைகள்

**மலைத்தேனின் குணம்**

ஐயிருமலீளைவிக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பையவொழியும் பசியுமுறும் - வையகத்தி
லெண்ணுமிசை யாமருந்திற் கேற்ற வனுபான
நண்ணு மலைத்தே னொன்றினால்.

மலைத்தேனினால் கபகாசம், விக்கல், கண் விரணம், சுரம், சரீரக்கடுப்பு முதலிய நோய்கள் நீங்கும். பசியும், தொனியும் உண்டாகும். இது மருந்துகளுக்கு நல்லதோர் துணையை அளிக்கும் மருந்து.

## கொம்புத்தேனின் குணம்

வாதபித்த வையகத்தை மாற்றுமுள மாந்தைதனைக்
காதமென வோடக் கடியுங்காண் பூதரமாம்
வம்பு முலைமாதே வருமருசி நீக்கிவிடுங்
கொம்புத்தே னன்றாகுங் கூறு.

கொம்புகளில் கட்டும் தேன் முக்குற்றம், உளமாந்தை, பசியின்மை, வாந்தி, மயக்கம் முதலிய பிணிகளை ஓட்டும்.

## மரப்பொந்துத் தேனின் குணம்

பசிவெப்பாம் வாந்திமந்தம் பல்விக்கல் வெய்ய
ருசிமுக் கபத்தூல ரோகங் - கசிவகலாக்
கொந்துத்தேன் பாடுங் குழலணங்கே காவின்மரப்
பொந்துத்தே னுண்டாயிற் போம்.

மரப்பொந்துத் தேனினால் பசியும், வெப்பமும் உண்டாகும். வாந்தி, அக்கினி மந்தம் பலவகைப்பட்ட விக்கல், அரோசிகம், காசம், சுவாசம், க்ஷயம், அதிதூலம் முதலிய நோய்களைக் குணப்படுத்தும்.

## புற்றுத்தேனின் குணம்

கொப்பணியு மாதே குவலயத்து ளெல்லார்க்கு
மொப்கநின்ற வைய மொழிக்குங்காண் - கொப்பளிக்குங்
காச்சுவாசம் வாந்தி கண்ணிலெழு நோய்களறும்
வீசிபுற்றுத் தேனுக்கு மெய்.

புற்றில் கட்டுகின்ற தேன் கபம், காசம், சுவாசம், வாந்தி, கண்நோய்கள் முதலியவற்றை நீக்கும்.

## மனைத்தேனின் குணம்

புண்ணும் புரையும்போம் போகக் கரப்பானது
மெண்ணரிய தீபனமா மேந்திழையே - கண்ணுகளிற்
பூச்சிபுழு வெட்டுகபம் பொல்லா விருமலறும்
பேச்சின் மலைத்தேனுக்குப் பேசு.

வீடுகளில் கட்டுகின்ற தேனால், புண், சிலையோடல், கரப்பான், நேத்திர விரணக்கிருமி, புழுவெட்டு, கபக்கோபம், காசம் முதலிய நோய்கள் நீங்கும். பசியுண்டாகும்.

### புதிய தேனின் குணம்

ஆயுளுட னுட்டின மரோசிகபமு
மேயவழுகும் வளர்ந் தேறுங் - காய்தூய
மதியமெனும் வதன மாதரசே நாளும்
புயதிநறுந் தேனாற் புகல்.

புதுத்தேனினால் நிறைந்த ஆயுளும், உடல் வெப்பமும், ஒளியும் உண்டாகும் இதை அதிகமாகச் சேர்த்தால் பசியின்மையும், நெஞ்சில் கபத்தையும் விளைவிக்கும்.

### பழைய தேனின் குணம்

வாதப் பெருக்கை வயிற்றெரிவைத் தந்துறையைச்
சேதப் படுந்துமின்னுஞ் செப்பவோ - மாதரசே
சத்திப் புறுமரசந் தன்னைத்தூண்டும் புளிப்புத்
தித்திப் புறும்பழைய தேன்.

புளிப்பும், இனிப்பும் கலந்த சுவையுடைய பழையதேனானது வாதநோய்க் கூட்டத்தையும் வயிற்றெரிச் சலையும், வாதமூல நோயையும் விளைவிக்கும். மேலும் மருந்தினது நற்குணங்களைக் கெடுக்கும்.

### சுத்தி செய்யும் முறை

கடைத்தேனில் மெழுகு, ஈ, புழு, முட்டை, மகரந்தப்பொடி முதலியவை இருக்கும். ஆகையால் இதனை உபயோகிக்கும் முன் நீர் இயந்திரத்தில் வைத்துக் காய்ச்சிச் சூடாக இருக்கும்பொழுதே ஈரக் கம்பளித் துணியை நன்கு பிழிந்து எடுத்து அதிலிட்டு வடிகட்டிக்கொள்ள வேண்டும்.

ஓட்டைச்சுட்டுத் தேனில் போட்டு முரித்து உபயோகிப்பது நம் வீட்டு வழக்கம்.

# மர வகைகள்

### சந்தனமரத்தின் குணம்

நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்பமெழிற்
பொற் செந்திருவருளும் பூமிதத்துண் - மெச்சுஞ்
சரும வழகுந் தனிமோ கமுமாம்
மிருமுநோ யேகும் பிறழ்ந்து.

நல்ல சந்தன மரக்கட்டையை முறைப்படி அனுபவிப்பவர்களுக்கு அறிவும், மனமகிழ்ச்சியும், உடல் அழகும், ஒளியும் பெண்களிடத்தில் இச்சையும் உண்டாகும். வெள்ளை, வெட்டை ஆகிய நோய்களும் நீங்கும்.

### தேவதாருவின் குணம் இது தேவதாரம் என மருவியது

தேவதருக் குணந்தான் சேர்தது வார் பீநசத்தைக்
காவகத்தி லோட்டுங் காப்பலவே - பாவலர்கள்
சொல்லும் புராண சுரமொடுநீ ரேற்றத்தை
வெல்லு மணற்றணிக்கும் விள்.

தேவதாறுக் கட்டையினால் நாசி நோய்கள் பழையச் சுரம், சகலத்தோஷ(ட)ங்கள் சரீரவெப்பம் ஆகிய இவைகளை நீக்கும் என்பனவாம்.

### சரளதேவதாருவின் குணம்

சரளமெனுந் தேவ தாருவினாற் கண்ணீர்
விரளமா குங்கபமும் வீடுந் - தரளவெயிற்
றாமஞ் சுவாசம்வலி யண்ணுதம் வாதம்
போவயஞ் சுரத்துரமும் போம்.

சரளத் தேவதாறுக் கட்டையினால் கபநோய்கள், கபத்தோடங்கள், தந்தநோய், இரைப்பு, ஜவகை வலி, காதுநோய்கள், நடுக்குவாதம், கபச்சுரம் ஆகிய இவைகள் நீங்கும் என்க.

## அகில் மரத்தின் குணம்

தளர்ந்த விருத்தருக்காந் தக்க மணத்தா
லுளைந்த சுரமுழுது மோடும் - வளர்ந்திகழு
மானே யகிற்புகைக்கு வாந்தியரோ சகம்போந்
தானே தளர்ச்சியறுஞ் சாற்று.

அகில்கட்டை வயோதிகர்களுடைய தளர்ந்த தேகத்தையும் இறுகச்செய்யும். இதன் வாசனைால் சிற்சில சுரம் நீங்கும். புகையால் வாந்தியும், பசியின்மையும், அழற்சியும் நீங்கும் என்க.

## அகரு மரத்தின் குணம்

நாசி யடைப்பு நவிரவிடி தாளுநோய்
வீசுநடைப் புடைகள் விட்டேகும் - பேசிற்
சகரு மயங்குந் துணைமுலையாய் நல்ல
அகரு மரத்தா லறி.

அகரு மரக்கட்டை பீநிசநோய், தலைவலி, வாதம் தினவுள்ளப் படைகள் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

## சரக்கொன்றை மரத்தின் குணம்

குட்டங் கிருமி கொடுக்குஞ்சூலை வாதமையந்
துட்ட மலமருசி தூரப்போந் - தட்டிச்
சுரக்கின்ற பேதியுண்டாந் துய்யத் துவர்க்குஞ்
சரக்கொன்றைக் காரணங்கே சாற்று.

சரக்கொன்றை மரத்தால் பெருநோய், கிருமிநோய், சூலை, வாதக் கபத் தொந்தம், விஷமலம், அரோசிகம் ஆகியவை போகும். இதில் துவர்ப்பு உண்டு. பேதி ஆகும்.

## சிறுகொன்றை மரத்தின் குணம்

சிறுகொன்றை நறகசப்பாஞ் சென்னி யனலா
லுறுகின்ற கண்களி னோயோடே - பெருமுடலி
னுட்னமுன் மூலமிவை யோடு மதிபலமுங்
கட்டழகு முண்டதனாற் காண்.

இம்மரப்பட்டைக்கு மண்டைச்சூட்டினால் உண்டான கண்நோய், வெப்பம், உள்மூலம் இவைகள் நீங்கும். சரீரத்திற்கு வண்மையும், அழகையும் உண்டாக்கும். இதன் பட்டையினால் வெப்பம் உள்மூலம் நீங்கும்.

## நரிக்கொன்றை மரத்தின் குணம்

பையவே யூறிப் படருமியா னைச்சொரியு
தொய்ய கிருமிகொண்ட நூண்புடையு - மெய்யி
லரிக்கின்ற வன்புடைய மாழிபுகு மாதே
நரிக்கொன்றை தன்னை நவில்.

இதனால் யானைச் சொறியும், தவிட்டுக் கிருமிப்படையும், தினவுள்ள புண், புடை இவைகள் நீங்கும்.

பட்டையைப் புளித்த நீர்விட்டரைத்துப் பூசிவர மேற்கூறப்பெற்ற நோய்கள் குணமாகும்.

## மைக்கொன்றை மரத்தின் குணம்

குடல் வாதஞ்சூலை கொடுமேக மெல்லா
மடைவாகப் போக்க வலைத்தே - படிமீது
எக்கொன்றைத் தேடிநெஞ்சி வெண்ணமிடு வானேன்
மைக்கொன்றை யீங்கிருந்து மால்.

மைக்கொன்றை மரத்தினால் குடல்வாதம், சூலை, மேகம், மதுமேகம் ஆகியவை போம்.

இதன்பூவை அறைந்து ஒன்பது கிராம் எடுத்து சமஅளவு வெண்ணெயுடன் கலந்து கொடுக்க நாட்பட்ட வெள்ளை ஒழுக்கு குணமாகும்.

### மருதமரத்தின் குணம்

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமென வோடக் கடத்துங்காண் - போத
மயக்க மொடுதாக மாறாச் சுரத்தின்
தயக்க மறுக்கும்மருதந் தான்.

மருதமரமானது வெகு மூத்திரம் (நீரிழிவு) வெள்ளை, மயக்கம், நீர்வேட்கை, சுரத்தினால் உண்டாகும் தயக்கம் ஆகியவைகளைப்போக்கும்.

குட்ட ரோகங்கிருமி கோர வயிற்று வலி
துட்ட வரட்சூலை தொலையுங்காண் - கிட்டிப்
பொருதம் பாமென்னும் விழிப் பூவையரே நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து.

பெருநோய் புழு நோய்கள், வயிற்றுவலி, வறச்சூலை ஆகியவை போம். மேலும் தமகரத்தை வன்மைப்படுத்தவும் பயன்படும்.

### வேங்கை மரத்தின் குணம்

குற்றிருமல் வெட்டையொடு கூறுமுள மாந்தையவை
யெத்திரையும் வராதிசையுங் காண் - சத்தியமாய்ப்
புண்ணிருமல் சீழொழுகல் போகுமல மிறங்குங்
கண்ணொளிரும் வேங்கைக்குக் காண்.

வேங்கை மரத்தில் குத்திருமல், வெள்ளை வீழல், உள்மாந்தை, விரணம், காசம், சீழ்பிரமேகம் ஆகிய நோய்கள் நீங்கும். கண்களுக்கு ஒளியையும், மகிழ்ச்சியையும் உண்டாக்கும்.

### வன்னி மரத்தின் குணம்

வாதசன்னி தோஷமறு மாறாத் தழலுளதென்
றோதுவரிவ் வன்னிக் குவமையுண்டோ - பூதலத்திற்

கானார் விஷமுங் கபமுஞ் சொறியும்போந்
தேனே யிதையறிந்து செப்பு.

வெப்பத்தைக் கொடுக்கக்கூடிய வன்னி மரத்திற்கு வாத சன்னிப் பாதம், வாதப்பித்த, கபத்தோஷங்கள், கபவிருத்தி ஆகியவை நீங்கும்.

### புரசமரத்தின் குணம் - இதுவே பலாசு

புரசுவா தம்பித்தம் பொங்குகபங் குன்மங்
கிருமி யுடனே கிராணி - பெருவலிநோ
யோட்டி மதிதீபனத்தை யுண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய் தெளி.

புரசமரம் முக்குற்றங்கள் வயிற்றுநோய், வயிற்றுப்புழு, கழிச்சல், உடல் குடைச்சல் ஆகிய நோய்களைப் போக்கிப் பசித்தீயை உண்டாக்கும்.

### இருவாட்சி மரத்தின் குணம்

கண்ணொளிவு மெய்யிற் கமழ்மணமு நீடமுகு
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம் - பண்ணளியுங்
கங்குலும் வாழ் வார்குழலே காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால்.

உஷ்ணமும் கார்ப்புச் சுவையுமுள்ள இருவாட்சி மரத்தால் கண்களுக்குப் பிரகாசமும் சரீரத்திற்கு வாசனையும், வனப்பையும் உண்டாக்கும். சரீரக் குத்தல் மூர்ச்சை ஆகிய நோய்களைக் குணப்படுத்தும்.

### காட்டத்தின் குணம்

அதிசார மத்தமிக வாலித்த காசம்
விதிராம் விஷமும் விலகு - மெதிரொருவர்
மூட்டாத்தீ யென்னுமதி மோகந் தருமணங்கே
காட்டாத்திக் கொன்றுள்ளத்திற் காண்.

காட்டாத்தி மரத்திற்குத் தொடர்பேதி, அக்கினி மந்தம், இருமல், தாமரை, சங்கம விஷம் ஆகியவைகள் நீங்கும்.

**பெருங்குமிழ மரத்தின் குணம்**

பெரிய குமிழின்பேரைப் பேசின் மேகத்தி
னெரிவு சுக்கிலக்கடுப்பு மேகும் - பிரியாத
வல்ல வனற்சுரமும் வாதசுரமும் தணியும்
மெல்லெனமுத் தோஷம்போம் விள்.

பெருங்குமிழ் மரத்தினால் மதுமேகம், நீர் எரிச்சல், வெள்ளை, வெட்டை, நீர்க்கடுப்பு, பித்தசுரம், வாதசுரம், திரிதோடம் ஆகிய நோய்கள் குணமாகும்.

**மாவிலங்கை மரத்தின் வகை**

சுரங் கடியின்றோஷம் தொலையாத வாத
முரம்பெறு விஷங்க ளொழியும் - அரவுஞ்
சருமா வடுவேலுங் கண்டஞ்சுங் கண்ணு
பொருமா விலங்குங் குரை.

மாவிலங்கை மரத்திற்குச் சுரம், கடிகளின் தோஷம், மகாவாத நோய்கள், சர்ப்பவிஷம், கூன்விழுதல் ஆகிய நோய்களைக் குணப்படுத்தும்.

**அழிஞ்சி மரத்தின் குணம்**

அழிஞ்சிலது மாருதத்தை யையத்தைத் தாழ்ந்து
மொழிஞ்ச பித்தத்தை யுயர்ந்து - விழுஞ்சீழகங்
குட்டமெனு நோயகற்றுங் கூருமருந் நெய்திடில்
திட்டமென வறிந்து தேர்.

அழிஞ்சில் மரமானது வாதகோபம், கபதோடம், சீழ்வடியும் பெருநோய் ஆகியவைகளைக் குணப்படுத்தும். பித்த ஆதிக்கத்தை அதிகரிக்கச் செய்யும்.

**கடலழிஞ்சில் மரத்தின் குணம்**

தீதில் கடலழிஞ்சில் செய்யுங் குணங்கேளா
யோது மதுகே மொழிப்பதன்றி - வாதத்தில்
வந்தசலம் பித்தசல மாகபச் சலந்தாகத்
தொந்த சலமும்போக்குஞ் சொல்.

கடலழிஞ்சில் மரமானது மதுமேகம் (நீரிழிவு) வதாதி நீர்களையும், தாகத்தைக் கொடுக்காத தொந்த மூத்திரம் ஆகியவைகளைப் போக்கும்.

கமல விரணங் கசிதீ ரகற்றும்
நிமல சுரம்விலக்கு நேரே - கமலமுக
மாதே கடலழிஞ்சில் வன்பட்டை பேதிகட்டுஞ்
சீதமேகம் போக்குந் தேர்.

தாமரைப்பூவை ஒத்த விரணங்கள், படர்தாமரை, சொட்டு மூத்திரம், தனிச்சுரம், அதிசாரம், சீதமேகம் ஆகியவைகளைப் போக்கும்.

**மோதகவல்லி மரத்தின் குணம் - இதுவே கொழுக்கட்டை மரம்**

பொங்கிவரு வள்ளைப் புனலினசிர்க் குங்காலா
லங்கியுந்த வீழுமிரத் தாமயநோய் - தாங்கவே
போதகத் துச்சியெனப் பூரித்த மாமுலையாய்
மோதக பூருகத்தை முன்.

மோதகவல்லி என்னும் கொழுக்கட்டை மரத்தினால் குடிநீர் இட்டு அல்லது இடித்துச் சாறு பிழிந்து அல்லது இடித்துத் தூள்செய்து தக்க துணை மருந்துகளுடன் உட்கொள்ள மேற்கூறிய நோய்கள் அனைத்தும் குணமாகும்.

***குறிப்பு:-*** மேற்கூறப்பெற்ற மரத்தின் பட்டையைக் குடிநீர் இட்டு அல்லது இடித்துச் சாறுபிழிந்து அல்லது இடித்துத் தூள்செய்து தக்க துணை மருந்துகளுடன் உட்கொள்ள மேற்கூறிய நோய்கள் அனைத்தும் குணமாகும்.

## பூதமரத்தின் குணம்

பூததரு சூட்சையது போக்கும் பலவிஷத்தை
வாதமென்ற நோயனைத்து மாற்றுங்காண் - தீதுபுரி
சன்னிகளைத் தப்பாது கண்ணிவிடும் பூதலத்து
ளூண்ணி மகிழ்வா யுரை.

## வாகை மரத்தின் குணம்

வாகை காரங்கசப்பை வைத்திருக்கு முள்ளபடி
யோகை யுறப்பசியை யுண்டாக்கும் - தோகையரே
தீரா விஷத்தோடு சில்லிவிஷத்தை யுந்தீர்க்கும்
ஆராயத் தோன்று மது.

வாகை மரம் பசியை உண்டாக்கும். பாம்பு முதலிய நச்சுகளைப் போக்கும்.

வாகையனல் விரணம் வாதை வரட்சியுடன்
தாக சுரமுந் தணிக்குங்கா - ணாகமதி
வக்சுர மெல்லா மகற்றிவிடும் பூவனமே
யககணத்தி லென்றே யறி.

இதன் அனல் வெப்பத்தினால் விரணம் (புண்கள்), சுரம் நீர்வேட்கை, வாதச்சொறி, வாய்ப்புண் ஆகியவைகளைப் போக்கும்.

## கருவாகை மரத்தின் குணம்

விரணமோ டுட்டினமுன் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு - மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங்குடி விலகும்
வெய்ய கருவாகைக்கு விள்.

கருவாகை மரத்திற்குப் புண், வெப்பம், வலிக்குற்றப் பெருக்கு, சிறு புழுக்கள், மரணமுறச் செய்யும் மேலும் இளைப்பு நோயைக் குணப்படுத்தும்.

***குறிப்பு:-*** மேற்படி மரத்தின் வேர்ப்பட்டையை(பத்து) 10 கிராம் எடுத்து ஒன்று இரண்டாகச் சிதைத்துக் குடிநீர் இட்டு கொடுத்துவர ரோய்கள் நீங்கும்.

**இலவமரத்தின் குணம்**

நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழிகு மேகமும் போ
மார்க்கும் விந்தடைக்கு மாண்மயுறும் - பார்க்குள்
நிலவு மதிவதன நேரிழையே ஒப்பா
மிளவு மரத்தா லியம்பு.

இலவ மரத்தினால் நீர்க்கடுப்பு, நீர் எரிவு, வெள்ளைவெட்டை இவைகள் குணமாகும். சுக்கிலமும், ரஷதாதுவும் பலப்படும்.

***குறிப்பு:-*** இலவம்பட்டையை அரைத்து எலுமிச்சைங் காயளவு புளித்த மோரில் கலக்கிக் கொடுக்க இடுமருந்து முறியும்.

**முள்ளிலவ மரத்தின் குணம்**

தந்துமேகஞ் சிறுநீர்த் தாரைவெப்பம் வாய்
வுந்தவரு பேதியிவை யோட்டுங் காண் - முந்திக்
கிளர்வெள்ளை பாயும் வரிக்கெண்டை விழியாய்
வளர் முள்ளிலவமரம்.

முள்ளிலவ மரத்தினால் தந்து மேகம், நீர்தாரை, வெப்பம் வழிப்பெருங்கழிச்சல் ஆகியவைபோம்.

***குறிப்பு:-*** இதன் இலையை அரைத்துப் பசுவின் பாலில் கலக்கிக் கொடுக்கச் சிறுநீர் எரிச்சல் குணமாகும். பட்டையைக் குடிநீர் இட்டுக் கொடுக்க நாள்பட்ட புண், நீர்ச்சுருக்கு, நீர்அடைப்பு, வெள்ளை வெட்டை, செறியா கழிச்சல், சீழ் கழிச்சல் நீங்கும்.

### விளாமரத்தின் குணம்

காச சுவாசங் கதித்த வருசிமுதற்
பேசரிய காகமிவை பேசுங்காண் - வீசு
தபித்தலைச் செய்பித்தந் தரிக்குமோ பூவிற்
கபித்த மரமிருக்குங் கால்.

இதன் இலையினால் பசி உண்டாகும். அலட்டு வாயு நீங்கும். மேலும் இருமல், இரைப்பு, சுவையின்மை, நீர்வேட்கை, கண்டவாறு பிதற்றுகின்ற வெறி நோய் ஆகியவைகள் குணமாகும்.

### கருநெல்லி மரத்தின் குணம்

யதினைந் தெனுஞ் சன்னிபாதந் தயக்கம்
மதினைந் திடச்செய் வினைமாறும் - பதியிற்
சனித்த கருவுருவந் தானும் வேறாகுங்
கனித்த கருநெல்லி மரத் தால்.

இம்மரம் கிடைப்பது அரிது. ஆனால் முப்பிணி வகைகள் யாவற்றையும் குணப்படுத்துவதுடன் உடலை அழியாமற் காக்கும். இதனால் மனக்களிப்பு உண்டாகும்.

***குறிப்பு:-*** இதன்காயைப் பாகம் செய்து உட்கொண்டால் வயோதிகத் தன்மை அடைந்தவரும் இளமைத் தன்மையை அடைவர்.

### அருமரத்தின் குணம்

வாத மகலும் வளருகின்ற மந்தமறுஞ்
சீதரத் தஞ்சோபை சுரந்திடுங்காண் - ஓதும்
இருளாருங் கூந்தலெழி லணங்கே முத்த
அருளென்னும் நன் மரத்தா லாய்.

### வேப்பமரத்தின் குணம்

மலட்டுப் புழூவும் வயிற்றின் வலியும்
மலட்டு வாய்வும் போமடங்கிக் - கொலட்
முலைவேஞ்சின் வேற்கண் ணோதிலமே
மலைவேம்பின் பேரை வழூத்து.

வயிற்றுப் புழு, சூதக வயிற்று வலி, வெறிநோய், அலட்டுவாயு, வலிநோய்கள் ஆகியவை குணமாகும்.

*குறிப்பு:-* இதன் இலைச்சாற்றை நோயிற்கு ஏற்ற அளவுக்கொடுத்து வர புழுக்களைக் கொன்று வெளிப்படுத்தும் இதன் இலைகுடி நீரையும் கொடுக்கலாம்.

### பாலை மரத்தின் குணம்

வாதப் பெருக்குபித்த மாறாச் சுவ சமுத
லோதுசர்வ தோஷம்விட் டோடுங்காண் தீதுபுரி
வேலைப் பாருவுவிழி மெல்லியலே காட்டிலுறை
பாலைக்கென வுன்னிப் பார்.

பாலை மரத்திற்கு வாதநோய் குட்டங்கள், பித்தநோய், தமரக வாயு, இடைவிடாத சுவாசம், திரிதோடம் ஆகிய இவைகள் போம்.

### வெட்பாலை மரத்தின் குணம்

அக்கினியை வைத்திருக்கு மந்தவாதம் போக்குந்
திக்குள்திரி தோஷத்தைத் தீர்த்துவிடுஞ் - சொவிக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே
வெட்பாலை நன் மருந்தாம் விள்.

அக்கினிக் குணத்தை உடைய வெட்பாலை மரமானது வாத வலியையும், திரிதோடக் கோபத்தையும் நீக்கும்.

*குறிப்பு:-* இதன் இலையைக் குறுக அறிந்து தேங்காயின் நெய்யில் இட்டுச் சூரியப் புடலத்தில் வைத்து வடிகட்டி சரீரத்தில் ஏற்படும் யானைச்சொறி, தவளைச்சொறி, சிரங்கு, கரும்படை இவைகளின் மேல் தடவிக் குளிக்க ஒருவாரத்தில் குணமாகும்.

**தீம்பால மரத்தின் குணம்**

*மேகவெட்டை சன்னி விஷபாக நேத்திரநோய்*
*தாகமுத் தோஷஞ்சர்த்தி சாரனலம் - வேகமோ*
*டேறுசலம் பீநசமி ரத்தமுந்தீரும் பாலையெனுந்*
*தூறுவா திக்ககலுஞ் சொல்.*

தித்திப்புப் பாலை மரத்திற்கு மேக உட்டிண நோய்கள் வெள்ளை வெட்டை, சன்னி, விஷபாகம், கண்நோய், தாகம், திரித்தோடம், வாந்தி, பித்தக்கோபம், நீர்ஏற்றம், நாசிநோய், இரத்தகிராணி ஆகிய நோய்கள் குணமாகும்.

**மலைப்பாலை மரத்தின் குணம்**

*விக்கல்வலி வாந்திகுன்ம மீறுபக்கச் சூலையொடு*
*மைக்கர:ப்பான் மந்தமிவை மாறுங்காண் - மைக்கண்*
*நிரைப்பாலை யொத்தமொழி நேரிழையே கேளாய்*
*வரைப்பாலையை யுண்ட வர்க்கு.*

மலைப்பாலை மரம் ஐவகை வலி, வாந்தி, வயிற்றுவலி, விலாகுத்துதல், கருங்கரப்பான், மந்தம் இவைகளைப்போக்கும்.

**குடசப்பாலை மரத்தின் குணம்**

*வாதமறும் பேதிகட்டு மாறாத நீரிழிவுங்*
*காதம்போ மேகங் கடக்குங்காண் - தீதடரப்*
*பொங்கு கரப்பானும் போகா விரணமும் போ*
*மிங்கு குடசப்பாலைக் கெண்.*

குடசப்பாலை மரத்திற்கு வாதநோய், அதிசாரம், மதுமேகம், தந்திப்பிரமேகம் மிகக் கொடிதாகப் பறக்கும் கரப்பான், சிரங்கு ஆகிய இவைகள் குணமாகும்.

**குளப்பாலை மரத்தின் குண**

சுவாச காசம்பக்கச் சூலை யதிசார
மவாச வியர்ப்போ டனலந் - தவாத
கரப்பா னிவைவிலகுங் காரிகையே நாளு
முரப்பாங் குளப்பாலை யுண்.

வளமுள்ள குளப்பாலை மரத்தினால் சுவாச காசம், பக்கசூலை, அதிசார வியர்வை, சுரம், கரப்பான் ஆகிய நோய்கள் குணமாகும்.

**முள்முருக்க மரத்தின் குணம் இது கல்யாணமுருக்கு**

முள்ளு முருக்கதுதான் மோதுகின்ற சத்திகுன்மங்
கள்ளமறந் தீர்க்குங் கனற்சுரமும் - விள்ளரிய
அக்கரமும் போக்கு மனல்வாய் வேக்காடகற்று
மிக்கவலி கொடுக்கும் விள்.

முள்மருக்க மரம் வாந்தி, வயிற்றுவலி, பித்தசுரம், அஸல்வாய் வோக்காடு ஆகிய இவற்றைக் குணப்படுத்தி மிகுந்த வண்மையை உண்டாக்கும்.

**ஊழலாற்றி மரத்தின் குணம்**

அடவி வதிரூழ லாற்றி யெனுமூலி
படவிரணம் புண்கொறுக்கை பாமை - கடிதடத்தால்
வந்தவரை யாப்புவெள்ளை வாதப் பிடிப்புகுட்ட
மிந்தவகை நோயகலு மென்.

காற்றில் வளருகின்ற ஊழலாற்றி மரத்தால் மேகவிரணம், ஆண்குறி இரணம், பெண்குறி விரணம், சிரங்கு, சம்போகத்தில் வந்த அரையாப்பு, வெள்ளை, வெட்டை, கீழ்வாதம், பெருநோய் ஆகிய இவைகள் நீங்கும்.

### வெள்வேல் மரத்தின் குணம்

பித்த மயக்கமறும் பேருலகின் மானிடருக்
குற்ற சுரவாத மோடுங்காண் - குத்துகின்ற
சந்துக் குடைச்சல்விடுஞ் சர்வாங்க வாதம்போம்
கொந்துலவும் வெள்வே லுக்கு.

வெள்வேல் மரத்திற்குப் பித்தமயக்கம், வாதசுரம், சந்துக்குடைச்சல், சர்வாங்க வாதநோய் ஆகிய இவைகள் நீங்கும்.

### மூங்கில் மரத்தின் குணம்

சூதக வாய்வினது சோணிதந் தங்காதுவரு
மாதே சுரந்தணியும் வாதம்போம்பூ - பூதரமே
லோங்கி வளர்ந்திழையு மோங்கலெனு மூங்கிலுக்கு
வாங்குஞ் சுவாசம்போ மாய்ந்து.

இதனால் சூதகக்கட்டு,சுரம், வலிநோய், இரைப்பு ஆகிய இவைகள் போம்.

***குறிப்பு:-*** இதன் இலையினால் குடல் சூலையும், வயிற்று நோயும், உடலின் குருதித்தடிப்பும், குழந்தை பெற்றபின் சூளகத்தின் அழுக்கும் போகும்.

## செடி வகைகள்

### ஆவாரையின் குணம்

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீ
ரெல்லா மொழிக்கு மொழிக்கு மெரிவகற்று - மெல்லவச
மாவாரைப் பம்பரம்போலாட்டுந் தொழிலணங்கே
யாவரை மூலி யது.

ஆவாரை சர்வ பிரமேக மூத்திர நோய்களையும், ஆண்குறி எரிச்சலையும் போக்கும்.

*குறிப்பு:-* ஆவாரையின் இலை, பூ, காய், பட்டை, வேர் எனும் ஐந்து உறுப்புக்களால் நீரிழிவு, வெள்ளை, வெட்டை, உட்சூடுப் புண், நிணக்கழிச்சல், எலும்பைப் பற்றிய சுரம், நீர்வேட்கை ஆகியவைபோம்.

**பொன்னாவாரையின் குணம்**

வெடிப்பு துலக்குநிரல் மேகப் புடைகள்
தடிப்பு தினவுதடி தங்கா அடிக்கடியிங்
கென்னாவறைய விசையா லெழிலணங்கே
பொன்னா வரையதனைப் போற்று.

பொன் ஆவாரைச் செடியினால் சரும வெடிப்பு, சொறிந்தால் சருமத்தில் இருந்து தூள் சிந்துதல், மேகப்படைகள், கண்டு கண்டாகத் தடித்தல், நமைச்சல், காணாக்கடி ஆகிய இவைகள் போகும்.

**நீர்ப்பூலாவின் குணம்**

மாந்தங் கனம்பொருமல் மாறாச் சலத்துடனே
சேர்ந்த சொறி சிரங்குந் தீருங்காண் - ஏந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழுந்திருவே பூவிலுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை.

இதனால் மாந்தம், கனச்சூடு, வயிற்றுப்பொருமல், சிறுநீர்க்கட்டு, சொறிசிரங்கு ஆகியவைத்தீரும்.

*குறிப்பு:-* இஃது உடலைத் தேற்றும் குளிர்ச்சியைக் கொடுக்கும். சிறுநீரைக் கழியச்செய்யும்.

**பேய்மிரட்டியின் குணம் இதுவே வெதும்படக்கி**

மாந்த கணங்கழிச்சல் மாறா வயிற்றுவலி
சேர்ந்து வருங்கரப்பான் தீச்சுரமும் - பேர்ந்துவிடும்
வேய்மிரட்டுந் தோளுடைய மெல்லியலே ராசியமாய்ப்
பேய்மிரட்டி யென்றொருகாற் பேசு.

இதனால் கணம் மாந்தம், வயிற்றுநோய், கரப்பான், தீச்சுரம், ஆகியவை நீங்கும்.

***குறிப்பு:-*** இதன் இலையைக் குடிநீர் இட்டுக் கொடுத்தால் மேற்கூறப்பெற்ற நோய்கள் குணமாகும்.

**குன்மக்குடோரியின் குணம்**

*சூலையோ பீளைதொலை யாதகாசங் கயநோய்*
*காலனென்ற குன்மங் கலங்காண் - ஞாலமிசை*
*நன்மைக் குரியகுண நல்குவமென் றாற்றிலுறுங்*
*குன்மக் குடோரி தனக்கு.*

ஆற்று ஓரங்களிலும், ஓடைகளிலும் இருக்கக்கூடிய குன்ம குடோரிச் செடியால் சூலை, சுவாசம், இருமல், க்ஷயம், குன்மநோய் ஆகியவை நீங்கும்.

**விடத்தேரின் குணம்**

*முளையைவரு விக்கின்ற மூலரோ கத்தை*
*ய(ளை)யு முதிரத்தை யடங்கா - துளைதாக*
*வேகத்தைப் போக்கிவிடும் வெய்யவிடத் தேர்ச்சக்ர*
*வாகத்தைக் காய் முலையாய் வாழ்த்து.*

விடத்தேரையினால் முளையை வருவிக்கின்ற மூலம், பெருங்கழிச்சல், குருதிக்கழிச்சல் ஆகியவை போம். *(நீங்கும்)*

***குறிப்பு:-*** இதன் பட்டையைப் பொடிசெய்து இரண்டு முதல் ஆறு(6) கிராம் கொடுக்க மேற்கூறப்பெற்ற நோய்கள் குணமாகும். *(நிவர்த்தியாகுதல்)*

**தகரையின் குணம்**

*தகரை படர்தா மரையைச் சொறியைத்*
*தகர வடிக்குமந்தந் தன்னோடி - கலான*
*அத்திசுரத்தையு மதஞ்செய்யுமிம் மூலி*
*யுத்தமமா மென்றே யுறை.*

இது படர்தாமரை, சொறி, மந்தம், எலும்பு உருக்கிச் சுரம் இவைகளைப் போக்கும். (ஆதி சுருதிகளில் கூறியது)

*குறிப்பு:-* இதன் விதைகளைப் பழச்சாறுவிட்டு அரைத்து கடுவன், நாட்பட்ட நமைச்சல், சொறி, படர்தாமரை ஆகியவைகளில் பூசக் குணமாகும்.

**நின்றால் சிணுங்கி நிலம்புரண்டி இவைகளின் குணம்**

*நின்றார் சிணுங்கியது நிலவிலும் போக்குமினுங்*
*குன்றாந் தனத்தியரைக் கூட்டுவிக்கு - மென்று*
*மலம்புரண்ட நோயகற்று மாள்வசிய மாக்கும்*
*நிலம் புறண்டி மூலி நினை.*

இஃது நஞ்சு நோய் ஒழிக்கும். ஆண்மக்களைப் பெண்கள் தம் வழிப்படுத்த உதவும்.

*குறிப்பு:-* இதனைக் குடிநீர் இட்டு அல்லது இடித்துச் சாறுபிழிந்து தக்க அளவாகக் கொடுக்க நஞ்சுகள் நீங்கும் என்பனவாம்.

**உரலாமணக்கின் குணம்**

*உரலா மணக்குக் குரத்த வலிசூலை*
*விரைவான குன்மமும்போம் விள்ளப் - பிரிவாம்*
*முளைமூல மோடிரத்தம் முன்கால விரணங்*
*கொளுமேக மெல்லாமபோங் கூறு.*

*எலியா மணக்கோ எலிவிஷமுஞ் சேர்ந்த*
*பலவிஷமு மோட்டிவிடும் பாரில் - வனுபேதி*
*யுண்டாக்கு விக்கு முரத்தகுன் மம்பீலிசு*
*மண்டாம லோட்டிவிடு மால்.*

இச்செடியினால் உடல் நோதல், சூலை, குன்மம், முளைமூலம், களற்புண், மேகம், எலி நஞ்சுப்புண், வயிற்றுவலி, ஈரல்நோய் ஆகிய இவைகள் நீங்கும். கழிச்சலை உண்டாக்கும். காட்டாமணக்கு செய்கைகளும் இதற்கு உண்டு.

*குறிப்பு:-* 1. இதன் இலையைக் கசக்கிய சாற்றைக் கண்ணில் (1,2) ஒன்று இரண்டு துளிகள் விடக் கண் படலத்தை மாற்றும். 2. இதன் குச்சியைக் கொண்டு பல் துலக்கிவரப் பல் ஈறு நோய்களை நீக்கும். பல்வலியைக் குறைக்கும்.

**சணப்பின் குணம்**

கைப்பும் உறைப்புங் கலந்திருக்குந் தின்றக்கால்
மெய்ப்புள்ள யுத்த விலக்குங் காண் - நெய்ப்பாங்
கருப்பங்களெல்லாங் கரைந்து விழுவே
உருப்பங்க மாஞ்சணப்புக் கோ.

இதற்கு அழல் நோய் நீங்கும், இது சூழ் அமைப்புகளைக் கெடுக்கும்.

*குறிப்பு:-* இதன் இலையை முறைப்படி குடிநீர் இட்டு அரைக்கால் (1/8, ¼ ) கால் வீதம் இருவேளை கொடுத்துவரச் சுரநோயும் வலிநோயும் சூதகக்கட்டும் குணமாகும்.

**மாமாலையின் குணம்**

பாண்டுனே மெய்யிற் படர்சோகை யைத்துரத்துந்
தூண்டுநீ ராம்பலெனுந் துன்பபொழிக்கும் - பூண்டதோர்
நீரை யிறக்கு நெடுந்துயர மாற்றிவிடு
நாரியரே மாமாலை நன்று.

மாமாலை செடியானது பாண்டு நோய், சரீரத்தில் படர்சோகை, நீர்ஆம்பல்நோய் ஆகிய இவைகளை நீக்கும். அதிகமாக நீரை இறக்கும்.

**கோடகசாலையின் குணம்**

கோடகசா லைக்குக் கொடிய அனல் மேகமொடு
போடகங் கிரந்தி குஷ்டம் புண்ணாறும் - நாடகஞ்செய்
யப்பித்த வாய்வு மலர்வரம் விரணமும்போம்
பொற்புற்ற பொன்னே புகல்.

இதனால் மேகம், கொப்புளம், கழலை, குட்டம், புண், பித்தவாத களப்பு, வாய்ப்புண் ஆகிய நோய்கள் விலகும்.

*குறிப்பு:-* இதைச் சமூலத்துடன் அரைத்துக் கழலை, குட்டம், புண், கொப்புளம் இவைகளின் மேல்பூசக் குணமாகும்.

### வட்டக் கிலுகிலுப்பையின் குணம்

*வட்டக் கிலுகிலுப்பை மாறாச் சொறிகிரந்தி*
*துட்ட கண்ட மாலை பல சோபைநோய் - வட்டமுலை*
*மானே விரணவகை மாந்தமுத னோயெல்லாந்*
*தானே யகற்றுமெனச் சாற்று.*

வட்ட கிலுகிலுப்பை, சொறி, சிரங்கு, கண்டமாலை, சோபை, விரணம் ஆகியவைகளைப் போக்கும்.

*குறிப்பு:-* இலையைக் குடிநீர் இட்டு மேற்படி நோய்களுக்கு உள்ளுக்குக் கொடுத்தும், இலையை அறைத்து மேலுக்குப் பூசியும் குணப்படுத்தலாம்.

### வெள்ளைக் கிலுகிலுப்பையின் குணம்

*விடவினங் களைப்பிடித்து விண்ணேற்றும் வந்த*
*விடசன்னி நோயை விரட்டுந் - தடமாகும்*
*வெள்ளைக் கிலுகிலுப்பை மென்பூண்டது புவிக்குட்*
*கிள்ளைக் குதலைமின்னே கேள்.*

வெள்ளைக் கிலுகிலுப்பை, சகலவிதமான நஞ்சுகளையும் விஷ சன்னியையும் விரட்டி அடிக்கும்.

### சந்திரகாந்தி, சூரியகாந்தி இவைகளின் குணம்

*சந்திரகாந் திக்குத தழலெரிச்சல் நீர்க்கடுப்பு*
*உந்தவலி யாவு மொடுக்குங்காண் - சந்திலுறும்*
*பாரிய வாதம்பருகு நீரேற்ற மும்போஞ்*
*சூரிய காந்திக்குச் சொல்.*

சந்திரகாந்திக்குப் பித்தத்தால் ஏற்படும் எரிச்சலும், வலிநோய்களும் குணமாகும். சூரியகாந்திக்கு வாதநோய் நீர் ஏற்றம் ஆகிய நோய்களைக் குணப்படுத்திச் சுக்கிலத்தைக் கட்டிமேனியை அழகுறச் செய்யும்.

**பேயகத்தியின் குணம் இதுவே சீமையகத்தியாம்**

தம்மைக் கண்டாலிரத தாதுவிலாம் பொருட்டுகளும்
வெம்மைப் புடைநமையும் வீறாநெய் - யம்மையுறுந்
தூயகத்தி யுங்கலங்குந் தோதகக் கண் மாதே
பேயகத்தி மூலிகண்ட பேர்.

சீமையகத்தி என்னும் பேயகத்தியால் ரச தாதுக் கிருமிகளும், உஷ்ணச் சொறியும்,தினவும் நீங்கும். ரத்த நாளங்களும், நரம்புகளும் பிரகாசிக்கும்.

**ஈச்சுரமூலியின் குணம்**

பலபல வீக்கஞ்சன்னி பாதங்களோடு
நலமகல் விஷங்கள் நடுக்குங் -கலகலெனப்
பேச்சுர முண்டாகுமலர்ப் பெண்ணனமே நீகேளா
ஈச்சுரமூலிதனக் கின்று.

ஈச்சுர மூலியால் சோபை, சன்னி, விஷங்கள் ஆகியவை நீங்கும். உரத்த வார்த்தை உண்டாகும்.

**நில விளாவின் குணம்**

அழன்றே கணவேக மதிகதாகந் தீருஞ்
சுழன்று வருபித்தந் தொலையு - முழன்று
பொருநிலை மேகத்துடனே புண்சுரமும் போகு
மருநில விளாவத் தயர்ந்து.

நிலவிளாவினால் வெதும்புகின்ற கணச்சுரம் அதிதாகம் பித்தக்கோபம், இடைவிடாத பிரமேகம், விரணசுரம் ஆகியவை நீங்கும்.

**சங்கங்குப்பியின் குணம்**

கரப்பான் கிரந்தி சுருங்குட்ட ரோகம்
முரப்பான மேக மொழியுங் - கருவாம்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளுமேகும்
அருளுஞ் சங்கங்குப்பிக் கறி.

வெட்டை சொறிசிரங்கு வீறிவருஞ் சூலை
துட்ட வாதங்கபந் துணுக்கிருமல் - கெட்டவிஷம்
அங்கங்கொள் பூச்சியிவை யாவும்போம் பித்தமுறுஞ்
சங்கங் குப்பிக்கெனவே சாற்று.

சங்கங்குப்பி, அரைக்கடுவன், கிரந்தி, கருங்குட்டம், வெள்ளை செவ்வாப்புக்கட்டி, சொறி, சிரங்கு, சூலை, பெருவளிநோய், ஐயநோய்க் கூட்டங்கள், பாம்புக்கடிகள், அழல் நோய்கள் போம்.

***குறிப்பு:-*** இலையைக் கசக்கிப் பிழிந்த சாற்றை காலை, மாலை இருவேளையும் அரைக்கால் முதல் ¼ ஆழாக்கு உட்கொள்ள மேற்கூறப் பெற்ற நோய்கள் அனைத்தும் குணமாகும்.

**கறிமுள்ளியின் குணம்**

செம்முள்ளி யென்றார் சிலேத்மம் நடுநடுங்கும்
விம்முமுலை மாதே விளம்பக்கேள் - நம்முகின்ற
மாந்தகண மையமிவை மாறுஞ்சிறுவருக்குச்
சேர்ந்தசுர தோஷமும்போஞ் செப்பு.

செம்முள்ளியினால் சிறுவர்களுக்கு ஏற்படும் மாந்தம், கணம், சுரம் முதலிய நோய்களைக் குணப்படுத்துவதுடன் கபத்தை போக்கும்.

***குறிப்பு:-*** இதன் சாற்றினால் தங்கத்தைப் பற்பம் செய்யலாம்.

### கண்டங்கத்திரியின் குணம்

காசஞ் சுவாசங் கதித்தக்ஷய மந்தமனல்
வீசுஞ்சுரஞ்சன்னி விளைதோஷ - மாசுறுங்கா
லித்தரையு ணிற்கா வெரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரியுண் டாமாகிற் காண்.

கண்டங்கத்தரி காசநோய், சுவாசநோய், இருமல் நோய், மந்தம், சுரம், சன்னி, வயிற்றிலுள்ள பூச்சி ஆகியவைகளைப் போக்கும்.

### தேகொடுக்கின் பொதுக்குணம்

தேட்கொடுக் குண்டாயிற் றினவடக்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் நாசமாங் - கீட்பட்ட
மாந்த கணமுமறு மானிலத்துட் சிலவிஷம்போம்
போந்த மருந்தாகும் புகல்.

இதனால் நமைச்சல், நாட்பட்ட புண், கரப்பான், குழந்தைகளுக்கு உண்டாகும் கணம், மாந்தம், காணாக்கடி விஷம் ஆகியவைகளைப் போக்கலாம்.

***குறிப்பு:-*** தேள்கொடுக்கு இலைச் சாற்றினால் ஈயத்தின் நீரை வாங்கிக் கட்டலாம்.

### பெருந்தேட் கொடுக்கின் குணம்

சுடுகாடு முட்டா னெனப்பெரி யோர் சொல்லும்
நெடியபெருந் தேட்கொடுக்கால் நீரரா - பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாக் கருங்கிரந்தி
விண்கரந்து போகாதோ விள்.

நுண்புழு, புண், கிரந்தி, மேகப்புண், கருங்கிரந்தி ஆகியவைகள் போகும். மேலும் இதன் இலையை அரைத்துப்பூசிவர சொறி, சிரங்கு, கரப்பான், புண், காயம்பட்ட புண், கொறுக்குப்புண், ஈறுகட்டல், முகப்பரு ஆகியவை குணப்படும்.

### சிறுதேட்கொடுக்கின் குணம்

சிறுதேட் கொடுக்கதனாற் சேயிழையே கேளாய்
சொறிசிரங்கு புண்கரப்பான் சூலை - கொறுமாந்தை
மேகவெட்டை பித்தவெட்டை மீளா வெலும்புருக்கி
யாகம் விடுத்தோடு மறி.

சிறுதேட் கொடுக்கினால், சொறி, சிரங்கு, விரணப்புண், கரப்பான், கீல்வாதம், கொறுக்குப்புண், மாந்தம், வெள்ளை ஒழுக்கு, அழல், வெட்டை, எலும்புருக்கி ஆகியவைகள் போகும்.

### நிலவேம்பின் குணம்

வாதசுர நீரேற்ற மாற்றுஞ் சுரதோடங்
காதமென வோடக் கடியுங்காண் - மாதரசே
பித்த மயக்கறுக்கும் பின்புதெளிவைக் கொடுக்குஞ்
சுத்தநில வேம்பின் றொழில்.

இதனால் வலிசுரம், நீர்க்கோர்வை, சுரங்கள், மயக்கம் ஆகியவை நீங்கும். மேலும் புத்திக்குத் தெளிவை உண்டாக்கும்.

***குறிப்பு:-*** இதன் இலைச்சாற்றைக் குழந்தைகட்கு உண்டாகும் வயிற்றுப்பொருமலுக்கும், கழிச்சல்கட்கும் கொடுக்கலாம்.

### சீவனார்வேம்பின் குணம்

சாய்க்குமிழப் புண்பழம்புண் சர்மகுட்டம் பிளவை
தீக்கடுகால் வன்பெருநோய் சிந்துமா - நோய்க்கு
விதையாதி வேம்பினால் மெய்க்கழகு காலை
லுதையாதி வேம்பினா லுண்.

வேம்பால் குறைநோய் (குட்டம்), சிரங்கு, இரைப்பு, உப்பிசம், உளமாந்தை ஆகிய நோய்கள் போகும்.

*குறிப்பு:-* இதன் குழித்தைலத்தை வெடிசூலை, நாட்பட்ட புண், அடிப்பட்ட புண், வெள்ளைப் புள்ளிகளின் மேலும் பூசக் குணமாகும்.

**நீர்முள்ளியின் குணம்**

பாண்டு குளுப்பையறும் பாரித்த நீரேற்ற
மாண்டுவிடு நீர்க்கட்டு மாறுங்காண் - பூண்டதொரு
வீக்கமெலா நீதாய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய் சாற்று.

நீர்முள்ளியினால், பாண்டு, குளுப்பை, நீர்க்கோவை, நீரேற்றம், வீக்கங்கள் ஆகியவை விலகும்.

*குறிப்பு:-* இதனை வேறு நீர்ப்போக்கு மருந்துகளுடன் சேர்த்துக் குடிநீரிட்டுக் கொடுக்க நீர் நன்றாக இறங்கி மூத்திர வியாதிகள் நீங்கித் தேகத்திலுள்ள கெட்ட நீரும் வற்றிப்போகும்.

**பெருமருந்தின் குணம்**

திரிதோடம் வெப்பு சிரங்கும் சொறிநஞ்சோ
டறிதேமல் வன்புடைய மண்டா - தொருவா
னருமருந்தை யொத்த வணங்கே யுலகிற்
பெருமருந்தை நீயெடுத்த பின்.

இதனால் திரிதோடம், சொறி, சிரங்கு, விடத்தினவு, தேமல் ஆகியவைகள் போகும். இதன் வேர் குட்டத்தையும், அற்ப விஷக்கடிகளையும்,சர்ப்ப விடத்தையும், பித்தபோகம், சுவாசம், இருமல், சுரம், சரீரக்குத்தல், வாததோடம் ஆகியவைகளையும் போக்கும்.

**ஊமத்தையின் குணம்**

நாய்க் கடியால்வந்து நலிசெய்யு விரணமும்போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்காண் - தீக்குணத்தைச்

சேமத்தில் வைத்தவிடத் தீருமுந் தோடமறும்
ஊமத்தையின் குணத்தை யுள்.

இது நாய்க்கடிப்புண், குழிப்புண், நஞ்சு ஆகியவைகளை நீக்கும்.

***குறிப்பு:-*** இதன் இலையை உலர்த்திப் பொடிசெய்து முப்பத்திரண்டு முதல் 100 மி. கி. அளவு உள்ளுக்குக் கொடுக்க இரைப்பு நோய் நீங்கும்.

**கருவூமத்தையின் குணம்**

வந்துவி தங்கள்கட்டு மேனிதருங் குஷ்டமொடு
வந்தவியர்ப் பரிப்பை மாற்றுங்காண் - முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்குங் கயப்பாங்
கருவூ மத்தைமூலி காண்.

கசப்புடைய கருவூமத்தை சுக்கிலத்தையும், பாதரசத்தையும் கட்டும். உடலுக்கு அழகையும் கொடுக்கும். பெருநோய், வியர்வை, தினவு, சுரம் ஆகியவைகளையும் போக்கும்.

**பொன்னூமத்தையின் குணம்**

பொன்னூமத்தை முண்டாகிற் பூவையரே புண்கிரந்தி
தொன்மைக்கிராணி வருக்கரும - வன்பேதி
சுத்த சுரத்துடனே போரவிடச் சுரமுந்
சத்தவதி காரமும்போஞ் சொல்.

பொன் ஊமத்தையினால் இரணகிரந்தி, நாட்சென்ற கிராணி, அதிசாரம், பித்தவிடச்சுரங்கள், பேதி இவை நீங்கும் என்க.

**மருவூமத்தையின் குணம்**

சீதசுரம் நீரேற்றஞ் சிலவிடங்கள் மந்தத்தோ
டூதையிவை யெல்லா மொழியுங்காண் - போத

இருளுருங் கூந்த லெழின்மாதே கான
மருளூ மத்தைக் கறிந்து வை.

இருண்ட கூந்தலையுடைய அழகுடைய பெண்ணே! மருளூமைத்தையினால் குளிர்சுரம், சரீர நீர்க்கோவை, அற்ப வீரியமுள்ள விடங்கள், அக்னிமந்தம், வாத தோடம் ஆகியவை விலகுமென்க.

**நிலக்குமிழின் குணம்**

பேதியொடு கண்சொருகற் பேராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம் - ஓதச்
சலக்குமிழை யொத்த தனக்கருங்கண் மாதே
நிலக்குமிழைக் கையிலெடு நீ.

நீர்க்குமிழியனைய கொங்கைகளையும், கருங்கண்ணை கனையமுடைய பெண்ணே! நிலக்குமிழினால், சலமந்தபேதி, விழிசொருகல், சீதளம், வாதக்கடுப்பு, அதிகக் கொட்டாவி, மந்தம் ஆகியவைகள் போம்.

**நிலத்துத்தியின் குணம்**

தொடங்கர சங்கட்டி தொலையவப் புலோக
மடங்கி நீறாகவெண்ணி னம்பொற் - குடம்போ
லைத்துத்தி பூத்ததலை நல்லா ரமிர்தே
நிலத்துத்தி மூலியை நினை.

இது ஆரம்ப மூலரோகத்தையும், கட்டிகளையும் குணப்படுத்தும். கருவங்கத்தைப் பற்பம் செய்யும்.

**பெரும்பீளைச் செடியின் குணம்**

பாடான பேதியெனப் பன்னுபெரும் பீளைக்கு
மேடான வீக்கம் விலகுங்காண் - நாடருய்ய
பேய்பூதமும் பறக்கும் பேசிற் பலபிணிபோந்
தூயோ ரறிவதைச் சொல்.

பெரும்பீளைச் செடி அதிகப்படியான சோவையையும், பைசாசம் முதலிய தோடங்களையும், கல்லடைப்புப் போன்ற நோய்களையும் குணப்படுத்தும்.

**சிறுபீளைச்செடியின் குணம் இதுவே கற்பேதியாம்**

பாண்டு பெரும்பாடு பகர்மூத்திரக் கிரிச்சரம்
பூண்டதிரி தோஷமிவை போருங்காண் - தாண்டிப்
பரிய வேளைத்துரத்தும் பாரவயிற் கண்ணாய்
சிறிய பீளைக்குச் சிதைந்து.

நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை
பேரிட ரிரத்தகணம் போக்குங்காண் - தாண்டிப்
பூண்முலையே கேளாய் பொருந்துஞ் சிறுபீளை
யாமிது கற்பேதி யறி.

சிறுபீளைச் செடியால், அசிர்க்கரநோய், வாதம், மூத்திரக்கிரிச்சரம், முத்தோடம், மூத்திரச்சிக்கல், பித்தவாதம், சுரோணித வாதம் ஆகிய நோய்கள் குணமாகும்.

**பல்லிப்பூண்டின் குணம்**

வல்விடந் தோடசுரம் வாதபித் தங்களொடு
பல்வலியும் பஞ்சாய்ப் பறக்குங்காண் - நல்லதோர் பாற்
சொல்லிப்பாற் பாடாண தாளகமுஞ் சுத்தியதாம்
பல்லிப் பூண்டுண்டாயிற் பார்.

பல்லிப் பூண்டினால் சர்ப்பவிடம், சுரதோடம், வாதபித்த தொண்டம், பல்வலி ஆகிய நோய்கள் குணமாகும். மேலும் இதனால் பாடாணங்கள், தாளகமும் சுத்தியாகும்.

**தாணிப்பூண்டு, பொரிப்பூண்டு இவைகளின் குணம்**

தாணிப்பூண் டேயிருந்தாற் றாவிவரு மேகத்தை
நாணிப் போகச்செய்யு நானிலத்துள் - வீணி
லெரிகிரந்தி மேக மிருக்குமோ வூரிற்
பொரிபூண்டின் பேரைப் புகல்.

தாணிப்பூண்டு இரத்தப் பிரமேகத்தைக் குணப்படுத்தும். பொரிப்பூண்டு அக்னி, கிரந்தி, மேகம் ஆகியவைகளைக் குணமாக்கும்.

## குருவிச்சுப் பூண்டின் குணம்

குருவீச்சுப் பூண்டெனவே கூப்பிட்டாற் போதும்
வருவிச்ச குஷ்டம் மலடும் - ஒருமிச்ச
மேசுக் கரப்பான் விட மாந்தஞ் சீதரத்தம்
பேதமறப் போமொருகாற் பேசு.

குருவிச்சுப் பூண்டினால் பெருநோய், மலடு, கபமேகம், கரைப்பான், விஷமாந்தம், சீதரத்த பேதி ஆகிய நோய்கள் போகும்.

## தலைச்சுருளின் குணம்

பாண்டகற்று மெய்யிற் படர்குஷ்ட நோய்விலக்கும்
நீண்ட விருதயநோய் நீக்குங்காண் - தாண்டதம்பை
முன்னே யொழித்துவிடு மூவாத தலைச்சுருளி
யென்னே யுலகி லிசை.

தலைச்சுருளிப் பூண்டினால், உடல் வெளுப்பு, படர்க்குட்டம், இருதயநோய், ஆகக்சந்துகசோபை ஆகியவை நீங்கும்.

## கருப்பு மணத்தக்காளியின் குணம்

வெவ்வெழலு மாறும் விரிகுறர்க்கம் மற்போடி
மொல்ல சிசுவுக்கா மூலவைிடுஞ் - செவ்வி
யருமணிக் கச்சுமுலை யாயிழையே கேளாய்
கருமணத் தக்காளிதனைக் கண்டு.

கருப்பு மணத்தக்காளியினால் பைத்தியம், வெப்பம், சுரசாத நோய், கபத்தோடம், பாதத்தோடம் ஆகியவைக் குணமாவதுடன், குழந்தைகளுக்கு ஏற்படும் தேரை நோயைக் குணப்படுத்தும்.

***குறிப்பு:-*** இதன் பழச்சாற்றினால் ரசம் கட்டும்.

## சிவப்பு மணத்தக்காளியின் குணம்

கந்ததாளிம் புண்ணைக் கைங்கையினா லுள்ளுக்குள்
வந்தவேக் காட்டைமிக மாற்றுங்காண் முத்தனில்
ஐயவினை யையாற்றி விடுநற் புலத்துச்
செய்ய மணத்தக்காளிச் சீர்.

சிவப்பு மணத்தக்காளியானது, ரணம், உட்சுரவேகம், வாத கப தொந்தம் ஆகியவைகளைப் போக்கும்.

## நல்வேளையின் குணம்

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்திய
முரநோ யிவைக ளொழியு - முரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்.

நல்லவேளைப் பூண்டை நாடுங்கால் வாதமும்போஞ்
சொல்லும் ஐயத்துடனே சோபையறும் - மெல்லமெல்லத்
தக்கவனலும் பித்துந் தானெழும்புஞ் சாந்தமின்றி
சக்கரநோய் விஞ்சுமறி.

நல்வேளையினால் தலைநோய், சரீரநோய், குடைச்சல், சீதளம், மார்புவலி, வாததோடம், கபநோய், வீக்கம் ஆகியவை குணமாகும். பசியும், சூடும், பித்த ஆதிக்க நோய்களும் உண்டாகும்.

## நாய்வேளையின் குணம்

வாதமுடற் கடுப்பு வன்சூலை காதிரைச்ச
லோதமிகு நெசமு மோடுங்காண் - போதெரிந்து
காய்வேளைக் காயும்விருக் காரிகையே வையமதில்
நாய்வேளை யுண்டு நவில்.

நாய்வேளையால் வாதப்பொருமல், தேகக்கடுப்பு, குத்தல், காதுநோய், கபப்பீனிச நோய் ஆகியவைக் குணமாகும்.

*குறிப்பு:-* இதன் கடுகைத் துவையல் அரைத்து உட்கொள்ள, மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

### கொள்ளுக்காய் வேளையின் குணம்

வாதமிக்க தென்பார்க்கும் வாய்வறட்சி யென்பார்க்கு
மீதுதந்த மூலநோ யென்பார்க்கு - மோதமுற்ற
கொள்ளுக்கா தாரசுபந் தோற்றியதென் பார்க்குமொரு
கொள்ளுக் காய் வேளைதனைக் கூறு.

கொள்ளுக்காய் வேளையினால் வாதாதிக்கமும், நாவரட்சியும், தந்தமூல நோய்களையும், வாயிலிருந்து வழிகின்ற ஜொல்லையும், கபத்தையும் நீக்கும் தன்மையுடையது.

### கல்லுருவிப்பூண்டின் குணம்

கல்லுருவிப் பூண்டுபல கட்டிகளை யுங்கரைக்கும்
வல்லிதிரக் கட்டறுக்கும் வந்தபுண்ணை - வெல்லரிய
மேகத்தை வல்விடத்தை மீறாதொடுக கிடுமு
லோகத்தைச் சுத்திசெய்யு மோர்.

கல்லுருவிப் பூண்டு கட்டிகள், ரத்தக்கட்டு, தடிப்பு, கிரந்தி, பிரமேகம், சர்ப்பவிடம் ஆகியவைகளைக் குணப்படுத்தும். சகலவித உலோகங்களையும் சுத்தி செய்யும்.

### எரிசாலை, குதிரைக்குளம்படி இவைகளின் குணம்

பூவில் எரிசாலைப் பூண்டிக் கிழுப்புவலி
கூவியழுஞ் சூலையனி லங்குறையுந் - தாவு
குதிரைநடை வாயுசன்னி கூறுதினவும் போங்
குதிரைக் குளம்படியைக் கூறு.

எரிசாலை பூண்டுக்கு தளிர்வாதம், பாதம், சீழ்க்குத்தல், வாதகோபம் ஆகியவை நீங்கும். குதிரைக்குளம்படி பூண்டுக்கு, குதிரை வாதமும், சன்னியும், தினவும் விலகும்.

### சுளுக்கு நாயகத்தின் குணம்

சுளுக்கு நாயகத் தோடஞ் சுரமொடு
சுளுக்கும் வாங்குந் தொடுத்தகை கால்களின்
சுளுக்கு மேற்கறடுங் கதைக்குஞ் சொன்னோம்
சுளுக்கு மேல்விழி ரத்தந் துடைக்குமே.

சுளுக்கு நாயகப் பூண்டினால் சகலவித தோடங்களும், சுரமெலிவினால் தேகத்தில் ஏற்பட்ட சுளுக்கு, கை காலின் சுளுக்கு, ரத்தங்கட்டிய கரடு, ரத்தத் தடிப்பு ஆகியவைக் குணமாகும்.

### கிரந்தி நாயகத்தின் குணம்

சீதமறு மாவிடமுந் தீரும் விழி நோயகலும்
பூதமொடு மருளும் போகுங்காண் - மேதினியுள்
ளாயகத்துப் புண்கிரந்தி யாறுமயிலே கிரந்தி
நாயகத்தி னாலே நவில்.

கிரந்தி நாயகப் பூண்டினால், சீதளம், சர்ப்பவிஷம், கண்நோய், பைசாசம் முதலிய சங்கத் தோடம், உள்புண், கிரந்தி ஆகியவைகள் நீங்கும்.

### பிளவை கொல்லிப் பூண்டின் குணம்

பிளவைகொல்லிப் பூண்டிருந்தாற் புண்விரணம் பேரு
மளவையுறா மேக மடங்கு - முளர் மாந்தை
யாறாப் பிளவைகட்டி யெல்லா முலர்ந்திடுமே
மாறாக் கவியணங்கே வாழ்த்து.

பிளவைக்கொல்லி பூண்டினால் சிறு சிரங்கு, கிரந்தி, ஒழுக்குப் பிரமேகம், உள்மாந்தை, இராஜப்பிளவைக்கட்டி ஆகியவைகள் போம்.

### மலை தாங்கிப் பூண்டின் குணம் இதுவே வெற்பேந்தி

வாதமெண் பதுஞ்சுரமும் வாதச் சயித்தியமுங்
காதுவலி பாரங் கரந்திடுங்காண் - போதச்

சிலைதாங்கி நின்றதுதற் செந்திருவே நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து.

மலைதாங்கிப் பூண்டிற்கு சகலவித வாதநோய்கள், வாத தொந்த நோய்கள், கர்ண சூலை, சரீர பாரிப்பு (கனத்த உடல்) ஆகியவை போம்.

### குடியோட்டிப் பூண்டின் குணம்

புண்ணொடு கரப்பான் பொடிசிரங்கு சிலவிஷங்கள்
கண்ணிருமல் மேகவலி தண்மேக - மெண்ணிற்
படியோட்டு மாவிடமும் பலநோயுந் தீருங்
குடியோட்டுப் பூண்டால் குலைந்து.

குடியோட்டிப் பூண்டினால் பெரிய விரணங்கள், கரப்பான், சிரங்கு, சில்லிவிடக் கடிகள், காசம், மேகவாயு, பிரமேகம், சர்ப்பவிஷம், தந்தநோய் ஆகியவைகள் விலகும்.

### ஆடுதீண்டாப்பாளையின் குணம்

ஆடுதொடப் பாளைக் கக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குஷ்டம் நிறைகரப்பான் - ஆடிடச்செய்
யெண்பது வாய்வு மிக்ககுஷ்ட முந்தீருந்
திண்பெறு நற்றதுவுமாஞ் செப்பு.

ஆடுதீண்டாப்பாளைக்கு மலாசயக் கிருமிகள், சிலந்திப் பூச்சிவிடம், கருங்குட்டம், கரப்பான், வாதநோய்கள், தினவு ஆகியவை போம்.

### குழிமீட்டான் குணம்

கணத்திலெழு மாந்தத்தைக் காணாவுட் சூட்டைக்
கணத்திலே வேரைக் களையும் - பணத்தமுலைப்
பாலைச் சுரப்பிக்கும் பாரிற் குழிமீட்டான்
காலைத்தொழு துண்ணுங் கால்.

குழிமீட்டான் பூண்டு கணமாந்தத்தையும், உள் வெப்பத்தையும் போக்கும். முலைப்பாலை சுரக்கச்செய்யும்.

## செருப்படையின் குணம்

செருப்படைக்கு வாதமந்தஞ் சேர்வான மேக
மிருப்படிகொள் பொல்லா இசிவும் - விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தோற்றா தொருநாளும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

செருப்படைக்கு வாதநோய், மந்தாக்கினி, வெள்ளை வீழல், தம்பனவாதம், சூலை, குன்மம் நீங்குமென்க.

## கல்தாமரையின் குணம்

வீரிய விருத்திதரு மெய்க்கு பலங்கொடுக்குங்
கூறிய குஷ்டுதனைக் கோபிக்குங் - காரியத்தை
நற்றாம் பரமாக்கு நங்கா யடுக்கலுறை
கற்றாமரை யதனைக் காண்.

கல்தாமரை சுக்கிலத்தை அதிகப்படுத்தும், சரீரத்திற்கு பலத்தையும், அழகையும் கொடுக்கும். குட்டநோயை குணப்படுத்தும். காரியத்தைச் செம்பாக்கும் கண்களுக்குக் குளிர்ச்சியைக்கொடுக்கும்.

## கஞ்சாங்கோரையின் குணம்

மாந்தங் கழச்சலரும் மாந்தஞ் சுரங்கணம்போஞ்
சேர்ந்த மூலத்தின் றினவடங்கும் - பூந்தடக்கை
யன்னமே மேகமறுங் கஞ்சாங் கோரையினை
யுன்ன இருமலியை யோர்.

கஞ்சாங்கோரை மாந்தபேதி, அக்கினிமாநாதம், கணச்சூடு, சூடனவாய், நமைச்சல், பிரமேகம், காசம் ஆகியவைகளைப் போக்கும்.

## கீழ்க்காய் நெல்லியின் குணம்

சீதபதி பித்தவடஞ் செவ்விழிநோய்க் கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும் - பூதலத்துட்
டாழ்வாய்ப் பணிந்தேருந் தப்பாது நற்புலத்துக்
கீழ்வா யெனு நெல்லிக்கே.

கீழாநெல்லிக் குணந்தான் கேளாய் மதுமேகந்
தாழாக் காமாலைகளைச் சண்ணுந்தா - தேனழலுந்
தொக்கி னனலுந் தொலைக்குந் தொன்மேகம்போம்
தக்க விரணங்கெடுக்குந் தான்.

கீழ்க்காய் நெல்லிக்கு ஆமக்கட்டு, அக்கினி விஷம், நேந்திர நோய்கள், சங்கை தோடம், இரத்த அதிசாரம், மதுப்பிரமேக மூத்திரம், காமாலை, மஞ்சள் காமாலை, சுரம், தாதுவெப்பம், நாள்பட்ட மேகப்புண் ஆகிய இவைகள் போகும்.

## மயிர்மாணிக்கத்தின் குணம்

மயிர்மா ணிக்கத்தால் வளர்மேகம் போகுஞ்
செயிரான மேகவெட்டை தீருங் - சயரோகம்
மாவிரணம் போக்கியிதில் வல்லிரதஞ் சேர்ந்தரைத்துத்
தாயுண்பா குண்டறிந்தேர் தாம்.

மயிர் மாணிக்கத்தினால் வெள்ளை, வெட்டை, நீர்சுருக்கு, நீர்கடுப்பு, காசம் முதலியநோய்கள் குணமாகும். இச்சாற்றுடன் இரசசெந்தூரம், இரச பற்பம் சேர்த்து உட்கொள்ள கொடியநோய்கள் அனைத்தும் குணமாகும்.

## துளசியின் குணம்

ஐயம் வயிறுளைச்ச லஸ்திசுரந் தாகமும்போம்
பையசுர மாந்தம் பறக்குங்காண் - மெய்யா
வாயினரோசகம் போம் வான்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்.

கார்ப்பும், வெப்பமும் உள்ளதுளசியினால் கபதோடம், வயிறுளைதல், அஸ்திசுரம், பசியின்மை ஆகியவைகளை போக்கும். சில் விஷக்கடிகளையும் குணப்படுத்தும்.

**செந்துளசியின் குணம்**

செய்ய துளசிவிஷந் தீர்க்குங் கபமறுக்கும்
வெய்யகடி விஷத்தை விண்ணேற்றுந் - தையலரே
முத்தோஷத் துண்டா முரணோட்டு மலவழியா
மெத்தோஷ மும்போக்கு மென்.

சிவப்புத் துளசியினால் விஷம், கபாதிக்கம், அக்கினிகீட விஷம், திரிதோடம், திரிதோடத்தினால் ஏற்படக்கூடிய பல நோய்களையும் குணப்படுத்தும்.

**கருந்துளசியின் குணம்**

இருமலொடு நெஞ்சி விழுப்புச் சுவாசம்
கிருமிசல தோஷங் கேவல் - மருமச்
சனிரூட்சை சூலைவிஷஞ் சன்னியிவை போக்குந்
தளிரார் கருந்துளசி தான்.

கருந்துளசியினால் காசம், தொண்டையின் ஏற்படும் கரகரப்பு, இரைப்பு, நீர்க்கோர்வை, இருமல், கேவல், மார்புச்சளி, சுரம், குத்தல், விஷம், சன்னிபாத நோய்கள் ஆகியவைகளை ஒழிக்கும்.

**நிலத்துளசியின் குணம்**

நிலத்துளசி மாதர்தரு நீண்முலைப் பால்வந்தம்
வலுத்த சுரம்பித்த கண்மாற்றும் - அலத்துகண்
மாந்தசுரம் பித்தசுர மாபெரிய சீதசுரஞ்
சேர்ந்தோடச் செய்யுந் தெளி.

நிலத்துளசி தாய்ப்பாலினால் வரக்கூடிய மாந்தம், வாதசுரம், பித்தநோய்கள், கணச்சூடு, மந்தம், குளிர்சுரம் இவற்றை நீக்கும்.

### நாய்த்துளிசின் குணம்

கபத்தோடு குற்றிருமல் காணா தொழிக்குஞ்
கபத்தைச்செய் முத்தோஷஞ் சாடும் விபத்தழலைக்
காய்த்துடலைப் போஷிக்குந் தாரணியி லுள்ளோர்க்கு
நாய்த்துளசி யீது நவில்.

இதனால் கோழை, சினுக்கிருமல், திரிதோஷம் ஆகியவைகளை மாற்றும். சரீரத்தை வளர்ச்சியுறச் செய்யும்.

### கல்துளசியின் குணம்

தாபச்சுரமுந் தனிவித் திரிகளுஞ்
சோபச் சிலவிஷமுந் தோற்றாமே - கோபிச்சங்
குற்றுள சிலேஷ்மந்தா லூன்றுகாசம் பறக்குங்
கற்றுளசிப் பேருரைக்குங் கால்.

கல்துளசியினால் தீச்சுரங்கள், விப்புருதிக் கட்டிகள், நீர்வண்டு விஷங்கள், சில்விஷம், கோழையைத் தள்ளுகின்ற சுவாசகாசம் ஆகிய நோய்கள் குணமாகும்.

### முள்துளசியின் குணம்

எலிவிஷம்போம் வெட்டுண் டிருக்கும் விரணக்
கிலிவிடும் விஷங்கள் கிளைக்கா - துலவிவரும்
மட்டுறச்சி வந்தமலர் மண்டபத்துள் வாழனுமே
முட்டுளசி பேரை மொழி.

முள் துளசியினால் எலிவிஷம், வெட்டுப்புண், அற்பவிஷம் ஆகியவை போம்.

### கழுதைத்தும்பையின் குணம்

அரையாப்புக் கட்டி யனில முதிரம்
பிரியாச் சீதக்கடுப்பும் போகுந் - தரையிற்
பழுதைக் கொள்ளச்செய்ய பங்கயப் பெண்ணேகேள்
கழுதைத் தும்பைச்செடியைக் கண்டு.

கழுதைத் தும்பையினால் அரையாப்புக்கட்டி, வாதநோய், சீதம்விழக்கூடிய பேதி, கடுப்பு ஆகியவை போம்.

**நெய்ச்சட்டியின் குணம் இதுவே சகதேவி தேவசந்தம்**

நெய்ச்சட்டி யென்றால் நிறைமெய்யுட் சுக்கிலமும்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே - வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டையழலுந் தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான்.

தூயழ குறப்புரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந் - தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக்கிடும் வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு.

நெய்ச்சட்டிக் கீரையினால் வீரிய விருத்தி, நேத்திர ஒளி, பசி, அழகு இவைகளை உண்டாக்கும். பித்தமேகம், வெள்ளை உட்சூடு, தாகம், பித்தநோய்கள், வாய்ப்புண், அழற்சி, வாந்தி இவைகளைப் போக்குவதுடன் வேப்பெண்ணெய்க்குறிய கசப்பையும், வாடையையும் போக்கும்.

**எழுத்தாணிப் பூண்டின் குணம்**

பழமலங்கள் காறும் பருங்குடற் சீதம்போஞ்
செழுமலச் சீதக்கடுப்பு மேகு - மொழியாக்
கரப்பான் சொறிசிரங்குங் காணா தகலு
முரப்பா மெழுந்தாணிக் கோர்.

எழுத்தாணிப் பூண்டிற்கு, மலக்கட்டு, குடலின் சீதளம், மலச்சீதக்கடுப்பு, கரப்பான், புடைகிரந்தி ஆகியவைபோம்.

**கொட்டைக் கரந்தையின் குணம்**

கொட்டைக் கரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியுமதி மேகம்போந் - துட்டச்

சொறிசிரங்கு வன்கரப்பான் றோன்றா மலப்பை
மறிமலமுந் தானிரங்கு மால்.

கொட்டைக் கரந்தைக்கு வெள்ளை ஒழுக்க, மேகம், சொறி, சிரங்கு, கரப்பான் நீங்கும். தடைபட்ட மலமும் இறங்கும்.

**சிவகரந்தையின் குணம்**

வாந்தி யரோசகத்தை மாற்றும்பசி கொடுக்குஞ்
சாய்ந்த விந்துவைக் கட்டுந் தப்பாலே - எந்தழகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சார்ந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான்.

கந்தநாறு கரந்தை யதன்குணம்
மந்தவரதங் கரப்பானை மாற்றிடும்
தொந்தரோகந் துதுடக்கு மிருவல
மந்தநோயுந் தணிக்கு நம்மாணையே.

இதனால் வாந்தி, சுவையின்மை, ஆண்மைக்குறைவு, கரப்பான், வாதாதித் தொந்தம், காசம், அக்கினி சந்தம் இவைகளை நீக்கும். சாடராக்கினியையும், வனப்பையும் உண்டாக்கும்.

***குறிப்பு:-*** இதன் இலையைப் பொடித்துச் சூரணம் செய்து 4 முதல் 5 கிராம் எடை தேன் அல்லது வெண்ணெயுடன் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க மேற்கூறப்பெற்ற நோய்கள் அனைத்தும் குணமாகும்.

**வெள்ளறுகின் குணம்**

குன்மமொடு வாயுகுடல் வாதஞ் சூலையிட
சென்மம் விடுத்தோடிச் சிதையுங்காண் - வண்முலையா
யுள்ளு கிரந்திசொறி யொட்டிய சிரங்குமறும்
வெள்ளறுகு தன்ன குணமாகும்.

**ஓரிலைத் தாமரையின் குணம்**

ஓரிலைத் தாமரையு ளூற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பா வில்லாத மங்கையர்க்கு - மோரிற்
குடிக்கப்பா லுண்டாகுங் கோர வன்மேகம்
படிக்கு ளிருக்குமோ பார்.

ஓரிலைத்தாமரையை எலுமிச்சங்காயளவு அரைத்து அரை ஆழாக்கு பசு மோரில் இரண்டு வேளை 40 நாட்கள் காலை, மாலை இருவேளையும் கொடுக்க பாலில்லாதவர்களுக்கு பால் சுரக்கும். வாதம், மேகம் போகும்.

**ஓரிதழ்த் தாமரையின் குணம்**

தாதுவை யுண்டாக்குந் தனிமேகத்தை தொலைக்கு
மாதரவர் மேனிக் கழகு தருஞ் - சீதம் போஞ்
சீரிதழ்த் தாமரை வாழ் செய்ய மடவளமே
ஓரிதழ் தாமரையை யுண்.

ஓரிதழ்த் தாமரையினால், சுக்கிலத்தையும், சுரோணிதத்தையும், அழகையும் உண்டாக்கும். மேகநோயையும், சீதத்தையும் போக்கும்.

***குறிப்பு:-*** இதன் இலையைச் சூரணம் செய்து வைத்துக்கொண்டு 5 முதல் 10 கிராம் பசும்பாலிலிட்டு இருவேளை உட்கொள்ள மேற்கூறப்பெற்ற நோய்கள் குணமாகும்.

**அந்தரத் தாமரையின் குணம் - இதுவே ஆகாயத்தாமரை**

அழுகிரந்தி குஷ்ட மடர்ந்த கரப்பான்
பழுவுறு மக்கூடு முதற் போகும். - அழகாகு
மந்திர நீலக் கருங்கணேத்திழையே யெப்போழ்து
அந்தரத் தாமரையா லாய்.

அந்தரத் தாமரையினால் அனைத்து விரணமும் குட்டமும், கரப்பானும், மார்பிற்குள் கட்டுகின்ற கிருமிக்கூடு முதலிய நோய்கள் குணமாகும்.

**பற்பாடகத்தின் குணம்**

சீதவாதச் சுரமுந் தீராத தாகமும் போம்
போதவிரு கண்குளிரும் பொய்யலவே - பூதலத்துள்
வற்பரம பயித்தியமு மாபித்தமுந் தொலையும்
பற்படா கத்தையுன்னிப் பார்.

பற்பாடகத்துக்குக் கபவாதசுரம், தீராத தாகம், பித்த காசநோய், உன்மத்தம், பித்ததோடம் ஆகியவை குணமாகும். கண்களுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.

**திருநீற்றுப்பச்சை, உருத்திரச்சடை இவைகளின் குணம்**

திருநீற்றுப் பச்சை சிலேஷ்ம சர்த்திதன்னை
வரிநீற்றைப் போலாக்கு மெய்யே - பெரிய
சுரந்திரத்த வாந்தி சுரமருசி நில்லா
வுருத்திரச் சடைக்கே யுரை.

திருநீற்றுப் பச்சை கபவாந்தியை நீக்கும். உருத்திரச் சடை சுரத்தால் ஏற்படக்கூடிய உதிரப்பெருக்கு, பித்தசுரம், பசி, வெறுப்பு ஆகியவைகளைப் போக்கும்.

**மாசிப்பத்திரியின் குணம்**

புளிப்புந் துவர்ப்பும் பொருந்தி யிருந்தாலுந்
தளிர்த்த காளைக்கனலைச் சாடு - நெளிந்த
தலிதனை விட்டோட்டு மடமாதே நீகேளாய்
மலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து.

புளிப்பும், துவர்ப்புமுள்ள மாசிப்பத்திரி வாத நோயையும், உஷ்ணத்தையும், ஐந்துவகை வலியையும் போக்கும்.

### மருக்கொழுந்தின் குணம்

கண்ணிலுறு தோடங் கபஞ்சூ டிவைபோக்கும்
ஒண்ணல் கைப்புக்காரம் உள்ளமரும் - மண்ணிற்
கொழுந்த மருக்குணத்தைக் கொண்டிருந்த போழ்துந்
தழைந்தபசி வண்மைதருஞ் சாற்று.

இதனால் கண்படலம், கபதோடம், உட்சூடு, மிகுந்தபசி, பலம் ஆகியவைகளைப் போக்கும்.

## கொடி வகைகள்

### ஆதொண்டையின் குணம்

மண்டைக் குடச்சறும் வாயுவழிப் பீநசம்போந்
தொடைக் கபமுந் தொலையுங்காண் - மிண்டுசெய்யும்
வாதக் கடுப்பகலு மாதேவூ தொண்டைக்குப்
போதப் பலபிணியும் போம்.

ஆதொண்டையினால் மண்டைக்குடைச்சல், வாத பீதிரம், நெஞ்சில் கப ஆதிக்கம், வாதக்குடச்சல் முதலிய நோய்கள் குணமாகும்.

### சிறுகுறிஞ்சாக் கொடிக்குணம்

சிறுக்குறிஞ்சா வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிர மில்லாத மாதர்க் - குறுமுலகி
லத்தி சுரமு மகலாக் கடிவிடமுந்
தத்தி யகலத்தகர்க்குந் தான்.

வாதஞ்சுரஞ் சன்னிசுர மாறாக் கபசுரமும்
பூதலம் விட்டோடப் புரியுங்காண் - மாதேகே
ளக்கரநோய் தீர்க்கு மதிசுரந் தாகம்போ
தக்கசிறு குறிஞ்சா தான்.

சிறுகுறிஞ்சாக் கொடியினால் மாதாந்திர உதிரச்சிக்கல், மூலாதாரச்சுரம், காணாக்கடிவிடம், வாதசுரம், சன்னிபாத சுரம், கபசுரம், அக்கரதோல், சந்தகரம், அதிதாகம் ஆகிய நோய்கள் குணமாகும்.

***குறிப்பு:-*** இக்கொடியை சமூலத்துடன் பொடித்து (சூரணம் செய்து) வடிகட்டி வைத்துக்கொண்டு 5 முதல் 10கிராம் காலை, மாலை இருவேளையும் உட்கொள்ள மதுமேகம் குணமாகும்.

### இண்டின் குணம் - இதுவே புனற்றண்டு

*பீநசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றந்*
*தரனசிக்கச் செய்யுமது சத்தியங்காண் - வானசைக்கும்*
*மண்டைக்குடைச்சலோடு வாய்ச்சன்னியும் விலக்கும்*
*பண்டையுற்ற விண்டிதனைப் பார்.*

*கட்டுவா தங்களறுங் காரிகையே மேகம்போ*
*முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங் - கிட்டும்*
*புனலினறுந் தண்டுக்குப் போரீளை சூலை*
*யனலி லெழும்புண்ணு மறும்.*

இண்டின் கொடியினால் பீதிசம், சகலதோடம், கபாலக் குடைச்சல், முகச்சன்னி, வாதத்தடிப்பு, பிரமேகம், சூதகவாயு, சுவாசம், கீல்பிடிப்பு, தீச்சுட்ட விரணம் ஆகியவைகள் போமென்க.

### கர்ப்பூரவள்ளியின் குணம்

*காச விருமல் கதித்தம்மை சூரிஐயம்*
*பேசுபுற நீர்க்கோவை பேருங்காண் - வீசுசுரங்*
*கற்பாறை யொத்துநெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்*
*கற்பூர வள்ளிதனைக் கண்டு.*

இதனால் காச்சினுக்கிருமல், அம்மைக் கொப்புளம், கபதோடம், புரநீர்க்கோவை, மார்பில் கட்டும் கபம், வாதக்கடுப்பு ஆகியவைகள் போகும்.

**முசுமல்லிகையின் குணம்**

வீக்கமறுங் காமாலை விட்டோடுஞ் சோபைவிடு
நீக்கமற விம்முமுலை நேரிழையே - ஏய்க்கும்
விடமாக மேகமும்போம் வீரியமு முண்டாம்
படர்முசு மல்லிகைக்குப் பார்.

முசுமல்லிகையினால் சோகை, காமாலை, வீக்கம், விடபாக நோய், பிரமேகம் ஆகியவைகள் போகும். சுக்கில விருத்தியை உண்டு பண்ணும்.

**ஊசிமல்லிகையின் குணம்**

மரந்த கணம் பொருமல் வாராது மைந்தர்களுக்
கூர்ந்தே யிரத்தகண மோடுங்காண் - கூந்தன்முடி
மானே சுரந்தணியும் வாங்காத வீக்கம்போங்
கானூசி மல்லிகைக்குக் காண்.

இதனால் கணமாந்தம், வயிற்று உப்பிசம், குழந்தைகளுக்கு உண்டாகிற உதிர சம்பவநோய்கள் சுரம், சோகை ஆகியவைபோம்.

**மிளகரணையின் குணம்**

ஐயமகற்று மசீரண வாதம் போக்குஞ்
செய்ய பித்த சூலைதனைத் தீர்க்குங்காண் - பையவரு
பீளையிரும லிரைப்பும் பிசந் தொலைக்கு
நாளு மிளகரணை நன்று.

மிளகரணையினால் கபவிருத்தி, அசீரணவாயு, பயித்தியச்சூலை, காசம், சுவாசம், வயிற்றுப்பிசம் ஆகிய நோய்கள் போமென்க.

**நாய்ப்பாகலின் குணம்**

நாய்ப்பா கலின்குணத்தை நன்றா யுரைக்கக்கேள்
வாய்ப்பான பீநசத்தை மாற்றுங்காண் - தீப்பாயி

லிங்கமதைச் சுத்திசெய்யு நேரிற்பா ஷாணத்தைப்
பங்கமறச் சுத்திசெய்யும் பார்.

நாய்ப்பாகலினால் பீனிசநோய் நீங்கும். சாதிலிங்கத்தையும், பாஷாணங்களையும் சுத்திசெய்யும்.

## பிரண்டையின் குணம் இதுவே வச்சிரவல்லி

பிரண்டையை நெய்யால் வறுத்துப் பின்பரைத்து மாதே
வெருண்டிடா தேற்று விழுங்கி - லரண்டுவரு
மூலத்தினவடங்கு மூலவிரத்த மறும்
ஞானத் தினுள்ளே நவில்.

மந்தம் வயிற்றுவலி வாயுவதி காரமுளை
சேர்ந்த மூலங்கபடமுட் செம்புனற்போக் - கோய்ந்தநடை
யெல்லா மகலு மெழுப்பு மதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா.

பிரண்டையை நெய்விட்டு வதக்கி அரைத்துப் பாக்களவு எட்டு நாட்களுக்குக் காலை, மாலை இருவேளையும் உட்கொண்டு வந்தால் ஆசனத்தினவும், ரத்தமூலமும் ஒழியும். இதை பல மருந்துகளாக உபயோகப்படுத்தினால் அக்கினி, மந்தம், குன்மம், வாதாதிசாரம், முளைமூலம், கபதோடம், இரத்தபேதி ஆகியவைகள் நிவர்த்தியாகி ஜாடராக்கினி வளரும்.

## களிப்பிரண்டையின் குணம்

ஐயமறும் பித்த மணுகாம லோடிவிடுந்
தையலர் போகமிகச் சாருங்காண் - பையைக்
கரப்பான் விலகுங் கடிசிலந்தியும்போ
முரப்பாங் களிப்பிரண்டை யுண்.

களிப்பிரண்டையினால் கபவிரணம், பித்ததோடம், கரப்பான், காணாக்கடி, சிலந்திவிடம் நீங்கும். வீரிய விருத்தியாகும்.

### தீம்பிரண்டை, புளிப்பிரண்டை இவைகளின் குணம்

தீம்பிரண்டை தன்னுற் செரியாமந்தம் ஆமந்
தேம்பிரைப்பு விக்கலையத் திண்வாதம் - போம்பலரும்
பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுநோய் குன்மகயம்
போக்குமது சூடாம் புகல்.

இனிப்புப் பிரண்டையால் செரியா மந்தம், சீதபேதி அதிகொட்டாவி, சுவாச விக்கல், கபஆதிக்கம், வாதகோபம் ஆகியவைபோம். உஷ்ணகுணமுள்ளப் புளிப்பிரண்டை, சரீர வெளுப்பு, மார்பு நோய், வயிற்றுவலி, காசம் இவைகளை விலக்கும்.

### நறுந்தாளியின் குணம்

நாவுகளார் மார்பு நாபிமூலங் களிலுட்
டாவி வருமிரணஞ் சாத்தியமாங் - கூவலிடு
மெய்யழலு மோதணியு மேகமறும் வீரியமா
முய்யவெனி னற்றாளி யுண்.

நறுந்தாளியினால் தொண்டை, மார்பு, உந்தி, மூலம் இவற்றின் புண்கள், சரீரவெப்பம், பிரமேகம் இவை போம். சுக்கிலத்தை அதிகரிக்கச் செய்யும்.

### பேய் பாற்சொரியின் குணம்

பேய்ப்பாற் சொரியினாற் பேதிமுதல் வெப்பகலும்
வாய்ப்பார் கடுப்புநிர மாறுங்காண் - போய்ப்பாய்ந்
துரு வாம லுள்ளலைக்கு மோங்கயற் கண்மாதே,
பொருவார் பயித்தியமும் போம்.

பேய்ப்ப பாற்சொரியினால் அதிசாரவுட் சூடு, ரத்தக்கிரணி, பித்தத்தோடம் ஆகியவை போகுமென்க.

### குதிரைவாலியின் குணம் இதுவே மிரியார் கூந்தல்

கடுப்பு கழிச்சல் கனன்ற சுரதாக
மிடுப்பு வலிவாத மிவற்றோ - டடுப்ப
விதிரைவா வென்றழைக்கு மேகமிரு மலும்போங்
குதிரை வாலிக்குக் குலைந்து.

காசம் பருப்படுவன் கண்மயக்க மீளையொடு
வாசங் கமழ்குழலால் மாந்தமும்போம் - பேசத
தரியாது வாதகபந் தானே சொறிபோம்
மிரியார் குந்தற்கு விரைந்து.

குதிரை வாலியினால் மூலக்கடுப்பு, அதிசாரம, சுரவேகத்தால் வந்த நாவறட்சி, வாதம், பிரமேகம், இருமல், கட்டி, படுவன், கண்மங்கல், கோழை, அக்கினி மந்தம், வாதகோப தொந்தம், தினவு ஆகியவைகள் நீங்கும்.

### பவளக்குன்றிக்கொடியின் குணம்

பவளக் குன்றிக்கொடிக்குப் பற்றிநின்ற மேகங்
கவிழிரத்த பித்த சயமும் - நவமாஞ்
சொறி கரப்பான் புண்கிரந்தி தேலோர்கடுவன்
மதுகரப்பான் போமே மலைத்து.

சிகப்புக் குண்டுமணிக்கு ரத்தபித்தம்,காசம, தினவுடன் கூடிய கரப்பான், விரணம், சிரங்கு, கடுவன், அழுக்குக் கரப்பான் ஆகியவை போம்.

### முசுட்டையின் குணம்

மாதே முசுட்டையது வாதமோ டையத்தைத்
தீதே புரிநீரைத் தீர்க்குங்காண் - வேதனைசெய்
வன்மலத் தைத்தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்குநிசந் தான்.

முசுட்டையானது வாதம், கபம், பிரமேகநீர், தினவு, படை, சிரங்கு இவைகளைக் குணப்படுத்தி மலத்தை வெளியாக்கும். வறட்சியைப் போக்கும்.

### பொன்முசுட்டையின் குணம்

வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்திற்
சீத மகற்றுந் தினவடங்கு - மாதேகே
ளூண்டிக்கும் வாசனையா மோங்கிவள ரனலைக்
சுண்டிக்கும் பொன்முசுட்டை காண்.

வாதவலி, பித்தத்தினால் உண்டாகும் மயக்கம், கபம், தினவு, உட்சூடு ஆகியவைகளை நீக்கும். உட்கொள்வதற்கு மணமாக இருக்கும்.

### நஞ்சாறுப்பான் பூண்டின் குணம் இதுவே நஞ்சு முறித்தான்

தொடுநஞ்சு நாவாரத் துயக்குருஞ்சு மற்றோ
ரிடுநஞ்த் தாவர நஞ்சேறிப் - படுநஞ்சுங்
கூண்டுட னேகாதோ குயின்மொழியாய் நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீயெடுக்கும் போது.

நஞ்சறுப்பான் பூண்டினால் பாம்புகடி விஷம், நுகருதலால் ஏற்படும் விஷம், இடுமருந்தாலும், பாஷாணங்களினாலும் ஏற்பட்ட விஷம் ஆகியவை தீரும்.

### நீர்மேல் நெருப்பின் குணம்

வாதமகா ரோகம் வாரினுங் கறையல்கி
மீதடாவன்றி மிரே மேவுகினு - மோதரிய
சீர்மே னிலம்பரவு தெய்வ மடமயிலே
நீர்மே நெருப்பே நினை.

நீர்மேல் நெப்பினால் மகாவாத நோய், திமிர்வாத நோய் ஆகியவை குணமாகும்.

**முடக்கற்றான் குணம்**

சூலைப் பிடிப்பு, சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவளியுங் கனமலமுஞ் - சாலக்
கடக்கத்தா னோடிவிடுங் காகுனியை விட்டு
முடக்கத்தான் றன்னை மொழி.

இதனால் கீல்பிடிப்பு, சிணைப்பு, கிரந்தி, கரப்பான், வாதம், மலக்கட்டு ஆகியவை போகும்.

**கொல்லங்கோவையின் குணம்**

சூலைபாண்டு திரிதோஷ மக்கிவைப்பு கண்ட
மாலை குடலின்வலி மாகுஷ்ட - மாலவிஷ
முட்கரப்பான் மெய்யுரிப்பு முண்டோ
கொல்லங்கோவை
கைக்குள்ளிருக்க வின்னுங் காண்.

இதனால் குலைவலி, சரீரம் வெளிறல், பாண்டு, திரிதோஷம், அக்கிப்புண், உட்சூடு, கண்டமாலை, பித்தவாதம், குஷ்டம், கரப்பான் நமைச்சல் ஆகியவை போம்.

**கற்கோவை, வரிக்கோவை, அப்பக்கோவை, செங்கோவை, அருங்கோவை இவைகளின் குணம்.**

வீக்க மகற்றுநஞ்சை வீட்டுநீர்ப் பேதிதரும்
போக்கு மதுவையழற் புண்ணொழிக்குந் -
தேக்குறுகற்
கோவைவரிக் கோவையப்பைக் கோவை
செங்கோவைகருங்
கோவை முறையேயுணர் குணம்.

இனிப்புள்ள கற்கோவை சோபையையும், வரிக்கோவை விஷத்தையும், அப்பக்கோவை மேகவிரணத்தையும், நீக்கும் என்க.

### நரிப்பயற்றங் கொடியின் குணம்

நரிப்பயற் றங்கொடிக்கு நாடாது பித்தந்
தரிப்புற்ற ஐயமெல்லாந் தாமு - முருப்பொழிக்கு
மேவெட்டை பித்தவெட்டை மீளாக் கரப்பாணிவை
யாகம் விடுத்தோடு மறி.

இதனால் பித்தகோபம், கபநோய்கள், பிரமேகம், வெள்ளை, மேக வெட்டை, பித்தவெட்டை, மீளாத கரப்பான் ஆகியவை குணமாகும்.

### மூக்குரட்டையின் குணம்

சீத மகற்றுந் தினவடக்கும் காந்திதரும்
வாத வினையை மடிக்குங் காண் - பேதி
கொடுக்குமதை யுண்டாக்காற் கோமளமே பித்த
மடுக்குமே மூக்குறட்டை யால்.

மூக்குறட்டையினால் ஆமம் நமச்சல், வாதநோய் இவைகளைக் குணப்படுத்தி அழகையும், பேதியையும், பித்த பிணிகளையும் உண்டாக்கும்.

### வெள்ளைச்சாறடையின் குணம்

வித்திரிதி மூலம் விழிப்படல மார்புநோய்
தத்து சுவாசந் தனிக்கருப்பை - யுற்ற
கருச்சிதறச் செய்சூசி காவாதமும்போம்
விருச்சிகத்தின் பேரை விரி.

வெள்ளைச்சாறடையினால் விப்புறிக் கட்டி, மூலவாயுவு, கண்படல நோய், நெஞ்சு வல், சுவாசநோய், கர்ப்பத்தைச் சின்னப்படுத்துகின்ற சூசிகா வாதம் ஆகியவை போம்.

### பொன்னாங்காணியின் குணம்

சாசம் புகைச்சல் கருவிழிநோய் வாதமனற்
கூசும் பிலிசங்கு தாங்குரநோய் - பேசிவையா
வென்னாங்கர ணிப்படிவ மேமாஞ் செப்பலென்னை
பொன்னாங் காணிக்கொடியைப் போற்று.

இதனால் கண்களைப்பற்றிய வாத காசம், தும்பிரநோய், கிருஷ்ண மண்டல நோய், வாத தோடம், தேகச்சூடு, பீலிகம், மூலநோய் முதலிய நோய்களைக் குணப்படுத்திச் சரீரத்தில் பொன்னிறத்தை உண்டாக்கும்.

### புனற்றண்டின் குணம்

கபவான நாடிக் கமலங் காப்ப
ளிபமறு களத்தொலியு நீங்கரச் சுபமா
ரனற்றண்டைக் காட்டா வற்றசுர மேகும்
புனற்றன்டைச் சிந்திக்கும் போழ்து.

கட்டுவாதங் கொடிய கான்மேகங் கீல்கடொறு
முட்டு வாதஞ்சூலை மூடிரணம் விட்டு விடுஞ்
சொல்லவொண் ணாவின்ப சுகமளிக்கு மாரமிர்தே
நல்ல புனற்றண்டி னால்.

புனல் தண்டிற்குக் கபவாந்தி, நாசியில் விழுகின்றநீர், கரப்பான், குறற் கம்மல் பசி, சீதசுரம், கட்டுவாதம், வாதப்பிரமேயகம், சந்நிகவாதம், சூலை, கிரந்தி ஆகிய நோய்கள் போம்.

### அம்மான் பச்சரிசியின் குணம்

காந்தல் விரணமலக் கட்டுமேகத் தடிப்பு
சேர்ந்த தினவிவைகள் தேசம் விட்டுப் - பேர்ந்தொன்றா
யோடுமம்மாள் பச்சரிசிக் குண்மை யினத்துடனே
கூடுமம்மா ணொத்தகண்ணாய் கூறு.

அம்மான் பச்சரிசிக்கு எரிபுண், மலபந்தம், பிரமேக கசிவு, சரீரத்தடிப்பு, நமச்சல் போகும் என்க.

**சிவப்பு அம்மான் பச்சரிசியின் குணம்**

அரத்தவம் மான்பச் சரிசியெனு மூலிக்
குரத்த வன்மேக மொழியுங் - கரத்ததொரு
விந்துவு முண்டாகும் வெள்ளி பொடியா
பிந்து வினும் வாண்முகத்தா வெண்.

இதனால் வாத பிரமேகம், போகும், சுக்கில தாது விருத்தியாகும். இதனால் வெள்ளி பற்பம் ஆகும்.

**சிறுஅம்மான் பச்சிரிசியின் குணம்**

பாதுபுகல் வேனமுதா லங்கிகரு மெழுகாந்
தீதுபுரி மேகவெப்பந் தீருமினு - மோதுங்காற்
நேரம்மான் சீரமாக்குந் தின்னுதையஞ் செம்மைநிறச்
சீரம்மான் பச்சரிசிச் சீர்.

சிறு அம்மான் பச்சரிசியால் சாதிலிங்கம் மெழுகாகும். மேக உஷ்ணம் நீங்கும். நல்ல பசுவின்பாலுக்கு ஒப்பாகும். இதனை அதிகாலையில் உட்கொள்ள சிறப்புடையதாகும். இதனால் பவழத்தைப் பற்பம் செய்யலாம்.

**பொடுதலையின் குணம்**

பொடுதலையின் பேருரைத்தாற் போராமப் போக்கு
மடுதலைச்செய் காரமு மடங்குங் - கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்யுரைக்கும் வாழ்த்து.

பொடுதலையால் சீதபேதி, இருமல், அதிசாரம், இருதயநோய்கள், கபப்பிரமேகம், கபநோய்கள், வாதநோய் ஆகியவைபோம். சரீரம் வலுக்கும்.

**கொத்தான் குணம்**

சித்த ரறிவார் சொறிகுழால் நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டக்காற் - சுத்தப்
பிறமேக முட்கிரிச்சம் பித்த மிளைப்பு
மறுமே தவறா தறி.

அதிகக் குளிர்ச்சியையுடைய கொத்தனுக்கு, ஒழுக்குப் பிரமேகம், மூத்திரக்கிரிச்சம், பித்தநோய், அயர்ச்சி ஆகியவை நீங்கும்.

**நல்ல நெருஞ்சிலின் குணம்**

நல்ல நெருஞ்சிலது நாளுங் கிரிச்சரத்தை
வல்ல சிரமனலை மாற்றுங்காண் - மெல்லியலே
மானிலத்திற் கல்லடைப்பும் வாங்காத நீர்கட்டுங்
கூனுறுமெய் வாதமும் போக்கும்.

மேகவெட்டை நீர்ச்சுறுக்கு வீறுதிரி தோஷம்புண்
வேகசுர தாகவெப்பை விட்டோட்டும் - போகந்
தருஞ்சின் மதலைமொழித் தையலே நல்ல
நெருஞ் சிலதனை நினை.

நல்ல நெருஞ்சில் சொட்டு மூத்திரம், சுரவெப்பம், அஷ்மரிநோய், நீரடைப்பு, முடவாதம், பிரமேகநோய், பிரமேகவெள்ளை, மூத்திரக்கிரிச்சரம், திரிதோஷம், விரணம், சுரதாகம், உஷ்ணம் ஆகியவைகளை நீக்கும்.

**யானை நெருஞ்சிலின் குணம்**

மேகத்தைப் போக்கிவிடும் வெண்குஷ்டந் தானொழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண் - மேவிதனில்
தேனையரும் பாகைத் திருத்துங் கிளிமொழியே
யானை நெரிஞ்சி லது.

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும்
மானே யெலும்புருக்கி மாற்றுங்காண் - மேனிதனி

லுள்ள வெரிச்ச லுழலையுட் டாகமொடு
தள்ளுபித் தழும்போகுந் தான்.

யானை நெருஞ்சியினால் வெள்ளை வீழல், வெண்குட்டநோய், அஷ்மரி, அஷ்விநோய், தேகஎரிவு, உழலைநோய்,தாகம், பித்தமயக்கம் ஆகியவைகளைப் போக்கும்.

## செப்பு நெருஞ்சில் குணம்

செப்பு நெருஞ்சில் திரிதோஷம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டுங்காண் - செப்பரிய
சுக்கில மேகம்போக்குந் தொல்லை யனல்மாற்று
மிக்கு மருந்தாம் விரி.

செப்பு நெரிஞ்சிலினால் திரிதோடம் சுரம், சுக்கிலமேகம் நீடித்த உட்சூடு ஆகியவை நீங்கும், உயர்ந்த மருந்தாகும்.

## பேய்ப்புடலின் குணம்

பித்தசுரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்ற மசூரி யழற்றாக - நித்தியமுங்
காய்ப்புடலை யண்ணக் கவிழ்க்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு.

பேய்ப்புடலினால் பித்தகபசுரங்கள், காமாலை, மசூரிகை, தாகம், மயக்கம் இவைகள் போம்.

## வல்லாரையின் குணம்

அக்கர நோய்மாறு மகலும் வயிற்றிழிவு
தக்கவிரத் தக்கடுப்புத் தானேகும் - பக்கத்தி
வெல்லாரையும் மருந்தென றேயுரைத்து
நன்மனையுள்
வல்லாரையை வளர்ந்து வை.

வல்லாரையினால் அக்கரநோய், மலக்கழிச்சல், இரத்தக்கிராணி, கடுப்புக்கழிச்சல் ஆகிய நோய்களை பெருக்கும்.

*குறிப்பு:-* வெள்ளை, வெட்டை, சிறுநீர்க்கடுப்பு, எரிச்சல் முதலியவற்றையும் குணப்படுத்தி ஆண்மையைப் பெருக்கும்.

### பிரமியவழுக்கையின் குணம்

*கீலின் பசையாற் கிளைத்த வலிவீக்கங்*
*காலின் பிடிப்பொடுகை காலெரிவு - மேலிலெழு*
*வாதத்தா நோவு மலக்கட்டுஞ் சோபையும்போஞ்*
*சீதத்தாஞ் சப்தலைக்குத் தேர்.*

கீல்களின் கபம், வலி, வீக்கம், கால்பிடிப்பு, கை, கால் எரிவு, வாதக்கடுப்பு, மலப்பந்தம், சோபை ஆகியவை குணமாகும்.

### கையாந்தகரையின் குணம் - இதுவே கரசனாங்கண்ணி கரியாலை

*குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை*
*யுரற்பாண்டு பன்னோ யொழிவு - நிரற்சொன்ன*
*மெய்யாந் தகரையொத்த மீளியண்ணு நற்புலத்துக்*
*கையாந் தகரையொத்த கால்.*

கையாந்தகரையினால் சுர சாந்தநோய், காமாலை, குட்டம், சோரை, பாண்டு, பல்நோய் ஆகியவை போம். மேலும் சரீரத்திற்குப் பொற்சாயலையும், பலத்தையும் உண்டாக்கும்.

### பொற்றலைக்காய்ந்த கனாயின் குணம்

*பொற்றலைக்கையாந்தகரை பொன்னிற மாக்கு முடலை*
*சுந்தமுறக் கட்குச் சுகங்கொடுக்குஞ் சிற்றிடையாய்*

சிந்தூரங் கட்சுரகுஞ் சிந்தைதனைத் துலக்கு
முந்திவளர் குன்ம மொழிக்கும்.

பொற்றலைக் கையாந்தகரை சரீரத்திற்கு பொற் சாயலையும், கண்களுக்கு ஒலியையும், புத்திக்கு தெளிவையும் உண்டாக்கும். குன்மக் கட்டியை ஒழிக்கும். இதன் சாறு பற்பல செந்தூரங்கள் செய்ய உதவும்.

**விஷ்ணுக்கிரந்தியின் குணம்**

செய்ய மாலின்கிராந்தி தீராத வல்லரசுத்
தைய மறுக்கு மனற்றணிக்கும் - பையவரு
காச மிருமலையுங் கட்டறுக்கும் வாதந்தா
லுசலா டும்பிணி போக்கும்.

விஷ்ணுகிரந்திக்கு கொடிய சுரத்தாற் கபம், உட்சூடு, கோழை, இருமல், வலிக்குற்றத்தால் பிறந்த பிணிகள் ஆகியவை நீங்கும்.

*குறிப்பு:-* இப்பூண்டைக் குடிநீரிட்டுக் கொடுத்துவர மேற்கண்ட நோய்கள் குணமாகும்.

**தொட்டாற் சுருங்கியின் குணம்**

மேகநீரைத் தடுக்கு மேதினியிற் பெண்வசிய
மாகவுன் னிநல்கு மதுவுமன்றித் - தேகமிடைக்
கட்டாகக் காட்டுகின்ற காலைத்துரத்திவிடுந்
தொட்டாற் சுருங்கியது சொல்.

இது நீரிழிவைப் போக்கும். பெண்களைத் தன்வழிப்படுத்தும், உடலில் ஏற்படக்கூடிய கட்டி, கழலை நோயை உண்டாக்குவதான ஓடுவாயு என்னும் நோயைக் குணப்படுத்தும்.

*குறிப்பு:-* இதன் இலையையும், வேரையும் உலர்த்திப் பொடித்து, பாலில் 4 முதல் 8 கிராம் எடை சேர்த்துக் கொடுக்க நீரிழிவு நீங்கும்.

## கொட்டைப்பாசியின் குணம்

மேகமறுந் தீபனமாம் வெஞ்சரமு மேகிவிடுந்
தேகமதிற் றேமலினஞ் சேருமோ - பாகுமொழி
மின்னே வெகுகுணஞ்செய் மென்கொட்டைப் பாசியினாற்
றுன்னுகரப் பானும்போஞ் சொல்.

மிக்குக்கு வானகலும் வெய்ய கிரந்தியறுந்
தக்க ஐயதாபந் தணியுங்காண் - மிக்கலின்
மட்டைப் பாய்ச்சுங்கூந்தல் மாதே யுலகத்திற்
கொட்டைப் பாசிப்பெயரைக் கூறு.

கொட்டைப்பாசியினால் பிரமேகம், பித்தசுரம், தேமல், கரப்பான், சுக்கிருமல் கிரந்தி, கபவாதம் இவைகளைப் போக்கி பசிதீபனத்தை உண்டாக்கும்.

## கானாம் வாழையின் குணம்

கானாம் வாழைக்குமுலைக் கண்குழிப்புண் ணாறிவிடு
மானாலும் போக மதிகரிக்கு - மானேகேள்
ஐயம் விளையு மனற்றணியு நீங்காத
பையுதிர மாறுமுன்னிப் பார்.

கானாம் வாழையினால் ஸ்தனவிப்புரிதி சுரம், இரத்தபேதி ஆகியவை நீங்கும். சுக்கில விருத்தி, கபப்பெருக்கம் உண்டாகும்.

## சிறுப்புள்ளடியின் குணம்

மாந்தகணம் போராமல் வன்மந்த நீக்கிவிடு
மேய்ந்த முலைப்பாலு மொழுங்காண் - மோந்தே
சிறுபுள் ளடிதுதையாத் தேமலர்பூங் கோதாய்
சிறுபுள் ளடியைநிதஞ் சேர்.

சிறுபுள்ளடியினால் எண்வகை மாந்தம், சீதக்கட்டு, வாதநீர் ஆகியவை நீங்கி வற்றிய முலைப்பாலையும் அதிகரிக்கச்செய்யும்.

### உப்பிலாங்கொடியின் குணம்

பிள்ளை மந்தபேதி பேராத சுரூட்டையும்போம்
வெள்ளைசெய்யத் தங்கத்தை மென்மலாற் - றெள்ளைபுரி
வேளுநடுங்குவடி வேலைநிகர் கூர்விழியாய்
நாளுமுப் பிலாங்கொடியினால்.

உப்புலாங் கொடியினால் குழந்தைகளுகுக ஏற்படக்கூடிய மாந்தமும், அதிசாரமும், நீங்காதசுரமும் குணமாகும். இதன் சாற்றினால் தங்கத்தைப் பற்பமாக்கலாம்.

### பம்பந்தாராவின் குணம்

பாலிக் கொங்கைகளிற் பாலாங் கருப்பைப்பை
மூலியிறை யழுக்கு முன்பிழியும் - மேலெழுந்
தப்பமெனத் தங்குஞ் சலனமரோ சகம்போம்
பம்பநதார யருந்திப் பார்.

பம்பந்தராவினால் பிரசவ காலத்தில் ஏற்படும் அழுக்கையும், வாதத்தடிப்பையும், அரோசிகமும் போம். ஆனால் பால் வற்றிய பெண்களுக்கு பாலை சுரக்கச்செய்யும்.

## புல் வகைகள்

### சதுரக்கள்ளியின் குணம்

கரப்பான் சொறியுங் கடியும் கபமு
முரப்பாங் குன்மத்தையு மொழிக்கும் - நிரைப்பான
பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகிற்
சாது சதுரக்கள்ளி தான்.

சதுரக்கள்ளியினால் கரப்பான், சொறி, நமைச்சல், கடி, கபநோயையும், வாதகுன்மத்தையும் குணப்படுத்தும். பேதியை உண்டாக்கும்.

## நாக்தாளி கள்ளியின் குணம்

செந்து விஷங்கள் செடிவிஷங் களைத்தொலைக்கு
தொந்திடச் செய்வாதந்தை தூறுங்காண் - முந்தவெகு
வேகமாலிக்கும்வடி வேல் விழிமாதே பனைதல்
நாகதாளிக் குணத்தை நாடு.

நாகதாளிக் கள்ளியினால் ஜந்துக்களின் விஷங்களையும் தாவரங்களின் விஷத்தையும், பெரிய வாதநோய்களையும் போக்கலாம்.

## பேய்க்கற்றாழை செங்கற்றாழை இவைகளின் குணம்

பேய்க்காற்றாழைக்குப் பெருமேக மும்மெரிவு
மேய்க்கக் கூடாவழலு மேருங்காண் - தாய்க்குநிக
ராஞ்சிவந்த கற்றாழை யங்கங் குளிர்விக்கும்
பாஞ்சயத்தைப் பொன்னாக்கும் பார்.

பேய்க்காற்றாழைக்கு அதிநீரும், சரீர எரிவும், சுரமும் நீங்கும்.

செங்கற்றாழை உட்சூட்டைக் குணப்படுத்தும். இரும்பைத் தங்கமாக்கும்.

## கற்றாழையின் குணம்

பொல்லாமேகங்கபம் புகழுச்சூலை குஷ்டரச
மல்லார் பத்தாம்பகந் தரங்குன்ம - மெல்லாம் விட்
டேகு மரிக்கு மெரிச்சற் சிரிச்சரமு
மாகு மரிக்கு மருண்டு.

நறுங்கற்றாழைக்கு வாதமேகம், கபமேகம், கிரிமிகுற்றம், பெருவியாதி, மூலம், உன்மத்தம், பகந்தரம், குன்மம், வயிற்றுநோய், தினவுள்ள பித்தகிரிச்சரம் ஆகியவைகள் போகும் குமரிக்கற்றாழைக்கு.

### கள்ளிமுளையான் குணம்

வாய்குப் புளித்திருக்கும் வன்பசியை யுண்டாக்கு
மேய்க்குமுடல்வாதத்தை யேறுபித்தஞ் - சாய்க்குந்
தெள்ளிய வின்பமொழி தெய்வ மடவனமே
கள்ளி முளையானருந்திக் கண்.

புளிப்பு சுவையையுடைய கள்ளி முளையான் அதிகமான பசிதீபனத்தையுண்டாக்கும். வாத பித்த தோடங்களை குணப்படுத்தும்.

### மேகநாதப் பூண்டின் குணம்

இரத்த பித்தரோக மெரிசருவ காள
முரத்த வுன்மாதமிவை போட்டு - மிரத்தனப்புண்
வாரணிவான் கொங்கை மடவார் தொழுந்திருவே
தாரணி வாழ்மேக நாதம்.

மேகநாதப் பூண்டினால் இரத்தப் பித்தத்தையும், தாவர சங்கம விடங்களையும் உன்மத்த நோயையும் போக்குமென்க.

### அறுகம்புல்லின் குணம்

அறுகம்புல் வாதபித்த ஐயமோ டீளை
சிறுக வறுக்குமின்னஞ் செப்பி - லறிவுதருங்
கண்ணோ யொடுதலை நோய் கண்புகை யிரத்தபித்த
முண்ணோ யொழிக்கு முறை.

அறுகம்புல்லினால் திரிதோடத்தினால் ஏற்படக்கூடிய கபத்தையும், கண்நோயையும், தலைநோய்களையும், கண்புகைச்சல், இரத்தபித்தம், மருந்து சூடு இவை யாவற்றையும் போக்கும். சில விஷக்கடிகளையும் குணப்படுத்தும்.

## சோதிப்புல்லின் குணம்

காசப் படலங் கருவித்தோஷம் பில்லம்
பூசாந்திரஞ் சுதையொண் பூசுக்கிரன் - கூசலென
வேதியவிந் நோய்முழுது மொண்விழியை விட்டகலுஞ்
சோதியெனும் புல்லுக்குச் சொல்.

சோதிப் புல்லினால் விழிகாசப் படலம், கருவிழி நோய்கள், கண்களில் சதை வளர்ச்சி, கண்பூ, வெள்ளைப் புள்லி, கண்கூசுதல் ஆகியவைகள் போகும்.

## தருப்பைப்புல்லின் குணம்

தோடஞ் சிறியவிடஞ் சேராக்கப் பெருக்கஞ்
சாடுஞ் சகலசுரதாகமிவை - யோடு
மரிப்பு மகலு மடல்வேள்வி கட்காந்
தருப்பை யெனும்புல்லுக்கு தான்.

தருப்பைப்புல்லினால் சப்த தோடங்களையும், அற்ப வீரியம், விடம், கபஆதிக்கம், சர்வசுரம், தாகம், நமைச்சல் ஆகியவை போகும். யாகங்களுக்கும் ஆகும்.

## மாந்தப்புல், காவட்டம் புல் இவைகளின் குணம்

மாந்தப்புற் பேதிகட்டு மந்தமசீரணத்தைச்
சாந்திசெய்யும் வந்தசுரத்தைப் போக்கு - மேத்திழையே
காவட்டம் புற்குக் கணமாந்தம் பேதியறு
நாவொட்டிக் காய்ச்சலும்போ நாடு.

மாந்தப்புல் மலப்பேதி, அக்கினி மந்தம், அசீரணம், கபசுரம் ஆகியவைகளைப் போக்கும்.

காவட்டம் புல்லிற்கு கணமாந்தம், அதிசாரம், நாவரட்சிக் காய்ச்சல் ஆகியவை விலகும்.

### பீனசப்புல்லின் குணம்

பீநசப்புல் லுண்டாயிற் பேர்ந்துவிடு மாந்தமெலாம்
பீநசமுந் தீரு பெருமூலந் - தானொழியும்
மைய வினைசிதையு மக்கரநோ யுந்தீரு
மெய்யா யிதனை விளம்பு.

பீனசப்புல்லினால் எண்வகை மாந்தம், நாசி நோய்கள், மூலம், கபதோடங்கள், அக்கரநோய் ஆகியவைகள் குணமாகும்.

### வாசனைப்புல்லின் குணம்

வாசனைப்புல் வாதபித்த மாற்றுவது மன்றிமிகு
சூசனையாய் வந்தசுரம் போக்கும் - பேசரிய
ஐய மறுக்கு மரோசகத்தை விண்ணேற்றுந்
துய்ய பசியைக்கொடுக்குஞ் சொல்.

வாசனைப்புல்லினால் வாத, பித்தநோய்கள், சுரம், கோழை, உணவில் வெறுப்பு ஆகியவைகளை நீக்கிப் பசித்தீபனத்தை உண்டாக்கும்.

### பேய்ப்புல்லின் குணம்

இறுத்து ரோகம்போ மெலிவிஷம் போமெய்யி
லுறுத்து கின்றசூலை யொழியுங் - கறுத்தவளி
யேய்ப்புற்ற கண்ணா யெழில்வாரை வாயுண்டாம்
பேய்ப்புல்லை கண்டறிந்த பேர்க்கு.

பேய்ப்புல்லினால் மார்பு நோய், எலிவிடம், வாயுகுத்தல், சூலை ஆகிய நோய்கள் குணமாகும்.

### பருங்காளான் குணம்

கயங்கிரந்தி தாகங் கரக்குமண் டம்விக்கல்
மயங்குவிக்கும்பித்த மடல்வாதம் - பயங்கரத்தைச்

செய்யவரு பேதி திட்டிமந்த நோய்களுண்டாம்
வெய்யவரு மாம்பியால் விள்.

பருங்காளானால் காசநோயும், விரணமும், தாகசுரமும் நீங்கும். குடல்விருத்தி, விக்கல்நோய், பித்தநோய், வாதம் அதிசாரம், கண் புகைச்சல் ஆகியவைகள் உண்டாகும்.

**புற்றுக்காளான், வளைக்காளான், பொறிக்காளான், வரிக்காளான் இவைகளின் குணம்**

புற்றுக் காளான்வலையைப் போலும் பொறிவரியை
யுற்றெழு காலனென் றுரைக்குமவை - முற்று
பழுதின்று நற்குணமும் பண்ணுவன மாந்தர்
தொழுதின்று முண்பரெனச் சொல்.

புற்றுக்காளான், வலைக்காளான், பொறிக்காளான், வரிகாளான் இந்நான்குவகைக் காளான்களை உட்கொண்டால் எவ்வித தீங்கையும் விளைவிக்காது. மேகசம்மந்தமான நோய்களை எளிதில் குணமடையச் செய்யும். உட்சூட்டைக் குணப்படுத்தும்.

## மரத்தின் சமூலவகை

**அரசமரத்தின் சமூல குணம்**

அரசம்வேர் மேல்விரண மாற்றுமவ் வித்து
வெருவவருஞ் சுக்கிலநோய் வீட்டுங் - குரல்வறளுந்
தாகமொழிக்குங் கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேகமுந் தோஷம்போக்கு மெய்.

அரசமரத்தின் வேர்ப்பட்டை சருமவிரணத்தையும், விதை சுக்கிலக் கெடுதியையும், கொழுந்து தொண்டையை வறட்டுகின்ற தாகத்தையும், மகரந்தம் தேக உஷ்ணத்தையும் போக்கும்.

### ஆலமரத்தின் சமூல குணம்

சொல்லுகின்ற மேகத்தைத் துஷ்டவகக் கடுப்பைக்
கொற்றுகின்ற நீரிழிவைக் கொல்லுங்கா -
ணல்லாவின்
பாலும் விழுதும் பழமும்விதை யும்பூவு
மேலு மிலையுமென விள்.

வடமரவீழ் பல்லிறுக்கு மாமேகம் போக்கு
மடர்கொழுந் திரத்தப் போக்காற்றும் - படரதிலாம்
புல்லுருவி யென்றெய்திற் பொல்லா விடபாக
வல்லுருவி லுண்மை மதி.

ஆலமரத்தின் பால், விழுது, பழம், விதை, பூ, பட்டை, இலை இவைகள் மேகவயிற்றுக் கடுப்பு, மேகநீர் இவைகளைக் குணப்படுத்தும்.

ஆலம்விழுது பற்களை இறுகச்செய்யும், பிரமேகத்தைப் போக்கும், கொழுந்து, இரத்தாதி சாரத்தை விலக்கும், இம்மரத்தில் முளைத்த புல்லுருவியினால் விடபாக நோய்கள் குணமாகும்.

### வில்வமரத்தின் சமூல குணம்

பல்லவம் பூபிஞ்சின் பழமியாவும் முறையே
வல்லவம் மேகம் மந்தமாகுன்மஞ் - சொல்லுகின்ற
நோக்கமருள் விந்துநட்ட நூறுமடுத் தவர்கட்
காக்கமருள் வில்லுவத்தி லாம்.

வில்வமரத்தின் தளிர் நீர்மேகத்தையும், பூ மந்தத்தையும், பிஞ்சு குன்மத்தையும், பழம் கண் இருளையும், பிசின் விந்து நட்டத்தையும் போக்கும்.

**பூவரசமரத்தின் சமூல குணம்**

நூறாண்டு சென்றதொரு நூன்பூ வரசம்வேர்
தூறாண்ட குஷ்டைத் தொலைக்குங்காண் - வீறிப்
பழுத்தயிலை விதைமேற் பட்டை யிவைகண்டாற்
புழுத்தபுண் விரோசனமும் போம்.

குட்டங் கடிசூலை கொல்லும் விஷபாகந்
துட்ட மகோதரமுஞ் சோபையொடு -
கிட்டிமெய்யிற்
றாவுகரப் பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங் காய்ப்பட்டைப் பூ.

நூறுவருடத்திய பூவரசம்வேர் நாட்பட்ட குட்டத்தையும், பழுப்பிலை, விதை, பூ , பட்டை, காய் இவைகள் கிருமி, விரணம், பேதி, பெருவியாதி, காணாக்கடி, விடபாகம், பெறுவயிறு வீக்கம், கரப்பான், சிரங்கு, நீர்மேகம் ஆகியவைகளைப் போக்கும்.

இதன் விதையிலிருந்து எடுக்கும் எண்ணெயினால் தோல் சம்பந்தமான சகல நோய்களையும் குணப்படுத்தும்.

**இலந்தை மரத்தின் குணம்**

வேருக் காயாசம் விலகும் பசியுண்டாஞ்
சீரொத் திடுமிலைக்குச் சீழ்மூலஞ் - சோரிவிழல்
மேவெரிச் சலுங்கடுப்பு மேகபித்த மும்போகுந்
தாவும் விழியா யிலந்தை.

இலந்தமர வேருக்கு அயர்ச்சி நீங்கும், சீரண நீர்களைச் சுரப்பிக்கச் செய்யும். இலை சீழ்மூலத்தையும், இரத்த அதிசாரம் சரீர எரிச்சல், வயிற்றுக்கடுப்பு, பித்தமேகம் ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

**காட்டிலந்தை மரத்தின் சமூல குணம்**

விறகுணுமெண் ணெய்க்கனலா மெய்யெரிவு
நீக்குஞ்
சிறியவிலைக் குக்கடுப்புத் தீரும் - முறிக்கு
அழைத்திடு பித்தும்போ மதன்கனி யடைக்குத்
தழைத் திடுமிக்காட்டி னிலந்தை.

காட்டிலந்தை மரம் தினமும் உட்கொள்ளும் குளிர்ச்சியுடைய எண்ணெய்களைக் காய்ச்சுவதற்கு விறகாகும். இலைக்கு சரீர எரிவும், கொழுந்திற்கு வயிற்றுக் கடுப்பும், பழத்தின் அடைக்குப் பித்தமும் நீங்கும்.

**நறுவிலி மரத்தின் சமூல குணம்**

நறுவிலி யிலைக்கிரந்த நாசமவ் வேர்க்கு
மறுவி லெலும்புருக்கி மாறு நறுவிலியின்
றன்பழ மிரத்தபித்தஞ் சார்மேக முந்தீர்க்கு
மின்புர யாவர்க்கு மிசை.

நறுவிலி இலைக்கு மூல இரத்தமும், வேருக்கு எலும்புருக்கியும், பழம் இரத்த பித்தத்தையும், பிரமேகத்தையும் போக்கும்.

**நுனாமரத்தின் சமூல குணம்**

பட்டை கரப்பானொடு பாரச் சிலேஷ்மசுர
மொட்டிநின்ற புண்கிரந்தி யோட்டுங்காண் -
மட்டலரை
யேந்து நுனாவி னைலைமாந்தம் தீர்த்துநல்ல
காந்திதரு மேகமடுங் காண்.

நுணாப்பட்டைக் கரப்பான், கபச்சுரம், புண், கிரந்தி இவைகளையும் இலை மாந்தம், மேகம் ஆகியவற்றைப் போக்கும்.

## முருங்கைமரத்தின் சமூல குணம்

பிஞ்சாற் றிரிதோஷம் பெரும் பூவாற்போக
மிஞ்சுவிழிக்குக் குளிர்ச்சியுஞ் சேரும் -
பிஞ்சிலைவெப்
பாற்றுந்தோ நஞ்சறுக்கு மவ்வேர்வாதச் சிலத்தை
மாற்று முருங்கை மரம்.

முருங்கைப் பிஞ்சினால் திரிதோடத்தையும், பூவினால் புணர்ச்சியில் வன்மையும், கண்களுக்கு குளிர்ச்சியையும் உண்டாக்கும். இவை சுரத்தையும், பட்டைவிஷத்தையும், வேர் வாத நோயையும் குணப்படுத்தும்.

## காட்டுமுருங்கை மரத்தின் சமூல குணம்

தின்றாற் கசப்பாகுந் தீயாங்கொடு விஷத்தைக்
கொன்றுவிடுங் கட்குங் குளிர்ச்சிதரு - மென்றுமைய
மோட்டும் வேர்பூவிலைகா யுற்றபிசினும் பிஞ்சுங்
காட்டுகைப் புளமுருங்கை காண்.

கசப்புத் தன்மையுள்ள காட்டு முருங்கைவேர் மகா விஷத்தை நீக்கும். பூ கண்களுக்கு குளிர்ச்சியைத் தரும். இலை, காய், பிசின், பிஞ்சு என்னுமிவை கபநோய்களைக் குணப்படுத்தும்.

***குறிப்பு:-*** இதன் பூவின் சாற்றினால் “லிங்கம்” பற்பமாகும்.

## பசுமுன்னை மரத்தின் சமூல குணம்

முன்னைவேர் வாதமுதிரேப்பந் தான்போக்கு
மன்ன மிறக்கு மதனிலைதான் - சொன்ன
வியல்வாத மெண்பதையு மில்லையெனச் செய்யு
கயல்பொருவும் கண்ணாய் கருது.

பசுமுன்னைவேர் வாதாதி நோய்களைப் போக்கும். இலை உணவை உட்கொள்ளச் செய்வதுடன் 80 வகை வாதநோய்களையும் குணப்படுத்தும்.

**மாதுளை மரத்தின் சமூல குணம்**

மாதுளைவேர் பிஞ்சிவைக்கு வாந்தியதி சாரம்போந்
தாதுவுமா மக்கனிக்குத் தாகம்போஞ் - சூதைநிகர்
வன்னமுலை யாயிகைக்காய் மாமலர்
களுக்குமுனஞ்
சென்னவை யெலாம்போகுஞ் சொல்.

மாதுளைவேர், பிஞ்சு இவைகட்கு லவனமும், அதிசாரமும் நீங்கும். இதன் பழத்தை உட்கொண்டால் தாகம் போகும். வீரிய விருத்தியுமுண்டாக்கும். இலை, காய், மலர் இவைகளுக்கு மேற்கூறப்பெற்ற நோய்கள் அனைத்தும் குணமாகும்.

*குறிப்பு:-* பழம் அதிவியர்வையைப் போக்கும், பிஞ்சு, சீத இரத்த பேதியைக் குணப்படுத்தும்.

**உசிலமரத்தின் சமூல குணம் - இதை சீக்கிரன் என்பர்**

அளுமந்த நெய்ச்சிக் கழன்மேக நீங்குநிலங்
கொள்ளு தயிலக்கறைக்கு கொள்விறகாம் -
விள்ளுமதி
லோதியடை வாளின்மென் றொறுகுழலே கலிகை
யாதி யடைபிசின் கட்டை.

உசிலமரத்தின் வேர் அள்ளு மாந்தத்தையும், இலையின் தூள் எண்ணெய்ப் பசையையும், பிசின் பித்த மேகத்தையும் நீக்கும். கட்டை தினமும் உட்கொள்ளும் எண்ணெய்களைக் காய்ச்சுவதற்கும் விறகாகும்.

### தாளிப்பனையின் சமூல குணம் - இதுவே கூந்தற்பனை

எழுத்திற் கிடமா யிருக்கு நெடுங்காலம்
வழுத்தில் தன்மாழை மடலாற் - கழித்திலுறுஞ்
சோறு மலமிருக்குந் தூறுபானைப் பிழியா
மூறும் உடலுக்கிந்தாளிக் கோர்.

தாளிப்பனையின் மடலாகிய ஓலை எழுத்திற்கிடமாக நீடித்திருக்கும். இதன் சோறு மலத்தைக் கட்டும். இதன் கள்ளு உடலை வளர்க்கும்.

### தாழை மரத்தின் சமூல குணம்

மடிச்சோற்றான் மங்கையர்க்கு மாதாந்த பூப்பாம்
வெடிச்சபூ நற்பசி விளைக்குந் - தடிச்சமுலை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்குவிக்குஞ் சோபையெனு
மக்குலத்தை நீக்கு மறி.

தாழையின் சோற்றினால் பெண்களுக்குச் சுரோணிதத்தை அதிகப்படுத்தி மாதவிலக்கைச் சரிசெய்யும். பூதீபாக்கினியைத் தரும். விழுது விந்துவையும், இரத்தத்தையும் அதிகப்படுத்தும். சோபை நோய்களைக் குணப்படுத்தும்.

### வாழைமரத்தின் சமூல குணம்

நற்கதலிக் கந்தமன னாரார்தண் டோகுடலிற்
சிக்குமயிர்தோனஞ்சுந் தீர்த்திடுங்காண் - கொக்குறுபூ
மேகமொழிக்கும் பிஞ்சால் வெங்கடுப் போகுங்காயாற்
றேக முழுதுங்காலந் தேர்.

வாழைத்தண்டு, கிழங்கு இவ்விரண்டும் குடலிற் சிக்கிய முடியை விடுவிக்கும், பூ பிரமேகத்தைப் போக்கும். பிஞ்சினால் மூலக்கடுப்பும் தீரும். காயினால் வாயுவை அதிகரிக்கச் செய்யும்.

### நாட்டுவாழை, கல்வாழை இலைகளின் சமூல குணம்

நாட்டுக் கதலியது நாளுந் துவர்ப்பதனாற்
றீட்டுபித்த மையஞ் சேருங்காண் - நீட்டுகரு
வாழை திரிதோஷ மாற்று மதன்கிழங்கா
லாழுஞ் சுரம்விருத்தி யாம்.

துவர்ப்புள்ள நாட்டு வாழையினால் பத்திய கபதோடங்கள் அதிகரிக்கும். கருவாழை, வாதாதி திரிதோடங்களையும் நீக்கும். இதன் கிழங்கினால் அடங்கிய சுரமும் அதிகரிக்கும்.

## செடியின் சமூலவகைகள்

### ஆவாரை பஞ்ச அங்கத்தின் குணம்

மேகத்தினாலே விளைந்த சலம் வெட்டையன
லாகத்தின் பண்ணோ யருங்கிரணி - போகத்தால்
ஆவாரைப் பஞ்சகங்கொ ளஸ்திசுரந் தாகமும்போ
மைவாரைக் கண்மட மாதே.

ஆவாரைச் செடியின் வேர், இலை, பூ, காய், பட்டை என்னும் ஐந்துவகை அங்கங்களாலும் பிரமேக மூத்திரம், வெள்ளை உட்சூடு, ரணம், வாதகிராணி, மூலாதாரச் சுரம், தாகம் ஆகியவைகள் போகும்.

### சங்கஞ்செடியின் சமூல குணம்

வீக்கங் கரப்பான் விதமாகக் கிரந்திகுன்ம
மூக்குமிகு சூலைவாய் வோடுபித்தந் - தாக்குவிஷம்
வீறுமோ கண்டுலங்கும் வீசுபசி ரத்தமுண்டாங்
கூறுசங்கு வேரிலை கட்கு.

சங்கச்செடியினால் சோகை, கரப்பான், கிரணம், தாகம், குன்மம், கீழ்வீக்கம், வாதநோய், பித்தநோய், நஞ்சுகள்

விலகும், கண் பார்வையையும், அதிகப் பசியையும், இரத்த விருத்தியையும் உண்டாக்கும்.

### கருப்புப் பூலாஞ்செடியின் சமூல குணம்

காட்டமதில் வீரியமாங் காணவிலை மூலரத்த
லோட்ட மறிக்கு முதிரமுனைக் - கூட்டமெழச்
சித்தம்வைக்கி லல்வண்ணஞ் செய்யுங் கருங்கனிதா
தைத்தமுற்ற பூலாவி லாம்.

காட்டிலுள்ள கருப்புப் பூலாக்குச்சியினால் பல் துலக்கினால் வீரிய விருத்தியுண்டாகும். இலை, மூலரத்தப் பெருக்கைத் தடுக்கும். பழைய ரோமங்களை உதிரவொட்டாமல் செய்யும்.

*குறிப்பு:-* இதன் பழத்தினால் தலை வழுக்கைநோயைக் குணப்படுத்தும்.

### கண்டங்கத்திரியின் குணம்

வேரிலைப்பூ காய்பழமவ் வித்துமேற் பட்டையுழிவ்
வூரிலிருக்க வுடற் கைப்பும் - நீராய்
வரும் பீநசகயஞ் சுவாசமுந் தங்காவே
யருங் கண்டங்கத்திரியுள் ஆய்.

கண்டங்கத்திரியின் வேர், இலை, பூ, காய், பழம், விதை, பட்டை இவைகளால் நீரேற்றம், நீர் பீனிசம், ஈளை, இளைப்பு, சுவாசம், சுவாச காசம் ஆகிய நோய்கள் குணமாகும்.

### மணத்தக்காளியின் சமூலக் குணம்

காய்க்குக் கபந்நீருங் காரிகையே யவ்விலைக்கு
வாய்க்கிரந்தி வேக்காடு மாறுங்காண் - தீய்க்கு
ஞணக்கடு வற்றலுறு பிணியோர்க் காகும்
மணத்தக் காளிக்குள்ள வாறு.

மணத்தக்காளி காய்க்குக் கபநோய்களும், இலைக்கு நாக்குப் புண்ணும், வேக்காடும் நீங்கும். இதன் வற்றல் நோயாளிகளுக்கு ஆகும். அதிசாரப் போக்கைக் குணப்படுத்தும்

**நாயுருவியின் சமூல குணம் இதுவே அபமார்க்கி விருத்தம்**

*மலிகாரங்அ கைப்புள்ள அபமார்க்கியின் வேரால்*
*வசியமுண்டா*
*மிலைமூல வுதிரமந்தம் பேதிகபம் வியர்வுதந்தி*
*யிறங்குமேகம்*
*மலையேறும் படிபுரியு முள்ளரி பசிமாற்று மதன்சமூலம்*
*பலமாதர்க் குள்ளமுக்கை நீக்கும்வங்கசிந்தூரம்*
*பண்ணுமாதே.*

நாயுருவியின் வேரால் முகம் வசீகரமடையும், இலையினை ரத்தமூலம், கபநோய், வியர்வை, தந்தி பிரமேகம் இவைகளைக் குணப்படுத்தும். இதன் விதைப் பசியை நீக்கும். இதன் சமூல சாம்பல் பிரசவித்த பெண்களுக்குள்ள உதிரச்சிக்கலை நீக்கும்.

**செந்நாயுருவியின் குணம்**

ஓதமுறு சோபை யுயர்பாண்டுவைப் போக்குந்
தீதுறுகா மாலை நோய் தீர்க்குமினார் - சூதகநீர்
பொய்ப்புறு காலந்ததனைப் பொங்குவிக்கும்
காரமொடு
கைப்புறு செந்நாயுருவி காண்.

கசப்பும், கைப்புமுள்ள செந்நாயுருவியின் சமூலம் எகிறு வீக்கம், பாண்டு, காமாலை இவைகளை நீக்கும். பெண்களின் ருதுகால சுரோணிதத்தை வழக்கப்படி உண்டாக்கும்.

# கொடியின் சமூல வகைகள்

## தூதுவேளையின் சமூல குணம்

தூதுபத்திரி யூண்சுவையாக்கும் பூ
தாதுவைத்தழைப் பித்திடுங்காயது
வாதபித்தகபத்தையு மாற்றும்வே
ரோதும்வல்லிபன்னோயு மொழிக்குமே.

தூதுவேளையின் இலை சாப்பாட்டிற்குச் சுவையைத் தரும். பூ சுக்கில தாதுவை அதிகரிக்கச் செய்யும். காய், திரிதோடங்களைப் போக்கும்.

## சுரையின் சமூல குணம்

சுரையிலையோ சோபையொடு தோன்றுநீர்
சட்டைத்
தரையிலையோ வைக்காமற் கண்ணுஞ் -சுரையினது
தண்டோ பித்தத்தைத் தரிக்கவொட் டாதடிக்குங்
கண்டோ ருரைப்பரிதைக் காண்.

சுரையின் இலையானது வீக்கத்தையும், மூத்திரச் சிக்கலையும் விலக்கும். மேலும் கொடிய பைத்திய நோய்களையும் போக்கும்.

## நாளையிலையின் சமூல குணம்

நாளையிலை தன்குணங்கே ளாரியர் வயற்றி
லூருளிரத் தக்குன்ம மொழிக்கும் - நாளைக்
கிழங்கு மேகமொடு கீறு கரப்பான் சகல
புழுங்கு புண்மூலமிவை போம்.

நாளையிலை பெண்களின் இரத்தக்குன்ம கட்டியை நீக்கும். கிழங்கிற்குப் பிரமேகம், கரப்பான் அழிவிரணம், மூலம் ஆகிய நோய்கள் குணமாகும்.

### வெண்குன்றியின் சமூல குணம்

வீரியத்தை யுண்டாக்கும் வெண்குன்றி வித்ததன்வேர்
பாரிய தாகத்தைப் பறக்கடிக்குஞ் - சீரியவோர்
சிற்றிலையி னாற்சுளுக்குந் தீருங் கொடிக்காயாற்
சுற்றிலைப்பேய்க் கூட்டமெனச் சொல்.

வெண்குன்றியின் விதை சுக்கிலத்தை அதிகப்படுத்தும், வேர் தாகத்தையும் இலை சுளுக்கையும், காய், கொடி, கபகாசங்களையும் நீக்கும்.

## மரத்தின் கிழங்குவகைகள்

### பனங்கிழங்கு ஒடிகிழங்கு இவைகளின் குணம்

பனங்கிழங்கா லத்திவெப்பும் பன்மேகமும்போ
மினுங்குளிர்ச்சி யோடழகு மெய்துந் - தினநமையும்
புண்ணுங் கரப்பானும் பூரிக்கு மெய்யெலா
நண்ணும் ஒடிகிழங்கி னால்.

பனங்கிழங்கினால் மூலாதாரச்சூடு, பித்தமேகம் முதலியவை குணமாகும். சரீரத்துக்குக் குளிர்ச்சியையும், அழகையும் உண்டாக்கும். ஒடிக்கிழங்குகளுக்கு நமைச்சலும், விரணமும், கரப்பானும் உண்டாகும்.

### நிலப்பனைக்கிழங்கின் குணம்

மேகவனற் றணியும் வெண்குஷ்டந் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே - போகாத
சூலைமே கங்களொடு துன்னுகரும் புள்ளியும்போஞ்
சால நிலப்பனைக்குத் தான்.

நிலப்பனைக் கிழங்கினால் மேகம், மூத்திர வெப்பம், வெள்ளை, வெட்டை, குட்டம், விலாக்குத்துதலும்,

ஒழுக்குப் பிரிமேகமும், நீலாஞ்சன நோய்களும் குணமாகும். புணர்ச்சியில் இச்சை அதிகம் உண்டாகும்.

### மரவள்ளிக்கிழங்கின் குணம்

பித்தங் கலந்த பெருவாயு வைக்கூவு
மெத்தவனல் மந்தத்தை மேலெழுப்புஞ் - சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ லேந்திழையே யிந்த
மரவள்ளிக் கந்தமென வை.

மரவள்ளிக்கிழங்கு பித்தவாத தொந்தத்தையும், அக்னி மாந்தத்தையும் உண்டாக்கும்.

## செடியின் கிழங்கு வகைகள்

### மெருகன் கிழங்கின் குணம்

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப்போக்குந்
துருவு குன்மமூலந் துடைக்கும் - பெருமீளை
யஸ்திசுரம் ஐயறுக்கு மங்கங் குளிர்விக்கு
மத்திமுலை மாதே யறி.

மெருகன் கிழங்கு, கட்டிப் பிரமேகம், வயிற்றுநோய், கபநோய், மூலதார சுரம், கபஆதிக்கம் ஆகியவைகளைப் போக்கும். உடலுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.

### அமுக்கிராக்கிழங்கின் குணம் - இதுவே அசுவகெந்தி

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகபஞ் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு - விஞ்சி
மூசிவுரு தோஷமும்போ மோகமன லுண்டா
மசுவ கந்திக்கென் றறி.

அமுக்கிராக்கிழங்கினால், காசம், வாதசூலை, வாதகரப்பான், பாண்டு, சுரம், வீக்கம், சர்வதோடங்கள்

ஆகியவை போகும். மேலும் பெண்களின் மேல் இச்சையையும், பசியையயும் உண்டாக்கும்.

### பேதிக்கிழங்கின் குணம் - இதுவே ரேவல்சின்னி

பேதிதனை யுண்டாக்கும் பித்தந் தனையெழுப்புந்
தோதகக் குடல்தன்னைச் சுத்திசெய்யு - மோதியகால்
பேதிக்குந் தாதுவைப் பெருக்கிவிடு மெப்போதும்
பேதிக் கிழங்கதனைப் பேசு.

பேதிக்கிழங்கினால் பேதியை உண்டாக்கும். பித்தத்தை அதிகரிக்கச்செய்யும், குடலைச் சுத்திசெய்து வீரிய விருத்தியை உண்டாக்கும்.

### சேவகனார்க் கிழங்கின் குணம்

கபரோகந் தன்னைக் கடலில் விழச்செய்து
மபமிருத்துவாம் விஷத்தை மாற்று - மிபமுலவும்
காவக நாடாக் கருங்குயிலே கண்டுரைத்த
சேவகனார் கிழங்க நேர்.

சேவகனார் கிழங்கு, கபநோய்களையும், விஷங் களையும் போக்கும்.

### பூமிச்சருக்கரைக்கிழங்கின் குணம்

மேகமுறு முள்ளுருக்கு வெட்டை யனற்றணியும்
போகுமே மூலம் புகலக்கேள் - பாகுமொழிப்
பொன்னனையாய் பூமிச் சருக்கரைக் கிழங்குக்கு
வன்னவுடல் பருக்கும் வாழ்த்து.

பூமிச்சருக்கரைக் கிழங்கிற்குப் பிரமேகம், உடலை உருக்கக்கூடிய வெட்டைநோய், உட்சூடு, சுரம், மூலம் ஆகிய நோய்களைப் போக்கும்.

*குறிப்பு:-* உடலைப் பூரிக்கச் செய்து விந்துவைப் பெருக்கி ஆ,ண்மையையும் உண்டாக்கும்.

**முள்ளங்கிக்கிழங்கின் குணம்**

வாதங் கரப்பான் வயிற்றெறிவு சூலைகுடல்
வாதங் காசம்ஐயம் வன்றலைநோய் - மோதுநீர்க்
கோவைபன்னோய் பல்சித்தி குன்மமிரைப்
புக்கடுப்புஞ்
சாவு முள்ளங்கிக்கந்தத் தால்.

முள்ளங்கியினால் வாதநோய்கள், கரப்பான், வயிற்றிலெரிச்சல், குத்தல், குடல்விருத்திநோய், இருமல், கபம், தலைவலி, நீரேற்றம், பல்நோய், பல்சிலந்தி, சுவாசம், மூலக்கடுப்புகள் போகும்.

**மஞ்சளின் குணம்**

பொன்னிற மாகும்மேனி புலானாற்ற மும்போகும்
மன்னு புருஷன் வசியமாம் - பின்னியெழும்
வாந்திபித்த தோஷமையம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்த நறுமஞ்ச டனக்கு.

தலைவலி நீரேற்றஞ் சளையாத மேக
முளைவுதரு பீநசத்தி னூடே - வலிசுரப்பு
விஞ்சு கடிவிஷமும் வீறுவிர ணங்களும்போ
மஞ்சட் கிழங்குக்கு மால்.

உடலைப் பொற்சாயலாக்கிப் புலால் நாற்றத்தைப் போக்குகின்ற மஞ்சளினால் புருஷவசியமும், பசியும் உண்டாகும். அம்மை, பித்த கபவாத நோய்கள் தலைவலி, சலதோஷம், பிரமேகம், நாசி நோய்கள் ஐந்துவகை வலிகள் வீக்கம் வண்டுகடி, விஷம், பெருவிரணம் ஆகியவை குணமாகும்.

### மரமஞ்சளின் குணம்

அழன்ற கணமூல மருசி யுடனே
யுழன்ற கணச்சுரமு மோடுஞ் - சுழன்றுள்ளே
வீறுசுர முந்தணியும் வீசும்மர மஞ்சளுக்குத்
தேறு மொழியனமே செப்பு.

மரமஞ்சளுக்கு முக்குகணம், மூலநோய், அரோசிகம், கணச்சுரம், உட்சுரம் ஆகியவைகள் விலகும்.

### கஸ்தூரி மஞ்சளின் குணம்

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமந் தாக்கினியு நாசமாம் - வண்மலர்த்த
கொத்தே றளகமின்னே சுக்கிலமும் புத்தியுமாங்
கஸ்தூரி மஞ்சளுக்குக் காண்.

கஸ்தூரி மஞ்சளுக்கு பெருவிரணம், கரப்பான், கிருமிநோய், அக்கினி மந்தம் ஆகியவை போம். ஆனால் வீரியமும், அறிவும் அதிகப்படும்.

### இஞ்சியின் குணம்

இஞ்சியதனுக் கிருமலைய மோக்காளம்
வஞ்சிக்குஞ் சன்னிசுரம் வன்பேதி - விஞ்சுகின்ற
சூலையனும் வாதம்போந் துண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் விளம்பு.

இஞ்சிக்குக் காசம், கபம், வெள்ளோக்காளம், சன்னிபாத சுரம், அதிசாரம், வாதசூலை, வாதநோய் ஆகியவை குணமாகிப் பசியை உண்டாக்கும்.

### காறு கருணைக்கிழங்கின் குணம்

கரப்பான் சிரங்குசொறி காணாக் கிரந்தி
யுரப்பாக்கு மூலநோ யோட்டும் - நிரைப்பான

மந்தமொடு கோழைதரு மாறாத் தினவளிக்கு
மந்தமிருங் காறுகருணை.

காறுகின்ற கருணைக்கிழங்கு கரப்பான், பொடிச் சிரங்கு, சொறி, கிரந்தி, மூலநோய்கள் அனைத்தும் குணமாகும். ஆனால் மந்தம், கோழை, நமைச்சல், வலி முதலியவைகளை உண்டாக்கும்.

**காறாக்கருணைக்கிழங்கின் குணம்**

ஞாலமதிற் கபநோய் நாடாது வாதமறு
மூலமுளை யிரத்த முன்பொழியு - மோலமிட்டு
மாறாக் கனல்மந்த மாறுமதி தீபனமாங்
காறாக் கருணைதனைக் கண்டு.

காறாக்கருணைக்கிழங்கினால் கபநோய், வாதநோய், இரத்த மூலமுளை, அக்கினிமந்தம் ஆகியவை நீங்கும். பசியை உண்டாக்கும்.

**காட்டுக்கருணைக்கிழங்கின் குணம்**

மேகமணுகாது வெகுதீ பனமாகுந்
தேகமதில் மூலமுளை சேராவே - போகாச்
சுரதோஷம் போங்கரப்பான் றோன்றும் வனத்திற்
பரவு கருணைக்கிழங்காற் பார்.

காட்டுக் கருணைக்கிழங்கிற்கு வாதம், பிரமேகம், முளை மூலம், சுரதோடம் ஆகியவை போகும். மிகுந்த பசியும், கரப்பானும் உண்டாகும்.

**சேம்புக்கிழங்கின் குணம்**

வாதகபத்தை யுள்ளே வைத்திருக்குந் தின்றக்காற்
கோதிலாத் தொண்டை தனில்கோழை - மாதரசே
யுண்மருந்தி னற்குணம தோடுஞ்சேம்புக் கிழங்கைத்
தண்மேக சாந்தியென்பர் தாம்.

வாததோடத்தையுடைய சேப்பங்கிழங்கை உட்கொண்டால் தொண்டையில் கோழைகட்டும், நல்லமருந்தின் குணங்களைக்கெடுக்கும். இது சுபத்திரவியமாகையால் மேகசாந்தி என்பர்.

## பிரப்பங்கிழங்கின் குணம்

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
யுந்துசூலைப் பிடிப்பை யோட்டுங்காண் - வந்து
சுரப்புந் திறப்புமெனக் காட்டு நகைமாதே
பிரப்பங் கிழங்கதனைப் பேண்.

பிரப்பங்கிழங்கு பல்நோயையும், வாதநோயையும், சூலைப்பிடிப்பையும், கபதோடங்களையும் போக்கும்.

## சாறடைக்கிழங்கின் குணம்

சீதந் சலதோஷந் தேமல் தழும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேக - மோதரிய
காசமுத னோயெல்லாங் கான்சா றடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில்.

காட்டுச்சாறடை கிழங்கால் சீதளம், நீர்ஏற்றம், தேமல், தடிப்பு, குன்மம், வாதவலி, சிரங்கு, மேகம், பிரமேகம், இருமல் ஆகிய நோய்கள் தீரும்.

## கோவைக்கிழங்கின் குணம்

முத்தோஷந் சூலைபித்த முடுகுஷ்டஞ் சிங்குவைநோ
யெத்து சுவாசங் கபமினிப்பு - யித்தனையுங்
கூட்டோடகற்றுங் குளிர்ச்சியொடு காரத்தைக்
காட்டிய கோவைக்கிழங்கு காண்.

சீதளமும் வாதமுடைய, கோவைக்கிழங்கினால், திரிதோடம், சந்துகளில் குத்தல், பித்தகோபம், சருமகுட்டம், வாதநோய், இரைப்பு, கோழை, மதுபிரமேகம் ஆகிய நோய்கள் நீங்கும்.

## கொல்லன் கோவைக்கிழங்கின் குணம்

துட்டவிஷம் பாண்டுவெப்ப சூலைவாதங் கிரந்தி
குட்ட மரிப்பக் கொண்டகுநோய் கெட்டகண்ட முத்தோஷ
மாலைபோங் கொல்லன்கோ வைக்கிழங்கால்
வேலை போம்பாரில் விளம்பு.

சீந்திற் கிழங்கருந்த தீபனமா மேகவகை
போந்த வுதிரபித்தம் பொங்குசுர - மாந்த
மதிசாரம் வெய்யகண மாம்பல நோயோடே
கதிவிஷமுங் கெட்டுவிடுங் காண்.

கொல்லன் கோவைக்கிழங்கினால் மகாவிஷம், தேகவெளுப்பு, சுரம், வாதசூலை, சிரங்கு, பெருவியாதி, நமச்சல், வக்கிரநேத்திரம், குடல்வலி, கண்டமாலை, திரிதோடம் ஆகிய நோய்கள் தீரும்.

## பொற்சீந்திற் கிழங்கின் குணம்

பொற்சீந்தி லின்கிழங்கு பொங்கு மதுமேக
மெச்சுகய ரோக மிளைப்புவிஷம் பச்சையா
யோடிரத்த பித்த முயர்சுரந் தனைக்களையுந்
தேடறிய மேனிதருஞ் சேர்.

பொற்சீந்திற் கிழங்கானது மதுமேகம், காசம், கபநோய்கள், இளைப்பு, பாம்பின் விடங்கள், இரத்த பித்தம் ஆகியநோய்களைக் குணப்படுத்திக் காயசித்தி பண்ணும்.

## கருடன்கிழங்கின் குணம் - இதுவே பேய்சீந்தில்

அரையாப்பு வெள்ளை யகலாக் கொறுக்கை
கரையாத கட்டியிவை காட்டினார் வறையிற்
றிருடரெனச் சொல்லும்விஷஞ் சேர்ப்பாம்பு மஞ்சுங்
கருடன் கிழங்கதனைக் கண்டு.

கருடன் கிழங்கு, அரையாப்புக்கட்டி, வெள்ளை, வெட்டை, கொறுக்கு நோய்கள் கரையாத கட்டிகள், விரணம் ஆகியவைகள் குணமாகும். பாம்புகள் நடுங்கும்.

**கூகைக்கிழங்கின் குணம்**

மேனியிடும் வாய்க்கு மிருதுவா மாக்கியுண்ணத்
தானிருமல் வெப்பதிக தாகமிவை யேனிருக்கு
மம்பே ழிளங்கிழங்கி தியாவர்க்கு மாணப்பூங்
கொம்பே கூகைக்கிழங்கைக் கூறு.

நீர் நிறைந்துள்ள இனம் கூகைக்கிழங்கை சமைத்து உட்கொள்வோமானால் சரீரம் வன்மையுறும். மேலும் சுரமும், தாகமும் நீங்கும்.

**புளிநரளைக்கிழங்கின் குணம்**

புளிநரளை யின்கிழங்கோ பொன்போலச் செம்பைத்
தெளிவாகச் சுத்தியது செய்யும் - வெளியான
மூலமுளை யறுக்கு முந்துசுவைக் கேதுவுமாங்
கோல மடமயிலே கூறு.

புளிநரளைக்கிழங்குச் செம்பைச் சுத்தி செய்து தங்கம் போல் புனிதமாக்கும் வெளிமுளை மூலத்தைப் போக்கும். உணவிற்குச் சுவையைத் தரும்.

**மாகாளிக்கிழங்கின் குணம் இதனை மாவலி பருநன்னாரி என்பர்**

அனலையதி பித்தத்தை யாற்றும் பசியா
மனலை யெழுப்புங் கபமறுக்கு - மானிலத்தார்
வேகாளத்தைத் தணிக்கு மென்கொடியே காட்டிலுறை
மாகாளிக் கந்தமிது வாம்.

மாகாளிக் கிழங்கினை மாவலிக்கிழங்கு என்றும் மலை நன்னாரி என்னும் பரு நன்னாரி என்றும் கூறுவர். இதனால் உட்சூடு, பித்தம், கபநோய், வாதத்தோடம் ஆகியவைகளை நீக்கி சாடராக்கினியைப் பெருக்கும்.

### தண்ணீர்விட்டான் கிழங்கின் குணம்

நீரிழிவைப் போக்கு நெடுநாட் சுரத்தையெலா
மூரைவிடுத் தோட வுறுக்குங்காண் - நாரியரே
வெண்ணீர்பெய் சோமனோய் வெட்டை
யனற்றணிக்குந்
தண்ணீர் விட்டான் கிழங்கு தான்.

தண்ணீர்விட்டான் கிழங்கை சதாவேரி என்றும் கூறுவர். இதனால் வெகு மூத்திரம், பழைய சுரம், சோம நோய், வெள்ளை, உட்சூடு ஆகியவைகளைப் போக்கும்.

### தாமரைக்கிழங்கின் குணம்

கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித்தம் போக்கு
மெண்ணுங் குளிர்ச்சிதரு மேந்திழையே - மண்ணுலகிற்
றாமரைப்புண் ணும்போக்குந் தொந்திக் கடுப்பகற்றும்
தாமரை கந்தமது தான்.

தாமரைக் கிழங்கினால் கண்களுக்கு ஒளியையும், குளிர்ச்சியையும் தரும். பித்த காசம், சரீரத்தைப் பற்றியிருக்கும் தவளைச்சொறி, வயிற்றுக்கடுப்பு ஆகியவைகளைப் போக்கும்.

### செவ்வல்லிக்கிழங்கின் குணம்

செம்பைக் களிம்பகற்றிச் சிந்தூர மாக்கிவிடும்
வெம்பு பித்தமேகம் விலக்குங்கா - ணம்புவியி
லல்லிற் கறுத்தகுழ லாரணங்கே நற்சிவப்பா
மல்லிக் கிழங்கென் பது.

சிவந்த அல்லிக்கிழங்கு செம்பின் களிம்பை நீக்குவதுந்தவிர, செம்பைச் செந்தூரமாக்குவதற்கும் உதவும். பித்த பிரமேகத்தையும் குணப்படுத்தும்.

### நெய்தற்கிழங்கின் குணம்

கண்ணுய் குளிருமக்கி காணாது காந்துபித்த
மெண்ணுந் தோஷம்மேக மேகுங்காண் - பெண்ணே
வயிற்றுக் கடுப்புரத்த மாறு நெய்தலுக்குப்
பயித்தியம் போம் விந்தூறும் பார்.

நெய்தற்கிழங்கிற்கு அக்கினிப்புண், பித்தயெரிச்சல், முத்தோடம், பிரமேகம், இரத்தக்கிராணி, பித்தநோய் ஆகிய இவைகள் போகும். கண்களுக்கு குளிர்ச்சியையும், சுக்கில விருத்தியையும், அதிகரிக்கச் செய்து பைத்தியத்தை குணப்படுத்தும்.

### செங்கழுநீர்க் கிழங்கின் குணம்

கண்ணுங் குளிர்ந்திருக்குங் காசம்போம் பித்தமறு
மெண்ணரியமேக மிடையுங்கான - பெண்ணேகேள்
பொங்கமொடு மாதைப் புணர்ந்தவழ லுந்தணியுஞ்
செங்கழுநீர்க் கிழங்காற் றேர்.

செங்கழுநீர்க் கிழங்கினால் இருமல், பித்தநோய், சகலமேகங்களும், புணர்ச்சியின் வெப்பம் ஆகியவை நீங்கும். கண்களுக்குக் குளிர்ச்சியையும் கொடுக்கும்.

### கொட்டிக்கிழங்கின் குணம்

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடன்
ஒட்டிநிறை மேக மொழிக்குங்காண் - வட்டமுலை
மானே யகக்கடுப்பும் வந்தவழ லுந்தணிக்குந்
தானேயிதை யறித்து சாற்று.

கொட்டிக் கிழங்கினால் தேமல், பிரமேகம், சரீரக்கடுப்பு, உட்சூடு ஆகியவைகள் தீரும். இதனைக் குளிர்ச்சியுடையது என்றும் கூறுவர்.

## நிலப்பூசனிக் கிழங்கின் குணம்

மெய்யிறுகுந் தாதுகளும் விறுமதி தேசசுமாம்
நொய்ய வுடலம்பருக்கு நுண்ணறிவாம் - பைய
மலப்பூச லேகு மலர்த்திருவே நல்ல
நிலப்பூசி னிக்கிழங்கு னீ.

நிலப்பூசனிக் கிழங்கினால் தளர்ந்த சரீரம் இறுகப்படுவதுமன்றி இளைத்த சப்த தாதுக்களையும் செழுமை அடையச்செய்து சரும தாதுவிற்கு ஊட்டத்தைக் கொடுத்து, நுட்ப அறிவையும், ஒளியையும் உண்டாக்கும். மலப்பந்தத்தைக் குணப்படுத்தும்.

## பருங்கிழங்கின் குணம்

பருங்கிழங் கொன்றெய்திற் பறையறவும் வாத
மருங்கணையா தெவ்விடமு மாறுங் - கருங்கலென
வீக்குமடல் வீக்கமொடு மேகப் பிணியுமறு
மாங்குயிலே நாளும் வழுத்து.

பருங்கிழங்கினால் வயிற்றில் எரிச்சலையும், இறைச்சலையும் உண்டாக்குகின்ற வாதகுற்றத்தையும், சகல விஷயங்களையும், கபச்சோபை பிரமேகம், வீக்கம் ஆகியவை நீங்கும்.

## சின்னிக்கிழங்கின் குணம்

சன்னிக் கிழங்குசிறு சிரங்குபுண் வளர்க்கு
முன்னிலது ஹூன்பன்றிக் கொவ்வுங்காணன்னமே
மூல மறுக்குமினு மோதிரத்தஞ் சீழ்மாற்றுந்
தால மறியுணிசந் தான்.

பன்றியின் மாமிசத்திற்கு ஒப்பான சின்னிக்கிழங்கு பொடிக்கிரந்தியையும, புண்களையும் உண்டாக்கும். மூல நோயையும், இரத்தக்கிராணியையும் நிவர்த்தி செய்யும்.

**பெருவள்ளிக்கிழங்கின் - குணம் இதுவே ஆள்வல்லி**

நாதகபம் பித்தமொடு மாஞ்லம் வாதகுன்ம
மோதுபல நோய்மந்த முண்டாகும் - போதின்
மருவள்ளிக் கொண்டழகின் மாதே யுலகிற்
பெருவள்ளி யின்கிழங்காற் பேசு.

பெருவள்ளிக்கிழங்கினால் முக்குற்றத் தொந்தம், வாதமூலம், வாத குன்மம், அக்கினி மந்தம் ஆகிய நோய்கள் உண்டாகும்.

**சிறுவள்ளிக்கிழங்கின் குணம்**

மந்தமிகுந் தீபனம்போ மாறாக் கரப்பானுஞ்
சிந்தமிகு கபமுஞ் சேருங்காண் - தொந்தமா
மூல முளைவரு முட்டைச் சிறுகிழங்கா
லேலவளக மின்னே யெண்.

சிறுவள்ளிக் கிழங்கினால் மந்தம், கரப்பான், கபவிருத்தி, முளைமூலம் ஆகிய நோய்களை உண்டாக்குவதுடன் இரத்தத்தைக் கெடுக்கும்.

**காய்வள்ளிக்கிழங்கின் குணம் இதுவே வெற்றிலை வள்ளி**

அக்கினிவெப் பையடக்கு மென்பார் வாதமொடு
நொக்கிலதி புண்சிரங்கைத் தூண்டிவிடும் - மிக்குபசும்
வேயையுடைத் தோளனங்கே வெற்றிலையாம் வள்ளியெறுங்
காயை யுடைவள்ளியது காண்.

காய் வள்ளிக்கிழங்கு வாதநோய்களையும், விரணங் களையும், சிரங்கையும் உண்டாக்கும். உஷ்ண சாந்தியைக் கொடுக்கும். ஆனால் கருத்தடைக்கு உயர்ந்த மருந்தாகக் கொள்ளலாம்.

### சருக்கரைவள்ளிக் கிழங்கின் குணம்

உள்ளிற்கோ ணன்மருந்தை யும்முறிக்குஞ் சர்க்கரையாம்
வள்ளிக் கிழங்கதிக மதிதந்தா - னுள்ளில் முளை
மூலம் விளையுநித மோடிரைச்ச லுண்டாகுங்
கோல வயிறுங்கடுக்கும் கூறு.

சர்க்கரை வள்ளிக் கிழங்கு உயர்ந்த மருந்துகளின் குணங்களைக் கெடுக்கும். மூலமுளையையும், குடலிரைச்சலையும், கிரகணியையும் விளைவிக்கும்.

## புல்லின கிழங்கு வகைகள்

### அறுகங்கிழங்கின் குணம்

ஆறா வழலெல்லா மாறுமுத் தோஷமது
வீறா திருக்குநல்ல மேனிதரும் - மாறாக்
கூடியமா லங்கலணி காரளக மின்னே
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு.

அறுகன் புல் கிழங்கினால் தணியாத சூடும். முத்தோடத்தினால் உண்டாகும் நோய்களும் தீரும். சரீரவனப்பையும் உண்டாக்கும்.

*குறிப்பு:-* இதனைக் குடிநீரிட்டுக் கொடுத்தால் சில்விடக்கடிகள் அரிப்பு, தடிப்பு முதலியவை குணமாகும்.

### கோரைக்கிழங்கின் குணம்

சீதசுரந் தீர்க்குஞ் செம்புனற்பித் தம்போக்கும்
வாதசுரந் தணிக்கும் வையகத்தில் - வேதைசெய்ய
வந்தபிணியை யெல்லாம் வாட்டும் முத்தக்காசு
கொந்துலவும் வார்குழலே கூறு.

அதிசாரம் பித்த மென்றாக மையங்
குதிவாதஞ் சோபக் கொடிய - முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தாலு மவ்வல்லவர்க்
கெலாங்குளத்துக்
கோரைக் கிழங்கைக் கோடு.

முத்தக்காசு என்று சொல்லக்கூடிய கோரைக் கிழங்கினால் நளிர்சுரம், இரத்த பித்தம், வாதசுரம், பேதி, பயித்திய தோடங்கள், பித்ததாகம், கபநோய், குதிகாலைப் பற்றிய வலிநோய்கள், மூர்ச்சை, திரிதோட வாந்தி ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

## மருட்கிழங்கின் குணம்

தொண்டைக் கட்டையுந் தொலையு மகோதரமும்
பண்டைப் பல்வீக்கம் பறக்குங்காண் -
கெண்டைவிழி
மானே மருட்கிழங்கால் மாறுமூலங்க ளெல்லாந்
தானே பசியெழும்புந் தான்.

மருட்கிழங்கு நெஞ்சில் ஏற்படும் கபக்கட்டு, பெருவயிறு, சோகை நோய்கள், மூலநோய்கள் ஆகியவற்றைக் குணப்படுத்திப் பசியை உண்டாக்கும்.

## வெங்காயத்தின் குணம்

வெப்ப மூலங்கிரந்தி வீறிரத்த பித்தமுடன்
செப்புநா அக்கரந் தீராத்தாகம் - வெப்புக்
கடுப்பறு மந்தஞ்சன்னி காசம் வயிற்றுப்பல்
தடிப்பேறும் வெங்காயந் தால்.

வெங்காயத்தால் சரீர உஷ்ணம், மூலம், சிரங்கு, இரத்தநோய்கள், பித்தம், தாகம், உஷ்ணபேதி இவை நீங்கும். அக்கினி மந்தம், சன்னிபாதம், இருமல், வயிற்றுப்பிசம் ஆகியவை உண்டாகும்.

**நரிவெங்காயத்தின் குணம் - இதுவே காட்டீருள்ளி**

நஞ்சோடு சீதகபம் நாடா திரைப்புமறும்
பஞ்சாகமூல பகந்தரம் போம் - பஞ்சணைசேர்
வீட்டுள்ளிருக்கும் வினோத மடமயிலே
காட்டுள்ளி யின்கிழங்கைக் கண்டு.

நரிவெங்காயத்தால் பாம்பின் விஷங்கள், சீதளத்தால் உண்டாகிய கோழை, சுவாசம், மூலகபநோய்கள் ஆகியவை போகும்.

*குறிப்பு:-* இதனால் யானைக்கால் நோய் குணப்படும். மேலும் இதன் சாற்றினால் இரசத்தைக் கட்டலாம்.

**கிட்டிக்கிழங்கின் குணம்**

கிட்டிக் கிழங்கால் கிளர்தீ பனமுண்டா
மெட்டிக் கிழமேக மேகுங்காண் - துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நிர்த்த மயிலே நினை.

கிட்டிக்கிழங்கினால் நாள்பட்ட மேகமும், கபநோயும் போகும். மிக பசியும், பித்த காந்தியும் உண்டாகும்.

**கிழங்குகளின் பொது குணம்**

கிழங்குவகை யின்பேரைக் கேண் மூலத்துண்மை
முழங்கும் வாதத்தின் முரசம் - வழங்குகின்ற
சூரணக் கிழங்குகளைத் துய்த்தார்பேர் சொல்லிற்
சீரணக் குடும்பமங்கே சொல்.

கிழங்கு வகைகளால் மூலவாயு விருத்தியாகும். கருணைக் கிழங்குகளால் மூலநோய்கள் நீங்கும்.

# மரத்தின் வேர் வகைகள்

## வில்வமரத்தின் வேர்க்குணம்

வில்லுவத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்
சொல்ல வொண்ணாப்பித்தந் தொடர்சோபை வல்லகப
தாகசுர நீரேற்றஞ் சன்னியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே விள்.

அக்கினி மாந்தம் மரோசியதி சாரம்விக்கல்
நிற்கரிய பித்தசுரம் நீள்சாந்த - கட்கதோ
யாதிபநோ யேகு மழகோடு புஷ்டியுண்டாங்
கோதில் வில்வவேரதனைக் கொள்.

வில்வவேரினால் வாதகுன்மம், கபஆதிக்கம், பித்தசோகைக் கபத்தால் வந்ததாகம், சலக்கோவை, சன்னிபாதம், சரீரக்கடுப்பு, மந்தாக்கினி, உஷ்ணபேதி, விக்கல் முதலியநோய்கள் குணமாகும்.

## பாதிரிமரத்தின் வேர்க்குணம்

பாதிரியின் வேரினாற் பாரமது மேகம்போ
மோதுகரப் பானுழலை யோடிவிடும் - மாதேகேள்
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவு
நிண்ணய மாய்ப்போகு நிசம்.

மேகத் தால்வந்த மிகுபிளவை மாவிரணம்
போகத் தால்வந்து பொருமூல - மாகத்தில்
வந்தசொறி யோடுகப வாதமந்த மும்போகும்
கொந்தடரும் பாடலத்தாற் கூறு.

பாதிரி வேருக்கு மது மூத்திரக்கரப்பான், உழலை, கண், காது, கை, கால் இவைகளைப் பற்றிய எரிச்சல், மேகப்பிடகம், பெருவிரணம், மூலநோய், புடை, கபவாத தொந்தம், அக்கினி மாந்தம் போகும்.

### சண்பகமரத்தின்வேர்க்குணம்

தீராத வுட்டினத்தைத் தீர்க்குஞ் சுரம்போக்கும்
நேரே பசியெழுப்பு நிச்சயமே - யோருங்கால்
பண்புறுகண் போடத்தைப் பற்றறுக்கும் வாசமுள்ள
சண்பக மரத்தின்வேர் தான்.

சண்பக மரத்தின் வேரினால் உஷ்ண சுரம், கண்நோய்கள் ஆகியவை குணமாகி பசியை உண்டாக்கும்.

### மாமரத்தின் வேர்க்குணம்

சீதரத்தப் போக்கைச் சிக்கெனவே தான்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பை போக்குங்கா - ணோதுகின்ற
வாந்தியையுந் தீர்க்கும்வெளி மாமரத்தின் வேர்ப்பட்டை
பூந்துகிலின் மாதே புகல்.

மாமரத்தின் வேர், பட்டையினால், சீதரத்தபேதி, வயிற்றுக்கடுப்பு, வாந்தி ஆகிய நோய்கள் குணமாகும்.

### இலுப்பை மரத்தின் வேர்க்குணம்

புண்ணும் புறையுமறும் போதத் துவர்ப்பாகு
மெண்ணு மகக்கடுப் பிருக்குமே - பெண்ணேகேள்
நீரிழிவு மேகும் நெடுமோமை மூலத்தாற்
போடா கடுப்பிரத்தம் போம்.

மந்த மரோசி மகாசூலை சரவசுரம்
விந்துநஷ்டந் தாகமொடு மெய்யுளைப்பும் - முந்த
அலுப்பைப் பெற்றேகு மளகத்திற் காகா
விலுப்பைக்குச் சூடதிக மெண்.

இலுப்பை மர வேரினால் விரணம், புரை, வயிற்றுக் கடுப்பு, அதிமூத்திரம், இரத்தக்கிராணி, அக்கினி மாந்தம், அருசி, வாதசூலை, சகல சுரம், தாகம், சரீர அயர்வு ஆகியவை நீங்கும். சுக்கிலத்தை அதிகரிக்கச் செய்யும். தலை முடிக்கு ஆகாது. ஏனெனில் அதிக சூடுடையது.

### மருதோன்றி மரத்தின் வேர்க்குணம்

சோணித தோஷமெலாஞ் சொல்லாம லேகிவிடும்
பேணுவார்க் கிரத்தமொடு பித்தம்போம் - காணா
ஒருதோன்ற லென்னுமத னோதுமெழின் மாதே
மருதோன்றி வேரால் மறைந்து.

மருதோன்றி வேரினால் பெண்களின் 'ருது' கால சுரோணித நோய்களையும், பித்தநோய் ஆகிய நோய்கள் நீங்கும்.

*குறிப்பு:-* மருதோன்றி வேரை குடிநீரிட்டு காலை, மாலை இருவேளையும் 48 நாட்கள் உட்கொண்டால், வெண்குட்டநோய் குணமாகும்.

### வெண்காலிமரத்தின் வேர்க்குணம்

விம்மு மகோதரமு மேனோக்கும் பித்தமொடு
சிம்ம கிருஷ்ண தோஷமுமுட் சேருமே - கம்முகின்ற
சுள்ளைப் பெருநீருங் காணாது கைப்பையுறும்
வெள்ளைக் கருங்காலி வேர்க்கு.

கசப்புத்தன்மையையுடைய வெள்ளைக் கருங்காலி மரத்தின் வேரினால் பெருவயிறு, ஏறு பித்தம், கிருஷ்ண சிம்மத்தோடம், சுறா மேகம் (காளஞ்சிப்படை) ஆகிய நோய்கள் நீங்கும்.

### கருங்காலி மரத்தின் வேர்க்குணம்

கைப்புற் றிருக்குங் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகம் மதுநீரு - மெய்க்குளெழு
குஷ்டமுதிரப்போக்குங் கூவியமு தகலும்
மட்டுதுபூங் கோதாய் வழுத்து.

கைப்புத்தன்மையுள்ள கருங்காலி வேருக்கு மலக்குடலிலுள்ள கிருமிகள், கிரந்தி, குட்டம், இரத்தபேதி ஆகிய நோய்களைக் குணப்படுத்துவதுடன், இரத்தத்தைச் சுத்திசெய்யும்.

*குறிப்பு:-* இதையும் குடிநீரிட்டுக் குடிக்க மேற்கூறப் பெற்ற நோய்கள் யாவும் குணமாகும்.

**எட்டிமரத்தின் வேர்க்குணம்**

*ஆல் விஷமொக்கு மருந்தக் கடிதீரு*
*ஞாலமதிற் பித்தகுண நாசமா - மாலைக்கோ*
*லட்டிய பாகுமொழியே யானவிஷ முட்டியெலு*
*மெட்டி மரவே ரிது.*

விடமுட்டி என்கிற எட்டிமரம் ஆலவிஷம் போன்றது. இதன் வேரால் பெரியதொரு நாகப்பாம்பின் விடங்களும், பயித்தியமும் போகும். இதனைக் குடிநீரிட்டுக் கொடுத்தால் காக்கை வலியும் குணமாகும்.

**புங்கமரத்தின் வேர்க்குணம்**

*வாதக்கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்*
*வாதகுன்ம மிரத்தத்தால் வந்திடுதோ - யோதுகின்ற*
*புண்புரையும் வல்விஷமும் போகுந்*
*திரண்டுருண்டே*
*பண்புறு புங்கம்வேர்க்குப் பார்.*

புங்கமரத்தின் வேரினால் வாதக்குடைச்சல், முத்தோடம், மூர்ச்சை, தாபசுரம், வாயு, குன்மம், ரத்ததாதுவினால் ஏற்படக்கூடிய நோய்கள், இரணம், புரையோடிய புண், சர்ப்பவிடம் தீரும்.

**நாவல் மரத்தின் வேர்வகை**

*வாதமறுங் கரப்பான் மாறும் விரணமோ*
*டோதமுறு நீரிழிவு முந்துரத்த - சீதமுங்காய்*
*மாவன் சுரமும்வளர் மேகமும் போகும்*
*நாவன் மரவேரி னால்.*

நாவல்மர வேரினால் வாதவிகாரம், வாதக் குடைச்சல், கரப்பான், புண், நீரிழிவு, இரத்தக்கழிச்சல், சீதக்கழிச்சல், வாதசுரம், மேகம் ஆகியவை குணமாகும்.

### கருவேல்மரத்தின் குணம்

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத் தம்மாந்தம்
பருவாத மூறு கரப்பானும் - பெருகும்
பெரும்பேதி யும்போக்கும் பேச வினிக்குங்
கரும்பேத யிதனைக் கருது.

கருவேல் மரத்தின் வேரினால் இரத்தக்கடுப்பு, அக்கினிமாந்தம், மகாவாதம், கரப்பான், அதிசாரம் ஆகியவை குணமாகும்.

*குறிப்பு:-* இதன்வேரைக் குடிநீராகவோ அல்லது ஊரல் நீராகவாவது செய்து உட்கொள்வோமானால் மேற்கூறப் பெற்ற நோய்கள் அனைத்தும் குணமாகும்.

### ஒதிய மரத்தின் வேர்க்குணம்

புண்புரை கிராணிரத்தப் போக்கதி சாரக்கடுப்புந்
திண்பெறு தாகஞ்சோபஞ் சீதளமும் - நண்பி
லதிவிரைவாய்த் தாண்டு மணங்கே பருத்த
வுதிமரத்தின் றூரினா லோர்.

ஒதியமரத்தின் வேரினால் விரணம், புரை, கிராணி, இரத்தபேதி, சீதபேதி, சீதக்கடுப்பு, தாகம், மூர்ச்சை, பித்தசீதளம் ஆகியவை குணமாகும்.

*குறிப்பு:-* இதனைக் குடிநீரிட்டு உட்கொண்டால் மேற்கூறப்பெற்ற நோய்கள் குணமாவதுடன் பெண்களுக்கு ஏற்படக்கூடிய பெரும்பாடும் குணமாகும்.

## அத்திமரத்தின் குணம்

நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மோகமெனுஞ்
சொல்லகலுந் தாகமறுஞ் சொல்லவெனின்-மெல்ல மெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகத்தி னுள்ளெரிவு
மையெரிவும் போமென் றறி.

அத்திமரத்தின் வேரினால் வெள்ளை, வெட்டை, தாகமும், உடல் உள்ளங்கை, ஆண்குறி, பெண்குறி, உள்ளங்கால் ஆகிய இடங்களில் உண்டாகக்கூடிய எரிச்சலையும் குணப்படுத்தும்.

*குறிப்பு:-* இதையும் மேற்கூறியவாறு குடிநீரிட்டு உட்கொண்டால் மேலே கூறப்பெற்ற நோய்கள் யாவும் குணமாகும்.

## நெல்லிமரத்தின் குணம்

வமன மரோசியறும் வாதமுதன் மூன்றுஞ்
சமனமுறு மலமுஞ் சாரும் - மமனசுரம்
புல்லிவரு தோஷசன்னிப் பொல்லாச் செயலும்போம்
நெல்லிமர வேரை நினை.

நெல்லிமர வேரினால் வாந்தி, பசியின்மை, வெருட்டல், முக்குற்றத்தினால் உண்டாகக்கூடிய கோபம், சுரம், சன்னி ஆகியவை தீரும். பேதி உண்டாகும்.

## அருநெல்லிமரத்தின் வேர்க்குணம்

சுத்த கரமருசி தோலாப் பெருவாந்தி
பித்தசன்னி பாதமிவை பேருங்காண் - மெத்தமன
நாறுமலர் கூந்தன்மின்னே நாவுக் கினிமையெனக்
கூறுமரு நெல்லியின் வேர்க்கு.

அருநெல்லி மரத்தின் வேரினால் தனித்த சுரம், அரோசிகம், திரிதோடவாந்தி, ரெத்தபுஷ்டி, சன்னி பாதம் ஆகியவை குணமாகும்.

# செடியின் வேர் வகைகள்

## ஆடாதொடையின்வேர்க் குணம்

காசமொடு மந்தங் கதித்தபிந்தங் கொடுஞ்சு
வாசங் கழுத்துவலி முத்தோய் - கூசி
யோடா திராதிங் கொருநாளு மொண்டொடி.யே
யாடா தொடைத்துருக் கசிஞ்.

ஆடாதொடை வேரினால் இருமல், அக்கினி மாந்தம், பித்தம், சுவாசம் முதலிய நோய்களின் குணமாகும்.

## சங்கம்வேர்க் குணம்

சங்கம்வேர்ப் பட்டை சளியிருமலைச் சுரத்தை
யங்கவாதக் கடுப்பை யாடத்தைப் - பங்கே
செய்யுங் கிரந்தியையுட் பீகாமல் கிருமியையிவ்
வையந் தனிலொழிக்கு மால்.

சங்கம் வேரினால் கோழை, நாசம், காசம், கபச்சுரம், வாதக்கடுப்பு, கபசோகை, உட்சுரம், தணியாத கோபம், கிருமிநோய் ஆகியவை குணமாகும்.

## பேராமுட்டிவேர்க் குணம்

வாதசுரந் தாகம் மதலைக் கணமாந்தஞ்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கு - மோது நம்மாற்
சேரா முட்டிக்கேகுஞ் செய்ய மடமயிலே
பேரா முட்டித்தூரைப் பேசு.

பேராமுட்டி வேரினால் வாதசுரம், தாகநோய்கள், மாந்தகணம், குளிர்சுரம், பித்தநோய்கள் ஆகியவை குணமாகும்.

**சித்தாமுட்டி வேர்க் குணம் - இதுவே குறுந்தொட்டி**

அத்திசுர முதலனந்த சுரம்பித்த மும்போ
மெத்தவிழிக் கொளியாம் வீறுதயி - லத்திற்காம்
நற்றா மரைதருவு நாடுமெழிற்றிருவே
சித்தா முட்டித்தூரைச் செப்பு.

சிற்றாமுட்டி வேரினால் அஸ்திசுரம், சுரம், பித்தநோய் ஆகியவை நீங்கி கண்களுக்கு ஒளியைக் கொடுப்பதுடன் வாதநோய்களையும் குணப்படுத்தும்.

**செந்தொட்டிவேர்க் குணம்**

சந்துவலி வாதந் தாகஞ் சுரங்கரப்பா
னுந்து சுவாசந்தப மோடுங்கா - ணந்தமிகு
மிந்தொட் டியவதன வின்ப மடமயிலே
செந்தொட்டி வேறாற் றெளி.

செந்தொட்டி வேரினால் சந்து வலிகள், வாதநோய், தாகம், சுரம், கரப்பான், கடுவன், இளைப்புநோய், ஈழைநோய் ஆகியவை குணமாகும்.

**முட்காவேளை வேர்க்குணம் - இதுவே முக்காவேளையென மருவியது**

தாகாதி மந்த மதிசார நாவறட்சி
போகாச்சுரந்தாபம் போக்கமருந் - தோகையிற்
சிக்காவேளைப் பதத்தைத் திண்ணச்செய்
விக்கவென்றான்
முக்கா வேளைப்பதத்தை முன்.

முக்காவேளை வேரினால் வாததாகம், மந்தாக்கினி, அதிசாரம், நாவறட்சி, சுரம், வெப்பம், அனைத்து விஷம் ஆகிய நோய்கள் குணமாகும்.

## செங்கத்தாரி வேர்க்குணம்

செங்கத்தாக் கடைக்குத் தீராத வன்மேகம்
பொங்கி வருகிரந்திப் புண்புரைகள் - தங்குகின்ற
சந்திக சிலேஷ்மத் தனித்த மகாவாத
முத்திகை விட்டோடும் மொழி.

செங்கத்தாரி வேருக்கு பிரமேக நீர், ஓட்டுப்புண், புரை, கீல் வீக்கம், கிரந்தி, மகாவாதம், கபம் ஆகிய நோய்கள் குணமாகும்.

## மரக்காரை வேர்க்குணம்

சீதங் கடுப்பு திரிதோஷ மாந்தபித்த
வாதங் கரனைய மாந்தகண - மியாதிங்
கிரிக்கான மருந் தென்பா ருலகில்
மரக்காரை வேரால் மதி.

சீதம், கடுப்பு, முத்தோடம், மாந்தம், பித்தவாதம், கரப்பான், கபம், கணமாந்தம் ஆகிய நோய்களைக் குணப்படுத்தும். ஆனால் இது வாந்தியை உண்டாக்கும் மருந்து.

## குத்துக்காற் சம்மட்டி வேர்க்குணம்

சாரமுறு குத்துக்காற் சம்மட்டி வேரெனச்சொற்
கோரமுள்ள மாவாதக் கூட்டமெங்கே - வீரமுறு
மேகத் தருப்பெங்கே வீறுதிமிர் வாதமெங்கே
சோகத் தளர்ச்சியெங்கே சொல்.

பச்சையாகவுள்ள குத்துக்காரன் சம்மட்டி வேரினால் மகாவாதம், சர்வமேகக் கட்டிகள், திமிர்வாதம், மூர்ச்சை ஆகிய நோய்கள் குணமாகும்.

**அவுரிவேர்க் குணம் - இதுவே நீலி**

எல்லா விஷங்களுக்கு மேற்ற முறிப்பாகும்
பொல்லாச் சுரமூர்ச்சை பொங்குவட்டை - நில்லாப்
பவுரிதருங் குன்மமுதற் பன்னோ யொழியு
மவுரிதரு வேருக் கறி.

அவுரி வேர் எல்லா விஷங்களையும் முறிக்கும் தன்மையுடையது. மேலும் சுரம், மூர்ச்சை, வெட்டை, குன்மம் முதலிய பல நோய்கள் குணமாகும்.

**களாவேர்க்குணம் - இது கிளா என மருவியது**

விடத்துருநோய் பித்தமைய வேர்வை யதிதாகந்
திடத்தக வுதிரத்தினது சிக்கற் - கடத்துளெழு
மக்கினி மாந்தமிவை யண்டா தொருநாளுஞ்
சிக்கெனக் களாவேரைச் சேர்.

களாவேரினால் விஷங்களினால் ஏற்பட்ட சகல நோய்களையும் குணப்படுத்துவதுடன், பைத்தியம், கப ஆதிக்கம், கப வியர்வை, நீர்வேட்கை, உதிரச்சிக்கல், அக்கினி மாந்தம் ஆகியவை நீங்கும்.

**வெட்டிவேர்க் குணம் - இதுவே குருவேர்**

பித்தவிதாகஞ் சரிகாமிலங் கறைப்பித்த மனம்
தந்திடுகுட்டஞ் சிரநோய் களமடி தாதுநட்ட
மத்தமனற்புண் டடைப்புண் வண்மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திரமேகத்தின் கட்டியும்போம் வெட்டி வேரினுக்கே.

வெட்டிவேரினால் பித்தத்தால் உண்டாகக்கூடிய தாகம், காமாலை, பித்தம், குட்டம், தலைநோய், கழுத்து நோய், சுக்கில நட்டம், உன்மத்தம், தீப்புண், முலைச்சிலந்தி, முத்தோடம், மூர்ச்சை, கண்நோய்கள், விப்புருதிக்கட்டி ஆகிய நோய்கள் குணமாகும்.

# கொடியின்வேர் வகைகள்

### நாகமல்லிகை நாகமுட்டிவேர்க் குணம்

சீராரு நாகல்வகைச் சினவரையைக் கண்டாக்காற்
றீரா நமைச்சற் செறிபுடைக்க - ணீராருஞ்
சன்னப் புழுச்சங்கந் தாங்காவஞ் சாம்புனத
வன்னக் குயிலனையாய் வாழ்த்து.

நாகமல்லி வேரினால் ஒழியாத தினவும், தடிப்பு, நெருங்கியபுடைகளும், கிருமிகளையும், சொறி, சிரங்கு முதலியவைகளைப் போக்கும்.

### காட்டுமல்லிகை வேர்க்குணம்

சுரங்களொடு நாவறட்சி தொந்தி மந்தம்பேதி
யுரங்கதித்த தாகமிவை யோட்டும் - வருஞ்சேரார்
தாகமல்லி லோடுந் தாகமைபோ லோடிவிடுங்
காமல்லிகை வேரார்க் காண்.

காட்டுமல்லிகை வேரினால் சுவாச சுரம், நாவறட்சி, அக்கினிமந்தம், அதிசாரம் ஆகியவைகள் போம்.

### சிறுகுறிஞ்சாவேர்க்குணம்

சிறுகுறிஞ்சா வேர்விஷத்தைத் தீர்க்கு மானிலத்
துறுசுரங் கள்வாத மொழிக்குந் - தெறிபாணக்
கண்ணா யிருமன்முதற் காசந் தணிக்கும்
விண்ணா டருக்குமிதை விள்.

சிறுகுறிஞ்சா வேரினால் அற்ப சுரம், சில்விடக்கடிகள், வாததோடம், காசம், சுவாசகாசம் ஆகியவைகள் போகும்.

**குறிப்பு:-** இதன் வேரை குடிநீரிட்டோ, சூரணித்தோ உட்கொண்டால் மதுமேகம் குணமாகும்.

### பேச்சுரைவேரின் குணம்

கடுவேறு பேய்ச்சுரைவேர் கண்ட லரவின்
கடுவேறா துண்மை முக்காலுங் - கொடுவிடமு
மீளையிருமல் விட்டேகு முண்டால்
வாந்தியுண்டாம்
வாளையுறுங் கண்ணாய் வழுத்து.

கசப்புள்ள பேய்ச்சுரை வேரினால் பாம்புகளின் விஷங்கள், கொடிய விஷங்கள், ஈளை, இருமல் ஆகியவை நீங்கும். இது வாந்தியை உண்டாக்கும் தன்மையை உடையது.

### முசுமுசுக்கைவேர்க்குணம்

கந்தம் பரவு களிச்சளியும் புண்விடமு
மந்தம் பெறுவிடமும் வாந்திகளும் - மந்தம்
பெருகுங்குக் கிச்சூரும் பித்தமு மிருக்கா
திரு குரங்குக்கை வேறுக்கே.

முசு முசுக்கை வேரினால் கெட்ட நாற்றத்தை உடைய கோழை, அற்ப வீரிய விஷம், புண், மந்தம், பெரிய விடங்களும், வாந்தி, மார்புநோய், குன்மம், பித்தம் ஆகியவை போம்.

### வெண்காக்கட்டான் வேர்க்குணம்

மாதரால் வந்தவெட்டை வன்மேகஞ் சென்னிவலி
யோதுசுரம் விழிநோய் யோடுங்காண் - பேதியோடு
மாக்கட்டாஞ் சீதமறு மாமூலியாம் வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் கருது.

மகா மூலிகை என்னும் வெள்ளைக் காக்கரட்டான் வேரினால் வெள்ளை, வெட்டை, பிரமேகம், தலைநோய், கண்நோய், மலக்கட்டு, நீர்க்கட்டு ஆகியவைகள் நீங்கும்.

### கருங்காக்கரட்டான் வேர்க்குணம்

மாதந்தங் கிருமியடல் வாதங் கபமினமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண் - சூழ்ந்த
அருங்கா குவடுகளி லண்டா மயிலே
கருங்காக் கட்டான்வேரைக் கண்டு.

கருங்காக்கரட்டான் வேருக்கு மாந்தம், மலக்கிருமி, வாதம், கபம், மலக்கட்டு ஆகியவை நீங்கும்.

### கொடிவேலியின் வேர்க்குணம் - இதுவே சித்திரமூலம்

கட்டி விரணங்கிரந்தி கால்க ளறையாப்புக்
கட்டி சூலைவீக்கங் காழ்மூல - முட்டிரத்தக்
கட்டு நீரேற்றங் கனைத்த பெருவயிறு
கட்டுங் கொடிவேலி யாம்.

கொடிவேலி வேரினால் ரணம், கிரந்தி, அரையாப்புக் கட்டி, சூலை, வீக்கம், வாதநோய்கள், சொறி, சிரங்கு, ஆசனக்கட்டி, குத்தல், சோகை, மூலநோய், முட்டி, ரத்தக்கட்டு, மகோதரம், உதிரக்கட்டு ஆகிய நோய்கள் குணமாகும்.

### பெருமருந்தின் வேர்க்குணம்

பெருமருந்தின் வேர்ப்பித்தம் பீறியைப்பு காசம்
வருதிர முறாம்பு வலிவாத - முருவுவிட
மொன்றிய மாகடிக ளோட்டு முலகிலிது
வன்றியது கோச்சிகிச்சைக் காம்.

பெருமருந்தின் வேரினால் பித்தகோபம், சுவாசம், இருமல், சுரநோய், சரீரக்குத்தல், வாததோடம், சில விஷக்கடிகள் ஆகியவைகளை நீக்குவதுமன்றி பசுவின் நோய்களுக்கும் ஆகும்.

## பெருங்காஞ்சொறி வேர்க்குணம்

காசஞ் சுவாசங் கபச்சுரங்க ளோடுவன
வாசஞ்செய் யும்மூர்க்குள் வாராமல் - வாசம்
பெருக்கு முலையாய் பெருங்காஞ் சொறிவே
ரிருக்கு மென மனத்து ளெண்ணி.

பெருங்காஞ் சொறி வேரினால் காசம், சுவாசம், கபசுரங்கள், இருமல், இரைப்பு, சீதசுரம் ஆகிய நோய்கள் குணமாகும்.

## சிறுகாஞ்சொறி வேர்க்குணம்

சிறுகாஞ் சொறிவேர் சிலேஷ்ம வாசத்தைக்
குறியாத மூச்சுரக் குரத்தைச் - சொரியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் காலைத் தாகத்தே
யுரப்பாகச் சாடுமென வோது.

சிறுகாஞ்சொறி வேரினால் குறிப்பாகக் கபக்குற்றத் தையும், திரிதோடச் சுரக்குற்றத்தையும், கரப்பான், புண், வாதப்பெருக்கம், தாகநோய் ஆகியவைகளைப் போக்கும்.

## கருங்காஞ்சொறி வேர்க்குணம்

குற்றிருமல் நீரேற்றங் கோரகப சூட்டை
நித்திய வரோசகமு நீக்குங் காண் - ரத்ன
அருங்காஞ்சி வாய்ந்தவிடை யன்னமே சுத்தக்
கருங்காஞ் சொறிவேரைக் கண்டு.

கருங்காஞ்சொறி வேருக்குப் பொடியிருமல், நீரேற்றம், கஷ்டப்படுத்தக் கூடிய கபத்தையும், பசியின் வெறுப்புத் தன்மையையும் போக்கும்.

**பச்சை திப்பிலி வேர்க்குணம்**

தாகமுடன் சோபந் தணிக்குங்கா ணெவ்வகையின்
மேகமுடன் பித்தம் விலக்குமே - போகமிகும்
நவ்வியரன்ன நயங்கொடுக்கும் பச்சையாஞ்
செவ்வியம் மூலச் செயல்.

சிவந்த நீர்ப்பசையுடைய திப்பிலி வேரினால் நீர்வேட்கை, ஆயாசம், பலவகைப்பட்ட மேகம், பித்த ஆதிக்கநோய்கள் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

**இன்புறா வேர்க்குணம்**

இன்புறா வேரை யிதமா யருந்தினார்க்கும்
பின்புறா தையமொடு பித்தமுமே - துன்பா
மிருமல் சுவாச மெரிசுரம் வயிற்றுப்
பொருமலுப் பிசம்பறந்து போம்.

இன்புறா வேருக்குக் கபஆதிக்கம், பித்தகோபம், காசம், ஈளை, பித்தசுரம், வயிற்றிரைச்சல், விக்கல் ஆகியவைகள் நீங்கும்.

**நன்னாரி வேர்க்குணம் - இதுவே நீருண்டி**

நன்னாரி வேரை நருக்கியரைத்து மதன்
வின்னாரி யூணால் வெதுப்பியே - தின்னவெறி
தோணாது கற்றாழைச் சோற்றில் கலந்துண்ணக்
காணாது வண்டு கடி.

சலதோஷம் பித்த மதிதாக முழலை
சலமேறு சீதமின்னார் தஞ்சூ டுலகமதிற்
சொன்னது மேகம்புண் சுரமிவை யெலாமொழிக்கு
மென்மதுர நன்னாரி வேர்.

நன்னாரிவேரை அரைத்துத் தேனிற்பாகம் செய்து உட்கொண்டால் அதிபித்தந்தீரும். அதைக் கற்றாழை சோற்றோடு உட்கொள்ள வண்டுகடி போகும். மேலும் இதை முறைப்படி உட்கொள்வோமானால் நீரேற்றம், பித்தநோய், தாகம், வாய்நீர், சுரப்பு, புணர்ச்சியின் சூடு, மதுநீர்க்கிரந்தி, சுரவேகம், தாகம் முதலியவை குணமாகும்.

## புல்லின் வேர் வகைகள்

### பச்சை விலாமிச்சு வேர்க்குணம்

திரிதோஷந் தாகஞ் செறிகுஷ்ட மீளை
பெரிதான சூலைமந்தம் பேராச்சுரவெப்ப
மச்சையுண்ணுங் கீடமுதன் மாறுமெய்க்குங்
காந்தியுண்டாம்
பச்சைவிலா மிச்சுக்குப் பார்.

பச்சை விலாமிச்சு வேருக்கு வாத, பித்த, கப ஆதிக்கத்தினால் ஏற்படக்கூடிய தாகநோய், பெருவியாதி, சுவாசம், சரீரக்கடுப்பு, அக்கினிமந்தம், உஷ்ண சுரம், மச்சை தாதுக்கிருமி ஆகியவை நீங்கி சரீரத்திற்கு அழகை உண்டாக்கும்.

### பஞ்சமூலத்தின் குணம்

செவ்வியம் பேரரத்தை சித்திரமூலஞ் சுக்கோ
டொவ்வு கண்டுபரங்கி யோரைந்தும் -
வெவ்வினையைச்
சண்ணு பஞ்சமூலமெனத் தரணி யெலாமறிய
வண்ண மயிலே வழுத்து.

திப்பிலி மூலம், பேரரத்தை, கொடிவேலிவேர், சுக்கு, கண்டு பரங்கி ஆகிய இவ்வைந்தும் பஞ்ச மூலமாம். இதனால் கொடிய நோய்களைப் போக்கலாம்.

### சிறுபஞ்ச மூலத்தின் குணம்

சிறிய வழுதுணைவேர் சின்னெரிஞ் சின்மூலஞ்
சிறுமலி கண்டங் கத்திரிவேர் - நறிய
பெறுமலி யோரைந்தும் பேசுபன் னோய்தீர்க்கு
மரிய சிறுபஞ்ச மூலம்.

சிறுவழுதுணம், சிறுநெருஞ்சில், சிறுமல்லிகை, கண்டங்கத்தரி, பெருமல்லிகை ஆகிய இவைகளின் வேர்கள் ஐந்தும் சிறுபஞ்ச மூலமாம். இதனால் பற்பல நோய்களைப் போக்கலாம்.

### பெருபஞ்சமூலத்தின் குணம்

பாதிரிவேர் வாகை பருங்குமிழ மரலூர
மாதே தழுதாழைவில் வேரைந்தும் - போதிலம
ருஞ்சிலை நுதற்றிருவே புன்னுபெரும் பஞ்சமூ
லஞ்சில நோயெகுமிதி லாய்.

பாதிரி, வாகை, பெருங்குமிழ், வில்வம், தாழை இவ்வகை வேரும், பெரும்பஞ்சமூலமாகும். இதனால் சிற்சில நோய்கள் குணமாகும்.

### அஷ்டமூலத்தின் குணம்

கோரை யரிகரந்தை கூலங்கலூசி கஞ்சாங்
கோரை யாடாதோடை கோத்துளசி - வீரியபற்
பாடகமிவ் வெட்டும், பலவிஷக் குழாமிரியச்
சாடுமஷ்ட மூலமென்ப தாம்.

கோரைக்கிழங்கு, விஷ்ணுகரந்தை, பேய்ப்புடல்வேர். சீந்தில்வேர், கஞ்சாங்கோரை, ஆடாதோடைவேர், கருந்துளசி, பற்பாடகம் இவ்வெட்டும், அஷ்ட மூலமாம் இதனால் பற்பல விடங்கள் தீரும்.

*கூலம் = பேய்ப்புடல்*

### தசமூலத்தின் குணம்

வில்வம் பெரிகுமிழ் மேனெரிஞ்சல் முன்னையிரு
மல்லிகை சிறிய வழுதுணைவேர் - நல்லகண்டங்
கத்திரி புன்காலி பெருவாகை
யிவ்வைவன்னோவைக்
குத்துத் தசமூலங் கூறு.

வில்வம், பெருங்குமிழ், யானை நெருஞ்சில், சிறுவழுதுணை கண்டங்கத்திரி, பாதிரி, பெருவாகை, முன்னை, சிறுமல்லிகை, பெருமல்லிகை, இப்பத்தும் தசமூலமாகும். இது கடினமான நோய்களைக் குணப்படுத்தும்.

## மரத்தின் பட்டை வகைகள்

### அத்திமரப்பட்டையின் குணம்

வீறு கடுப்பிரத்தம் வெண்சீத ரத்தமொடு
நாறுவிர ணங்களெலா நாடாவாங் - கூறுங்கா
லத்திதரு மேகம்போ மாயிழையே யெஞ்ஞான்று
மத்திப்பாற் பட்டைக் கறி.

அத்தி மரப்பட்டைக்கு, ஆசனக்கடுப்பு, உதிரப் போக்கும், சீத இரத்தப்போக்கு, புண், தந்துப்பிரமேகம் ஆகியவை குணமாகும்.

### நாவல் மரப்பட்டையின் குணம்

ஆசிநோய் காச மசிர்க்கரஞ் சுவாசவினை
கேசமுறு பாச கிரகநோய் - பேசரிய
மாவலிங்க லாஞ்சனமிவ் வண்பிணி யெலாமேகு
நாவலறு பட்டை யதனால்.

நாவல் மரப்பட்டையினால் வாயிற் பிறக்கும் நோய்கள், இருமல், பெரும்பாடு, ஈளை, பிள்ளைகளின் கிரகத் தோடங்கள் ஆகிய நோய்கள் குணப்படுத்துவதுடன் கொடிய நோய்களையும் குணப்படுத்தும்.

**முருங்கை மரப்பட்டையின் குணம்**

முருங்கை வேர்ப்பட்டைக்கு மூடு கபத்தோ
டொருங்குறச் சன்னி சுரமொடு - மருங்கதை
வட்டைப் பொருமுலையாய் வாய்வொடு விஷங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து.

முருங்கைவேர்ப்பட்டைக்குக் கபதோடம், சன்னிபாத சுரமும், மரப்பட்டைக்கு வாத தோடமும், சில்விடங்களும், வீக்கமும், நுண்கிருமிகளும் நீங்கும்.

**புளியமரப்பட்டையின் குணம்**

புளிய மரத்தின் புரணிதனைக் கண்டா
லுளமாந்தை குன்மவலி யோடும் - வளியார்ந்த
பேதிகட்டுஞ் சுரம்போம் பித்தமுறுந் தீபனமா
மோத வசீரணமே துன்.

புளியமரப்பட்டையினால் உளமாந்தை, குன்மநோய், வாத அதிசாரம், சுரம், அசீர்ணம் ஆகியவை நீங்கும், பித்தமும், பசியும் உண்டாகும்.

**பெருமரப்பட்டையின் குணம்**

பெருமரப் பட்டையது பேதி கிராணி
மருவிரத்த நோயினத்தை மாந்துந் - திருவே
நடலைபுரி வாதத்தை நாடா தகற்று
முடலை யிரட்சிக்குக்கென வோர்.

பெருமரப்பட்டையானது அதிசாரம், கிராணி, உதிரநோய், வாத ஆதிக்க நோய்களைக் குணப்படுத்தி சரீரத்தை வன்மையடையச் செய்யும்.

### கருவேலமரப்பட்டையின் குணம்

தந்த மிறுகுந் தனிச்சூதம் புண்ணாறு
மந்தசுரம் பித்தம் மடியுங்காண் - பந்த
மருவே யகலா மலரளக மாதே
கருவேலம் பட்டைக்குக் காண்.

கருவேலமரப்பட்டைக்கு இரசவேகத்தின் வேக்காட்டி னால் ஏற்படக்கூடிய இரணம், சுரம், பித்தநோய் ஆகியவை ஒழிந்து பற்கள் இறுகும்.

### கருங்காலி மரப்பட்டையின் குணம்

மேகநீரைக் கெடுக்கு மீறுதந்த மூலத்து
ளாகிய வேதனையை யார்த்துங்காண் - சோகந்
தருங்காச மீளையிவை சாரா தகற்றுங்
கருங்காலிப் பட்டையது காண்.

கருங்காலி மரப்பட்டையானது பிரமேக மூத்திரம், தந்திமேகம், மூலநோய், இருமல், சுவாசம் ஆகியவைகளைப் போக்கும்.

### மாவிலங்கு, எருக்கு, கருவேல் இதுகளின் பட்டைக்குணம்

மாவிலங்கப் பட்டையினால் வாதமொடு
சன்னிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாருமே - மாவெருக்கம்
சடைசன்னி வாதம் பலவிஷம் போக்குங் கருவேற்
பட்டைநா நோய்தீர்க்கும் பார்.

மாவிலங்கப்பட்டையினால் வாதநோயும், சன்னிகளும் கல்லடைப்பும் நீங்கும். எருக்கம்பட்டை, சன்னிபாத நோய்கள், வாதநோய், பலவிஷங்கள் ஆகியவைகளைப் போக்கும். கருவேலம்பட்டை நாக்குப்புண்ணை நீக்கும்.

### கள்ளி, நொச்சி இதுகளின் பட்டைக்குணம்

நரம்புச் சிலந்தி தளிர்வாத சன்னி
யுரம்பெரிய வாதமிவை யோடும் - பெரும்புவியிற்
கள்ளிமரப் பட்டையினால் காரநொச்சிற் பட்டையது
துள்ளு சன்னிவாத மகற்றும்.

கள்ளி மரப்பட்டையினால் நரம்புச் சிலந்தியையும், கபவாத தொந்த சன்னி பாத நோய்களையும், வாதப் பிரமேகத்தையும் நீக்கும்.

நொச்சி மரத்தின்பட்டையானது சன்னி பாதத்தால் பிறந்த வாதத்தைப் போக்கும்.

### கிளியூரம் பட்டையின் குணம்

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாகிய வெப்பைத் தணிக்கும் - குணமாதர்
கிளியூரற் பட்டையது கீதம் பயிலு
மளியூருங் கூந்தன்மின்னே யாய்.

பரிமளச் சேர்க்கையில் உயர்ந்த கிளியூரம் பட்டையானது சுரநோயையும், சரீர உஷ்ணத்தையும் தணிக்கும்.

### அக்காரப்பட்டையின் குணம்

அக்காரப் பட்டைக் கறனா வறட்சிகளு
மெக்கு சன்னிபாதசுர மென்பவையும் - பக்கச்
சகலதலை நோய்வாய்வுந் தாழ்ந்தே யொழியும்
புகலிரத்த கந்தமது போம்.

அக்காரப்பட்டை நீரை உற்பத்தி செய்யும் நாவறட்சி, சன்னிபாதம், சுரம், பலஸித தலைநோய்கள், வாதகோபம், உதிர நாற்றம் ஆகியவை நீங்கும்.

### கோங்கு மரப்பட்டையின் குணம்

கோங்கினறும் பட்டையார் கூற்றிய மேகம்போந்
தாங்கிய பற்பிணியுஞ் சாந்தமாம் - வாங்குவெண்மைக்
கன்னா ரதுவெள்ளிக் காசெனவே பஸ்மிக்கும்
பின்னார்ச் சிகாமணியே யவிள்.

கோங்கு மரப்பட்டையினால் பிரமேக மூத்திரமும், தாளமுடியாத பல் வலியும் நீங்கும்.

இப்பட்டையின் சாறுவிட்டு வெள்ளியை அரைத்துப் புடமிடப் பற்பமாகும்.

### கொஞ்சிப் பட்டையின் குணம்

மாந்த மகற்றும் வயிற்றுப்பி சந்தவிர்க்கு
மாந்த கணச்சுரத்தை மாற்றிவிடும் - சேர்ந்தசிறு
வாதநோ யோட்டும் வகைகொஞ்சிப் பட்டையது
மாதரசே நீயுமுணர் வாய்.

காட்டுக் கொஞ்சிப்பட்டை குழந்தைகளுக்கு ஏற்படும் மாந்தம், வயிற்றுப்பொருமல், கணச்சூடு, வாதநோய் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

### பஞ்சவர்கத்தின் குணம்

ஆலரசு சம்புடனே யத்திகுரு வேலற்றின்
தோலைந்தும் பஞ்சவர்கந் தொல்லுலகி - லேலுமதாற்
காசஞ் சுவாசங் கபங்கொங்கை வித்திரிதி
நாசமுறு மென்றே நவில்.

ஆல், அரசு, அத்தி, இத்தி, நாவல் என்னும் ஐந்துவகை மரங்களின் பட்டைகளே பஞ்சவர்க்கமாகும். இதனால் இருமல், இரைப்பு, கபதோடம், மார்பகக்கட்டி ஆகியவைகள் குணமாகும்.

# மரத்தின் பிசின் வகைகள்

### மாம்பிசின் குணம்

பெரும்பா டெங்கேயிரத்த பேதியெங்கே முக்க
றரும்பாழும் வெள்ளையெங்கே சாற்றாய் -
கரும்பாம்பின்
நாதநிரி யாசஞ்செய் நங்காய் வனத்திலுறை
சூதநிரி யாசமெனச் சொல்.

மாமரத்தின் பிசினால் பெரும்பாடு, இரத்த அதிசாரம், வாதப்பிரமேகம், வெள்ளை முதலிய நோய்கள் குணமாகும்.

### பிரமதருவின் பிசின் குணம் - இதுவே பலாசு முருக்கு

சந்திகட்கு நாடிகட்குத் தங்குசுக்கி லந்தனக்கும்
புந்தியுரங் கட்குரமும் பூட்டுங்கா - ணுந்து
சரமதனுக் காகமநூல் சாற்றுமலர் மாதே
பிரம தருவிற்சம் பிசின்.

பிரமதருவின் பிசினானது கீல்கள், நரம்புகள், சுக்கிலம், அறிவு, மார்பு ஆகிய இவைகளுக்குப் பலத்தையுண்டாக்கும்.

### மலைவேப்பன் பிசின் குணம்

மலைவேம்பு தன்பிசின்றான் வாதக் கரப்பன்
மலுமேகக் கட்டியிவை மாற்று - நிலமீது
தாதுவு முண்டாக்கும் சலப்பேதி யைக்கட்டு
மாதே யிதனை வழுத்து.

மலை வேப்பன் பிசின் கருங்கரப்பான், மேகக்கட்டி, சலமந்தம், பேதி ஆகியவைகளைப் போக்கி, சுக்கிலத்தை அதிகரிக்கச் செய்யும்.

### கருங்காலிப் பிசின் குணம்

*கருங்காலியின்பிசின்றான் காரார்கரப்பான்*
*வருமேக நீரிழிவை மாத்தும் - விரைவாய்ப்*
*பெரும்பட்டை நீக்கும் பெருந்தாது விர்த்தி*
*யருப்பு மெனக்கண்டறி.*

கருங்காலிப்பிசின் கருங்கரப்பான், மேகமூத்திரம், பெரும்பாடு ஆகியவைகளைக் குணப்படுத்தி விந்துவை அதிகரிக்கச் செய்து சரீரத்திற்கு அழகை மிளிரச்செய்யும்.

### வாகைப் பிசின் குணம்

வாகைப் பிசின்மேகம் வன்கிரந்தி கட்டியையு
மேகத் துரத்துமிது நிசமே - மாகவுக
மேனி கொடுக்கு மிகுந்தபல முண்டாக்குந்
தேனினிய மென்மொழியே தேர்.

வாகைப்பிசின் பிரமேகம், கிரந்தி மேகக்கட்டி, ஆகியவைகளைக் குணப்படுத்தி அழகையும், வன்மையையும் உண்டாக்கும்.

### இலவம் பிசின் குணம்

மேகவெட்டை நீர்ச்சுருக்கு மெய்யனற் கிருச்சரத்தின்
வேகமதி காரமென விள்ளுநோ - யேகவென்றால்
வாரணியுங் கும்பமுலை மாதே மறைப்பின்றிப்
பூரணி ரசத்தைப் புகல்.

இலவம்பிசினியினால் பிரமேகம், வெட்டை, நீர்ச்சுருக்கு, உட்சுரம், கிரிச்சரவேகம், பேதி ஆகிய இவைகள் நீங்கும்.

### விளாம்பிசின் குணம்

நல்ல விளாம்பிசினை நற்பதஞ் செய்தருந்தத்
தொல்லை யதிசாரந் தொலைவதன்றோ -
மெல்லியரால்

வந்தவெள்ளை தன்னுடனே மாதர் பெரும்பாடு
முத்துநீர்ப் போக்கும்போ முன்.

சுத்திசெய்த விளாம்பிசினைச் சூரணம், மாத்திரை முதலியவைகளைச் செய்து உட்கொண்டால் நீடித்த அதிசார பேதி, புணர்ச்சியால் ஏற்படக்கூடிய வெள்ளை, வெட்டை, பெரும்பாடு, வெகுமூத்திரம் ஆகியவை நீங்கும்.

**முருங்கைப்பிசின் குணம்**

முந்து நீரைத்தடுக்கு மோரைப் போலேயொழுகும்
விந்துவைத் தடிப்பித்து மேனிதருந் - தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும்
பெரியமுருங்கைப் பிசின்.

முருங்கைப் பிசின் அதிமூத்திரம், குஷ்டம், தொந்தவாதம் ஆகியவைகளைக் குணப்படுத்தி சுக்கிலத்தை இருகச்செய்து அழகை உண்டாக்கும்.

**விடத்தேரின் பிசின் குணம்**

விடத்தேரின் றன்பிசின்றான் வெண்மேகம் போக்கு
மடுத்த பிரமேகத்தை யாற்றுமே - தொந்த
மேகக் கரப்பானை விட்டுடோட்டு மென்றுலகி
னாகரிக மாதே நவில்.

விடத்தேரின் பிசின் வெண்மேகம், சீழ்ப்பிரமேகம், மேக வெப்பத்தால் ஏற்படும் கரப்பான் ஆகியவைகளைப் போக்கும்.

**அடப்பமரப்பிசின் - இதுவே வாதுமையாம்**

நெஞ்ச முரக்கு நிகழ்விந்தை யுங்கட்டும்
நஞ்சு மருந்துகளு நல்லமிர்தாம் - விஞ்சுகயக்
கோழை யடக்குங் குலவாதுமை யெனவே
வாழை யுடம்பின் சளிக்குமால்.

அடப்பமரத்தின் பிசினால் "விந்து"விற்கு (சுக்கிலத்திற்கு) தடிப்பை உண்டாக்கி கட்டும் நச்சுத் தன்மையுடைய மருந்துகளும் அமிர்தமாகும். மேலும் காசநோயினால் அதிகரித்த கபக்கோழையைத் தன்னிலையைவிட்டுப் பெயர்ந்து அடங்கச்செய்யும்,

### கருவேலப்பிசின் குணம்

நீத்தொழுகும் விந்துவை நிலைக்கப் புரியுமெரி
பூத்தொழுகும் வெள்ளைதனைப் போக்குமிம் - மாத்திரமோ
தேசுதரு மும்முரமுஞ் செய்யும் பெரியோராற்
பேசு கருவேலம் பிசின்.

கருவேலம் பிசினானது நீர்த்துப்போன சுக்கிலத்தை இறுகச்செய்வதுமன்றி எரிச்சலோடு விழுகின்ற சீழ்ப் பிரமேகத்தையும் குணப்படுத்தும். அழகையும், வனப்பையும், உண்டாக்கும்.

### ஆவாரைப் பிசின் குணம்

பெருநீர் மறிக்கும் பிரமேகம் போக்கும்
வருநீர்ச் சுறுக்குதனை மாற்றுந் - தருநீர்மை
பூணுமேனிக் கமலப் பொன்னே பிடகரெலாம்
பேணு மேகாரிப்பி சின்.

ஆவாரைச்செடியின் பிசினானது வெகுமூத்திரத்தையும், பிரமேக நோயையும், வாதநீர் குத்தலையும், எரிச்சலையும் போக்கும்.

### புற்பிசின் குணம்

நெஞ்சிற் குரஞ்சலம்போ நீத்தவிந்து விற்குறுதி
வஞ்சியர்தம் போகத்தில் வன்மையா - நஞ்சைத்
தடவியகூர் வாளென்னச் சாற்றும் விழியா
யடவிவரு புற்பிசினென் றால்.

காட்டிலுள்ள புற்பிசினால் மார்புக்கும், நீற்றுப்போன சுக்கிலத்தை இறுகச்செய்து போகத்திற்கு வன்மையை உண்டாக்கும்.

## மரத்தின் இலை வகைகள்

### மரியங்கொழுந்தின் குணம்

வாயருசி நீர்ச்சுரப்பு வாந்தி கடிதேகும்
பேயிரத்த சீதமென்ற பேதியறும் - பாயு
மரியங்க மொந்தவிடை யாரா வமிர்தே
மரியங் கொழுந்தை வழுத்து.

மரியங்கொழுந்தினால் அரோசகம், வாயில்நீர் ஊரல், வாந்தி, சீத இரத்தபேதி, அதிசாரம் ஆகிய நோய்கள் குணமாகும்.

*மரியங்கொழுந்து = மருக்கொழுந்து*

### கருவேல் கொழுந்தின் குணம்

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத் துத்தயிரி
லுண்டாற் பாஷாணவெப்ப மோடுங்காண் -
கண்டாவி
வந்தசிவப் பேகுமதை மாதர்பாலா லரைத்து
வெந்தவடை கண்ணிலொத்த வே.

கருவேலங் கொழுந்தை தயிரிலரைத்துக் குடிக்க பாடாண வேகங்கள் நீங்கும். தாய்ப்பாலில் அரைத்து அடை தட்டிக் காய்ந்த சட்டியிலிட்டு வெதுப்பி, அற்ப சூடாக ஒத்தடமிடில் கண்சிவப்பு மாறும்.

**புளியிலையின் குணம்**

அழுபுண்ணை நீக்கு மடற்சோபை மாற்று
மெழுபாண்டு வைப்போக்கு மிப்பான் - முழுது
மனியச் சிவந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல்.

சூடுடைய புளியிலையினால் அளிந்த விரணம், சோபநோய், பாண்டுநோய், சிவந்த கண்ணோய் ஆகியவைகள் நீங்கும்.

**வேப்பிலையின் குணம் – இதுவே நிம்பம்**

கிருமிகுட்ட மாந்தங் கெடுவிடஞ் சுரங்கள்
பெருமிய வசூரிகையின் புண்க - ளொருமிக்க
நிம்பத் திலையிருக்க நீடுலகி நீங்காமற்
கம்பத் திலையிருக்கக் காண்.

வேப்பிலையினால், புழுக்கள், பெருவியாதி, மாந்தம், மாகவிடசுர நோய்கள், அம்மைக்கொப்புள விரண ஆகியவை ஒழியும்.

**முருங்கையிலையின் குணம்**

செறிமந்தம் வெப்பந் தெரிவிக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலகு - மறமே
நெருங்க யிலையொத்த விழி நேரிழையே நல்ல
முருங்கை யிலையை மொழி.

முருங்கை இலையினால் அக்கினி மந்தம், உட்சூடு, தலைநோய், வெறிமூர்ச்சை, கண்ணோய் ஆகியவை நீங்கும்.

இதன் இலையை கட்டிகள் உடைவதற்கும் வதக்கிக் கட்டுதல் உண்டு.

**அகத்தியிலையின் குணம்**

மருந்திடுதல் போகுங்காண் வண்கிரந்தி வாய்வாந்
திருந்த வசனஞ் செரிக்கும் - வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளு
மகத்தியிலை தின்னு மவர்க்கு.

அகத்தி இலையை சாப்பிடுவதால் இடுமருந்துப் போகும். பைத்திய தோடம் நீங்கும். கடுவனும், வாய்வும் உண்டாகும். உணவு சீரணமாகும். ஆனால் மருந்துகள் யாவற்றையும் முறித்துவிடும்.

**செவ்வகத்தியிலையின் குணம்**

செவ்வகத்திப் பன்னுஞ் சிலேத்மமதை யுண்டாக்கும்
வவ்வுபல சிந்தூரம் வைப்பதற்காங் - கவ்வு
நவநீத பஸ்மமதை நாளு முடிப்பிக்குஞ்
சிவமாக்குந் தாளகத்தைத் தேர்.

செவ்வகத்தி இலை கபதோடத்தை உண்டாக்கும். பற்பல செந்தூரங்கள், நவநீத பற்பம், தாளக சுத்தி ஆகியவைகளைச் செய்வதற்கும் உதவும்.

**பசுமுன்னையிலையின் குணம் - இதுவே நறுமுன்னை**

வாயருசு சோபையை மாறாக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினி மயக்கமென்க - நோய்க
ளறுமுன்னை யுண்ணுவர்கட் காழி யுலகி
னறுமுன்னை தன்னிலையை நாடு.

பசு முன்னையிலையினால் அரோசகம், வீக்கம், கபம், கரப்பான் இவையுண்டாகும். வாததோடம், அக்கினி மந்தம், மயக்கமும் போம்.

### கருவேப்பிலையின் குணம்

வாயி னருசிவயிற்றுளைச்ச னீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுந்தான் - தூய
மறுவேறு காந்தளகை மாதே யுலகிற்
கருவேப் பிலையருந்திற் காண்.

கருவேப்பிலையினால் அரோசகம், சீதபேதியால் வரும் வயிற்றுளைவு, பழம் சுரம், பைத்திய தோடம் ஆகியவை போம்.

இதன் இலையைத் தயிர் விட்டு அரைத்துத் தலையில் தேய்த்து முழுகினால் பொடுகு யாவும் போய்விடும்.

### சிற்றுழா, பேருழா - இவ்விலைகளின் குணம்

சிற்றுழா மூலரத்தஞ் சீழ்மூலம் போக்கிவிடு
மற்றதொரு பேருழா வாய்த்திடினோ - உற்றகுத
மூன்றாம் வலைய முளையாசனக் கடுப்பைத்
தோன்றா தகற்றிவிடுஞ் சொல்.

சிற்றுழா மர இலையினால் இரத்தமூலத்தையும், சீழ் மூலத்தையும் போக்கும். பேருழா இலை உள்மூல முளையையும், ஆசனக் கடுப்பையும் போக்கும்.

### தெங்கு பனை இவைகளின் குருத்துக் குணம்

தென்னங் குறுத்தாற் சிலேத்தும வலிநீங்கு
மன்னுதிர மூலமது மாறுங்கா - ணுண்ணும்
பனங்குறுத்தைத் தின்றாற் பகருதிர மூலங்
களம்பெருகும் பேதியுமாங் காண்.

தென்னங்குருத்தால் கப உபத்திரவம், இரத்தமூலம் நீங்கும். பனங்குருத்தினால் இரத்தமூலம் அதிசாரம் உண்டாகும்.

**பேரீச்ச சிற்றீச்சு இலைகளின் குருத்துக் குணம்**

பேரீச்சுத் தன்குருத்தைப் பேணியே தின்பவருக்
கீரீச்சு குன்மவலி யேருங்கா - னூரிற்
சிறிய யீச்சுக் குருத்தைத் தின்றால் வயிற்றின்
மறிபுதிர வாயுவறும் வாழ்த்து.

பேரீச்சங் குருத்தினால் கப குன்ம நோய் குணமாகும்.

சிற்றீச்சங் குருத்தால் வயிற்றில் கட்டுப்பட்ட இரத்த வாத குன்ம நோய் குணமாகும்.

**மூங்கில் இலையின் குணம்**

குடற்கட்டிச் சூலையுடன் குன்மமுதிர
முடற் கெட்டாதோடி யொழியு - மடற்றங்கு
வேல்விழி மாதேகேளாய் வேயினைலை தனக்குக்
கால்வழியுஞ் சோணிதம்போங் காண்.

மூங்கில் இலைக்குக் குடற் சூலையும், வயிற்று நோயும், இரத்தத்தடிப்பும், பிரசவ காலத்திற் தங்கிய அழுக்கும் நீங்கும்.

*குறிப்பு:-* மாடுகளுக்கு நஞ்சு விழாவிட்டால் பச்சை நெல், வெல்லம் இவைகளுடன் சேர்த்து இடித்து வைத்தால் நஞ்சு விழும்.

## செடியின் இலை வகைகள்

**ஆடாதொடையிலையின் குணம்**

ஆடாதொடைப் பன்னமையறுக்கும் வாதமுதற்
கோடாகோடிச்சுரத்தின் கோதொழிக்கு - நாடின்
மிகுத்தெழுந்த சன்னிபதின் மூன்றும் விலக்கு
மகத்துநோய் போக்கு மறி.

ஆடாதொடை இலையினால் கபஆதிக்கம், வாததோடம், பற்பல சுரம், சன்னி 13ம், வயிற்றுநோய், இருமல் ஆகியவை நீங்கும்.

## வெண்நொச்சில் இலையின் குணம்

நாசந் தருவாத நாசிப்பிணி யழல்சு
வாசந் தசனவுரு வன்றோடங் - காசமற
லுச்சி யடையை யுறைநோயு மென்படுமோ
நொச்சி யடையை நுவல்.

வெண்நொச்சி இலையினால் மகாவாதம், பீனிசம், சுரம், இரைப்பு, தந்தவலி, திரிதோடம், இருமல், நீரேற்றம், கப குற்றத்தினால் தலையில் ஏற்படும் நோய்கள் யாவற்றையும் குணப்படுத்தும்.

## கருநொச்சில் இலையின் குணம்

வாதக் கடுப்பகலு மாறாத பீநசம்போ
மோதப் பேயோடி யொளிக்குங்காண் -
வேதைசெய்யு
மண்டைக் குடைச்சலறும் மாசில் கரு
நொச்சிலுக்கும்
பண்டைத் தலைவலிபோம் பார்.

கருநொச்சி இலையினால் வாதவலி, நாசி நோய்கள், கபம், மண்டைக் குடைச்சல், தலைவலி முதலிய நோய்கள் குணமாகும்.

## வெள்ளாமணக்கிலையின் குணம்

மந்தக் கதித்தெழுந்த வாத மருவலி
பந்தமல மியாவும் பறக்குங்காண் - சந்ததமும்
பூமணக்கு நெய்த்த புரிகுழன் மாதேவெள்ளை
யாமணக்குப் பத்திரியா லாய்.

வெள்ளை ஆமணக்கின் இலையினால் அக்கினி மாந்தம், வாதவலி, மார்பு நோய், மலக்கட்டு ஆகியவை குணமாகி சரீரத்தை வளர்க்கச் செய்யும்.

### செவ்வாமணக்கிலையின் குணம்

குன்மமொடு மந்தங் கொடுவாத மெய்வலியுஞ்
சன்மமட்டு வாராமற் றாண்டுங்கா ணன்மைதரு
மெய்வா மணக்குகட்கு மேற்றமென்பார் காந்தியுள்ள
செவ்வா மணக்கிலையைச் சேர்.

செவ்வாமணக்கின் இலையினால் வயிற்றுவலி, செரியாமந்தம், வாதகோபம், சரீரக்கடுப்பு, விரைவாதம் ஆகிய நோய்கள் குணமாகும்.

### செம்பையிலையின் குணம்

கட்டியொடு வீக்கங் காயது ணீரேற்ற
மொட்டிவரு வாதகப மோட்டுவது - தொட்டுவிடு
பம்பயிலை வேலைவென்ற வங்கண் மடமாதே
செம்பையிலை வேலையெனத் தேர்.

செம்பை இலையினால் வாயுவின் கட்டிகள், சோபை, சரீர நீரேற்றம், வாதகப தொந்தம் ஆகிய இவைகள் ஒழியும்.

### கருஞ்செம்பையிலையின் குணம்

விப்புருதிப் புண்ணாறும் வீறுகரப் பானும்போந்
தப்பாமன் மேகந் தணியுங்காண் - வெப்பார்
கபரோக மேகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமா முலைமாதே யெண்.

கருஞ்செம்பை இலையினால் விப்புருதிக் கட்டி, கரப்பான், பிரமேகம், பித்தகப தொந்தம் ஆகியவை குணமாகும்.

*குறிப்பு:-* தீராத ஒற்றைத் தலைவலிக்கு இதனை தைலம் காய்ச்சி தேய்த்து முழுக தலைவலி குணமாகும்.

### வறட்பூலாயிலையின் குணம்

சீதரத்தஞ் சேர்ந்தேனுஞ் சேர்க்கையின்றி யேனும்வரு
பேதிகள் வயிற்றின் பிடுங்கலினு - பாதிகளும்
பூதலத் திராநட் வறட் பூலாவிலை யரைத்து
மேதித் தயிரிலுண்ண வே.

வறட்பூலா இலையை அரைத்து, எருமைத் தயிரில் கரைத்துக் குடிக்கில் சீதரத்தம் கலந்தாவது, தனித்தாவது காணுகின்ற பேதிகளாலுண்டாகிற வயிற்றுநோயும், ஆயாசமும் குணமாகும்.

### பாவட்டையிலையின் குணம்

தீதவாதங் களறுந் தீபனமோ வுண்டாகும்
வாதங்கபமொழியும் வார்குழலே - போதவே
ஆவட்டைத் தாச்சுர மற்றுவிடுந் தோஷம்போம்
பாவட்டைப் பத்திரிக்குப் பார்.

பாவட்டை இலையினால் கபவாத தோடம், ஆயாசம், சுரம், முத்தோடம் ஆகியவை குணமாகி, பசி தீபனத்தை உண்டாக்கும்.

### பெருஞ்சின்னியிலையின் குணம்

காணாக்கடியுமெதிர் கண்ட விஷக்கடியு
நாணாதிரந்திடவு ஞாயமுண்டோ - தோணா
வருஞ்சின்னி மதலைமொழி மாதரசே கேளாய்
பெருஞ்சின்னி மூலியுண்ட பேர்க்கு.

பெருஞ்சின்னி இலையினால் காணாக்கடி விடங்களும், சில்விடக்கடிகளும் நீங்கும்.

## சிறுசின்னியிலையின் குணம்

கடிவிஷமும் காணாக் கடிவிஷமு மாத
ரிடுவிஷமு மோடுமிதுவன்றி - நெடியவிழிக்
கன்னிகையே மேகங் கணக்காச்சல் மாந்தமும்போஞ்
சின்னி யிலைக்குத் தெறித்து.

சிறுசின்னி இலைக்கு வண்டுகடி, இன்னதெனத் தெரியக்கூடாத செந்துக்களின் விஷங்களும், இடு மருந்து, பிரமேகம், கணச்சுரம், அக்கினி மந்தம் ஆகியவைகள் குணமாகும்.

*குறிப்பு:-* சொறி, சிரங்கு, புண் இவைகளுக்கு இதன் சாற்றைக் கொடுப்பதுண்டு.

## தழுதாழையிலையின் குணம்

வாதம் பிடிப்பென்ற வற்காலியைப் புலிபோற்
போதப் புவிக்கும் புகல்வற்றோ - காத
அழிதாழைப் பீனசத்தை யண்டா தகற்றுந்
தழுதாழைப் பன்னமது தான்.

சேர்ந்த சொறிசிரங்கைத் திண்வாதக் கூட்டத்தை
யாய்ந்தொழிக்கும் பித்தை யழைக்குமந்த -
மோய்ந்திடா
ஐயின் சரந்தணிக்கு மானதழு தாழையது
பெய்யின் கடுப்பகற்றும் விள்.

தழுதா இலை பக்கவாதம் முதலிய 80 வகை வாதநோ::கனும், கபபீனிசம், புடைகிரந்தி, ஆமவாதம், சொறி சிரங்கு, தேகக்குடைச்சல் ஆகியவைகளை நீக்கும். பித்தத்தை உண்டாக்கும்.

## விராலியிலையின் குணம்

ஆன்ற துரிசிநீ றாகமனத் துன்னினவே
ரூன்ற வருகட்டி யோடதைப்பு - தோன்றிற்
சுராலிக் குதளையிளந் தோகாய் விரைவாய்
விராலிக் குழையோடு விள்.

விராலி இலையினால் துரிசை வெண்மையாக்கும். அடிகனத்தக் கட்டிகளையும், வீக்கத்தையும் போக்கும்.

*குறிப்பு:-* இதனால் கெந்தகத்தைப் பற்பம் செய்யலாம்.

## எருக்கிலையின் குணம்

எலிவிஷங் குஷ்டமைய மேறு கிருமி
எரிசூலை வாயு விஷமந்தம் - மலபந்த
மெல்லா மகலு மெருக்கிலையைக் கண்டாக்கால்
வில்லாரு தன்னுதலே விள்.

எருக்கிலையினால் எலிவிஷம், பெருவியாதி, கபநோய், கிருமிநோய், ஐவகை வலி, கீல்வீக்கம், தனிவாத கோபம், பாம்புகலின்விஷம், அக்கினிமந்தம், மலக்கட்டு ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

## காட்டாமணக்கிலையின் குணம்

கட்டி விரணங் கரப்பான் பிலீகமதி
கொட்டியுறு குன்மங் கிளைத்தசிரங் - கொட்டுமோ
கூட்டோ டொழியுங் குவடனைய
கொங்கைமின்னே
காட்டா மணக்கிலையைக் கண்டு.

காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்
வீட்டு தலைநோய் விரிகிரந்தி - வாட்டுகின்ற
உண்மூலம் போகு முடம் புலர்தல் வெட்டையறும்
திண்மூல தாதுவுமாஞ் செப்பு.

காட்டாமணக்கு இலையினால் மேகக்கட்டி, புண், கரப்பான், பீலிகம், குன்மக்கட்டி, சனிக்கின்ற விரணங்கள், கபவாத குத்தல், தலைநோய், பெருவிரணம், உள்மூலம், வெள்ளை, வெட்டை ஆகிய நோய்களைக் குணப்படுத்தி விந்துவை அதிகரிக்கச் செய்யும்.

*குறிப்பு:-* இதன் சமூலச் சாற்றினால் தாம்பரத்தைப் பற்பம் செய்யலாம்.

**தவசு முருங்கையிலையின் குணம்**

தவசு முருங்கைத் தழையதற்குக் கேளா
யவசியம் பீநச முண்ணாக்கு மூவசர்க்கி
யையஞ் சுவாசகப மண்டாது குத்திருமல்
வையம் விடுத்தேகும் வழுத்து.

தவசு முருங்கை இலை வாத, பீனிசம், வாதநோய், கபசுவாசம், பொடியிருமல் ஆகியவைகள் நீங்கும்.

**வெதுப்படக்கிலையின் குணம்**

வெள்ளெடுப்பு சீதம் வெதும்பல் சுரத்துடனே
யள்ளெடுக்கு மாந்த மதிவாதத் - தெள்ளுமொழி
மாதே வெதுப்படக்கி வன்றதையுட் காய்ச்சலொடு
கோதே றிரத்தமும் போக்கும்.

வெதுப்படக்கியின் இலையானது, வெளுப்பானபேதி, கபக்கிராணி, தாகம், அள்ளுமாந்தம், வாத ஆதிக்கம், உட்சுரம், இரத்த தாதுவினால் உண்டாகின்ற சோர்வு ஆகியவைகளைப் போக்கும்.

**பெரியாநங்கையின் குணம்**

பெரியா நங்கைத் தழைக்குப் பித்தமென்ப தெல்லாந்
தெரியநம லோடுமிது திண்ணம் - பிரியா

மலமறுக்கும் பஸ்பவகை வைப்பதற்கு மாகுஞ்
சிலைநுதலே நன்றாய்த் தெரி.

பெரியா நங்கைக்குப் பித்தநோய்களும், மலபந்தமும் நீங்கும். இது பலவித பற்ப செந்தூரங்கள் செய்வதற்கும் உதவும்.

### சிறியா நங்கையின் குணம்

சிறியாநங்கைத் தழையைச் சேவித்த பேரைப்
பிறியா மடந்தையர்கள் பின்னு - மறியதிலி
டங்கணமும் நீறுந் தனியழகு முண்டாகுந்
திங்கண்முக மாதே தெளி.

சிறியா நங்கை என்னும் மூலிகை பெண்களை வசியம் செய்வதற்குப் பயன்படும். வெங்காரத்தை பற்பம் செய்ய உதவும். சரீரத்திற்கு அழகையும், வனப்பையும் உண்டாக்கும்.

### பருத்தியிலையின் குணம்

பருத்தியிலை மொட்டிரண்டைப் பாலிலரைத்
துண்ண
வருத்துகின்ற மேகமெல்லா மாறும் - பருத்த
விரத்த பித்தத்தோடு விரணவீக் கம்போ
மரத்த விதழ்மாதே யறை.

பருத்தியினது இலையையாவது, மொக்கையாவது 35கிராம் எடுத்து அரைத்து அரை ஆழாக்குப் பசுவின் பாலில் கரைத்து உட்கொண்டால் சீழ்ப்பிரமேகம் முதலிய மேகநோய்களு, இரத்தப் பித்தநோய்களும், விரணம், சோபை முதலியவை நீங்கும்.

### கூத்தன் குதம்பையிலையின் குணம்

குத்துகின்ற நோய்போக்குங் கோரபித்த முண்டாக்கு
மத்தி செய்யுஞ் சன்னி யகற்றுங்காண் - சத்திக்கு

மாத்தங்கு வாய்மொழிக்கு மண்டூரத் திற்குதவுங்
கூத்தங் குதம்பைக் குரை.

கூத்தன் குதம்பை இலை சூலநோய், சன்னிபாதம், மகாவாத நோய் ஆகியவைகளை ஒழிக்கும். பித்த கோபத்தை விருத்தி செய்யும். மண்டூரத்தைச் செந்தூரம் செய்வதற்கு உதவும்.

### அரிவாள் மூக்குப் பச்சிலையின் குணம்

வெட்டுக் காயத்தை விரைவி லுலர்த்திவிடுந்
துட்டக் கடுவொட்டுந் தோன்றுமிகக் - கெட்ட
பிரிவாற் றலையைப் பிளக்கும் வளிநீக்கு
மரிவாள் மூக்குப்பச் சிலை.

அரிவாள் மூக்குப்பச்சிலை ஆயுதங்களால் உண்டாகின்ற காயத்தை விரைவில் குணப்படுத்துவதுமன்றி பெரிய விரணங்களையும், உதிரக் கெடுதியால் பிறந்த தலை நோய்களையும் குணப்படுத்தும்.

### துத்தியிலையின் குணம்

மூலநோய் கட்டி முளபுழுப் புண்ணும்போஞ்
சாலவதக்கிக் கட்டத் தையலே - மேலுமதை
எப்படியேனும் புசிக்கி லெப்பிணியுஞ் சாந்தமுறு
மிப்படியிற் றுத்தி யிலையை.

துத்தி இலையை ஆமணக்கு நெய்யால் வதக்கி மூலநோய் கட்டி, விரணம், முளைகள், கிருமி ஆகியவைகளின் மேல் வைத்துக்கட்ட குணமாகும். மேலும் இதைச் சமையல் செய்து உட்கொண்டால் மேற்கூறப்பட்ட நோய்களனைத்தும் குணமாகும்.

## விழுதியிலையின் குணம்

விழுதித் தழைகரப்பான் வெண்மேகம் நீக்கு
பழுபடுவன் சூலை பறிக்கு - மெழுபேதி
யாக்கு மதிமந்த மகக்கிரிமி துன்மலமும்
போக்கு மதுவே மகல்.

விழுதி இலை கரப்பான், வெண்மேகம், விப்புறுதிக் கட்டி, சரீர குத்தல், அக்கினி மந்தம், மலாசயகிருமி, பழமலம் ஆகியவைகளைப் போக்கும். பேதியை உண்டாக்கும்.

## கணப்பூண்டினது இலையின் குணம்

கணப்பூண் புலைமேகக் கட்டிமேகக் கரைக்கு
மணக்குமிக வாய்க்கு மதுரஞ் - சிணுக்கான
வாதகணம் பித்தகண மாற்றுங் கபச்சுரத்தின்
பேதமறப் போக்குமெனப் பேசு.

கணப்பூண்டின் இலையானது மேகநீரால் பிறந்த கட்டிகளைக் கரைக்கும். தேரைக்கணம், ஆமக்கணம், கபசுரங்கள் ஆகியவைகளைப் போக்கும்.

## காரை, சேம்பு இலைகளின் குணம்

காரைத் தழைக்குக் கடுப்பிரத்தம் போம்புளியைச்
சோரப் பெய்தாக்கிச் சுவைத்தறிநீ - பாரிலுள்ள
சேம்பிலைக்கு நற்புள்ளியைச் சேர்த்து
சமைத்துண்டாற்
கூப்பிட்ட மூலமறுங் கூறு.

புளியிட்டு கடைந்த காரயிலைக்கு இரத்தக் கடுப்பு விலகும். மேற்கூறப்பட்டபடி கடைந்த ஊர்ச்சேம்பு இலைக்கு மூலநோய் குணமாகும்.

**பிடங்குநாரி இலையின் குணம்**

*பிடங்குநாரிப் பன்னப் பேச்சை யெடுக்கி*
*லடங்கு மலச மிஃதன்றித் - தொடங்குகின்ற*
*நீர்ச் சுரப்பும் வாங்கிவிடு நீடுசட ராக்கினியாந்*
*தேர்ச்சியுறும் புத்திக்குத் தேர்.*

பிடங்கு நாரி இலையினால் செரியா மந்தம், ஆரம்ப நீர்க்கோர்வை போகும். சாடராக்கினி நீரை அதிகப்படுத்திப் புத்திக்குத் தெளிவை உண்டாக்கும்.

**அவுரியிலையின் குணம்**

உரிய வவுத்தழைதா னோது பதினெண்
ணரியநஞ்சைத் தின்றவர்க்கு மாகுந் - தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர்க்குறு மாந்தந்
தேக மற்றுந் தெரி.

சன்னிபதின் மூன்றுஞ் சந்தொடித்த வாதமுத
லுன்னு விஷக்கடியு மோடுங்காண் - மின்னுங்
கவுரிநிற முண்டாகுங் காசினி யுளேநல்
லவுரி யிலையா லறி.

அவுரி யிலையினால் தாவர சந்த மூல விஷங்கள் பதினெட்டும், வாதசுரம், மாந்தம், சீதளம், சன்னி பதிமூன்று, கீல் வாதம் சர்ப விடம் இவைகளையும் குணப்படுத்தும். சரீரத்திற்குப் பொன்னிறச் சாயலை உண்டாக்கும்.

***குறிப்பு:-*** இதன் இலையை குடிநீர் செய்து உட்கொண்டால் மேற்கூறப்பெற்ற நோய்களனைத்தும் குணமாகும். மேலும் பாடான நஞ்சைகளையும் முறிக்கும். சுரமூர்ச்சை, வெட்டை, குன்ம நோய் போன்ற பல நோய்களையும் குணப்படுத்தும்.

## குப்பைமேனியின் குணம்

*தந்தமூலப் பிணிதீத் தந்திடுபுண்சர்வவிஷ*
*முந்துகுன்மம் வாத முதிரமூ - லந்தினவு*
*சூலஞ் சுவாசா தொடர்பீநசங் கபம்போம்*
*ஞாலங்கொண் மேனியத னால்.*

குப்பைமேனி இலையினால் தந்தமூலநோய், தீச்சுட்டப் புண், தாவர சங்கம விடங்கள், வயிற்றுவலி, வாதநோய், இரத்த மூலம், நமைச்சல், குத்தல், இரைப்பு, பீனிசம், கப ஆதிக்கம் ஆகிய நோய்கள் குணமாகும்.

## மிளகுத்தக்காளியின் குணம்

*மந்தாக்கினி சோபை வாந்திசுழல் வாயுவெப்ப*
*மிந்துநோய் பாண்டொ டெதிர்விக்கன் - முந்த*
*வளருமுத் தோஷநோய் மாற்றும் கைப்பான*
*மிளகுத் தக்காளியிலை மெய்.*

*மிளகுத்தக் காளியிலை வெண்ணாகங் கட்டு*
*மிளகுபற்ப சிந்தூரத்திற் கேகுங் - கொளாவுகின்ற*
*மேகச் சொறியகற்றும் வெட்டையனற் றணிக்கு*
*மாகச் சனிமுலையாய் வாழ்த்து.*

கசப்புள்ள மிளகுத் தக்காளி இலை, அக்கினி மந்தம், வீக்கம், வாதம், சுரம், பாண்டு, விக்கல், திரிதோட நோய்கள், சொறி, வெள்ளை, வெட்டை, உட்சூடு ஆகியவைகளைப் போக்கும். வெள்ளீயத்தைக் கட்டும் பலவித செந்தூரங்கள் செய்வதற்குதவும்.

## தும்பை இலையின் குணம்

*சீறுகின்ற பாம்போடு சிலவிஷங்கால் சென்னிவலி*
*யேறுகப மாந்த மிருக்குமோ - நாறுமலர்க்*
*கொம்பனைய மாதே குளிர்சீத சன்னிவிடுந்*
*தும்பையிலை யைன்றொருகாற் சொல்.*

தும்பையிலை யெயுண்ணுஞ் சோற்றுக் கெலாங்கறியா
யம்புவியோர் மிக்க வருவந்துங்கால் - வெம்பிவரு
மேகமொடு கண்புகைச்சல் வீறுகை காலசதி
தாகமதி சோம்பலுறுந் தான்.

தும்பை இலையினால், குற்றநோய்கள், கபம், வாதம், இவைகள் நீங்கும். தலைவலி, மூக்கில், உண்டாகும் நோய்கள், நீர்வேட்கை, இருமல், ஈளை முதலிய கபப்பிணிகள் யாவும் போகும். இதைப் புளியிட்டுக் கடைந்து உணவோடு உட்கொண்டால் கண்புகைச்சல், கை, கால்களின் அசதி, தாகம், சோம்பல் இவைகள் போகும். இதன் இலைச்சாற்றினால் பாம்பு கடி முதலிய நஞ்சுகளும் போகும்.

*குறிப்பு:-* இதனால் தீராத கபப்பிணியையும், மருத்துவர்களுக்கும் அடங்காத முக்குற்ற நோய்களையும் துரத்தி அடிக்கும். இதன் இலைச்சாற்றை மூக்கில் பிழிய சளியைக் கரைத்து வெளிப்படுத்தும், சரீரத்திற்கு ஊட்டத்தைக் கொடுக்கும். ஆனால் உடலுக்கு வெப்பத்தை உண்டாக்கும்.

**முள்ளங்கியிலையின் குணம்**

வாயு மிகும்பித்தம் வளருங் கிருமியுமா
மோய்வுரு நெஞ்செரிவு முண்டாங்காண் - யேயுநிற
முள்ளங்கி யிலையை முற்றுமுண்டாற் குன்மவலி
யுள்ளாங் கிளம்பா துரை.

முள்ளங்கியிலையினால் வாதகோபம், பித்தநோய், கிருமி நோய் ஆகியவை உண்டாகும். வயிற்று நோய் அடங்கும்.

**சுவற்று முள்ளங்கியிலையின் குணம்**

நீரை யிறக்கிவிடு நெஞ்சுவலியைத் தொலைக்குங்
கோர வதைப்பைக் குடிகெடுக்கு - நேரே
தவத்தி லுயர்ந் தோர் மயக்குஞ் சாயக்கண் மாதே
சுவற்று துள்ளங்கியது சொல்.

சுவர் முள்ளங்கியின் இலையினால் நீர்க்கட்டையும், மார்நோயையும், வாதசோபநோயையும் குணப்படுத்தும்.

**கறுப்பு வழுதுணையிலை, பருவழுதுணைவேர், சிறுவழுதுணைவேர் இவைகளின் குணம்**

வழுதுணையின் பேதம் வழூத்தின் மிகுநோய்க்காம்
வழுதுமைக டம்மை நாவில் வாமை -
வழுதுனைப்பன்
னஞ்சலம் போக்குங்கா லடக்கும் பருது சன்னம்
பஞ்சமூலத்தி லொன்றாகும் பார்.

கறுப்பு வழுதுணையிலையினால், நீர்க்கட்டையும், பருவழுதுணைவேரினால், வாதநோயையும், சிறுவழுதுணை வேர் பஞ்சமூலத்தில் ஒன்றாகயிருந்து பல நோய்களையும் குணப்படுத்தும்.

**புகையிலையின் குணம்**

மருந்தை முறித்துவிடும் வாய்வளறச் செய்யுந்
திருந்து பலவீனஞ் சேர்க்கும் - பொருந்து பித்த
முண்டாக்கும் விந்தழிக்கு மோது புகையிலையைக்
கண்டார்க்கு மாகாது காண்.

புகையிலை வாய் வறட்சி, துர்பலம், பித்த ஆதிக்கம், சுக்கில நட்டம் ஆகியவைகளை விளைவிக்கும். நல்ல மருந்தின் நற்குணங்களைக் கெடுக்கும்.

*குறிப்பு:-* புகையிலையில் விளக்கெண்ணெயை தடவி நெருப்பு அனலில் வாட்டி, அண்ட வீக்கங்களில் வைத்துக் கட்ட வீக்கம் வடிந்து குணமாகும்.

# கொடியின் இலை வகைகள்

## தூதுவளையின் குணம்

காதுமந்தக் காதெழுச்சி காசந் தினவுமத
மோதுமந்த முத்தோஷ முட்சூலை - தாதுநட்ட
மீதுளைப் பத்திரியை மேவச்செய் வாராய்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து.

தூதுவளை இலையினால் காது மந்தம், காதெழுச்சி, காசம்,நமைச்சல், மதநோய், அக்கினி, மந்தம், திரிதோடம், உட்குத்தல், விந்து நட்டம் மேல் இளைப்பு ஆகிய நோய்களைப் போக்கும்.

*குறிப்பு:-* தூதுவளையை கர்ப்ப முறையாகவும், கறியாகும் உட்கொள்வோமானால் உடலில், கபத்தால் ஏற்பட்ட நோய்கள் யாவும் குணமாகும்.

## பறங்கி இலையின் குணம் - இதுவே பூசிணி

பித்தமொடு வாதம் பெருந்தாக மும்பெருகும்
சத்தமொடு பேதி தலைப்படுங்காண் - சுற்றுங்
கறங்காகு மேனியுள்ளே கவ்வுபுழூச் சேரும்
பறங்கி யிலைக்குப் பகர்.

பறங்கி இலைக்குப் பித்தகோபம், வாதாதிக்கம், அதிதாகம், இரைச்சலுடன் கூடியபேதி, சரீர படபடப்பு, கிருமி ஆகிய இவைகள் உண்டாகும்.

## சுரையிலையின் குணம்

நீரிழிவும் வீக்கம்போ நேரே மலமிறங்கும்
பாரமுறு சோபை பறக்குங்காண் தீராத
திரிதோஷம் போகுஞ் செறிந்த சுரையி
னுரிய கொழுந்தியையுண்.

சுரையிலையினால், சோபை நோய், உடல் வீக்கம், முட்தோடங்கள் ஆகியவை போகும். ஆனால் மலத்தை விலக்கச்செய்யும்.

*குறிப்பு:-* நீரேற்றம் என்றும் பைசாச பிணிகளை ஒழிக்கவேண்டுமானால் சுரையிலையை வெள்ளைப்பூண்டு சேர்த்து சமைத்து உட்கொண்டால் மேற்கூறப்பெற்ற நோய்கள் குணமாகும்.

### பேய்ச்சுரையிலை குணமாகும்

மூல ரோகத்தின் முளையைக் களைந்துவிடு
மால விஷத்தையு மகற்றுங்காண் - ஞாலமதில்
லாய்ச்சி விடங்கிட்டுவது மாவருத்தம் வெற்பிறுதி
பேய்ச்சுரையின் பத்திரத்தைப் பேண்.

பேய்ச்சுரையிலையிலானது முளை மூலநோயும் கொடிய சர்ப்பவிடங்களையும் போக்கும்.

### பாகல் இலையின் குணம்

பிரியாக் கிருயியறும் பேதியுண்டாந் தோஷ
முறியு மிரத முறியுங் - குறியாத
மாகற்புடைய மடமயிலே யெப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து.

பாகல் இலைக்குக் கிருமி நோயும், திரிதோட கோபமும், நீங்கும். பேதியை உண்டாக்கும். இதனால் பாதரச வேகம் முறியும்.

### அவரை இலையின் குணம்

அவரையிலைக் குத்தலைநோ யாழ்ந்த கிராணி
யுவரும் விஷமுத லேசுஞ் - நவறாமற்
கொண்டவர்க்குத் தீபனமாங் கோதாய் விரணமறுங்
கண்டவர்க்குத் தோற்றுமிது காண்.

அவரையிலைக்குத் தலைநோய், காணி, விஷத்தலை நோய், பசிதீபனம், சிரங்கு ஆகியவை குணமாகும்.

**காராமணியிலையின் குணம்**

காரா மணியிலையைக் காய்ச்சியுண்டா னாவுரிசை
வாராத வாயுமிக வந்துறுங்கா - ணேரேகேண்
மூலம் விளையு முசியாக் கழிச்சலுண்டாந்
தாலமதி லதனைத் தள்.

காராமணி இலையை முறைப்படி பாகஞ்செய்து உண்டால் வாதநோய், வாதமூலம், நீங்காத பேதி ஆகியவை உண்டாகும். ஆகையால் இவ்விலையை உட்கொள்ளக் கூடாது.

**கொடிக்குறிஞ்சா இலையின் குணம்**

கரப்பான் கிரந்தி கடியவிடம் புண்காச
முரப்பாம் விஷபாக மோட்டு - நிரைப்பான
அக்கரத்தை மாற்றிவிடு மாயிழையே பித்தமுமாந்
தக்குறிஞ் சாவினிலை தான்.

கொடிக்குறிஞ்சா இலையினால் அரைக்கடுவன், சிரங்கு, காசம், கொடியவிஷம், நாக்குப்புண் ஆகியவை நீங்கும்.

**கறிப்பாலை இலையின் குணம்**

மேகமனல் வெட்டைசுரம் வீறுபித்த
முத்தொலையும்
போகமுறு மெய்மருந்தும் பொய்மருந்தாம் -
பாகுமொழி
மானே கறிப்பாலை மன்னுமிலை யைத்தினமுந்
தானே யருந்துவதற்குத் தான்.

கறிப்பாலை இலையை முறைப்படி சமைத்து உட்கொள்வோர்க்குப் பிரமேகம், வெப்பம், கீழ்மேகம், சுரம், பித்தகோபம் ஆகியவை நீங்கும். விந்துவை அதிகரிக்கச் செய்யும். ஆனால் உட்கொள்ளும் மருந்துகளுக்குக் கெடுதியை உண்டாக்கும்.

## ஊசிப்பாலை இலையின் குணம்

மேக மகலும் விழிகுளிரு நாளத்தின்
வேகமகலுங்க மேனியிடும் - மோகமண
வாசிப் பாலைப் பருவ மாந்தரை வீக்குங் கொடியே
ஊசிப் பாலைப்பன்ன முண்.

ஊசிப்பாலை இலையால் பிரமேகம், ஆண்குறியினது துவார வெப்பம் தீரும். கண்களுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும். உடலுக்கு வலிவைக் கொடுத்து அழகை மிளிரச்செய்யும்.

## கோவையிலையின் குணம்

கண்ணுங் குளிர்ச்சிபெருங் காசமொடு வாயுவுறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும் - நண்ணுமுடல்
மீதிலார் வெப்பகலும் வீழாநீர்க் கட்டேகும்
கோதிலாக் கோவை யிலைக்கு.

கோவையிலைக்கு இருமல், வாதகோபம், பெருவிரணம், சிறுசிரங்கு, உடல்சூடு, நீர் அடைப்பு ஆகியவை குணமாகும். கண்களுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.

## முசுமுசுக்கை இலையின் குணம்

இருமலுட னீளை யிரைப்பு புகைச்சல்
மருவுகின்ற நீர்த்தோஷ மாறுந் - திருவுடைய
மானே முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான்.

பெரிய மூலியாகிய முசுமுசுக்கும் இலைக்குக் காசம், கோழை, சுவாசம், நெஞ்சில் ஏற்படும் புகைச்சல், சலதோஷம் ஆகியவை குணமாகும்.

### கோழி அவரை இலையின் குணம்

ஆழிசுற்றும் வையத் தடர்ந்த பேராமையொரு
நாழியினிற் கெட்டு நலியுங்காண் - தோழிக்கேள்
கோழியவரைத் தழைக்குங் குன்மங் குடல்வாத
மூழிவரைக்கும் வாரா தோர்.

கோழி அவரை இலைக்கு வயிற்றில் காணுகின்ற பருத்த ஆமக்கட்டி நோயும், வயிற்றுநோயும், பித்தவாதமும் குணமாகும்.

### முசக்காதிலையின் குணம்

பீசத் தெழுந்த பெருவீக்கங் கைகாலில்
வீசிப் புடைத்த வெறுவீக்கம் - பேசாம
லேகுமுசற் காதிலை யிருக்குமூரை விட்டுப்
பாகுமொழி மாதே பகர்.

முசக்காதிலையால் குடல் அண்ட வீக்கமும், கைகால்களின் கீல்கள் பற்றிய வீக்கமும் குணமாகும்.

### கழற்சியிலையின் குணம் இதுவே வச்சிரம்

விரைவாதஞ் சூலையறும் வெட்டை யனலேகு
நிரைசேர்ந்த குன்ம நிலையா - துரைசே
சுழற்சி விலகு மருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால்.

கசப்புள்ள கழற்சி இலையால் அண்டவாதம், சூலைக்கட்டு, பிரமேகம், சுரம், பலவித குன்ம நோய்கள், உள்அழலை, வெள்ளை, வெட்டை ஆகியவை ஒழியும்.

### வெண்கழற்சி இலையின் குணம்

ஏரண்ட தோடே யிரங்கண்ட மெத்தவுமே
வீறண்ட வெல்லாம் விலகுங்காண் - தூரண்ட
வள்ளைக் குழையடிபோல் வாள்விழி மாதேநல்ல
வெள்ளைக் கழற்சியிலை விள்.

வெள்ளைக் கழற்சி இலை ஏரண்ட நோயையும், இரங்கண்ட நோயையும், தசையண்ட நோயையும் போக்கும்.

### வரிக்குமட்டி இலையின் குணம்

பற்றுதிரப் பூச்சிகளைப் பற்பலவா மந்தத்தைச்
சுற்றுதிரப் பித்தத்தைத் தூவிடத்தை - முற்று
மரிக்குமட்டி யாயிலைமா தங்கருரை யன்றோ
வரிக்குமட்டி யாயிலை மாதே.

வரிக்குமட்டி இலை, இரத்தக் கிரிமிகள், பலவித மந்தம், இரத்தப்பித்தம், தசையைப் பற்றிய சர்ப விஷம் ஆகியவைகளைப் போக்கும்.

### சிறுபூனைக்காலி இலையின் குணம்

சிறுபூனைக் காலியிலை சில்விஷத்தைப் போக்கு
முறுகாந் தத்தைச் சிந்தூரிக்குஞ் - சிறுமாந்த
மையங் கபத்தீர்க்கு மாந்தகப நோய் விலக்கும்
வையந் தனிலிதனை வாழ்த்து.

சிறுபூனைக்காலி இலையானது வண்டுக்கடி முதலிய சில்விஷம் அகற்றும் மந்தம், கபகோபம், கோழைக்கட்டு, கபநோய் ஆகியவைகளை ஒழிக்கும். இதனால் காந்தத்தைச் செந்தூரம் செய்யலாம்.

**வேலிப்பருத்தி இலையின் குணம் - இதுவே உத்தாமணி**

ஆலித் தெழுந்தநோ யத்தனையுந் தீருமே
வேலிப் பருத்தியதன் மெல்லிலையால் -
வேலொத்துக்
கண்டிக்கும் வாதமுடன் சன்னிதோஷ மும்போ
முண்டிக்கும் வாசனையா மோது.

உத்தா மணியிலையா லுள்வயிற்றுக் குன்மமொடு
குத்தாம் வலியுங் குளிரும்போம் - பற்றி
யிசிக்கும் வலியிரைப்பு மெத்தடிப்பு மேகும்
பசிக்குமதி மாந்தமும்போம் பார்.

உணவிற்கு மணத்தைக் கொடுக்கும் உத்தாமணி இலையால் பல நோய்கள், வாதநோய், விஷசன்னி, திரிதோடம், வாதகுன்மம், சரீரக் குடைச்சல், குத்தல், நடுக்கல், தனூர்வாதம், சுவாசம், பலவிதத் தடிப்புகள், அக்கினி மந்தம் ஆகியவைகளைப் போக்கிப் பசியை உண்டாக்கும்.

**தாரா இலையின் குணம் - இது தூரா என மருவியது**

புண் கிரந்தி கட்டி பொருசன்னி கீடமும் போங்
கண்புகைச்சல் காசங் கதிக்குமென்பார் -
பெண்களுக்குப்
பாலும் பெருகுமுள்ளே பற்றுதிரச் சிக்கல்விடு
மேலுந் தாராவினிலைக் கே.

தாரா இலைக்கு விரணம், கிரந்தி, விப்புறுதி, கட்டி, சன்னிபாதம், ஓர்கிருமி, கண்புகைச்சல், கண் காசம் ஆகியவை போகும். முலைப்பால் விருத்தி உண்டாகும். மேலும் பெண்களுக்கு உண்டாகும் உதிரச்சிக்கல் போய்விடும்.

**செந்தரா இலையின் குணம்**

அனில முளையு மரோசகமு நீக்குந்
தனியான தோஷமது தாழுங் - கனிமொழியே
வெந்தாரைச் சூடும் விடாயும் பொந் தீபனமாஞ்
செந்தராவின் றழைக்குச் செப்பு.

செந்தரா இலைக்கு வாதமுளை மூலம், அரோசிகம் நீங்கும், வாதம் முதலிய தனித்தோஷங்கள், நீர்த்தாரை, சூடு, ஆயாசம் இவை நீங்கும். பசித் தீவனம் உண்டாகும்.

*குறிப்பு:-* செந்தரா சமூல சாற்றில் தங்கம் பற்பமாகும். இப்பற்பம் வெண்குட்டத்தைக் குணப்படுத்தும்.

**விஷமூங்கில் இலைகளின் குணம்**

பிளவை யுகிர்ச்சுற்று பெரும்படுவன் வீக்க
மளவினோய் காதெழுச்சி யாற்று - மளவையுறா
தோங்கி வளர்ந்தமுலை யோவியமே நீண்டவிஷ
மூங்கிலிலை நன்மூலி முன்.

விஷமூங்கில் இலை இராசப்பிளவை, நகச்சுற்று, பெரும்படுவன், சோகை, கப கர்ணசூலை முதலிய நோய்களைக் குணப்படுத்தும்.

**சதாப்பு இலையின் குணம்**

கணமாந்த ரூட்சை கணக்கழிச்சல் வாந்தி
குணமாம் பசியுங் குலவும் - வனமயிலே
கூடுநிறை கருப்பக் கோதையர்க்காம் வேதகலு
நாடு சதாபலையிலையி னால்.

சதாப்பு இலையினால் பால்மந்தம் முதலியவற்றால் குழந்தைகளுக்க உண்டாகின்ற சுரம், கணப்பேதி, கபவாந்தி, பிரசவ மாதர்கள் வேதனை ஆகியவைகளைப் போக்கி பசியை உண்டாக்கும்.

*குறிப்பு:-* இதன் இலையை உலர்த்தி இடித்துத் தூள்செய்து, வடிக்கட்டி, காலை, மாலை இருவேளையும் பசும்பாலில் கால் முதல் அரைத்தேக்கரண்டி அளவு போட்டு உட்கொள்வோமானால் விந்துவைப் பெருக்கி நரம்புத் தளர்ச்சியைப் போக்கும் வல்லமையுடையது.

# கீரை வகைகள்

**கருணைக் கிழங்குத் தண்டின் குணம் - இதுவே சூரணம்**

சித்த குதாகுரத்தைத் துட்டகப மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற் -பத்தியமாஞ்
சீரணத்தை யும்மிகுந்த தீபனத்தை யுங்கொடுக்கும்
சூரணத்தின் றண்டெனவே சொல்.

பத்தியத்திற்கான கருணைக்கிழங்கின் தண்டால், மூலநோயும், கபகோபமும் நீங்கும், தாது விருத்தியும் உண்டாகும். சீரணமும் பசியும் ஏற்படும்.

**கீரைத்தண்டின் குணம்**

தண்டுமெத்த வாயு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கிற் சின்னோய்போம் விள்ளவோ -
கொண்டாக்
ணீர்க் கடுப்பு வெட்டையு னில்லாது நேரிழையே
போர்க்கடுப் பிரத்தமும் போம்.

அதிவாத சீதளமுள்ள கீரைத்தண்டால் நீர்க்கடுப்பு, வெள்ளை வெட்டை, பிரமேகச்சூடு, வயிற்றுக் கடுப்பு, இரத்தபேதி முதலிய நோய்கள் குணமாகும்.

**வெண்கீரைத் தண்டின் குணம்**

வெண்கீரைத் தண்டு வியாதியற்ற நற்கறியாங்
கண்காணா தோடிவிடுங் காந்தலெலாங் - கண்காணு

மூலமதற் கேற்கு முசியா வெரியகற்றுந்
தாலமதி லக்குணத்தைச் சாற்று.

வெள்ளைக்கீரைத் தண்டினால் வெப்பம், வெளி மூலநோய், பித்த எரிச்சல் நீங்கும்.

**புதியன் மூலிக்குணம் - இதுவே புதினா**

அருசியொடு வாந்தி யக்கினியா மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட லிரியுந்
துதியதன்று சோறிரங்குந் தொல்லுலகி நாளும்
புதியன் மூலிகையைப் புகல்.

புதினாவினால் பசியின்மை, வாந்தி, மந்தாக்கினி, இரத்த தாதுவின் அழுக்கு, மலப்போக்கு ஆகியவை நீங்கும். உணவு செல்லும். (பசியுண்டாகும்)

**வள்ளைக்கீரை, பருப்புக்கீரை இவைகளின் குணம்**

வள்ளைக் கீரைதனில் மாபெரும்பா லுண்டாகும்
பிள்ளைப் பருப்பிலைக்கும் பித்தமறுங் - கொள்ளத்
தெரியுங் கடல்சூழித் தேசத் தோருக்குக்
கரிய குழலணங்கே காண்.

வள்ளைக்கீரைக்கு, வாதகோபம் நீங்கும், முளைப்பால் பெருகும், இளம்பருப்புக் கீரைக்கு பித்த ஆதிக்கம் போகும்.

**வங்கார வள்ளைக்கீரையின் குணம்**

மாரிக்கா லத்தாய வங்கார வள்ளையினாற்
பூரித்த வாதம் பொருமலொடு - காரித்
திறங்கா மலசல மிறங்கு மின்புண்டா
முறங்கா விழியணங்கே யுள்.

வங்கார வள்ளைக்கீரையினால் வாதநோயும், வயிற்று இரைச்சலோடு கூடிய வயிற்று உப்பிசம் நீங்கும். கருத்துச்

சிக்கிய மலம், மூத்திரமும் சரியாய் இறங்கும். குடலுக்குச் சுகத்தையுண்டாக்கும்.

**கொடிலைக் கீரையின் குணம் இது வசலை, பசலை என மருவியது**

நீர்க்கடுப்பு நீரடைப்பு நீங்காத மேகமுமிவ்
வூர்க்கடுத்து வாராம லோடுங்காண் - பார்க்கவொண்ணா
வற்பவிடை மாதே யாரோசிசர்த்தி யுந்தொலையு
நற்பசலைக் கீரையத னால்.

நல்ல வசலைக் கீரையால் மூத்திரக் கடுப்பும், மூத்திரக் கிரிச்சரம், நீரடைப்பு, இடைவிடாது ஒழுகிக்கொண்டிருக்கும் வெள்ளை, வாந்தி, அரோசிகம் ஆகியவை குணமாகும்.

**சிறுபசலைக் கீரையின் குணம் - இதுவே பசறை**

போகமிகக் கொடுக்கும் போர்செய்கபத் தைப்பெருக்கு
மாகமதிற் றாகமனலைத் தணிக்கு - மாகுடரின்
மன்னு மலமிளக்கு மாறா வுரிசைதருந்
தின்னுஞ் சிறுபசலைத் தேர்.

அதிகச் சுவையுள்ள சிறுபசலைக் கீரையினால் புணர்ச்சியில் இச்சையும், கபத்தையும் பெருக்கும். தாகத்தையும், சூட்டையும் தணிக்கும், மலத்தை இளக்கும்.

**பாற் சொறிக் கீரையின் குணம்**

வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதம் பேதி
நியத்தரத்தம் போக்கிவை நிறுத்துங் - குயத்தையொரு
பாற்சரியக் காட்டும் பருவ வணங்கரசே
பாற்சொரிக் கீரையது பார்.

பாற்சொரிக் கீரையானது வயிற்றுக்கடுப்பு, சீதபேதி, இரத்தபேதி ஆகிய பேதிகளைக் குணப்படுத்தும்.

**சாணாக்கீரையின் குணம்**

கோழையொடு மாந்தங் குழந்தைச் சுழிக்கணமும்
பேழையெனச் சொல்லும் பெருவயிறுங் -
கீழொருவர்
காணாக் கிருமிகளைக் கக்குமணி புண்ணுஞ்
சாணாக்கிக் கீரையிற் போந் தான்.

சாணாக்கீரையால் கபம், அக்கினி, மந்தம், சுழிக்கனம், மகோதரம், புழு நெளிகின்ற இரணம் ஆகியவை போகும்.

**துயிலிக்கீரையின் குணம்**

சீதம் விளையுஞ் சிறுசிரங்கு புண்ணுமாங்
காது பழமலமுங் கட்டறுங்காண் - சீதக்
குயிலினையாய் வெட்டையெனக் கூறுநோ
யில்லைத்
துயிலயிலைக் கறிக்குஞ் சொல்.

துயிலிக்கீரைக்குச் சீதமும், சொறிசிரங்குப் புண், இரணம் உண்டாகும். பழமலக்கட்டும், பிரமேக வெள்ளையும் நீங்கும்.

**பண்ணைக்கீரையின் குணம்**

பண்ணையிளங் கீரையது பற்று மல மிளக்கு
மெண்ணுங் குடருக் கிதங் கொடுக்கும் -
பெண்ணேகேள்
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றுவிக்கும்
கோதச் சிலையதனைக் கொள்.

குடலுக்கு நன்மையைக் கொடுக்கக்கூடிய பண்ணைக் கீரை, சீதம், கரப்பான், சொறிசிரங்கு, புண், இரணம் இவைகளை நீக்கும். மலத்தை இளக்கச் செய்யும்.

### பரட்டைக்கீரையின் குணம்

பரட்டைநறுங் கீரையது பத்தியத்திற் காகும்
வெருட்டுகின்ற பித்தக வீறு - புரட்டுங்
கபமுடனே வாதங் கரப்பானு மேகுஞ்
சுபவசன மாதே துதி.

பரட்டைக் கீரையால் கபநோய், வாதநோய், கரப்பான், பித்தம் ஆகிய நோய்கள் போகும்.

### செங்கீரைத்தண்டின் குணம்

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தாங்காம லோட்டிவிடுந் தையலர்க்குப் - பொங்கும்
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கறியாந்
தரும்பாட்டு வெப்பகற்றுந் தான்.

### முளைக்கீரையின் குணம்

தளர்நதவர்க்கும் பாலார்க்குந் தக்கவயதோர்க்கும்
மிளங்கீரை நாவுக் கிதமாங் - கிளம்பு
சுரகாசம் போக்குந் தொடர்பசி யுண்டாக்கும்
பிரகாசமா யெடுத்துப் பேசு.

எவ்வணப் பருவத்தவர்க்கும் நாவுக்குச்சுவை தருகின்ற முளைக்கீரை காசசுரத்தை நீக்கும். பசியையுண்டாக்கும்.

### முள்ளிக்கீரையின் குணம் - இதுவே குப்பைக்கீரை

நீரைப்பெருக்கிவிடு நீடனலைத் தானெழுப்பும்
பாரநறுந் தங்கத்தை பஸ்மிக்கு - நேரே
விடவிருக்கும் பொற்றட்டை மேவுலகுன் மாதே
யடவிநிற்கு முள்ளிக் கீரை.

காட்டு முள்ளிக்கீரை நீர்பேதியையும், சாடராக்கிணி நீர் விருத்தியைக் கொடுக்கும். இதன் சாற்றினால் தங்கத்தைப் பற்பமாக்கலாம்.

*குறிப்பு:-* மேற்கூறப்பெற்ற முறைப்படி தயாரித்த தங்க பற்பத்தைத் தாது நட்டம், வெண்குஷ்டம் போன்ற நோய்களுக்குக் கொடுக்க நோய் குணமாகும்.

**அறுகீரையின் குணம் - இது அரைக்கீரை என மறுவியது**

*காய்ச்சல் குளிர்சன்னி கபநோய் பலபிணிக்கும்*
*வாய்ச்ச கறியாய் வழங்குங்காண் - வீச்சாய்க்*
*கறுவுமோ வாயுவினங் காமமிகு வுண்டா*
*மறு கீரையத்தின் றறி.*

பலபிணிகளுக்கும் நல்லதோர் கறியான அரைக் கீரையினால் சுரம், நடுக்கல், சன்னி, கபநோய், வாதநோய் ஆகிய இவை போம். வாயு, சுரம், தாதுவிருத்தி இவை உண்டாகும்.

**புளிச்ச சிறுகீரையின் குணம்**

தேகசித்தி யாகுஞ் சிறுகாச மந்தமறும்
போகமுறு விந்துவுநற் புஷ்டியுண்டாம் - வாகாம்
வெளிச்சிறுமா னோக்கும்விழி மென்கொடியே நாளும்
புளிச்சிறு கீரையுண்ணும் போந்து.

புளிச்சிறு கீரையினால் சிணுக்கிருமலும், மந்தமும் நீங்கும், காயசித்தியும், புணர்ச்சியில் விருப்பமும், வீரிய விருத்தியும் உண்டாகும்.

**சிறுகீரையின் குணம்**

*கண்புகைச்ச நேத்திரநோய் காசம் படலம்ரசப்*
*புண்கிரிச் சுரஞ்சோபை பொங்குபித்த - மண்பரவு*
*தாவர விஷங்களும்போந் தாழாத் திருவுமுண்டாங்*
*கூறுசிறு கீரைதனைக் கொள்.*

சிறுகீரையினால் கண்புகைச்சல், கண்நோய், கண் காசம், கண்படலம், புண், மூத்திரக்கடுப்பு, வீக்கம், பித்தநோய், தாவரவிஷங்கள் ஆகியவை இவைகள் போகும். சரீரத்திற்கு அழகையும் உண்டாக்கும்.

***குறிப்பு:-*** நன் மருந்துகளின் குணத்தைக் கெடுக்கும்.

## கலவைக்கீரையின் குணம்

வாதபித்த வையகத்தை மாற்று மலமறுக்கு
மோதுகுடல் வாதமதை யோட்டுங்காண் - போதின்
பலவகைக் கோதாய்நற் பத்தியத்திற் கொவ்வும்
பலகலவைக் கீரையுண்டு பார்.

கலவைக்கீரையினால் வாத பித்த கப தோடங்களையும், மலச்சிக்கலையும், பித்த வாதத்தையும் போக்கும். குடல் வாதத்தையும் குணப்படுத்தும், மேலும் பத்தியத்திற்கு உகந்த கீரையுமாகும்.

## மணலிக்கீரையின் குணம்

வாதமறு நெஞ்செரிவு வாதகபம் விலகுஞ்
சீதமுட னோய்பலவுந் தீருங்காண் - போதவுள்ளே
வீறு கிருமியொடு மேவாப் பயித்தியம்போங்
கூறு மணலிக் கீரைக்கு.

மணலிக்கீரைக்கு வாதகபம், மார்புச்சளி, நெஞ்சு எரிவு, கபம் முதலிய நோய்களும், கிருமிகளும். தோஷங்களும், பைத்தியமும் குணமாகும்.

## நீர் ஆரைக்கீரையின் குணம் - இதுவே ஆரைக்கீரை

தின்றா லுரிசைதருந் தீராப் பயித்தியத்தைப்
பொன்றாத நீரிழிவைப் புண்ணாரை - யென்றுமிந்த
வூராரைச் சாராம லோட்டிவிடு நாலிதழால்
நீராரைக் கீரையது நீ.

நல்ல சுவையுள்ள நான்கு இதழ்களை உடைய ஆரைக்கீரை, பித்த நோயையும், அதிமூத்திரத்தையும், இரத்தப்பிரமேகத்தையும் நீக்கும்.

**புளியாரைக்கீரையின் குணம்**

பித்த மயக்கமறும் பேருலகின் மானிடர்க்கு
நித்தமருள் வாதகப நேருமோ - மெத்தெனவே
மூலக் கிராணிவிடு மூலவுதிர மறுங்
கோலப் புளியா ரைக்கு.

புளியாரைக் கீரைக்குப் பித்த மயக்கம், வாதகபம், மூலக்கிராணி, இரத்தமூலம் ஆகிய இவை குணமாகும்.

**கோழிக்கீரையின் குணம்**

சொறியுங் கரப்பானுந் தோற்று மென்மேலும்
படை யுங் கிருமிமிகச் சேரு - மெறிகின்ற
வாழிக் கீடானவிழி யாரணங்கே வையகத்திற்
கோழிக் கீரைக்குணத்தைக் கூறு.

கோழிக்கீரையால் சொறியும், கரப்பானும், படையும், கிருமியும் உண்டாகும்.

**புளிப்புக் கீரையின் குணம்**

வாதமறும் பித்தமுறு மாறா வரோசிவிடுஞ்
சீதமுடனே யகலுஞ் சேயிழையே - போதப்
புளித்த விலைக்கறிக்குப் போமிரத்த பித்தங்
களித்த கரப்பனொடு காண்.

புளிப்புக் கீரைக்கு வாதகோபம், அரோசிகம், சீதளம், இரத்த பித்த நோய், கரப்பான் ஆகியவைகள் நீங்கும். பித்தத்தையுண்டாக்கும்.

### பிண்ணாக்குக் கீரையின் குணம்

மலமிறங்கும் வாதமுடன் வன்கரப்பா னுண்டாஞ்
சலமிறங்கு மேகத் தணியு - மலர்விழியா
யுண்ணாக்குக் கின்பமா லோடுமனல்
வெட்டையெலாம்
புண்ணாக்குக் கீரையுண்ட பேர்க்கு.

ருசியுள்ள பிண்ணாக்கு கீரையால் மலமும், மூத்திரமும் சரியாய் இறங்கும். ஆனால் வாததோடமும், கரப்பான் நோயும் உண்டாகும். மேகவெள்ளையும், வெட்டையும் போகும்.

### முக்குளிக்கீரையின் குணம்

ஐய மிகக்கொடுக்கு மாந்தர்போகந் தருங்காண்
மெய்யெரிவை யெல்லாம் விலக்குமே - தையலே
பேதி யளிக்கும் பெருமுக் குளக்கீரை
சீதம் விளைக்குமெனத் தேர்.

முக்குளிக்கீரையினால், கபதோடம், புணர்ச்சியில் இச்சை, மெய்யெறிவைப் போக்கிப் பேதியை உண்டாக்கும். வெப்பத்தைப் போக்கும்.

### வெந்தயக்கீரையின் குணம்

பொருமந்தம் வாயுகபம் போராடு கின்ற
விருமல் ருசியிவை யோருந் - தரையிற்
றீதி லுயர்நமனைச் சீறும் விழியணங்கே
கோதில் வெந்தயக்கீரை கொள்.

வெந்தயக்கீரையினால் வயிற்று உப்பிசம், அக்னிமந்தம், வாதகோபம், கபதோஷம், காசம், பசியின்மை ஆகியவைகளைப்போக்கும்.

### கொத்துமல்லிக் கீரையின் குணம்

கொத்துமல்லிக் கீரையுண்ணிற் கோரவ ரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண் - சத்துவமாம்
வெச்செனவே போகம் விளையுஞ் சுரந்தீருங்
கச்சுமுலை மாதேநீ காண்.

கொத்துமல்லிக் கீரையால் பசியில் வெறுப்பு, பசியின்மை ஆகியவை போகும். பித்தம் அடியோடு அகலும், சுரம் குணமாகும். உடலுக்கு வன்மையும், சுக்கிலமும் விருத்தியாகும்.

### கொடிக்காசரைக்கீரை, செடிக்காசரைக்கீரை விதை இலைகளின் குணம்

கொடிக்கா சரையிலையாற் கூறுபித்த மேகுஞ்
செடிக்கா சரைக்குச் சிலேஷ்மந் - தடிக்காவா
மிவ்விதைகளாற் கருப்ப மின்றெனவே பொய்த்துவிடுஞ்
செவ்விய மெல்லிதழாய் தேர்.

கொடிக்காசரைக் கீரையால் பைத்தியம் குணமாகும். செடிக்காசரைக் கீரையால் கபம் நீங்கும். இவ்வித்துக்களால் கர்ப்பம் கரையும்.

### காசினிக்கீரையின் குணம்

அத்திவெப்பம் நீக்கு மடர்சோபை யைத்தொலைக்கு
மெத்த வுதிரத்தழுக்கை விலக்கு - மத்தரத்தின்
மாசினியி லைங்காத வார்த்தையெனப் பேசுவிக்குங்
காசினி யிலைக்குணத்தைக் காண்.

காசினிக்கீரை மூலாதார சுகத்தையும், வீக்கத்தையும், உதிர அழுக்கையும் நீக்கி, இரத்த விருத்தியை உண்டாக்கும்.

### போகம் விளைக்கும் கீரைகள்

தாளி முருங்கைத் தழைதூது ணம்பசலை
வாளிலறு கீரையுநெய் வார்த்துண்ணி - லாளியென

*விஞ்சுவார் போகத்தில் விப்புரைந்த பெண்களெலாங்*
*கெஞ்சுவார் பின்வாங்கிக் கேள்.*

*நறுந்தாளி, நன்முருங்கை, தூதுவளை, பசலை, அரைக்கீரை இவற்றில் யாதேனும் ஒன்றை புளிநீக்கி முறைப்பட பாகஞ்செய்து உணவுடன் நெய் சேர்த்துக் காலையில் மட்டும் ஒருமண்டலம் அளவோடு உட்கொண்டால் புணர்ச்சியில் நிர்வாகம் உண்டாகும்.*

# மரத்தின் புட்ப வகைகள்

### பச்சைக் குங்குமப்பூவின் குணம்

சங்கையின் மதுரதோடஞ் சலதோடம் நீசங்கட்
செங்கையற் கண்ணின்றோடஞ் செவித்தோடம் பித்ததோடங்
கெங்கையாங் கபதோடங்கள் கெஞ்சிடும் பச்சையான
குங்குமப் பூவினாலே கோதையே யிதனைக் கொள்ளே.

பச்சைக் குங்குமப்பூவிற்கு இனிய சுவையால் பிறந்த துர்க்குணங்கள், நீர் ஏற்றம், நாசி, கண், காது இவைகளைப் பற்றிய நோய், பைத்தியம், கபதோடம் ஆகியவை விலகும்.

*குறிப்பு:-* இதனைச் சிட்டிகையளவு எடுத்துப் பசும்பாலிலிட்டு 48 நாட்கள் உட்கொண்டால் சரீரம் பொன்னிறமாகும்.

### கொன்றைப்பூவின் குணம் - இதுவே சரக்கொன்றை

மலக்கிருமி யோடு மதுநீர்க் குடலாந்
தலத்துநோ யுங்குலைத்து சாயு - நிலத்திற்கு
ளென்றைக்கு வாடாத வின்பமலர்க் கொம்பே
கொன்றைப் பசுமலரைக் கொள்.

கொன்றைப் பூவால் மலக்கிருமி, மதுமேகம், குடலைப் பற்றிய நோய்கள் குணமாகும்.

### மைக்கொன்றைப்பூவின் குணம்-இதுவே மயிர்க்கொன்றை

மைக்கண் விழியனமே வையகத்தி லெப்போது
மைக்கொன்றைப் பூமேக மாற்றுங்காண்-மிக்கதனைக்
கொண்டாற் கலமேகங் கூகூவென் றேபதறி
யண்டாதீ துண்மை யறி.

மைக்கொன்றைப் பூவினால் சகல மேகம், பிரமேகமும் நீங்கும்.

### காட்டாத்திப்பூவின் குணம்

உதிரக் கடுப்போ டுதிரக் கழிச்சல்
விதிரக் கடும்பேதி மேக - மெதிர்நிற்க
மாட்டா தகலும்வனச மலர்த் திருவே
கட்டாத்திப் பூவுக்குக் காண்.

காட்டாத்திப் பூவுக்கு உதிரக் கடுப்பு, உதிரக் கழிச்சல், வெளுத்த மலக்கழிச்சல், மேகம் ஆகிய இவைகள் போகும்.

### சண்பகப்பூவின் குணம்

வாதபித்த மஸ்திசுர மாமேகஞ் சுத்த சுரந்
தாதுநஷ்டங் கண்ணழற்சி தங்காவே - மாதேகேள்
திண்புறு மனக்களிப்பாந் திவ்யமண முட்டனஞ்சேர்
சண்பகப் பூவுக்குத் தான்.

நல்ல மணத்தைக் கொடுக்கக் கூடிய சண்பகப் பூவிற்கு வாதம், பித்தம், அஸ்திசுரம், பிரமேகம், தோடசுரம், சுக்கில நஷ்டம், நேத்திர அழற்சி ஆகிய இவைகள் போம். மேலும் சரீரத்திற்கும் மனக்களிப்பை உண்டாக்கும்.

### பாதிரிப்பூவின் குணம்

பித்த சுரந்தணியும் பெண்வசிய முண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண் -
மெத்தவுமே
மாதுரிய நீங்கா வசன மடவனமே
பாதிரியின் பூவையுண்டு பார்.

பாதிரிப்பூவினால் பித்த சுரம் தணியும், பெண்கள் வசியமாவார்கள். முதிர்ந்த வெட்டை நோய் குணமாகும்.

**மந்தாரப்பூவின் குணம்**

மந்தாரப்பூ குளிர்ச்சி மன்னர் வசியமுமாஞ்
செந்தா மரைத்திருவே செப்பக்கேள் - சந்ததமுங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காணுங் கொதிப்பகற்று
மண்ணினின்றும் பூவெனவே வை.

குளிர்ச்சியுள்ள நல்ல மந்தாரப்பூ இராஜ வசியத்தையும், கண்களுக்குக் குளிர்ச்சியையும் கொடுக்கும். உடலில் உள்ள வெப்பத்தைப் போக்கும்.

**புன்னைப்பூவின் குணம்**

புன்னைப்பூ பித்தமென்பார் போராடு வன்மேகம்
வின்னப் படாசித்த விப்பிரமம் - பின்னுங்
கரப்பான் சொறிசிரங்கு காணா தகற்று
முரப்பாக வேமயக்கு முன்.

புன்னைப்பூவினால் தீராத மேகம், சித்தப்பிரமை, சன்னி, கரப்பான், ரணம், சொறிசிரங்கு முதலியவைகளைக் காணாமல் அகற்றும். ஆனால் இதனால் மயக்கம் உண்டாகும். பித்தம் என்பர்.

**மகிழம்பூவின் குணம் - இதுவே மகிழம்பூ**

வெகு வனலமாகு விரகமிக வுண்டா
முசுர வரோசக முறியு - மிகவு
மகிழச்சுரத வகைகாட்டு மாதே
மகிழத் துரு மலர்க்கு.

மகிழம்பூவிற்குச் சரீர வெப்பத்தையும், புணர்ச்சியில் இச்சையையுண்டாக்கும். இதனை நுகர்ந்தால் உணவில் வெறுப்பும் நீங்கும்.

### பன்னீர்மரப் பூவின் குணம்

சர்த்தி யரோசகமுட் டாதுநட்ட மேல்வறட்சி
யொத்த வழலு மொதுங்குங்கா - ணெத்தரத்துந்
தன்னீர்மை குன்றாத தளிர்வண்ண மாதரசே
பன்னீர்ப்பூ மரத்தைப் பார்.

பன்னீர்ப் பூவினால் வாந்தி, உணவில் வெறுப்பு, சுக்கில நட்டம், நாவறட்சி, பித்தகோபம் ஆகியவைகள் போகும்.

### குருக்கத்திப்பூவின் குணம் இதுவே மாதவி

சிரரோகந் தாகஞ் சிலேஷ்ம விரணம்
பொருபித்தம் பலவிஷமும் போக்கும் - வரிசேர்
சுருக்கொத்த வாள்விழியாய் கைப்புமது கஞ்சார்
குருக்கத்திப் பூவின் குணம்.

குருக்கத்திப் பூவினால் தலைநோய், தாகம், கபம், ரணம், பெரும்பித்தம், பல விஷங்கள் ஆகியவற்றைப் போக்கும்.

### செந்தாழம்பூவின் குணம்

தலைநோய் சலதோடஞ் கண்ணு கபங்காச
முளைவாத மெல்லா மொடுக்கு - நிலைசேர்
திருந்துடற்குக் காந்திதருஞ் செம்மணப்பில்
வெம்மை
பொருந்துகின்ற செந்தாழம் பூ.

மணம் பொருந்திய செந்தாழம்பூ, தலைநோய், நீர்க்கோர்வை, கபம், காசம், முளைவாதம், நெஞ்சில் ஏற்படும் கபம் ஆகியவைகளை ஒடுக்கி உடலுக்கு அழகையும் வலிமையையும் கொடுக்கும்.

### முருங்கைப்பூவின் குணம்

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகு
மழிவித்து வும்புஷ்டி யாகு - மெழிலா
கொங்கை யகலாக் கற்புடை வாணகையே
முருங்கையின் பூவை மொழி.

முருங்கைப்பூவினால் பித்த தோடம், பசியின்மை நீங்கும். கண்களுக்குக் குளிர்ச்சியும், விந்து உற்பத்தியும் உண்டாக்கும்.

### அகத்திப்பூவின் குணம்

புகைப்பித்த மும்மழலாற் பூரிக்கு மந்த
வகைப்பித்த மும்மனலு மாறும் பகுத்துச்
சகத்தி லருந்தாத் தனியமிர்தே நாளு
மகத்தி மலருக் கறி.

அகத்திப் பூவுக்குச் சுருட்டு முதலிய புகையும், சூரிய ஒளியினால் உண்டாகிய உஷ்ணமும், பொருட்களினால் ஏற்பட்ட பித்தமும், சரீர அழற்சியும் நீங்கும்.

### செவ்வகத்திப்பூவின் குணம்

நாடிற் பணிப்பீணி நாசிக்கறைக் கதழ்வை
யோடித் துடைத்துள் ளொளியாற்றும் - பாடெத்
தவரகத்தி னுந்துனங்கைத் தண்டா மயிலே
துவரகத்தி பூண்காண் டுதி.

செவ்வகத்திப்பூ பார்ப்பதற்குப் பயங்கரத்தைக் கொடுக்கிற நாசி இரத்தப்பெருக்கை விரைவில் நிறுத்துவதைத் தவிர உட்சூட்டைப் போக்கும். பித்த மயக்கத்தை வேரறுக்கச் செய்யும்.

## வேப்பம்பூவின் குணம்

பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடஞ்
சத்தத் தெழுதமனந் தங்கருசி - முற்றியகா
லேப்பமல கிருமி விவையேகு நாட்சென்ற
வேப்ப மலருக்கு வெகுருண்டு.

நாட்சென்ற வேப்பம்பூவிற்குப் பித்தத்தினால் உண்டாகிய பெருமூர்ச்சினையும், மகாதோஷம், வாந்தி, பசியின்மை, நீடித்த வாதம், ஏப்பம், மலக்கிருமி ஆகியவை போகும்.

## மாதுளம்பூவின் குணம்

வாந்திபித்த தோடமொடு மாறாக் கடும்பலைஞ்
சேர்த்துநின்ற மூலரத்தந் தீர்க்குங்காண் -
மாந்தளிர்க்கை
மாதே கறைப்புஷ்டி வல்லபல னுண்டாகும்
பூதலத்துண் மாதுளையின் பூ.

மாதுளம்பூவினால் பித்த வாந்தி, வயிறு உளைதல், ஏப்பம், இரத்தமூலம் ஆகியவைகள் போகும். இரத்த விருத்தியையும், பலத்தையும் தரும்.

## புளியம்பூவின் குணம்

பித்தத் துடனே பெருத்த வரோசகம்போ
மெத்த வெழும்வாந்தி மிதத்துணிற்கு - மெத்தக்
கனத்துப் பூரித்தமுலைக் காரிகையே வெற்பார்
வனத்துப் புளியம்பூ வால்.

புளியம்பூ பித்த கோபத்தையும், உணவில் வெறுப்பையும், வாந்தியையும் நீக்கும்.

## இலுப்பைப்பூவின் குணம்

குன்றா விலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனையாந்
தின்றாற் பயித்தியமுஞ் சேருங்காண் - வன்றலுறுந்
தார்குழலே பித்தசுரந் தாகத் தணிந்துவிடும்
வார்தயக்க மெய்தும் வழுத்து.

இலுப்பைப் பூவினால் பித்தசுரமும், அதிதாக நோயும் நீங்கும், அதிக பித்தமும், பிரமையும் உண்டாகும்.

## வாகைப்பூவின் குணம்

வாத கனஞ்செய்யும் வல்விடத்தைப் போக்கிவிடுஞ்
சீத சிலேஷ்மத்தைச் சிதைக்குங்காண் - போதவுள்ளே
மாகைப்பை வைத்திருக்கும் மானிலத்திலே பிறந்த
வாகைப்பூத் தன்னை வழுத்து.

வாகைப்பூ வாத தோஷத்தையும், பாம்பு விஷங்களையும், கபத்தையும் கெடுக்கும்.

## முள் முருங்கைப்பூவின் குணம் – இதுவே கலியாணமுருக்கு

கருப்பா சயத்திற் கறுத்துத் தடித்தே
பருத்த வுதிரத்திரளைப் பஞ்சாய்த் - துரத்திவிடும்
பண்முருக்கு மின்பமொழிப் பாவாயுலகறிய
முண்முருக்கம் பூவை மொழி.

முள்முருக்கம் பூவினால் கருப்பையில் கட்டிய இரத்தக் குன்மத்தைப் போக்கும்.

## தென்னம்பூவின் குணம்

மேக மதக்கொதிப்பு வீறு விரத்தபித்தம்
வேக வசிர்க்கரநோய் வீழ்பிரமி - தேகத்தில்

வின்னம் பாலிக்கும் விஷபாகம் போகவென்றார்
றென்னம் பாளைப்பூவைத் தின்.

தென்னம் பாளைப்பூவால் மேகம், இரத்தக்கொதிப்பு, இரத்தப்பித்தம், உட்காய்ச்சல், வெள்ளை, வெட்டை, விஷநோய் ஆகியவை குணமாகும்.

**பனம்பூவின் குணம்**

பனையலுறு பூவதுதான் பங்கமுறக் குள்ம
வினையகற்று நீர்கட்டை மீட்கும் - முனையான
பன்னோ யொழிக்கும் பழச்சுரத்தைப் போக்கிவிடு
மின்னே யிதனை விளம்பு.

பனம்பூவினால் வாதகுன்மம், மூத்திர அடைப்பு, பல்நோய், சுரம் ஆகியவை போகும்.

*குறிப்பு:-* பனம்பூவைச் சுட்ட சாம்பலை பனித்தண்ணீரில் இட்டு, கரையாத அளவிற்குக் கரைத்து அதைப் பஞ்சில் நனைத்துந் தொண்டை அழற்சியில் பூச ஐந்து தினங்களில் குணமாகும்.

**வாழைப்பூவின் குணம்**

வாழைப்பூ மூலரத்த மாபிரமி வெட்டைபித்தங்
கோழைவயிற் றுக்கடுப்பு கொல்காச - வாழியன
லென்னவெரி கைகா லெரிவந் தொலைத்துடலின்
மன்னவளாக் குந்தாது வை.

வாழைப்பூவினால், இரத்தமூலம், வெட்டை, பித்தம், கபம் ஆகியவயிற்றுக் கடுப்பு, காசம், இருமல், கைகால் எரிச்சல், பைத்தியம் முதலிய நோய்களைக் குணப்படுத்தி விந்துவை அதிகரிக்கச் செய்யும்.

# செடியின் புட்ப வகைகள்

### ஆவாரம்பூவின் குணம்

தங்கமெனவே சடத்திற்குக் காந்திதரு
மங்காக நீரை வறட்சிகளை - யங்கத்தா
மாவைக் கற்றாழை மணத்தை யகற்றிவிடும்
பூவைச் சேரா ஆவாரம் பூ.

ஆவாரம்பூ பிரமேகநீர் வறட்சியான உடம்பில் ஏற்படும். உப்புப்பூத்தல், கற்றாழை நாற்றம் ஆகியவைகளைப் போக்கி சரீரத்திற்குப் பொற்சாயலைக் கொடுக்கும்.

### கருஞ்செம்பைப் பூவின் குணம்

தலைக் குத்த லையஞ் சலதோடம் வாத
முலைப்பீ நசமிகுந்த வூர்க்குண - ணிலைக்கா
தருஞ்சண் பகராசி யாயிழையே சுத்தக்
கருஞ்செம்மைப் பூவிருக்குங் கால்.

கருஞ்செம்மைப் பூவினால் கபாலச்சூலை, கபக்கோபம், நீர் ஏற்றம், வாததோடணம், பீனிசம் ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

### செம்பரத்தம்பூவின் குணம்

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்த வெள்ளை வழுவப்பும் - வெம்பும்
பெரும்பா புரத்தபித்த பேதகமு மகற்றுங்
கரும்பா மொருமயிலே காண்.

செம்பரத்தம் பூவினால் மேகவெள்ளை, பிரமேகம், இரத்தப்பிரமேகம், பெரும்பாடு, உட்சூடு ஆகியவை நீங்கும்.

*குறிப்பு:-* இதன் இதழ்களை எண்ணெயிலிட்டுத் தலையில் தடவி வந்தால் முடி உதிர்த்தலைப் போக்கி, முடியை நீளமாக வளரச்செய்யும். மேலும் இது சர்பத்தாகவும், குல்கந்தாகவும் செய்து பயன்படுத்தினால் இருதய சம்பந்தமான நோய்களும் குணமாகும்.

### அலரிப்பூவின் குணம்

வெப்பருசி குஷ்டம் விதாகஞ் சொறிசிரங்கு
செப்பிரத்தப் புண்பித்தஞ் சென்னியெரி -
விப்படியிற்
றங்குமோ கும்பத் தனதணங்கே வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு.

அலரிப்பூவால் உணவின்மீது வெறுப்பு, குஷ்டம், தாகம், சொறி, சிரங்கு, இரத்தக்கட்டி, கிரந்தி, பித்தநோய், எரிச்சல் ஆகியவை போகும்.

### செம்பருத்திப்பூவின் குணம்

செம்பருத்திப் பூவழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீத் - தம்பெனச்செய்
மேகத்தை வெட்டையை விழுசிமுதற் பேதியையுட்
பாகத்தை யோட்டிவிடுந் தான்.

செம்பருத்திப் பூவினால் சரீர அழற்சி, இரத்தப் பித்தநோய், உதிரக்கடுப்பு, சலமேகம், வெள்ளை வீழ்தல், பேதி, தாகம் ஆகியவை நீங்கும்.

### நந்தியாவட்டைப்பூவின் குணம்

காசம் படலங் கரும்பாவைத் தோஷமெனப்
பேசுவிழி நோய்கடமைப் பேர்ப்பதன்றி - மோனைதரு
தந்திபோலே தெறித்துச் சாருமண்டை நோயகற்று
நந்தியா வட்டப்பூ நன்று.

நந்தியாவட்டைப் பூவானது கண்காசப்படலம், இலிங்க நாத தோடங்கள்,தலைநோய் ஆகியவைகளைப் போக்கும்.

## துத்திப்பூவின் குணம்

துத்தி மலரைநிதந் துய்க்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகு மெய்குளிருஞ் - சத்தியமே
வாயால் விழுமிரத்த மாறு மிருமலறுந்
தேயா மதிமுகத்தாய் செப்பு.

துத்திப்பூவால் இரத்த வாந்தியும், காசநோயும் நீங்கும். விந்துவை அதிகரிக்கச் செய்து, சரீரத்திற்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.

## செவ்வந்திப்பூவின் குணம்

அலைமயக்கஞ் சுற்றலறு மட்சிக் கொளியாஞ்
தலைமயி ருண்டா மனலஞ்சாரும் - நிலைமணமா
மொவ்வந்தி வான்புறையை யொத்த நுதற்றிருவே
செவ்வந்திப் பூவதனைச் செப்பு.

வாசனையுள்ள செவ்வந்திப் பூவால் மூர்ச்சை, தலைச்சுற்றல் நீங்கும். கண்களுக்கு ஒளியையும், முடிக்குச் செழிப்பையும் அதாவது நீண்டு வளரக்கூடிய தன்மையையும் கொடுக்கும்.

## தும்பைப்பூவின் குணம்

தாகங் கடிந்தொழியுஞ் சன்னிபா தங்களறு
மாகந் தனில் வருநோ யண்டுமோ - மாகந்த
வம்பைப் பீறுங்குயத்து மாதேநின் செங்கரத்தாற்
றும்பைபூத் தன்னைத் தொடு.

தும்பைப்பூவினால் அதிதாக நோய், சன்னிபாத சுரங்கள், கண்களைப் பற்றிய நோய், மூக்கைப்பற்றிய நோய், தலையைப்பற்றிய நோய்கள் பலவும் குணமாகும்.

## வேளைப்பூவின் குணம்

கணைமாந்தம் வாதங் கபக்கோவை கோழை
யணுமாந்த வெப்பு மகலு - மணமாறும்
பாளைக் குழலே பசிமெத்த வுண்டாகும்
வேளைப்பூ வென்றொருக்கால் விள்.

வேளைப்பூவினால் மாந்தம், கணை, வாதம், கபம், கோழை, மார்புச்சளி, மாந்தசுரம் ஆகியவை குணமாகிப் பசியை அதிகரிக்கச் செய்யும்.

## சிற்றாமரைப்பூவின் குணம் - இதுவே பன்னீர்ப்பூ

சிற்றா மரைப்பூவாற் சேர்ந்தமலக் கட்டுவிடு
முற்றவெப்பு தாகமதி யோக்காளஞ் - சற்றும்விடா
மூவா வெரிவிரத்த மூத்திரம் வயிற்றிசிவு
ஞாலம் விடுத்தேகு நவில்.

சிற்றாமரைப் பூவினால் மலபந்தம், சுரம், தாகம், ஒக்காளம் ஆசன எரிச்சல், இரத்தப் பிரமேகம், வயிற்றெரிவு ஆகியவை போம்.

*குறிப்பு:-* பூவுடன் மல்லி, சீரகம், ஒன்று, அரை, கால் என்ற விகிதப்படிச் சேர்த்து இடித்துத் தூள்செய்து நீரிலிட்டுக் கொதிக்கவைத்து அந்நீரை உட்கொண்டால் குருதிகுடல் அழற்சி குணமாகும்.

## களாப்பூவின் குணம்

கண்ணிற் படருங் கரும்படலம் வெண்படலம்
வண்ண வுதிரப்படலம் வன்சதைக - ளெண்ணற்
களவினோய் போக்கு மணங்கே சிரிய
களவினது பூவென்றுங் காண்.

களாப்பூ கண்களில் உண்டாகின்ற கரும்படலம், இரத்தப்படலம், சதைப்படலம், வெண்படலம் முதலிய நோய்களைக் குணப்படுத்தும்.

# கொடியின் புட்ப வகைகள்

## தாமரைப்பூவின் குணம்

பருத்தநற் றாமரைப்பூ பலவாந்தி நோயைத்
துரத்திவிடு மின்னுஞ் சொலவோ - கரத்தி
லெடுத் தணைக்கக் கண்குளிரு மேகுஞ்சுரமு
மெடுத்த விதாகமும்போ மெண்.

தாமைரைப் பூவினால் வெப்பத்தால் பிறந்த விழி, கண் எரிச்சல், சுரம், விதாபம், வாந்தி ஆகியவைகளைப் போக்கும்.

## வெள்ளைத்தாமரைப்பூவின் குணம்

ஈரலைப் பற்றிமிக வேறுகின்ற வெப்பமும் போங்
கோர மருந்தின் கொடுமையறும் - பாருலகிற்
றண்டா மணத்தையுள்ள தாழ்குழலே கால்கள்விடும்
வெண்டாமரைப் பூவால் விள்.

வெண்தாமரைப் பூவால் ஈரலைப்பற்றிய வெப்ப முடைய நோய்களும், கோர மருந்துகளினால் ஏற்படக்கூடிய வேகத்தையும் தணிக்கும்.

## அல்லிப்பூவின் குணம்

மேகமறும் புண்ணாறும் விட்டேகு நீரிழிவு
தாகந் தணியுந் தழலகலும் - வாகான
மெல்லியலே யாயுண்மறை வேதியரெலா முறைக்கு
மல்லி மலரா லறி.

அல்லிப்பூவினால் இரத்தப்பிரமேகம், ஆண்குறிப்புண், வெகுமூத்திரம், தாகம், உட்சூடு ஆகியவை நீங்கும்.

## செவ்வல்லிப்பூவின் குணம்

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்ப்பிணியோ
டொவ்வு மேகப்பிணியு மோய்வதன்றி - யிவ்வுலகிற்

கண்ணினோய் தீருங் கனத்தப்பித்த ரத்தமொடு
விண்ணினோய் பன்னோயும் போம்.

செவ்வல்லிப் பூவினால் மூத்திரநோய், மேகநோய், கண்நோய், பித்தகோபம், இரத்தபித்தம், தாது நட்டம், தலைநோய் ஆகியவை நீங்கும்.

### கழுநீர்ப்பூவின் குணம்

உடற்குக் குளிர்ச்சியதா முள்ளூழலை மாற்று
மடற்கப வரோசகத்தை யாற்றுங் - கடற்கு
ளெழுநீர்க் குமிழி யிகழு முலையாய்
கழுநீர் மலரெனவே காண்.

கழுநீர்ப் பூவானது அதிதாகத்தையும், கபத்தையும், கபத்தினால் ஏற்படக்கூடிய உணவில் வெறுப்பையும் நீக்கும். உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும்.

### கருநெய்தற்பூவின் குணம் - இதுவே நீலோற்பலம்

பிரசவித் தாரைத்தேற்றும் பேரசிர்க்கை மாற்றும்
வருசிலேத் மப்பிணியை மாட்டுந் - துருசாம்
விடைபாகரோகம் விலக்கும் புவியிற்
றடமாக்கு நெய்தனாற் றான்.

கருநெய்தற் பூவினால் பிரசவித்த பெண்களைத் தேற்றுவிக்கும், மேலும் பெரும்பாட்டையும், கபநோயையும், விஷங்களையும் போக்கும்.

### சாதிப்பூவின் குணம் - இதுவே பிச்சிப்பூ

முத்தோஷஞ் சென்னிவலி மூடுஞ் சரீரவெப்ப
மொத்த விழியினோ யோடுங்கா - ணித்தம்
விலகாத காந்தியுண்டா மேனிதனில் வாசங்
குலவு சாதிப்பூ வுக்கு.

சாதிப்பூ என்னும் பிச்சிப்பூவிற்கு வாதபித்த, கபதோடங்கள், தலைநோய், சரீர உஷ்ணம், கண்படலம் முதலியவைகளைப் போக்கும். மேலும் கண்களுக்கு நீங்காத ஒளியையும் மணத்தையுமுண்டாக்கும்.

## மல்லிகைப்பூவின் குணம்

போகமிக வுண்டாகும் பொங்குகபங் கட்பிரமை
யாகவனற் சூனியமு மண்டுமோ - பாகனையாய்
மன்னு திருவசியம் வாய்க்குஞ் சூடென்றவரும்
பன்னு மல்லிகைப்பூவாற் பார்.

மல்லிகைப்பூவினால் புணர்ச்சியில் அதிக விருப்பு உண்டாகும், இதனால் கோழை, கண்மயக்கம், சரீர உஷ்ணம், சூனியம் ஆகியவை நீங்கும். இதனால் இலட்சுமி கடாட்சம் உண்டாகும்.

## முல்லைப்பூவின் குணம்

முல்லையெனு மூசிமல்லி மொய்த்த மலரெவர்க்கு
மொல்லை மனநோயை யொழிக்குங்காண் -
மெல்ல
வழலைத் தணிக்கு மரோசகத்தைப் போக்கு
மழலைமொழி யாயறிந்து வை.

முல்லை என்கின்ற ஊசி மல்லிகை மனோ வியாதிகளையும், உள்வெப்பத்தையும், உணவின் வெறுப்பையும் போக்கும்.

## வெட்சிப்பூவின் குணம்

வெட்சிப்பூ மேகமழல் விட்டோடும் வாசனையா
மட்சிவழி யாயுயிர்கொள் ளாரணங்கே - யெற்சுஞ்
சுரமுடனே தாகந் தொலைக்கு முலகில்
விரைவா யிளைப்பகற்றும் விள்.

வெட்சிப்பூவினால் மேகச்சூடு, சுரநோய், தாகம், சரீர ஆயாசம், விரை வாயு ஆகியவைகளை அகற்றும்.

**தூதுளம்பூவின் குணம்**

புட்டியுண்டாந் தாதுவுமாம் பொங்கழகோ
டாற்றன்மிகு
முட்ட நரைத்து முதிர்ந்தமனைக் - கட்டழகு
மாதுளத்தி னீங்காது வைத்திடவு மெண்ணமுற்றாற்
றுதுளத்தின் வுண்ணச் சொல்.

தூதுளம் பூவால் சரீரவன்மை, விந்து விருத்தி, தாது விருத்தி, வனப்பு, சரீரபலம், சரீரவசியம் இவைகள் உண்டாகும்.

**வெங்காயப்பூவின் குணம்**

வயிற்றுச் சிறுநோயை வாத வலியை
யுயித்தியஞ் செய்யாம லோட்டுங் - குயிற்றாத
சிங்காரக் கொங்கைச் செழுந்திருவே நாட்டிலுரை
வெங்காயப் பூவெனவே விள்.

வெங்காயப்பூ வாதம் முதலிய குன்மநோய்களையும், குடலைப்பற்றிய வாதநோய்களையும், வயிற்று வலியையும், வாத வலிகளையும் போக்கும்.

## மரத்தின் பிஞ்சு வகைகள்

**வாழைப்பிஞ்சின் குணம்**

உதிரம் விழுங்கடுப்போ டுண்மூல ரத்த
மெதிரில்விழு நீரிழிவுமேரு - மதிநுதலே
பேழை வயிற்றுப்புண் பேருந் துவரார்ந்த
வாழைக் கச்சற்கு மருண்டு.

துவர்ப்புத் தன்மையுடைய வாழைப்பிஞ்சிற்கு இரத்தக் கடுப்பு இரத்தமூலம், அதிமூத்திரம், வயிற்றுப்புண் ஆகியவை போகும்.

### பலாப்பிஞ்சின் குணம்

தாகம்போம் வாதபித்தஞ் சாந்தமா மாடலர்க்குப்
போகமிகப் பொழியும் பொய்யன்றே - மூக
வலஜமந்தங் குன்மமிவை யண்டிவருந் சொன்னோங்
கலசப் பலாப்பிஞ்சாற் காண்.

பலாப்பிஞ்சால் தாகமும், பித்தநோயும் நீங்கும். சுக்கில விருத்தியுண்டாகும். குன்மம், மந்தம் ஆகியநோய்கள் உண்டாகும்.

### அத்திப்பிஞ்சின் குணம்

மூலக் கிராணியறு மூலவிரத்தந் தீரும்
சாலக் கடுப்புந் தரிக்குமே - மாலரவத்
துத்திப் படவல்குற் றோகாய் துவர்ப்பையுறு
மத்திச் சிறுபிஞ் சருந்து.

அத்திப்பிஞ்சானது மூலவாயு, மூலகிராணி, இரத்தமூலம், வயிற்றுக்கடுப்பு ஆகிய நோய்கள் குணமாகும்.

### முருங்கைப்பிஞ்சின் குணம்

கிக்குருக்குப் பிஞ்சத்திச் சுரத்திற் குமூசநிக்கு
மக்குருக்குருப்ப மரோசிகட்குஞ் - சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவதற்கு மாமதனைப்
பச்சையுற விருந்திப் பார்.

முருங்கைப்பிஞ்சினால் அத்திசுரம், எலும்பை உருக்குகின்ற வெப்பம், உணவில் விருப்பமின்மை, விந்து நட்டம் ஆகியவை நீங்கும்.

## மாம்பிஞ்சின் குணம் - இதுவே குதப்பிஞ்சு

சுவை வாதபித்த கபமருசி வாந்தி
கவைவறுத்த மந்தமெனுந்தோஷ - மிவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே
சூதத்தின் புன் வடுவைத் துய்.

மாம்பிஞ்சைத் தின்றால் இளைத்த வாதாதி முத்தோடங்கள், அரோசிகம், வாந்தி, அக்கினி மந்தம் ஆகியவை குணமாகும்.

## நாரத்தங்கிச்சிலின் குணம் - இதுவே போஜன கஸ்தூரி

அன்ன மிடுஞ்சீத மருசியுப் பிசங்கிருமி
மன்னுமோ விந்துவுடன் வன்பசியாம் - வண்ணமலர்
வாசனை யேறுங்குழலீர் மாநோய் தனி லுண்ணும்
போசன கஸ்தூரிப் பூ.

உலகில் சுரநோயாளிகள் உண்ணுகின்ற நாரத்தங் கிச்சிலி சீதளம், அரோசிகம், வயிற்றுப்பொருமல், எரிக்கிருமி ஆகியவைகளைப் போக்கி, சுக்கில தாதுவை உற்பத்தி செய்து பசியை அதிகரிக்கச் செய்து உணவை மிகுதியாக உட்கொள்ளச் செய்யும்.

## மாதுளம்பிஞ்சின் குணம்

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரு - பலகழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம் பிஞ்சாலயிலை
யாளுங் கண்மாதே யறி.

புது மாதுளம் பிஞ்சால் மலக்கழிச்சல், சீதக்கழிச்சல், சலக்கழிச்சல், இரத்தக்கழிச்சல், செரியாக் கழிச்சல் போன்ற பலவித கழிச்சல்களும் தீரும்.

### முகிழ்விரியாக் கத்திரிப்பிஞ்சின் குணம்

அனலுடனே பித்த மகலு மலம்போந்
தொனியுண்டா மையந் தொலையுஞ் - சனியாக
முத்தியிருக்கும் வெண்ணகையீர் மூடுமுகிழ்
விரியாக்
கத்திரிப்பிஞ் சுண்பவர்க்குக் காண்.

கத்திரிப்பிஞ்சிற்குச் சுரமும், பித்ததோடமும், கபமும் நீங்கும். மலம் இளகி இறங்கும். குரல் தொனி பலத்துண்டாகும்.

### அவரைப்பிஞ்சின் குணம்

கங்கு லுணவிற்குங் கறிக்கு முறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர் புண்சுரத்தோர் -
தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லைநோய்க் காரருக்குங்
காழிறையா
வென் முதிரைப்பிஞ்சாம் விதி.

விதை முதிராத அவரைப் பிஞ்சு இரவு உணவிற்கும், மருந்துண்பவர்க்கும், வாதாதி முத்தோடங்களுக்கும், கிரணம், சுரம், விழிக்குள் முதிர்ந்த கப வில்லம் முதலியநோயாளிக்கும் ஆகும்.

## மரத்தின் காய் வகைகள்

### வாழைக்காயின் குணம்

வாந்திபித் தம்பேத வாய்நீர் வயிறுளைத்
தார்ந்தவன லங்காத மாண்டவாஞ் - சூழ்ந்தேறு
செம்புனத் தென்புமுண்டாந் திண்டி மிகப்பெருகு
மம்புவியுள் வாழைக்கா யால்.

வாழைக்காயினால் பித்தவாந்தி, பைத்தியம், பித்தசுரம், உமிழ்நீர்ச்சுரப்பு, வயிறு உளைதல், உஷ்ணம், இருமல் இவை குணமாகும். இரத்த விருத்தியும் பலமும் உண்டாகும். உணவை அதிகரிக்கச் செய்யும்.

### பலாக்காயின் குணம்

உண்ணின் மிகுமந்த முறுதியாம் வாதநோ
யண்ணி மிளைப்பிரப்பு மண்டுங்காண் - வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி லுவமை
சொலாக்காம வாரிதியே சொல்.

பலாக்காயினால் அக்கினி மந்தம், வாதகோபம், ஆயாசம், சுவாசம், சுக்கில விருத்தி ஆகியவை உண்டாகும்.

### அத்திக்காயின் குணம்

அத்திக்காய் தன்னை யருந்தினா லாரணங்கே
யெந்திக்கு மேக மிருக்குமோ - சத்திக்கும்
வாதமகலு மலங்கழியுஞ் சூலையொடு
மீதனலும் புண்ணும்போம் விள்.

அத்திக்காயினால் பிரமேகம், வாதநோய், சூலை, சரீர வெப்பம், இரணம் ஆகியவைகள் போம். மலம் கழியச் செய்யும்.

### முருங்கக்காயின் குணம்

சொல்லு நோய்கட்கெல்லாந் தோஷமில்லை யையமறும்
பல்லுயிர்க்குந் தாது விந்தூறும் - வில்லார்
பெருங்கைக் காமன்றுதிக்கும் பெண்ணே நறிய
முருங்கைக்காய் தன்னை மொழி.

பல நோய்களுக்கும் உதவக்கூடிய உயர்ந்த கரியாகும். முருங்கைக்காயால் கபம் நீங்கும். விந்துவை அதிகரிக்கச் செய்யும்.

### அருநெல்லிக்காயின் குணம்

அருநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்பித்தம் போக்கு
மருவு துவர்பாற்றுரிகை மாற்றும் - விரியுலகிற்
றாகத் துயர்நீக்குஞ் சாரிரு மலைத்தொலைக்கு
மாகக் கொதிப்பகற்று மாங்கு.

துவர்ப்புச் சுவையுடைய அருநெல்லிக்காய் சீதபித்தம், தாகம், காசம், உட்சூடு ஆகியவைகளைப் போக்கும்.

### நெல்லிக்காயின் குணம்

பித்தமன லையம் பீநசம்வாய் நீர்வாந்தி
மத்த மலக்கட்டு மயக்கமுமி - லொத்தவுரு
வில்லிக்கா யம்மருங்கா மென்னாட் காலந்தேர்ந்தே
நெல்லிக்கா யம்மருந்து ணீ.

நெல்லிக் காய்க்குப்பித்த நீக்குமதன் புளிப்பாற்
செல்லுமே வாதமதிற் சேர்துவப்பாற் - சொல்லுமையு
மோடுமிதைச் சித்தத்தி லுன்ன லுனலுடனே
கூறுபிர மேகமும்போங் கூறு.

கடல் அமிர்தத்தை ஒத்த நெல்லிக்காயைப் பகலில் உண்டால் பைத்தியம், கபநோய், பீனிசம், வாய்நீர் சுரப்பு, வாந்தி, உன்மந்தம், மலபந்தம், தலைச்சுற்றல், பிரமேகம் ஆகியவை குணமாகும். மேலும் சரீரத்திற்கு அழகுண்டாம். புளிப்பால் வாயுவும், துவர்ப்பால் கபமும் நீங்கும். நெல்லிக்காய் அமிர்தத்திற்கு ஒப்பானது.

### புளியங்காயின் குணம்

சோபமொடு பித்தந் தொலைக்கு முரிசைதறுங்
கோபமுற வாயுவையே கொண்டாடுந் தாபக்
கருப்ப மடவார்க்குக் கனவிருப்ப முள்ளே
பருப்புமுதிராப் புளியங் காய்.

ருசியைக் கொடுக்கின்ற கொட்டைதிராப் புளியங்காய் சோர்வு உண்டாதலையும், பித்தகோபத்தை நீக்குவதைத் தவிர, வாத தோஷத்தையுண்டாக்கும். இது கர்ப்ப ஸ்திரீகளுக்கு விருப்பம் உண்டாக்கும்.

### மாங்காயின் குணம்

தாதுநஷ்டம் வாதந் தனி கிரந்தி யாம்பசிபோங்
காதுமுட்டப் பக்குவிடுங் காயமதி - லோதுகின்ற
பாங்காறப் புண்வளரும் பற்கூசுஞ் சொற்குளறு
மாங்கா யுண்பாரை மதி.

மாங்காயில் சுக்கில நட்டம், அதிகவாயு, சிரங்கு, சரீரத்தில் வெடிப்புகளோடு கூடிய ஆராத இரணங்கள், பல்கூச்சம், வாய் குளறுதல் ஆகியவைகள் உண்டாகும். பசியைப் போக்கும்.

### மரியங்காயின் குணம் - இதுவே புளிமாங்காய்

வாயின் கசப்பகலு மாற வரோசகமு
மோயுஞ் சுரத்தோர்க் குவப்பாகுந் - தூயவரித்
தேனமரும் வார்கூந்தற் றெய்வப் பெடையனமே
கான மரியங்காயைக் கண்டு.

காட்டிலுள்ள புளிமாங்காயினால், வாய்க்கசப்பும், உணவில் வெறுப்பும், நீங்கும். இது சுரநோயாளிக்குதவும்.

### பச்சைக் கடுக்காயின் குணம் - இதுவே பரிதிக்காய்

பச்சை பரிதிக்காய் பண்ணும் வகைகேளா
யிச்சையுறத் துவைத்துப் பிட்டமுத்தி - வைச்செடுத்துத்
தின்ன வரோசியறுந் தீபளமா முண்மலம்போ
மன்னநடை மாதே யறி.

பச்சைக் கடுக்காய் கொட்டை நீக்கி இடித்து 5ல் 1பங்கு உப்பிட்டு, 105 நாட்கள் சென்றபின் பிசைந்து சாப்பாட்டுடன்

சேர்த்தாவது (அ) தனித்தாவது உட்கொண்டால், பசியின் வெறுப்பை நீக்கி, அதிகப்படியான பசியையுண்டாக்கும். மலம் கழியச்செய்யும்.

### இத்திக்காய்ப் பிஞ்சு இலைகளின் குணம்

வாயு மலக்கட்டு மலக்கழிச்சல் கால்வழியே
சாயு மசிர்ச்சிக்குள்ளே தங்குவெப்பி - னோயினங்க
ளெத்திக்கா தாரமுற் றிருப்பன விராவேநல்
லித்திக்காய் பிஞ்சுகளை யெண்.

இத்திக்காய் வாத, மலமந்தம் போகும். பிஞ்சுக்கு அதிசாரமும், பெரும்பாடும், உட்சூட்டினால் உண்டாகும் நோய்களும் நீங்கும்.

### கொடியெலுமிச்சங்காயின் குணம்

வாந்தி மயக்கம் வயிற்றுக் கழிச்சலனற்
சேர்ந்த வரோசகமுந் தீருங்காண் - தீர்ந்த
தொடியமரு மங்கையிளந் தோகா யடவிக்
கொடியெலுமிச் சங்காயைக் கூறு.

கொடி எலுமிச்சைக்கு வாந்தி, மயக்கம், வயிற்றுக் கழிச்சல், பித்த அரோசகம் ஆகியவை போகும்.

### எலுமிச்சங்காயின் குணம்

தீதிலெலு மிச்சங்காய் சேர்முத்தோ ஷத்தையுமுள்
வாதகபஞ் சூலையையு மாகொடிய - சாதியெனுஞ்
சர்த்திகுன் மந்தையுமுட் டங்கமருந் திட்டத்தையும்
பித்தவெப்பை யுந்தணிக்கும் போ.

குற்றமற்ற எலுமிச்சங்காய் வாத பித்த கப தோஷத்தை, வாத கபச்சூலையும், வாந்தி, குன்மம், இடுமருந்து, பித்த உஷ்ணம் ஆகியவைகளைப் போக்கும்.

### கலுமிச்சங்காயின் குணம்

தந்துவிழப் பண்ணுஞ் கவலைதனைக் கொடுக்கும்
வெந்துமிக விந்துவை விழச்செய்யு - மந்த
வெலுமிச்சங் காய்போன் றிருக்குங் கொடிய
கலுமிச்சங் காய்க்குணத்தைக் காண்.

எலுமிச்சங்காயைப் போன்று தோன்றும் கலுமிச்சங் காய், பற்களை விழச்செய்வதைத் தவிர, சீதளத்தையும், வீரிய நட்டத்தையும் உண்டாக்கும்.

*குறிப்பு:-* இக்காய் மலைகளில் தான் கிடைக்கும்.

### நாரத்தங்காயின் குணம்

நன்றி யுறவுலகி னாரத்தங் காயருந்த
வென்றி தரும்புளிப்பான் மெய்ச்சும் - மன்றியுமோ
வாமொடு குன்மமறும் வாற்கிருமி யும்போகுங்
சாதலுறு தீபனமாங் காண்.

நாரத்தங்காயால் வாத நோயும், பாலிலுள்ள மலக் கிருமிகளையும் நீக்கும். பசியுண்டாகும். இதன் புளிப்பினால் சரீரம் சுத்தியடையும்.

### கடார நாரத்தங்காயின் குணம்

பித்தமொடு வாயிற் பெருகறல ரோசகம்போம்
பத்தியமா நோயிற் பருகலாங் - குத்துங்
கடாரி யனையவிழிக் கன்னி மடமாதே
கடார நாரத்தங்காயைக் கண்டு.

கடார நாரத்தையினால் பித்த நோயையும், வாய்நீர் ஊறலும், அரோசகமும் போம். இது பத்தியத்திற்கு உதவும். நோயாளிகளுக்கு சிறப்புடையதாகும்.

### கொளுஞ்சி நாரத்தங்காயின் குணம்

சொல்லுங் கொளுஞ்சிக்காய் தோன்றுகின்ற காசத்தை
வல்லவட் கீதத்தை மாருதத்தைப் - பொல்லாத
வையகத்தைத் தாகத்தை யுப்பொழுதே நீக்கிவிடும்
வையத்துட் பெண்ணரசே வாழ்த்து.

கொளுஞ்சி நாரத்தை ஆமதோடம், வாதவிரணம்,கப ஆதிக்கம், தாகம், இருமல் இவைகளைப் போக்கும். இதனை கொடி நாரத்தை என்றும் முலை எலுமிச்சை எனவும், துருஞ்சி எனவும் கூறுவர்.

### பனை நுங்கின் குணம்

நீர்வரா வியர்க்குருவை நீக்குமென லாக்குந் தோற்
சர்வா மயஞ்சீதந் தானொழிக்குஞ் - சேர்வார்
விழிக்கரையாந் துள்ளிக்கு மென்சுரத மானே
கழிக்கரையாந் தாளியிளங் காய்.

பனையானது இளங்காயிலுள்ள நுங்கின் சலமானது வியர்க்குருவை நீக்கும். பசியைத் தரும். தோலுடனே பருகிடும் இளம் நுங்கும் சீதபேதியை போக்கும்.

## செடியின் காய் வகைகள்

### கத்திரிக்காயின் குணம்

பண்டு மாண்ட சிரந்தையைப் பாலிக்கு
முண்ட கைக்குந் தினவை - யுண்டாக்கிடு
நண்டு கட்டுங் குரங்கென நாளுமாங்
கண்டு விட்டது கத்திரிக் காயதே.

கத்திரிக்காய் ஆறிய சிரங்கையும், புண்ணாக்கும். நமச்சலையுண்டாக்கும்.

## கத்திரிக்காய் அதன் பிஞ்சு இவைகளின் குணம்

கத்திரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடும்
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடு - மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுந் தோஷம் போக்கு
மஞ்சார் குழலே வழுத்து.

கத்திரிப் பிஞ்சு பித்தத்தால் வந்த கபத்தை நீக்கும். புடையும், கிரந்தியையும் அதிகப்படுத்தும். பிஞ்சு திரிதோடத்தைப் போக்கும்.

## கண்டங்கத்திரிக்காயின் குணம்

ஐயமறுந் தீபனமா மாமலக் கட்டும்
பையவெளி யாகிவிடும் பார்மீதிற் - செய்யமலர்த்
தொத்திரிக்கும் வார்குழலே தூமணலா குங்கண்டங்
கத்தரிக் காயைப் புசிக்குங் கால்.

வெண்மணலில் உண்டாகின்ற கண்டங் கத்திரிக்காயால் கபநோய் தீரும். சீதம் கலந்த மலக்கட்டு நீங்கும். பசியுண்டாகும்.

## கறிமுள்ளிக்காயின் குணம்

வாதபித்த வையகத்தை மாற்றுகின்ற போக்கு
மோது சுவாசத்தை யோட்டுங்காண் - பித்தத்தால்
சீத மகற்றிவிடுந் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் குடைச்சறரு மால்.

கறிக்குத வாத கறிமுள்ளிக்காய் வாத பித்த கப தோடங்கள், சுரம், சுவாசநோய் ஆகியவைகளைப் போக்கும்.

## கொத்தவரங்காயின் குணம்

கொத்தவரைக்காய் பித்தம் கூடாது மத்தியத்தின்
மெத்தளவு மையம் விளைக்குங்காண் - பித்தத்தால்

*சீதமகற்றிவிடும் தின் மருந்தை பாழாக்கும்*
*விய குடைச்ச லறுமால்.*

கொத்தவரங்காய் பைத்தியம், கபம், வாதக்கடுப்பு இவைகளை உண்டாக்கும். பித்தத்தால் நளிரையும் மருந்தையும் முறிக்கும்.

**வெண்கடுக்காயின் குணம் - இதுவே வெண்டைக்காய்**

*கண்ட கிராணி கடிய வதிசாரம்*
*விண்டவெண் சீதரத்த மேவுங்கா - ணொண்டொடியே*
*வண்டற்காய் வெய்யகப வாதமிகும் வாய்க்குணவாம்*
*வெண்கடுக்கா யுண்பார்க்கு விள்.*

வெண்டைக்காய்க் கிராணி, பேதி, சீதரத்தாதி, சாரம், கபவாதம், நாக்கிற்கு ருசி ஆகியவை உண்டாக்கும்.

*குறிப்பு:-* இதில் கந்தகச் சத்து இருப்பதால் மூளையை விருத்தி செய்ய உதவுகிறது.

**நறுமலர்த்தக்காளியின் குணம்**

*மலமிளகுந் தானே மகாகபமும் போகும்*
*பலமிகுந்த வாதம்போம் பார்க்குண் - மலைபோற்*
*பணைத்துப் பூரித்தமுலைப் பாவாய்கே ணல்ல*
*மணத்தக் காளியை வாழ்த்து.*

நறுமலர்த் தக்காளியால் மலம் இளகி, சுவாயமாக இறங்குவதுமன்றி, கபநோயையும், வாத ஆதிக்கத்தையும் குணப்படுத்தும்.

**மணத்தக்காளி வற்றலின் குணம்**

*நீர்ப்பேதி யாகு நிலைவமனம் போம் வாயிற்*
*கூர்ப்ப விலைப்புமறுங் கூறுவதோ - பார்க்கிலினு*
*மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணத்*
*தக்காளி வற்றலுக்குத் தான்.*

நோய் உடையவர்களுக்கு உதவக்கூடிய நல்ல மணத்தக்காளி வற்றலுக்கு, நீர்பேதி உண்டாவது தவிர வாந்தியும், சுவர்ப்ப விளைப்பும் நீங்கும்.

**சுண்டைக்காயின் குணம்**

நெஞ்சின் கபம்போம் நிறைகிருமி நோயும்போம்
விஞ்சு வாதத்தின் விளைவும்போம் - வஞ்சியரே
வாயைக் கசப்பிகு மாமலையிலுள்ள சுண்டைக்
காயைச் சுவைப்பவற்குக் காண்.

கசப்புச் சுவையுடைய சுண்டைக்காயால் மார்புச்சளி, கிருமிநோய், வாதத்தினால் ஏற்படும் அனைத்து நோய்களும் குணமாகும்.

**சுண்டைக்காய் வற்றலின் குணம்**

பித்த வரோசகம்போம் பேராப் புழுச்சாரு
முற்ற கிராணியறு முட்பசியாஞ் - சத்தியமாய்ப்
பண்டைக் குதவாமல் பற்றுமறு மாரையுந்தான்
சுண்டைக்காய் வற்றலுண்ணச் சொல்.

சுண்டைக்காய் வற்றலில் பித்த அரோசிகம், மலக்கிருமிக் கிராணி, சீதக்கட்டு ஆகியவை போகும். பசியை உண்டாக்கும்.

**விதுகங்காயின் குணம்**

விதுகங்காய் பத்திய வியஞ்சன மத்தாற்
புதநெய் விந்தொழிற் பலமும் பூணு - முதுபித்த
வேக மொழியு மிகுதுர்ப் பலமகலும்
பாகனைய வின்மொழியே பார்.

பத்தியக்காயாகிய விதுகங்காயினால் புதிய உதிரம், சுக்கிலம், அழகு, பலம் இவை உண்டாகும். நீடித்தப் பித்தமும், துர்ப்பலமும் நீங்கும்.

### பாவட்டங்காயின் குணம்

வாத சுரந்தணியும் வாய்ருசி யேகிவிடுஞ்
சீதக் கடுப்பகலுந் தேன்மொழியே - வாதுபுரி
பித்தவதி சாரமொடு பேராக் கபமுமறு
முற்ற பாவட்டங் காய்க்கு.

பாவட்டங்காய்க்கு வாத சுரம், அரோசிகம், சீதக்கடுப்பு, பித்த அதிசாரம், கபதோடம் ஆகியவை நீங்கும்.

### ஊசி மிளகாயின் குணம்

சீதக் கழிச்சற் சிறுநீர்ச் சுறுக்காசங்
காதக் குதநெகிழ்ச்சி காட்டுங்கா - ணாதித்தன்
வீறு கிரணம்பருகி மேனோக்கிக் காய்ந்த பங்காக்
காரமுறு மூசிமிள காய்.

அதிகப்படியான கார்ப்புச்சுவை பெற்ற ஊசி மிளகாயானது சீதபேதி, மூத்திரக்கடுப்பு, மூலம், குதநெகிழ்ச்சி நோய் ஆகியவைகளை உண்டாக்கும்.

*குறிப்பு:-* இதன் இலைலைக் கசக்கி ஐந்தாறு துளி சாறெடுத்து அதே அளவிற்கு தேன் கலந்து இரண்டு மூன்று நாட்கள் காலை, மாலை கொடுக்க கக்குவான் நோய் குணமாகும்.

### வெண்மிளகாய், கருங்குண்டுமிளகாய், பச்சைமிளகாய் இவைகளின் குணம்

வெண்டு மிளகாய்க்களில் மேவுமிடம் பார்க்குமணிக்
குண்டு மிளகாய்க் கனலங் கூடுங்கா - மூண்டுபயிர்ப்
பச்சைமிளகாய்க்குப் பதமிறங்குஞ் சோவைபுரிஞ்
திச்சையுற வுண்ணின் மறு விள்.

வெண்மிளகாய்க்கு வாதகோபம் நீங்கும். ஆகாயத்தை நோக்கிக் காய்க்கின்ற குண்டு மிளகாய்க்கு உஷ்ணம் அதிகம். பச்சைமிளகாயை உணவுடன் சேர்த்து உட்கொண்டால் சாப்பாடு இறங்கும். குற்றமில்லை.

**களாக்காயின் குணம் - இதனைக் கிளாய்க்காய் என்பர்**

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே யரோசகமு மாறுங்காண் - டீதா
மிரத்த பித்தம்போகு மினியகளாய்க் காய்க்
குரத்த பசியுமுண்டோ மோர்.

களாக்காய்க்கு காது அடைப்பு, தாகம், பித்ததோடம், வாந்தி, அரோசிகம், இரத்தப் பித்தம் ஆகியவைகள் போம். மிகுந்த பசியையுண்டாக்கும்.

**ஊமத்தங்காயின் குணம்**

வாதமறும் பித்த மயக்கமுறு மாநிலத்திற்
றீதுகரப்பான் சிரங்ககலும் - கோதாய்கேள்
மாமத்த மாகும் வறட்சியெல் லாம்போகு
மூமத்தங் காய்க்கென் றுரை.

ஊமத்தங்காய்க்கு, வாதநோய், கரப்பான், சொறி சிரங்கு நீங்கும். பித்தமயக்கமும், குன்மத்தமும் உண்டாகும்.

## கொடியின் காய் வகைகள்

**கலியாணப் பூசனிக்காயின் குணம் - இதுவே பெரும்பூசினி**

பெரும்பூசினிக் காய்க்குப் பித்தமோ டுட்காய்ச்ச
லருஞ்சார நீர்க்கட் டருமே - மருந்திடுதற்
பித்தசுர மஸ்திசுரம் பேய்வறட்சி மேகமும்போ
மெத்த வனிலமுறும் விள்.

கலியாணப் பூசணிக்காய்க்குப் பித்தநோய் உட்காய்ச்சல், மேகமூத்திரக் கிரிச்சரம், நீர்க்கட்டு, இடுமருந்து, பித்தசுரம், அஸ்திசுரம், பேய்ச்சொரி, பிரமேகம் ஆகியவை போம். வாத கோபத்தையுண்டாக்கும்.

**பறங்கிக்காயின் குணம் - இதுவே பூசனிக்காய்**

அனலழலை நீக்கு மதிபித்தம் போக்குங்
மனலனவே வென்பசியைக் காட்டும் - புனலாகு
மிக்கவைய முண்டாக்கு மென்கொடியே யெப்போதுஞ்
சர்க்கரைப் பறங்கிக்காய் தான்.

சுவையுடைய பறங்கிக்காய் அனலால் வரும் அழற்சியையும், முதிர்ந்த பித்தத்தையும் நீக்கும். கபகோபத்தை உண்டாக்கும்.

**குழிப்பறங்கிக்காயின் குணம் - இதுவே கோடைப்பூசினி**

வாதக் குடைச்சலுறு மாறாத வையமுமாம்
போதவளிச் சூலையுண்டாம் பொற்கொடியே - யோதுங்
குழிப்பரங்கிக் காய்க்குக் குளிர்ச்சி நிறையும்
பழிக்கடுத்த மந்தமிகும் பார்.

குழிப்பறங்கிக் காயானது வாதக்கடுப்பு, விருத்தி, வாத சூலை, அக்கினி மந்தம் உண்டாக்கும். ஆனால் இதனைக் குளிர்ச்சி என்பர்.

**குமட்டிக்காயின் குணம் - இதனை முலாங்காய் என்பர்**

தந்தம் விழுந்திடுமே தாது மெலிந்திடுமே
விந்தை மிகுங்காந்தி விலகிடுமே - சந்ததமும்
வாதமிகுந்திடுவே வந்துகபஞ் சேர்ந்திடுமே
யோது குமட்டிக்காயா லுண்.

குமட்டிக்காயினால் பல் விழல், சுக்கில நட்டம், தேக ஒளி, ஓடல், வாதம், கபஆதிக்கம் ஆகியவை உண்டாகும்.

### சுரைக்காயின் குணம்

வாதபித்தம் வாயருசி வன்பீலிகஞ் சீத
மோதிருத்து நோயுண்டா முள்ளனற்போ - மோதத்
திருப்பாற் கடற்றிருவே தீக்குணத்தை மேவுஞ்
சுரைக்காயைத் தின்பவர்க்குச் சொல்.

சுரைக்காயால் வாதபித்தம், அரோசகம், பீலிசநோய், மார்பு நோய் இவைகள் உண்டாகும். உட்சூடு நீங்கும். நீரை வெளியாக்கும்.

### வெள்ளரிக்காயின் குணம்

உண்டருந்தத் தீயெழுப்பு முண்மருந்தைத் தான் முடுக்குங்
கண்ட கரப்பனைக் கடுக்குங்காண் - பண்டிதரே
யுள்ளரிப்பை நீர்க்கடுப்பை யூரைவிடுத் தோட்டிவிடும்
வெள்ளரிக் காயின் குணத்தை விள்.

வெள்ளரிக்காய்க் கரப்பான் , நீர்துரை தினவு, நீர்ச்சுருக்கு ஆகியவைகளை போக்கும். இதை உட்கொண்டால் பசியுண்டாகும். ஆனால் மருந்துகளின் வேகத்தை முறிக்கும்.

### வெள்ளரிப்பிஞ்சு, காய், பழம், விதை இவைகளின் குணம்

பிஞ்சுவெள் ளரிக்காய்க்குப் பேசுதிரி தோஷம்போம்
வஞ்சியரே முற்றியகாய் வாதமாம் - நைஞ்சகனி
யுண்டாற் சத்தியமா முள்ளிருக்கு மவ்விதையைக்
கண்டாலு நீரிறங்குங் காண்.

வெள்ளரிப்பிஞ்சுக்கு முத்தோஷம் நீங்கும். காயால் வாதமும், பழத்தால் கபமும் உண்டாகும். விதையால் நீர்பேதியுண்டாகும்

### கக்கரிக்காயின் குணம் - இதுவே முள்ளொிக்காய்

கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்த்து
மெய்க்குக் குளிர்ச்சிதரு மெல்லியலே - முக்குகின்ற

மூல வழறணிக்கு மூடிரத்த பித்தத்தை
சால வகற்றிவிடுஞ் சாற்று.

கக்கரிக்காய் பித்ததோடம், மூலச்சூடு, இரத்தப்பித்தம் இவைகளைப் போக்கும். கோழையையும், குளிர்ச்சியையும் உண்டாக்கும்.

**ஆகாயக்கக்கரிக்காயின் குணம்**

ஐயம் விளையு மழல்கரப்பான் பித்தமும்போ
மெய்யு ளதிபோகம் விளையுங்காண் - செய்மருந்தின்
காந்தியும்போ மாகாயக் கக்கரிக்காய் தின்றவர்க்கு
வாந்தியும்போ மாதே வழுத்து.

பந்தலில் காய்க்கின்ற ஆகாயக்கக்கரிக்காய்க்கு தேகச்சூடு, கரப்பான், மருந்தின் வீரியம், பித்த வாந்தி ஆகியவை போம். கப ஆதிக்கமும், புணர்ச்சியில் இச்சையும் உண்டாகும்.

**கொட்டை அவரைக்காயின் குணம்**

கொட்டை யவரைக்காயாற் கோரவரோ சகநோய்
கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடுத் - துட்டமந்தம்
பையவுண்டாம் பேதியுண்டாம் பாரிப்பனில முண்டா
மையமுண்டாஞ் சூலையுமுண் டாம்.

முதிர்ந்த கொட்டை அவரைக்காயினால் அரோசக நோய் மருந்துகளின் நன்மையும் போகும். அக்கினிமந்தம், அதிசாரம், சரீர பளுவு, வாததோஷம், கபகோபம், குத்தல் பேதி ஆகியவைகள் உண்டாகும்.

**வாள் அவரைக்காயின் குணம்**

அதிபித்தம் வாந்தி யரோசகமு முண்டாங்
குதிவாதம் வாய்ச்சுரப்புங் கூடுந் துதிசக்ர
வாள வரையொத்த வனமுலை மாதேபசிய
வாளவரைக் காயான் மதி.

பசுமையுள்ள வாள் அவரைக்காயால் பித்த ஆதிக்கம், வாந்தி, அரோசிகம், குதவாதநோய், வாய்நீர் ஊறல் ஆகியவை உண்டாகும்.

### மொச்சைக்காயின் குணம்

அனிலபித்த வையங் களைக்கடி துண்டாக்குந்
தொனியடுக்கும் வாதனைத்துந் தூண்டு - மனுதினமுங்
கொச்சை மலத்தைப்பெருக்குங் கோரவுட்டிணந்தணிக்கு
மொச்சைக்காய் செய்யு முறை.

மொச்சைக்காய் திரிதோடங்கள், தொனிக்கத் தக்கவாதம், மலவிருத்தி ஆகியவைகளை உண்டாக்கும். சூடுதணியும்.

### பீர்க்கங்காயின் குணம்

தின்றவுடன் பீர்க்கங்காய் சீதமுறுங் காண்பித்த
மொன்று மூன்றாக வுயருமே - மன்றலணிக்
காரளகக் கச்சுமுலைக் காரிகையே வாதகப
நேரளவைத் தாண்டு நினை.

பீர்க்கங்காயை உண்டால், சீதளம், பித்தம், வாதகபம், தன்தன் மாத்தி பிளவுக்கு மூன்று பங்கு பிசகும்.

### புடலங்காயின் குணம்

போகம் விளையும் பொருந்தி வளருமைய
மாகமதிற் பித்த மணுகுங்காண் - மேகப்
புடலங் கவியகப் பாவாய் கேணாளும்
புடலங்காய்க் குள்ள புகழ்.

புடலங்காய், விந்துவை அதிகரிக்கச் செய்யும். ஆனால் கபத்தையும், பைத்திய நோயையும் உண்டாக்கும்.

## பன்றிப்புடலங்காயின் குணம்

கரப்பான் சொறிசிரங்கு காணாச் சிலந்தி
யுரப்பாம் விஷக்கடியு முண்டா - முறைத்தவகை
யன்றிச் சயித்தியமி மாம்பன்றி தன்னையொத்த
பன்றிப் புடலுக்குப் பார்.

பன்றி மாமிசத்தை ஒத்த பன்றிப் புடலங்காய்க்கு கரப்பான் படை, கிரந்தி சீதளம் இவைகள் உண்டாவது மன்றிக் காணாக்கடி சிலந்தி, சர்ப்பவிஷங்கள் இறங்கியதாயினும் உடனே ஏற்றும் தன்மையையுடையது.

## கொம்புப்பாகல் காயின் குணம்

மருந்துகளி னற்குணத்தை மாற்று மஃதொன்றா
திருந்துவலி வாதத்தைச் சேர்க்கும் - பொருந்துபித்தங்
கூட்டுமவ பத்தியத்தைக் கொண்டிருக்கும்
வன்கரப்பான்
காட்டுங் கொம்புப்பாகற் காய்.

கொம்புப் பாகற்காய் நல்மருந்துகளின் குணங்கள் கெடுப்பதுமன்றி, வாத பித்த கப கோபங்களை அதிகரிக்கச் செய்யும். இது அபத்திய பதார்த்தங்களில் ஒன்று.

## மிதிபாகல்காயின் குணம்

பித்தமொடு வாதப் பெருக்கைமிக வுண்டாக்குந்
தந்து கரப்பானைத் தருவிக்கும் - பற்றிரத
தார பாஷாணந் தமைமுறிக்குந் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய்.

காரவல்லி என்கிற மிதிபாகல்காய் பித்தவாத கோபங்களையும், கரப்பானையுண்டாக்கும். பாதரசம், அரிதாரம் போன்ற பாடாணங்களை முறிக்கும் தன்மையுடையது.

## காட்டுப்பழி பாகல்காயின் குணம

போஜனமுட் செல்லும் பொருந்துபசி யுண்டாகும்
காசபித்த வாதமிவை காணவா - நேசமுற
வாட்டுப்படாக் கொங்கை மாதே குழிஞ்சிநிலக்
காட்டுப் பழுபாகற் காய்க்கு.

காட்டுப்பாகல் காய் உணவை உட்கொள்ளச் செய்தலும் நல்ல பசியையும் உண்டாக்கும். மேலும் இருமலால் பிறந்த பித்த வாத நோய்களையும் போக்கும்.

## அதளக்காயின் குணம்

அதளக்காய் வாய்க்குருசி யாயிருக்குந் தின்றாற்
கதளவொட் டாபித்தங் கதிக்கும் - பதளத்தின்
மந்தமுண்டாம் வாயுமிக வந்தடருந் தப்பாதே
கந்தமலர்க் குழலாய் காண்.

வாய்குருசியைத் தருகின்ற அதளக்காயை உட்கொண்டால் பித்தத்தை அதிகரிக்கச்செய்யும். அடிவயிற்றில் மந்தமும், வாதநோயும் உண்டாக்கும்.

## தூதுளங்காயின் குணம்

ஐயமுடன் பித்த மசலு மரோசகம்போந்
தையலே வாதந் தணியுங்காண் - வையமிசை
யோதுங் குடல்வாத மோடுமல மொழிந்
தூதுளங் காயுண்ணச் சொல்.

தூதுளங்காயால் கபநோய்கள், பித்ததோடம், உணவின்மீது வெறுப்பு, இரத்தாசய வாயு, பித்தவாதம், மலபந்தம் ஆகியவை விலகும்.

**கொடிவழுதுணைக்காயின் குணம் - இது வழுதலங்காயென மருவியது**

எல்லார்க்கும் நல்லிதமாஞ் சிலேஷ்மத்தைப்
போக்கும்
புல்லார்க்கும் பத்தியம் புரிக்கலாம் - முல்லைக்
கடிகமழும் வார்குழலே காசினியிற் சொன்னோங்
கொடி வழுதுணைக்காய்க் குணம்.

கொடிவழுதுணைக்காய் வாதபித்தம், கபம் ஆகிய மூன்று உட லினருக்கும் பொருந்துவதுமின்றிக் கபத்தைக் கரைக்கும். பத்தியத்திற்கு உகந்த காயுமாகும்.

**பயற்றங்காயின் குணம்**

ஐய மகலு மரோசிகெடுந் தீபனமாம்
பையுதிர வாய்வும் பறக்குமென்பார் - செய்யு
நயத்த வவுஷதமு நாசமடையும்
பயற்றங்காய் தன்னையுண்டு பார்.

மருந்தை முறிக்கின்ற பயிற்றங்காயினால் கபஆதிக்கம், அரோசிகம், இரத்தவாந்தி, குன்மம் இவைகள் விலகும். பசியையுண்டாக்கும்.

**கோவைக்காய் இதன் வற்றல் இவைகளின் குணம்**

வாயி னரோசகம்போ மாறா வழலையறு
நோயின் கபமகலு நுண்ணிடையே - தூயவதன்
வற்றக் கருசி மருவுகரப் பான்போகுஞ்
சுத்தக் கோவைக்காயைச் சொல்.

நல்ல கோவைக்காயால் அரோசிகம் நீங்காத வெப்பம், சுர கபதோடம் ஆகியவை போம். வற்றலால் அரோசிகமும் கரப்பானும் நீங்கும்.

**சுக்கான் காய் இதன் வற்றல் இவைகளின் குணம்**

மைக்குழலே கேளாய் வாதமறும் பித்தமென்பார்
சுக்கான்காய் வற்றலது தொல்லுலகிற் - கைக்கின்ற
வாயுவை நீக்கும் வருமருசி போக்கிவிடு
நீயுமறிவாய் நிசம்.

சுக்கான் காயினால் வாததோடம் நீங்கும். ஒருசிலர் இதைப் பித்தம் என்றும் கூறுவர். அதன் வற்றலாக வாதத்தையும், அரோசிகத்தையும் குணப்படுத்தும்.

**மிளகுக்காயின் குணம்**

அளவை யறக்காத மடைந்திருக்கும் வாத
விளைவை யெல்லாமறுக்கு மெய்யே - மிளன்காய்
கண்டவர்க்கு மின்பமாங் காரிகையே சீழ்மூலங்
கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு.

அதிக கார்ப்புச் சுவையுடைய மிளகுகாய் வாதநோயையும், சீழ்மூலத்தையும் நீக்கும். இக்காயைப் பார்ப்போருக்கு விருப்பத்தையும் உண்டாக்கும்.

**ஆற்றுத்தும்மட்டிக்காயின் குணம் - இதுவே கலிங்கம்**

கிடையெங்கே சோம்பலெங்கே கேடுறச்செய் வாதக்
கடையெங்கே யாற்றுக் கலிங்க - மடைதிறக்கி
னண்டை யடைச்சலெங்கே யாயிழையார் சூதகத்தி
னுண்டை யுடைச்சலெங்கே யோது.

கலிங்கத்தால் கீழ்வாய்வுப் பிடிப்பால் தடையின்றி கிடத்தல், சோர்தல், வாதநோய்கள், கருப்பையைப் பற்றிய குன்மக்கட்டி, ஆகால ருது ஆகியவை போம்.

### சிகைக்காயின் குணம் - இதனைச் சீக்காய் என்பர்

மூக்கின் சிகிச்சைகட்கு முக்கியமாம் பேதியையுண்
டாக்கு வமனத்தையு மழைப்பிக்குந் - தேய்க்கும்
வகைநெய்ச் சிக்கைப்போக்கு மாதரசே நாளுஞ்
சிகைக்கா யதனைத் தெரி.

சீயக்காயானது நாசிபுண் புரிகின்ற ஆக்கிரண நாசிய சிகிச்சைகளுக்கு முக்கிய மருந்தாய் இருப்பதுடன், அன்றியும் பேதியையும், வாந்தியையுண்டாக்கும். பலவித நெய்ச் சிக்குகளைப் போக்கும்.

*குறிப்பு:-* சீயக்காயின் விதைகளை நீக்கி, அதன் தோலை மட்டும் எடுத்து ஒன்றிரண்டாகத் தட்டி, குடிநீரிட்டு, கொடுக்க மஞ்சள்காமாலை நோய் 5 தினங்களில் குணமாகும்.

## மரத்தின் பழவகைகள்

### விளாம்பழத்தின் குணம்

எப்போது மெய்க்கிதமா மீளையிருமல் கபமும்
வெப்பாகுந் தாகமும்போ மெய்ப்பசியா - மிப்புவியி
லென்றாகிலுங் கனிமே லிச்சைவைத்துத் தின்ன வெண்ணித்
தின்றால் விளாங்கனியைத் தின்.

விளாம்பழத்தினால் சுவாசகாசம், கபம், பித்தம், தாகம் இவை விலகும். உடலுக்குச் சுகத்தையும், நல்ல பசியையுண்டாக்கும்.

### இலந்தைப்பழத்தின் குணம்

பித்த மயக்கருசி பேராப் பெருவாந்தி
மொத்தனில மெல்லா முடிந்திடுங்காண் - மெத்த
வுலர்ந்த வெறுவயிற்றி லுண்டா லெரிவா
மிலந்தை நறுங்கனியை யெண்.

இலந்தைப் பழத்தால், அரோசிகம், பித்தம், பித்த மூர்ச்சை, திரிதோஷம், வாந்தி, வலிவாதம் ஆகியவை போம். இதைப் பசி நேரத்தில் உட்கொண்டால் வயிற்றில் எரிச்சலை உண்டாக்கும்.

*குறிப்பு:-* இலந்தைப் பழத்தை உணவு உட்கொண்ட பிறகு சாப்பிடவேண்டும்.

**வாழைப்பழத்தின் பொதுக்குணம்**

*சுத்தவறுச் சுனஞ்செய் சோமநோ யென்பதுவும்*
*பித்தநோ யென்னப் பிறந்தவையு - முத்தி*
*வரம்பைக் கடந்த யுதமூர்ச்சை யும்போ*
*மரம்பைக் கனியுண்டறி.*

வாழைப்பழத்தால் உடம்பை வெளுக்கச் செய்கிற சோபை நோய், பித்தப்பிணிகள், மதநோய், மூர்ச்சை ஆகியவைகள் குணமாகும்.

**எண்வகை வாழைப்பழத்தின் குணம்**

செவ்வாழை வெள்வாழை சேர்ந்தரச தாளிமொந்த
னொவ்வு மவையோர்க் குலத்திற் - கவ்வடுக்கு
வாழைமலை வாழைபசு வாழைகரு வாழைகளி
லுழிகரு வாழைநன்றா மோர்.

ஓதலுற்ற வாழை யெட்டிலுற்ற கனிகளெல்லாம்
வாதநோய்க் காகாது வையகத்தோர் - போதவுண்ண
வெண்ண முண்டாயி னிதற்கியைந்த சத்துருவோ
டுண்ண விடரின் றுறை.

செவ்வாழை, வெள்வாழை, ரஸ்த்தாளி, மொந்தன், அடுக்குவாழை, மலைவாழை, பச்சைவாழை, கருவாழை என்கிற எட்டுவகை வாழைப்பழங்களுள் முதலில் கூறிய நான்கும் நோயாளிகளுக்கும் ஆகும். ஆனால் இவ் வெட்டுவகை வாழைப்பழங்களும் வாதநோயாளிகளுக்கு உதவா.

## பேயன் வாழைப்பழத்தின் குணம்

பேயன் பழமருந்திற் பித்தரோகம் போகும்
வாயு வுண்டாகு மலங்கழியு - நீயே
தகத்திலதி குளிர்ச்சி யாகு மணங்கே
சகத்தி விதையறியச் சாற்று.

பேயன் பழத்தினால் பைத்தியமும், உட்சூடும் நீங்கும். வாய்வு உண்டாகும். உடலுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்கும். மலத்தைக் கழியச்செய்யும்.

## மொந்தன் வாழைப்பழத்தின் குணம்

மந்தமுட னோய் கலத்தல் வாதவலி சீதந்
தொந்தமுறு தாகமிவை தோன்றுங்காண் - புந்திவலி
யோட்டு பித்தங் காமாலை யுள்ளவறட்சி யுந்தொலையு
நாட்டு மொந்தன் பழத்தி னால்.

மொந்தன் பழத்தினால் அக்கினி மந்தம், உடல் வலியுடன், பாரிப்பு, இசிவு, சீதளம், திரிதோஷம், தாகம் இவை உண்டாகும். ஆனால் மன உறுதியை விலக்குகிற பித்தம், தாதுவைப் பற்றிய வறட்சி நீங்கும்.

*குறிப்பு:-* இப்பழத்தை அம்மை நோயுற்றோர்க்குக் கொடுப்பதுண்டு.

## நவரை வாழைப்பழத்தின் குணம்

மாந்தமொடு நமைச்சல் வாதகபமும் பெருகும்
பாந்தலுறு கரப்பான் பரவுங்காண் - பூந்தடக்கை
யாழைப் பழித்தமொழி யன்னமே நவரை
வழைப் பழத்தான் மதி.

நவரைப்பழத்தால் மந்தாக்கினி, தினவு (அரிப்பு) வாதகப தொந்தம், கரப்பான் ஆகிய இவை அதிகரிக்கும்.

## பலாப்பழத்தின் குணம்

தித்திக்கும் வாத சிலேஷ்ம பித்த முண்டாக்கு
மெத்தக் கரப்பான் விளைவிக்குஞ் சத்தியமாய்ச்
சேராப் பிணியையெலாஞ் சேர்ப்பிக்கு மோர்நொடியிற்
பாராய்ப் பலாவின் பழம்.

இனிப்புள்ள பலாப்பழம், வாதபித்த கப துந்தங் களையும், கரப்பானையும், முன்னில்லாத பிணிகளையும் உண்டாக்கும்.

## மாம்பழத்தின் குணம்

தின்றாற் றினவெடுக்குந் தீபனம்போ நெஞ்செரிவா
மற்றே விழிநோ யடருங்காண் - துன்றிமிக
வாதக் கரப்பானும் வன்கிரந்தி யும்பெருகுஞ்
சூதக் கனியின் சுகம்.

மாம்பழத்தை உட்கொண்டால் உடலில் நமச்சலும், மார்பு எரிச்சல், கண்ணோய், கிரந்தி, கரப்பான் ஆகியவைகளை அதிகரிக்கும் பசி நீங்கும்.

## மாம்பழம், காய், பிஞ்சு இவைகளின் குணம்

வேத சத்தியமாக விளம்புவோந்
தாது விர்த்திக்குந் தம்பன - மாங்கனி
போத மர்த்தனம் புன்காயி னால் வடு
வாத பித்த கபங்களை மாற்றுமே.

மாம்பழம் சுக்கிலப் பெருக்கத்திற்கும், அதிகரிக்கவும், காயினால் அறிவு கெடும். பிஞ்சு திரிதோட கோபத்தை நீக்கும்.

## தசையத்திப் பழத்தின் குணம்

இரத்த முண்டாக்கு மிளைத்தமெய்யைத் தேற்றுஞ்
சுரத்தி லாமவெப்பைத் தொலைக்கும் - கரத்த

மலத்தைக் கடிதுள்ளும் வன்னிகபத் தொந்தம்
பலத்த நசையத்திப் பழம்.

நசையத்திப் பழம் இரத்தவிருத்தியும், சரீர வளர்ச்சியையும் தரும். சுரவெப்பத்தையும், சீரண மலத்தையும் நீக்கும்.

### விதையத்திப் பழத்தின் குணம்

தினமுமலக் கட்டொழிக்குந் தேக வெப்ப நீக்கும்
வனமுறு பித்தகோப மாற்று - மினமயிலுந்
துன்னு விழியையுடைச் சொன்னமே வையகத்தோர்
பன்னு விதையத்திப் பழம்.

விதையத்திப் பழம் நித்திய பல பந்தத்தையும், சரீர உஷ்ணத்தையும், பித்த வேகத்தையும் போக்கும்.

### புளியம்பழத்தின் குணம்

புத்தியு மந்தமாகும் பொருமியே யுடலமூதும்
பத்தியத் தவறுஞ்சன்னி பாதமாஞ் சுரங்கள்வீறுஞ்
சர்த்தியும் பித்தந்தீரும் தனுவெலாம் வாதமேறு
மந்திபந் தாதுபுட்டி வருந்திசை நரைபுளிக்கே.

புளியம்பழத்தால் மந்தபுத்தி, தேகம் பருத்தல், சன்னி பாத சுரங்கள், அங்க சலன வாதம், சுக்கிலதாது மத்திமம், நரைதிரை இவையுண்டாகும். வாந்தியும், பித்தமும் விலகும்.

### பழம்புளியின் குணம்

தீதிற் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோஷம்
வாதமொடு சூலைகப மாறுங்கா - ணோதுசுரஞ்
சர்த்தியென்ற தோஷமிவை சாந்தமாங்
கண்ணோய்போம்
பித்தமென்ற பேரொழியும் பேசு.

குற்றமற்ற பழம்புளியால் திரிதோடம், சூலை, வாதம், கபம், வாந்தி, விழிநோய், பைத்தியம் இவை உண்டாகும்.

**சரக்கொன்றைப் புளியின் குணம்**

வன்பணில மேக மலக்கட் டொடுகுடரின்
றுன்ப மலினம்வெப்பு தோன்றுங்கா - லின்பந்
தருதமாலப் பரிமளத் தனத்தா யிந்தக்
கிருதமாலப் புளியைக் கேள்.

சரக்கொன்றைப்புளியால் வாதப் பிரமேகம், குடல்வலி, அக்குடலைப் பற்றிய அழுக்கு இவைகள் போகும். ஆனால் வெப்பத்தையுண்டாக்கும்.

**பனம்பழத்தின் குணம்**

நாளும் பனம்பழத்தை நல்லமுதா யுண்ணுங்கா
லாளுங் கரப்பா னழுகிரந்தி - நீளுமலச்
சிக்கும்பித் தத்தில்வளி சேருதல னோய்க்கனமு
தித்திக்கும் பலக்குமெனச் செப்பு.

தினமும் பனம்பழத்தையே உணவாக உட்கொண்டால் கரப்பான், அழுகிய சிரங்கு, மலபந்தம், பித்தவாயுவால் நோயினங்கள் உண்டாகும்.

**தேற்றான் பழத்தின் குணம்**

தேற்றான் கனிதனக்குச் சேயிழையே வன்காசந்
தேற்றா தொழியுஞ் சுவாசமும்போஞ் - சாற்றின்மிகு
வாந்தி பெருகு மலம்போ முத்தோஷத்தைச்
சேர்ந்த பிணிகளும்போஞ் செப்பு.

தேற்றான் பழத்தால் வாத இருமல், இரைப்பு, மலக்கட்டு, திரிதோட நோய்கள் குணமாகும். வாந்தியை உண்டாக்கும்.

**நாவற்பழத்தின் குணம் - இதனை நாகற்பழம் என்பர்**

மாந்தம் விளையும் வளிகரப்பா னுண்டாகுஞ்
சேர்ந்ததொரு நீரிழிவுஞ் சேருமே - நாந்தலொடு
வாயவங் கடுப்பும் வருங்கொதிப்புந் தாகமும் போந்
தூயநாவற் பழத்தாற் சொல்.

நாவல் பழத்தினால் அக்கினி மந்தம், சரீரவலி, கடுவன், சீததாகம், சரீரம் கடுத்தல் இவையுண்டாகும். அதிநீரும், வெப்பமும், தாகமும் நீங்கும்.

**வெள்ளை நாவற்பழத்தின் குணம்**

உதிரமொடு விந்துவையு முண்டாக்கு முள்ளே
யதிரழலை தன்னை யகற்றும் - பதியதனிற்
கண்ணா வலியார்க்குங் கதிக்கநோக் குந்திருளே
வெண்ணாவலின் கனியை விள்.

வெள்ளை நாவல்பழம், இரத்த தாதுவையும், சுக்கில தாதுவையும் உண்டாக்கும். உள்வெப்பத்தைப் போக்கும்.

**சம்பு நாவற்பழத்தின் குணம்**

அனில வழலு மரும்பித்த வெப்புந்
தனியலவு தாகமுந் தயங்குந் - தனிவேட
னம்பு நாணுங்காண் ணணியிழையே கானிலுறுஞ்
சம்பு நாவற்கனிக்குத் தான்.

சம்பு நாவற்பழத்தால் வாத உஷ்ணம், பித்த உஷ்ணம், ஒரே தோஷத்தால் பிறந்த தாகநோய் ஆகியவை நீங்கும்.

**பாலைப்பழத்தின் குணம் - இதுவே தீம்பாலை**

வாத கரப்பனறும் வல்லசிலேஷ்ம மும்போம்
வேது கிரந்தியுஞ்சா மென்பசியா - மோதுமதன்
கோலைப் பழித்தவிழிக் கோதா யினிமையுள்ள
பாலைப் பழத்தானீ பார்.

பாலைப்பழத்தால் கருங்கரப்பான், கப தோடம், வெப்பத்தைக் கொடுக்கக்கூடிய கிரந்தி ஆகியவை போம். மிகுபசியை உண்டாக்கும்.

### கொட்டை முந்திரிப்பழத்தின் குணம்

தாகந் தணியுஞ் சகிக்கா கரப்பனா
மாகத்திற் சேர்ந்த வழலுமறும் - வேகின்ற
துட்ட வன்சிரங்கொடு புண்டோற்றுங் கரகரப்பாங்
கொட்டை முந்திரிப்பழத்தாற் கூறு.

கொட்டை முந்திரிப் பழத்தால் தாகமும், சரீர வெப்பமும் நீங்கும். கரப்பான், துஷ்ட ரணம், நெஞ்சில் கரகரப்பு ஆகியவை உண்டாகும்.

### தமரத்தம் பழத்தின் குணம் தந்தசடம்

வாதபித்தம் வாதகபம் வாந்திகுரற் கம்மல்கண்ணோய்
தாது நஷ்டம் பித்தந் தலைநோயோ - டோதுசித்தத்
துற்ற பிரமையும்போம் மொண்டொடியே மாபுளிப்பா
நற்றமரத்தம் பழத்தை நாடு.

தமரத்தம் பழத்தால் வாத பித்த, துத்தம், வாதகப துந்தம், வாந்தி, குரல்கம்மல், நேத்திரநோய், சுக்கில நட்டம், தலைநோய், பித்தம், சித்தப்பிரம்மை ஆகியவை நீங்கும்.

### கொய்யாப்பழத்தின் குணம்

திரிதோஷஞ் சென்னித் திரும்ப மரோசி
பொருமாந்தம் வாந்தி பொருமல் - கரப்பானும்
மெய்யாப் பரவுமல மெத்தவிடும் போகமுண்டாங்
கொய்யாப் பழத்தினாற் கூறு.

கொய்யாப்பழத்தால், முத்தோடம், தலைமயக்கம், அரோசிகம், மந்தம், வாந்தி, வயிறு, உப்பல், கரப்பான், வீரியம் இவை உண்டாகும். மலங்கழியும்.

**எலுமிச்சம்பழத்தின் குணம்**

தாகம் நகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்க ளுண்மாதம் வீறுபித்தம் - மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும்போங் கட்டுவாதித்
தொழிலின்
மன்னெலு மிச்சங்கனியை வாழ்த்து.

மலபந்தமுள்ள எலுமிச்சம்பழத்தால், தாகம், நகச்சுற்று, யானைக்கால், உன்மதம், பித்தம், கண்நோய், காதுவலி, வாந்தி முதலியவை நீங்கும்.

**நாரத்தம்பழத்தின் குணம்**

பித்தவழிக் குன்றுமறும் பேராத தீபனமாம்
வித்தான தாதுவும் விளைந்திடுங்காண் -
முத்திணைத்த
வாரத்தைத் தாங்குமுலை யாயிழையே யெக்காலும்
நாரத்தை யின்கனியி னால்.

நாரத்தம்பழத்தால் பித்தகுன்ம நோய் நீங்கும். நீங்காத ஜாடராக்கினி நீரையும் சுக்கில விருத்தியையும், சோனிலவிருத்தியையும் உண்டாக்கும்.

**சாதிநாரத்தை, கொளஞ்சி , நாரத்தைப் பழங்களின் குணம்**

சாதிநாரத் தம்பழந்தான் றாகந் தனையகற்று
மோதருசி வாய்க்கசப்பை யோட்டுங்காண் - வேதா
லளிஞ்சமேகத் தேகர்க்காம வறட்சி போக்குங்
கொளிஞ்சி நாரத்தம்பழந்தான் கூறு.

சாதி நாரத்தம்பழம், தாகம், அரோசிகம், வாய்க்கசப்பு இவைகளை நீக்கும்.

கொளஞ்சி நாரத்தம்பழம் பிரமேக உடல் நிலையினர்க்குரிய நாவறட்சியைப் போக்கும்.

## சீத்தாப்பழத்தின் குணம்

பித்தகப மெத்தப் பெருகுமந்த மேலோடுஞ்
சித்தமதிற் றயக்கஞ் சேருங்கா - ணத்துலவும்
பூத்தானத் தாரும் பொலன்கொடியே பூவுலகிற்
சீத்தாக் கனியாற் றெளி.

சீத்தாப்பழத்தால் பித்த கப தொந்தம், அக்கினிமந்தம், சித்தப்பிரம்மையை உண்டாக்கும்.

## மாதுளம்பழத்தின் குணம் - இதுவே தாடிமக்கனி

சங்கையறச் சொற்றவிர்க்குந் சந்நியாசஞ் சர்த்தி
யங்கையதி தாகநமைச் சாருமோ - கங்கை
விருந்தாடி மக்கட் கிரத்தளைச்செய் நோய்போ
மிகுந் தாடமக்கனிகட் கெண்.

வாய்நீரூறல் கசப்பு வாந்திவிக்கண் மந்தமிதக்
காய்வெப்ப நெஞ்செரிவு காதடைப்பு - வோயா
மயக்கமுந் தீர்ந்துவிடு மாதுளம்பழத்தாற்
நயக்கமனத் தேமொழியே சாற்று.

வெடித்துவீழ் பழத்தைவாங்கி மெல்லிய சீலைக்கட்டிக்
கடுக்கெனப் பிழிந்துகொண்டு கண்டதற் கிணங்கக் கூட்டிக்
குடித்திட வெப்புமாறுங் குளிர்ந்திடு மங்கமெல்லாம்
வடித்தநன் மொழியினாளே மாதுளம் பழத்தின்சாறே.

பெருமையாகிய மாதுளங்கனிகளுக்கு, சந்தேகம் நீங்க, நினைப்பையும், பேச்சையும் ஒழிக்கின்ற சந்நியாசநோய் வாந்தி, கபம், அதிகப்படியான தாகம், பித்தநோய் ஆகியவை உண்டாகாது. மேலும் மலட்டு வியாதியும் போம். அதனை

தின்பதால் வாந்தியும், வாய்நீர்ச் சுரப்பும், விக்கலும், மந்தமும், அதிசுரமும், நெஞ்செரிவும், காதடைப்பும், நீங்காத மயக்கமும் ஒழியும். மேலும் வெடித்த மாதுளம் பழத்தைப் பிழிந்து மெல்லியசீலையில் வடிகட்டிப் போதுமான அளவு கற்கண்டு சேர்த்து உட்கொண்டால் உஷ்ணம் ஒழியும். சரீர முழுமையும் குளிர்ச்சி அடையும்.

*குறிப்பு:-* கை, கால், சரீரம் இவைகளில் எந்த நேரமும் ஒரு சிலருக்கு நீர்வடிந்த வண்ணம் இருக்கும். இவர்கள் மாதுளம்பழத்தைக் காலையில் 100 மில்லியும், மாலை 100 மில்லியும், 48 நாட்கள் உட்கொண்டால் பூரண குணமாகும்.

**கொமட்டி மாதுளம்பழத்தின் குணம்**

அருசி கெடும்பித்த மகலு மையந்தீரு
முரிசையுருங் கபமு மேகடுஞ் - சரசமுறக்
காதளவும் பாயும் விழிக் காரிகையே நற்கொமட்டி
மாதுளையின் பொறக்கனியை வாழ்த்து.

கொமட்டி மாதுளம்பழத்தினால் அரோசிகம், பித்தம், பித்த கபதோடம், காசநோய் ஆகியவை நீங்கும்.

**பேரீச்சம்பழத்தின் குணம் - இதுவே கற்கூரம்**

பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சை சுர
நீரார்ந்த வைய நெடுந்தாகம் - பேரா
விரத்தபித்த நீரிழிவு விளைப்பு மரோசி
யுரத்த மலக் கட்டுமறு மோர்.

பேரீச்சம்பழத்தால் நீரைச் சுரப்பிக்கின்ற பித்தநோய், மதநோய், மூர்ச்சை, சுரம், கபம், நீர்க்கோவை, தாகம், இரத்தபித்தம், நீரிழிவு, வாயில் இளைப்பு, அரோசகம், மலபந்தம் இவை நீங்கும்.

# செடியின் பழ வகைகள்

## சிற்றீச்சம்பழத்தின் குணம்

சிற்றீச் செனுங்கனிக்குச் சீத முழலை நோய்
உற்ற சிரங்குகளு முண்டாகுஞ் - சுற்றிச்
செறியும் பலபிணியுந் தேமொழியே நாளு
மறிவு மழுங்கு மறி.

சிற்றீச்சம் பழத்திற்கு சீதபேதி, பித்தநோய், கிரணம் முதலிய பற்பல நோய்களும், புத்திக்குறைவும் உண்டாகும்.

## பூந்தாழம்பழத்தின் குணம் - இதுவே அன்னாச்சிப்பழம்

மேகவெட்டை வாந்திபித்த மீறாவா மேனியிடுந்
தாகமு மட்டாகுந் தலைவலிப்போம் - பாகமுறு
பூந்தாழையின் பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
வாந் தாழ்வுமில்லை யறி.

பூந்தாழப்பழம் (அன்னாசி) பிரமேகவெள்ளை, வாந்தி, பித்தநோய், தாகம், தலைநோய் இவை போகும். உடலுக்கு அழகையுண்டாக்கும்.

## கத்திரிப்பழத்தின் குணம்

பித்தங் கரப்பான் பெருங்கிரந்தி குஷ்டமிவை
மெத்தவுபா மெய்யிலழல் வீறுங்காண் - சத்தான
தாதுநட்ட மாங்கபங்காற் சார்ந்த சுவாசமும்போ
மோது கத்திரிப்பழந்தா லுன்.

கத்திரிப்ழத்தினால் பித்தநோய், கரப்பான், பெருநோய், பெருகிரணம், சரீர வெப்பம், சுக்கில குறைவு ஆகியவைகள் உண்டாகும். கோழையையும், வாத தோடத்தையும், இரப்பையும் நீங்கும்.

### கண்டங்கத்திரிப் பழத்தின் குணம்

காசஞ் சுவாசங் கயஞ்சீதம் பல்லரணை
வீசுசொறி தினவை விட்டோட்டும் - பேசுடலை
யுத்தரிக்குந் தீபனத்தை யுண்டாக் கிடுங்கண்டங்
கத்திரிப் பழக்குணத்தைக் காண்.

கண்டங்கத்திரிப்பழம் இருமல், இரைப்பு, காசம், கபம், பல்லறணை, புடை, நமைச்சல் ஆகியவைகளை நீக்கும். பலத்தையும், பசியையும் தரும்.

### களாப்பழத்தின் குணம்

நல்ல பசியுலுண்ட னண்ணுமே சீதரத்தம்
வல்ல மந்தத்திலுண்டால் மாபசியா - மெல்லப்
புரையார்கள் நோய்போம் போற்றுகிர நீர்போந்
தரையார் களாப்பழத்தைத் தான்.

களாப்பழத்தை அதிகப் பசியில் உட்கொண்டால், சீதரத்தத்தையும், அதிமந்தத்தில் தின்றால் நற்பசியும் உண்டாகும். தொண்டை வலியும், தலைவலியும் நீங்கும்.

### காரைப்பழத்தின் குணம்

சீதக் கசப்புஞ் செறியிரத் தக்கடுப்பு
மோதுமதி சாரமும் போ முண்மையே - மோதுகட
னீரைப் பருகுமுகி னேரளக மின்கொடியே
காரைப் பழத்திற்கு காண்.

காரைப்பழத்தால் சீத இரத்தக் கடுப்பும், அதிசாரமும், இடைவிடா பேதியையும் குணப்படுத்தும்.

## மரக்காரைப்பழத்தின் குணம்

சுரமும் பொருமலும்போத் தொன்மயக்க மில்லு
தாவூதற் போமறிவுந் தங்கும் - பருகு
மரக்காரை மெல்லிதழ்வா யஞ்சுக்மே யாளு
மரக்காரை யின்கனியை வாழ்த்து.

மரக்காரைப் பழத்தால் வயிற்று உப்பிசம், சுரம், மூர்ச்சை, மகோதரம் ஆகியவைகள் நீங்கும். புத்திக்குத் தெளிவை உண்டாக்கும்.

## சூரைப்பழத்தின் குணம்

மந்த மதிகரிக்கும் வன்சீதளஞ் சேரு
முந்து குடல்வாயு முண்டாங்காண் - முந்துதலில்
காரைப் பழத்திற் கதித்தவொரு பேதமுமாஞ்
சூரைப் பழத்திற்குச் சொல்.

சூரைப்பழம், அதிமந்தமும், கபதோடமும், குடல்நோயும் உண்டாக்கும்.

## மிளகாய்ப்பழத்தின் குணம்

மூலவிரத்த முளைக்கடுப்பு முண்டாகும்
தாலமதிற் றாதுவுந் தழைக்குமே - ஆலமெனு
மந்த மரோசிகுன்மம் வாய்வு பொருமலும்போ
முந்து மிளகாய் பழந்தா லோர்.

மிளகாய்ப் பழத்தால் இரத்தமூல முளையும், ஆசனக் கடுப்பும், வீரிய விருத்தியும் உண்டாகும். அரோசிகம், வயிற்றுநோய், குன்மம், வாயு பொருமல், வயிற்று உப்பிசம் இவை நீங்கும்.

# கொடியின் பழ வகைகள்

## சிறிய கொடிமுந்திரிப்பழத்தின் குணம் - இதுவே திராட்சை

வெப்பருசி தாகம் விரணஞ் சுவாசகய
மெய்ப்புடைய பித்த மிரத்தபித்தஞ் - செப்பு
மடிமந்த மேக மதமும்போஞ் சின்னக்
கொடி முந்திரிகனிக்குக் கூறு.

சிறிய கொடிமுந்திரிப் பழத்திற்குச் சுரம், அரோசிகம், தாகம், பித்தநோய் ஆகியவைகள் போகும்.

## பெருங்கொடி முந்திரிப்பழத்தின் குணம்

சோமநோய் தாவறந்தாற் றோன்றுவிஷ முன்மாத
நாமமுறு மூத்திரநோய் நாடுமோ - சாமசுரம்
விண்ணொழி மெய்குளிரும் வீறுகொடி
முந்திரிக்குக்
கண்ணொளியுந் தாதுவுமாங் காண்.

பெருங்கொடி முந்திரிப்பழத்தால் சோமநோய், தாவர விஷம், உன்மந்தம், மூத்திரநோய் ஆகியவை நீங்கி, உடல் குளிர்ச்சி அடைந்து கண்களுக்குப் பார்வையை உண்டாக்கி விந்துவை அதிகப்படுத்தும்.

## தூதுளம் பழத்தின் குணம்

கபக்கட்டு கோழை கத்திரி தோஷங்
குபுக்கென் றெழும்பு நீர்க்கோவை - கபுக்கென்
றழுத்து விஷமும் போமடர்தூ துளத்திந்
பழுத்து விழும் பழத்தாற் பார்.

தூதுளம் பழத்தால் இறுகிய மார்புச்சளி, காசம், வாதாதி, முத்தோடங்கள், சர்ப்பவிடம் ஆகியவை நீங்கும். விந்துவைப் பலப்படுத்தும்.

### பாகற்பழத்தின் குணம்

சுரமேகங் காசஞ் சுவாசமொடு மூலந்
திரிதோஷங் குஷ்டமிவை தீருங் - கிருமியது
மோகப் புணரியெனு மொய்குழலே வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார்.

வெம்பிவிழாத பாகற்பழத்தினால் சுரம், பிரமேகம், இருமல், இரைப்பு, மூலம், முத்தோடம், குட்டம், மலக்கிருமி இவை நீங்கும்.

### சவரிப்பழத்தின் குணம்

தலைவலி குடைச்சல் சலம் பீநசங்கள்
குலைகுலைந்தே காட்டிற் குடிபோ - நிலையா
னவரிப் படிமாதென் றையுறா மாதே
சவரிப் பழத்தினாற் றான்.

சவரிப்பழத்தால் தலைநோயும், உடற்கடுப்பும், நீர் பீனிசமும் விலகும்.

## மரத்தின் வித்து வகைகள்

### மாங்கொட்டையின் குணம்

பேசுமோ சீதம் பெருக்குஞ் சோரிக்கடுப்பும்
வீசுமோ மூலமறி வெங்கொதிப்பு - மாசுடைய
பூங்கொட்டையத் தள்ளிப் போட்டுக் கனியில்வந்த
மாங்கொட்டையைக் காணில் வாது.

மாங்கொட்டையால் சீதபேதி, இரத்த அதிசாரம், உதிரக்கடுப்பு, மூலச்சூடு ஆகியவை குணமாகும்.

## பலாக்கொட்டையின் குணம்

அள்ளேறு நீள்குடரி னப்பான் மலக்கட்டுங்
சுள்ளேறு நெஞ்சர்நெஞ்சாங் கல்லகட்டி - னுள்ளே
சலாக்கொட்டை பிட்டசுகந் தானாங் கருக்கும்
பலாக் கொட்டை யிட்ட பலன்.

பலாக்கொட்டையால் அள்ளுமாந்தம், குடல் கபத்தால், மலச்சிக்கல், கள் குடிப்பவர்க்கு உண்டாவது போல் நெஞ்சில் ஏற்படும் புளி ஏப்பம், கல்போல் வயிறு கெட்டிப்படல், அதில் ஒட்டை சாணளவு, இருப்பு சலாகை சொருகினதுபோல் உபத்திரவம் உண்டாகும்.

## புளியங்கொட்டையின் குணம்

சுக்கில மேகநற் றுன்னுமதி சாரமொடு
மிக்கிரண நாக்கடுப்பு வெட்டையறுந் - தொக்கொடுவ
ருற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலு
நற்றரையுண் மாதே நவில்.

புளியங்கொட்டைக்கு சுக்கில மேகம், பித்த அதிசாரம், அதிசாரம், அசீரணம், மூத்திரக்கடுப்பு, வெள்ளை இவைகள் நீங்கும்.

## தேற்றாங்கொட்டையின் குணம்

பிரமிவெள்ளை வெப்புபரி பேரரா கடுப்போ
டெரிகிரிச் சரம்புண்ணு மின்றாம் - வருமந்தந்
தேற்றாங் கொட்டைகஃதோ தீட்ட மருந்தாகுங்
கூற்றங்கண் மாதேநீ கொள்.

தேற்றாங்கொட்டைக்குப் பிரமேகம், வெட்டை, உட்சூடு, வயிற்றுக்கடுப்பு, மூத்திர எரிச்சல், மூத்திரக்கடுப்பு, இரணம், நீங்கும், மந்தம் உண்டாகும். அது கண்ணுக்கும் மருந்தாகும்.

**எட்டிக்கொட்டையின் குணம்**

கைக்கறுப்பு சன்னி கடிவிஷங் குஷ்டவலி
மெய்க்கவருதாது நஷ்ட மென்பவைபோ -
மைக்கண்ணாய்
கட்டி கரப்பான் கனமயக்கு பித்தமுமி
லெட்டி மரக் கொட்டையி னாலே.

எட்டிக்கொட்டையால் கருமேகம், சன்னி, வாதக்கடி, குட்டம், வாதவலி, வீரிய நட்டம், கரப்பான், மூர்ச்சை, கண்நோய்க்கட்டி, பைத்தியம் இவைபோம்.

**புரசங்கொட்டையின் குணம்**

வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீத
நியத்தபடர் தாமரையு நீங்கும் - வயிற்று
வலியிரைச்சல் வன்கரப்பான் மாறும்பித் துண்டா
மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து.

புரசங்கொட்டையால் வயிற்றுக்கிருமி, பாதவலி, சீதம், படர்தாமரை நீங்கும். வயிற்றுவலி, வயிற்று இரைச்சல், கரப்பான் இவை மாறும்.

***குறிப்பு:-*** புரசரங்கொட்டையினால் மலத்திலுள்ள நுண் புழுக்களை வெளியாகும்.

**புன்னைக்கொட்டையின் குணம்**

கன்ன விரணங் கடுஞ்சன்னி வாதமுட
னின்னலுறு வாதை யேருங்காண் - புன்னைக்கொட்
டைக்கமட்டோ வென்னி லார்சூதக வாய்வு
மெய்க்கம மிட்டாம் வாய்வு மில்.

புன்னைக்கொட்டைக்கு செவிப்புண், சன்னி, தனுர்வாதம், சூதகவாய்வு, சீதளவாய்வு ஆகியவைகள் நீங்கும்.

## இலுப்பை, அழிஞ்சில் இவ்வித்துக்களின் குணம்

*இலுப்பைவிதை யந்தரவாய் விற்கும் விஷத்திற்கு*
*மனுப்பை யுண்டாக்கி யகற்று - நிலத்திற்*
*றொழுஞ்சுக மோகக் கரப்பில்சொல் லஞ்சனமா*
*மழிஞ்சில் விதையென் றறி.*

இலுப்பைக் கொட்டையானது அந்தர வாயுவையும் விஷத்தையும் போக்கும். அழிஞ்சில் விதை உலக வசியத்திற்கும் மறைப்பு மையுக்குமாகும்.

## புங்கு காட்டுப்புங்கு - இவ்வித்துக்களின் குணம்

*புன்கின்விதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி*
*யங்கசன்னி கண்ணோய்க்கு மாம்பேதி - யுங்கட்டுங்*
*காட்டுப்புங்கின் விதைக்கு கண்டதேமற்*
*சொறிமெய்ப்*
*பூட்டுப் பங்கின் வாயுவும் போம்.*

புங்கு, காட்டுப்புங்கு வித்துக்கு, (புங்கல்கொட்டை) புண், கழல் (கட்டி) கிரணம், கிரந்தி, கரப்பான், காது எழுச்சி, சன்னி, கண்நோய் இவைக்கு உதவும். மேலும், பேதியைக் கட்டும், இதன் விதைக்கு தேமல், படை, கீல்களைப்பற்றிய வாயுவும் போகும்.

## மருதோன்றி, வேம்பு - இவ்வித்துக்களின் குணம்

*மருதோன்றி யின்விதைக்கு மாபில்லி சூனியம்*
*விருந்தாண்ட பேய்பூதம் வீயுங் - கருதூன்றி*
*வேம்பின் விதைக்கு விஷஞ்சன்னி வாதமுதற்*
*றேம்பிவிழுந் தோடுமெனத் தேர்.*

மருதோன்றி வித்துக்குப் பில்லி, சூன்யம், நோய், பூதம் முதலியவை விட்டேகும். வேம்பம் பருப்புக்கு, தாவர சங்கம வாதமும், சன்னியும் நீங்கும்.

### கடப்பம்வித்தின் குணம்

கடப்பம் விதைக்குக் கடிவிஷமு முண்டோ
தொடுப்பு மண்டைநீருந் தொலையு - மிடக்கான
வாத வகையொழியு மாந்தங்க ளேகிவிடுங்
கீதமொழி மாதே கேள்.

கடப்பம் வித்துக்கு விஷக்கடி, தலைநோய், வாதநோய்கள், அக்கினி மந்தம், பேதங்கள் ஆகியவை நீங்கும்.

### மகிழம் வித்தின் குணம்

தாதுவைநன் மெய்யழகை சத்தியையுண்
டாக்கிவிடுஞ்
சீதளமென்பார் கலிக்கஞ் செய்மருந்தாம் - வாதை
மலத்தைவிழித் தோஷத்தை வல்விஷத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை.

கண் கலிக்கத்திற்கான மகிழம்வித்தானது வாதம், கண்நோய், சர்ப்பவிஷம் இவைகளை நீக்கும் சுக்கிலத்தைப் பலப்படுத்தி தேகவனப்பையும், சரீர அழகையும் கொடுக்கும். இது சீதள குணமுடையது.

### தில்லம்வித்தின் குணம்

தில்லம் விதைக்குச் சிறுவிஷம்போம் பின்விஷமுஞ்
செல்வஞ்செருக்குந் திமிர்வாய்வும் -
வெல்லங்கொள்
வாரை வருத்துகின்ற வனகபமுங் குஷ்டமுமிவ்
வூரை விடுத்தேகு முரை.

தில்லம் வித்தானது சர்ப்ப விஷம், திமிர்வாதம், இனிப்புச் சுவையில் பிறந்த கபநோய், குட்டம் முதலியவை நீங்கும்.

*குறிப்பு:-* இவ்வித்தை விஷங்களுக்காகத் தயாரிக்கும் மருந்துகளில் சேர்க்கப்படுகிறது.

**ஆளிவித்தின் குணம்**

*வீக்க மதிவாந்தி மேனிவலி வாய்வுந்*
*தூக்கு நரம்பின்குத்த றொருவழலை - யோக்காள*
*மீளி யருசிவிதை வாதமும் போகு*
*மாளிவிதை தன்னா லறி.*

ஆளிவித்தானது சோகை, வாந்தி, உடல் கடுப்பு, வாதவலி, நரம்புச்சூலை, அஸ்திச்சூடு, மூலாதாரச்சூடு, ஓக்காளம், அரோசகம், விரை வாயு ஆகியவைகளைப் போக்கும்.

*குறிப்பு:-* இவ்விதையை அரைத்து இறுகிய மார்புச்சளி நோயாளிகளுக்குப் பற்றிடுவதும் உண்டு.

**உத்திராட்சத்தின் குணம்**

*நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோஷத்தை*
*யாளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்கா - னாளு*
*மிருத்ரா மற்பகத்தை வீட்டுமே நல்ல*
*வுருத்திராக் கத்தின் வலி யுன்.*

உருத்தராட்சமானது அதிதாகம், திரிதோடம், விக்கல், முக்குற்றம், விக்கல் நோய், கபநோய், பித்தநோய் ஆகியவைகளைப் போக்கும்.

*குறிப்பு:-* உருத்திராட்சத்தினால் இருதய சம்பந்தமான நோய்களைக் குணப்படுத்துவதும். மேலும் தான்றிக்காய் இலைச்சாற்றில் இதனை இழைத்து வேளை ஒன்றுக்கு புளியங்கொட்டையளவு தாய்ப்பாலில் கொடுக்க வாணி ஒழுகுதல் குணமாகும்.

### முருங்கைவித்து, இலை, ஈர்க்குகளின் குணம்

நீரான விந்துவுமே நீண்டபிசினாய்த் தடிக்குஞ்
சீராகமேனி செழிக்குங்காண் - பாராய்
முருங்கையுறு விதையான் மெய்த்தவிலை யீர்க்கோ
வொருங்கையுறு நீரிறங்கு முன்.

முருங்கை வித்தினால் நீர்த்துப்போன விந்துவும் கெட்டியாகும். சரீரம் பலக்கும் இதன் இலையும் ஈளும் நீரைப்பெருக்கும்.

### மாதுளைவித்தின் குணம்

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோஷம் போக்கு
மக்கணமேகக் கடுப்பை யாற்றுங்கா - ணெக்காலிங்
கோதுளந் தெண்ணாதமலர்க் கொம்பனையாய் தித்திக்கு
மாதுளத்தின் பீசவலி.

இனிப்புள்ள மாதுளை வித்தானது சுக்கிலத்தை இறுக்குவதைத் தவிர அதில் உள்ள குற்றத்தையும், பிரமேகத்தையும் குணப்படுத்தும்.

### முந்திரிப்பருப்பின் குணம்

மெத்த வினிப்பாகு மென்கொடியே தின்றக்காற்
பித்த வனிலம் பிரக்குங்காண் - சத்தியமா
யிந்திரிப் புஷ்டி யிளைக்காது மாந்தமுண்டா
முந்திரியி னற்பருப்பான் முன்.

முந்திரிப்பருப்பினால் பித்தவாத தூந்தம், தாதுவிருத்தி, அக்கினி மாந்தம் ஆகியவை உண்டாகும்.

### வாதுமைப்பருப்பின் குணம் - இதுவே அடப்பம் விதை

அடப்பம் விதையாம் வாதுமைப் பருப்பினும்
மடற்பெரிய கட்படல மாறுஞ் சுடக்கெனவே

புண்மேற் கொழுப்பகலும் போகமு முண்டா
மென்றே
மண்மேற் றுணிபாய் வழுத்து.

வாதுமைப்பருப்பினால் விழிப்படலமும், விரணக் கொழுமையும் நீங்கும். சுக்கிலத்தை அதிகப்படுத்திக் கலவியில் விருப்பத்தையுண்டாக்கும்.

**சாரப்பருப்பு, மிசரிப்பருப்பு - இவைகளின் குணம்**

சாரப் பருப்பாற் றளிமிசரி யின்பருப்பா
நீரப் பருப்பு நீர்ச்சீதந் - தீரத்
தொலையு மிரதந்தந்தி துய்நதார்க்கு நன்றாங்
கலையும்விந்து விற்கூக்கங் காண்.

சாரப்பருப்பினால் சிறுநீரைப் பற்றிய நீர்க்கடுப்பு, நீர்ச்சுரப்பு, நீர் எரிச்சல், மேகம் ஆகியவை நீங்கி சுக்கிலம் இருகும்.

# செடியின் வித்து வகைகள்

**துத்திவித்தின் குணம்**

கையிற் காலிற் படர்ந்த காமேகம் போயொழிவு
மெய்யிலுறு குஷ்டம்போம் வெப்பகலுந் -
துய்யதிரை
யத்திதனை யொத்தவிழி யாரணங்கே நாட்டலுந்
துத்தி விதையைச் சுவை.

துத்திவிதை உட்கொண்டால் கைகால்களில் உண்டாகின்ற கருமேகம், குட்டம், உட்சூடு நீங்கும்.

## தகரைவித்தின் குணம்

வண்டு கடியுடனே வன்கடுவனும் பலவாம்
பண்டு நமை புடையும் பண்டிதர்கள் -
கண்டுரையாப்
பித்த சனலும் பெருத்த தகரைவிதைச்
சித்தரைய னில்லா திசை.

தகரைவித்துக்கு வண்டுகடி, அரைக்கடுவான் நீங்காத தினவு, புடை, அரையாப்பு, பித்தநோய் ஆகியவை குணமாகும்.

## நீர்முள்ளி வித்தின் குணம்

வித்துவுமாஞ் தாதுவுமா மேகரோகத் தொலையு
முந்து மதிசார மொழியுங் காண் - வந்துடலி
லேறிபய நீர்விக்க மிறங்கு மிளைப்பு மறுங்
கூறியநீர் முள்ளி விதைக்கு.

நீர்முள்ளி வித்திற்குப் பிரமேகம், அதிசாரம், கபசோகை, ஆயாசம் இவை நீங்கும். சுக்கிலமும் எழுவகைத் தாதுக்களும் விருத்தியாகும்.

## ஊமத்தம் வித்தின் குணம்

சுரம் போம் விஷம்போந் தொலையாத சன்னி
யுரம்போ மதிசார மோடு - நிரம்பவே
மாமத்த முண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே
யூமத்தை யின்விதையை யுன்.

ஊமத்தை விதையினால் சுரம், தாவரசங்கம விஷம், சன்னி, வாததோடம் ஆகியவை போம். வெறி உண்டாகும்.

**வெங்காயம், துளசி, கரிசாலை, முள்ளங்கி, உருத்திரச்சடை இவ்வித்துக்களின் குணம்**

வெங்காய வித்துக்குன்மம் வீட்டுள் துளசிவித்துக்
கெங்கெமயங் கரிப்பா னின்பழமாற் - றங்கவே
காமாலை முள்ளங்கிக் காழல்வித் தாஞ்சடைவுத்
தோமாலை யுள்ளடக்குஞ் சொல்.

வெங்காய விதை குன்மத்தையும், துளசிவிதை சீதத்தையும், கரிசாலவிதை, காமாலையையும், முள்ளங்கி விதை விந்து நட்டத்தையும், உருத்திரசடை விதை மனிதனைக் கொல்லக்கூடிய எமனாகிய கபத்தையும் போக்கும்.

## கொடியின் வித்து வகைகள்

**பூசினி வித்தின் குணம்**

பித்தம்போ மேகம்போ பேராவனலும் போம்
மெத்த வுடலங்குளிரு மேனியிடு - மித்தலத்து
ளாசினியொன் றில்லா வலர்ந்தவசனத் தனமே
பூசினி வித்தைத்தின்னும் போது.

பூசினி வித்தானது பைத்தியமும், பிரமேகமும், சரீர அழலையும் நீங்கும். சரீரத்திற்கு குளிர்ச்சியும், வலிமையும் உண்டாகும்.

**வெள்ளறிவித்தின் குணம்**

கடுப்பொடுநீர்க் கட்டுவெறுங் கல்லடைப்பு தரை
வெடிப்பு சதையடைப்பு மேக - மெடுத்துரைக்கா
வுள்ளரிவி யென்னு முறைகிரிச் சுரம் மிவைகள்
வெள்ளரி விதைக்கேகும் விள்.

வெள்ளறி வித்திற்குக் கடுப்புடன் கூடிய நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்த்துவார வெடிப்பு, சதையடைப்பு, பிரமேகம், கிரிச்சரம் இவை போம்.

## கழற்காய் பேய்ப்பீர்க்கு இவ்வித்துவின் குணம்

கழற்காய் விதைக்கு கனவண்ட வாதந்
தழற்பக்கச் சூலைகுன்மஞ் சாந்தி - கழற்காலிற்
காய்ப்பாக்குந் துஷ்டக் கடிவிஷமெலாம் போக்கும்
பேய்ப்பீர்க்கின் றன்விதையைப் பேசு.

கழற்காய் விதைக்கு அண்டவாதமும், சூட்டினால் பிறந்த பக்கசூலையும், வயிற்று வலியும் நீங்கும்.

பேய்ப்பீர்க்கு வித்திற்குக் காலில் தழும்பு, எலும்படி கடித்ததுற் - விஷங்களையெல்லாம் போக்கும்.

## பூனைக்காலி வித்தின் குணம்

தழுதளை நாற்றத்தோடு சாரிரத்தப் போக்கும்
பழுதுபரி கின்றகரப் பானு - மழுதேகுந்
தாலமிசை விந்துமாஞ் சாற்றும் கரும்பூனைக்
காலி விதையினாற் காண்.

கருத்த நிறமுடைய பூனைக்காலி வித்தானது, கற்றாழை நாற்றத்தை ஒத்த கிராணியும், கரப்பானும் போம். தாது புஷ்டி உண்டாகும்.

## உகாவித்தின் குணம்

வாதமுதன் முப்பிணியால் வந்தபிணியை யெல்லாங்
கோதிற் சமப்படுத்துங் கூறவொண்ணாச் - சீத
மகாவசை மண்டபத்தில் வாழ்ந்திருக்கு மாதே
யுகா விதையை நன்றா யுரை.

உகாவித்தானது திரிதோட நோய்களினால் உண்டாகக் கூடியவைகளைச் சாந்தமாக்கும்.

### குன்றிவித்தின் குணம் - இதுவே குன்றிமணி

நேத்திரநோய் பித்த நிறமழுமாங் காமாலை
வேர்த்திடு தாபச்சோப வெப்புடனே - கோத்திட்ட
வையமும்போம் விந்துவா மாயிழையே
காட்டிலுறை
செய்ய குன்றி யின்விதையைச் சேர்.

சிவந்த குன்றிமணி பருப்பினால் கண்நோய், பித்தநோய், மாறுபட்ட நிறங்கள், மஞ்சட்காமாலை நோய், வியர்வையோடு வெப்பத்தைத் தருகின்ற மூர்ச்சை, சுரம், கபநோய் இவையாவும் நீக்கி, சுக்கில தாதுவை விருத்தியடையச் செய்யும்.

### நெருஞ்சில் வித்தின் குணம்

சொல்லவொண்ணா நீர்க்கட்டு துன்பமாமிச மருகல்
கல்லடைப் பெனும்பிணிகள் கண்டாக்கால் - வல்லக்
கருஞ்சினவேற் கன்மதே காசினியிற் றோன்று
நெருஞ்சினறும் வித்தே நினை.

நெருஞ்சி வித்திற்கு மூத்திரக்கட்டு, சதையடைப்பு, மூத்திர எரிச்சல், துர்மாமிச அடைப்பு, கல் அடைப்பு ஆகியவை நீங்கும்.

### தாமரை வித்தின் குணம்

மந்தத்துவ மகற்றும் வல்லருசி நீக்கிவிடு
மந்தத் துறாது விற்கடலே - தந்திடும்பின்
னுன்னி லின்னுந்தோட குண மியாவு மோட்டுஞ் சலந்
தன்னி லண்ணிக்கினுவஞ் சம்.

தாமரை வித்தானது அன்னதோஷம், அரோசிகம் ஆகியவைகளைப் போக்கும். விந்துவை அதிகரிக்கச் செய்யும்.

### வெள்ளை அல்லி, செவ்வல்லி இவ்விதைகளின் குணம்

*மிதுனவல்லி வித்துக்க ளால்விந்துண் டென்றாலு*
*மதனமரைக்குச் செம்மைக் காரக்க - மதனமிந்தப்*
பேதமின்றி யீரற் பீலிங்களுக்கு வன்மை
யேதமின்றிச் செய்யு மிரண்டும்.

இருவித அல்லி விதைகளினாலும் சுக்கிலவிருத்தி உண்டென்று கூறப்பட்டாலும் வெள்ளை நிற அல்லிக்கு சுக்கிலமதிகமும், செவ்வல்லிக்கு சுரோணிதம் அதிகமும் உண்டாகும். இவையிரண்டும் ஈரல் வலியைப் போக்கும்.

### வித்துக்களின் பொதுக்குணம்

*மின்கனலி மிக்குநளிர் வித்துகள் விதைப்புரக்கத்*
*தக்கனவந் றஞ்சமர சந்தகவா - மக்குறிகா*
*யாகாய மின்றிபடர்ந் துறைவித் தங்கிநெடு*
*மாகாய மென்றார்வித் தாம்.*

அதிக உஷ்ணமும் சீதளமும் உள்ள இருவகை விதைகளும், விந்துவை அதிகரிக்கச் செய்யும். ஏனெனில் காய்களுக்குள் இடைவெளி இன்றி நெருங்கி இருக்கின்ற விதைகளெல்லாம், உஷ்ணமும், இடைவெளிப் பற்று நெருக்கம் இருக்கின்ற விதைகள் அதிசீதளத்தை உண்டாக்கும். சமான இடைவெளியுள்ள வித்துகளும் உள்ளன.

### நெற்களின் பொது வகைகள்

செந்நெல் வகைக்குஞ் சிறுதானிய வகைக்கு
மிந்நிலத்தி லுண்டோ விலக்கென்ப - துன்னுங்காற்
கண்ட மட்டிலே பெயராங் கண்டவரவரவர்க
ளுண்ட மட்டிகல் சுவையா மோர்.

இவ்வுலகில் விளைகின்ற நன்செய், புன்செய் தானியங்களின் பெயரையும் சுவையையும், அளவிடு தற்கரிதேயாயினும் அவற்றைப் பார்த்து புசித்த வரையில் அவை உண்டு என்று அறியவேண்டும்.

**கார் அரிசியின் குணம்**

காரரிசி மந்தங் கனப்புடகிற் றூலிப்பும்
பாரறிய வாயுவையும் பண்ணுங்கா - ணேரே
கரப்பா னென்பார் பொருந்திற் காயமுறுமெத்த
வரப்பாகு மென்றே யுரை.

கார் அரிசி மந்த குணமுள்ளது. இது சரீர புஷ்டியையும், தனிவாத விளைவையும், பலத்தையும் தரும். ஆனால் இதை கரப்பான் பண்டம் என்றும் கூறுவர்.

**மணக்கத்தை வாலான் கருங்குறவை என்னும் இவ்வரிசிகளின் குணம்**

மணக்கத்தை வாலான், கருங்குறவை மூன்றும்
பிணக்குஷ்டைச் சில்வித்தைப் போக்கு - முணக்குமுற
வாக்கியுண்டாற் கரப்பா ஒருமென் பார்க்கள்சிலர்
பார்க்குளிதை யாராய்ந்து பார்.

மணக்கத்தை, வாலான், கருங்குருவை என்னும் மூன்றுவகை அரிசிகளும், இரணகுஷ்டத்தையும், சில்விஷக்கடிகளையும் போக்கும். இவ்வகை அன்னங்களால் சில வைத்தியர்கள் கரப்பான் உண்டு என்று கூறுகின்றனர்.

**ஈர்கருச்சம்பா அரிசியின் குணம்**

ஈர்க்குச் சம்பாவென் றியம்பு மரிசியது
நாக்குக் கதியுரிசை நல்குங்காண் - பார்க்குமிடத்
தெல்லார்க் குங்காத வியற்றுமற்ப பித்தமுமாம்
வில்லாரும் பூசைகட்காம் விள்.

ஈர்க்குச் சம்பா அரிசி நாவிற்கு ருசியையும், பார்ப்பதற்கு இச்சையையும் தரும். இதில் கொஞ்சம் பித்தமும் உண்டு.

### புழுகுசம்பா அரிசியின் குணம்

புழுகு சம்பாவரிசி பூதலத்தி லுண்பார்க்
கழகு மொளியுஞ் சேர்வதன்றி - யழலாம்
பசிதாகந் தீரும் பலமு மிகவுண்டா
முசிவே துடர்சுகமா முன்.

புழுகுச் சம்பா அரிசியை உண்பவர்க்கு சரீரவனப்பும், காந்தியும், அதிகப்படியான பசியும், பலமும் உண்டாகும். அதிதாகத்தைப் போக்கும்.

### கைவரைச்சம்பா அரிசியின் குணம்

கைவரச் சம்பாவரிசி கண்டா வவரவர்க
மெய்வரைபோ லென்று மிகுபலமா - மைய
மடையா தென்பார்க ளடர்சுக் கிலமு
முடையா ததிசுகமா முன்.

கைவரைச் சம்பா அரிசியில் உடலுக்கு மலையைப் போன்ற வன்மையையும், சுக்கில தம்பணத்தையும், பலத்தையும் உண்டாக்கும்.

### செஞ்சம்பா அரிசியின் குணம்

செஞ்சம்பாத் தண்டுலத்தாற் றீராச் சிறுசிரங்கும்
விஞ்சுபுண்ணும் வன்சொறியு மேருங்காண் - துஞ்சா
ததிக பசியாகு மணங்கரசே யிந்தப்
பதியதனி னீயுண்டு பார்.

செஞ்சம்பா அரிசியால் கிரந்தி நோயும், அதி இரணமும், பாளைச்சொரியும், மிகு பசியும் உண்டாகும்.

## குண்டுசம்பா அரிசியின் குணம்

குண்டுச் சம்பாவரிசி கொண்டுண்ணும் பேர்களுக்குப்
பண்டையில்ல மந்தநோய் பார்க்கு - மண்டுபடாத்
தாகமெல்லா மொழியுந் தையலே வன்கரப்பான்
றேகமெல்லாம் பரவுஞ் செப்பு.

குண்டுச் சம்பா அரிசிக்கு அக்கினி மந்தமும், பலம் மிகுந்த கரப்பான் உண்டாகும். தாகநோய் தீரும்.

## கல்லுண்டைச்சம்பா அரிசியின் குணம்

கல்லுண்டைச் சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்ட பேரெதிர்க்க வாய்க்குமோ - வில்லுண்டை
போலுரையா நல்ல புசபலமா மின்சுவையாம்
பாலனைய மென்மொழியே பார்.

கல்லுண்டச்சம்பா அரிசியை உண்பவர்க்கு மல்யுத்தகாரரும் எதிர்க்கக்கூடாது. புஜபலமும், மிகு வார்த்தையும் உண்டாம்.

## மல்லிகைச்சம்பா அரிசியின் குணம்

மல்லிகைச் சம்பாவரிசி வாய்க்குரிசை யாயிருக்கு
நல்லது மேய்க்கு நலஞ்செய்யும் - சொல்லாக்
கரப்பானை மேகத்தைக் கண்ணழலை நீக்கு
முரப்பாம் பலங்கொடுக்கு முன்.

மல்லிகைச் சம்பா அரிசி உடலுக்குச் சௌக்கியத்தையும், உறுதியையும் தரும். கரப்பான், பிரமேகம், நேத்திரச்சூடு ஆகியவைகளைப் போக்கும்.

## இலுப்பைப்பூச்சம்பா அரிசியின் குணம்

பித்தமிகப் பெருக்கும் பேருலகி லியாவர்க்கு
முற்றதலை வலிநோ யுண்டாக்குஞ் - சத்தியமாய்த்
தாக மெடுப்பிற்குந் தழலிலுப்பைப் பூச்சம்பா
வாகமதி னோய் வளர்க்கு மாய்.

இலுப்பைச்சம்பா அரிசி பித்த ஆதிக்கத்தால் விளையக் கூடிய தலைவலி நோய், தாகம், உஷ்ணம் இவைகளை உண்டாக்கும்.

## மணிச்சம்பா அரிசியின் குணம்

நல்லமணிச் சம்ப நாடுகின்ற நீரிழிவைக்
கொல்லு மிகுந்தசுகங் கொண்டளிக்கு - மெல்லப்
பசியளிக்கு மூத்தோரைப் பாலர்களை நாளு
முசியாமலே வளர்க்கு முன்.

மணிச்சம்பா அரிசி அதிமூத்திரத்தை விலக்கும். அதிசுகத்தால் உடலையும், வயோதியர்களையும், வாலிபர்களையும் வளர்க்கும் தன்மையுடையது.

## வளைதடிச்சம்பா அரிசியின் குணம்

வளைதடிச் சம்பாவிற்கு வாதபித்த முண்டா
முளையுமடி பொருமி யுப்புங் - கொளகொளெனத்
தானோ கரப்பானுந் தாங்கொணா மந்தமுமாந்
தேனே யிதனைத் தெளி.

வளைத்தடிச் சம்பா அரிசிக்கு வாதபித்த கப தொந்தம், வயிறு உளைதலுடன் உப்பிசம், கரப்பான், மிகுமந்தம் இவைகளை உண்டாக்கும்.

## கோரைச்சம்பா அரிசியின் குணம்

கோரைச் சம்பாநற் குளிர்ச்சியென்பார் பித்தத்தைப்
பேரா வழலைப் பிரித்தோட்டுந் - தீராத

மேகமொடு தினவை வீட்டுஞ் சுகங்கொடுக்கு
மேகமுறை குழலாய் விள்.

கோரைச்சம்பா அரிசி, பைத்தியம், உட்சூடு, பிரமேகம், நமைச்சல் இவைகளைக் குணப்படுத்தி, சரீரத்திற்குக் குளிர்ச்சியைத் தரும்.

**குறுஞ்சம்பா அரிசியின் குணம்**

குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்
வெறுங்கரப்பா னுண்டாக்கு மெய்யி - னொறுங்கச்செய்
வாதமருள் வரயுவினை மாற்றும்போகங் கொடுக்குஞ்
சீதவனசத் திருவே செப்பு.

குறுஞ்சம்பா அரிசி பித்தம், கரப்பான், சுக்கில தாது இவைகளை விருத்தியடையச் செய்யும். சரீரத்தில் குத்துகின்ற வாதநோயைப் போக்கும்.

**மிளகுச்சம்பா அரிசியின் குணம்**

மிளகுச் சம்பாவரிசி மென்சுகத்தைச் செய்யு
மளவில் பலநோயை யகற்றுங் - களகளெனத்
தீபனத்தைத் தூண்டிவிடுந் தீராவலி தொளைக்குஞ்
சோபனத்தைச் செய்நகையாய் சொல்.

மிளகுச் சம்பா அரிசி சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து தீபாக்கினியை வளர்க்கும். மகாவாதம் முதலிய பலவித நோய்களைப் போக்கும்.

**சீரகச்சம்பா அரிசியின் குணம்**

சீரகச் சம்பாவரிசி தின்னச் சுவைதரும்
பேரகத்து வாதமெல்லாம் பேருங்காண் - பாருலகி
லுண்ட வுடனே பசியு முண்டாகும் பொய்யலவே
வண்டருறை பூங்குழலே வாழ்த்து.

மதுரமுள்ள சீரகச்சம்பா அரிசியை உட்கொண்டவன், மீளவும் உண்பதற்கான தீபனசக்தியை உண்டாக்கும். வாத நோய்களைப் போக்கும்.

**காளான் சம்பா அரிசியின் குணம்**

காளான் சம்பாவரிசி கல்லையொத்த மாபலத்தைக்
கேளாமலே கொடுக்குங் கேளின்னும் - நீளு
மானிலத்தைப் போக்கிவிடு மாரோக்கி யத்தை
நானிலத்திற் செய்துவிடு நாடு.

காளான் சம்பா அரிசி சரீரத்திற்கு மலைபோன்ற உறுதியையும், சுகத்தையும் தரும். வாதநோய்களைப் போக்கும்.

**மைசம்பா அரிசியின் குணம்**

மைச்சம்பாத் தண்டுலத்தால் வாயருசி போயொழியும்
வெச்சென்ற வாதபித்த மெய்யைவிடு - நச்சுந்
தனிவாயு விஞ்சுரக்குஞ் சாத்தியும்போ மின்பக்
கனிமொழியே நன்றாகக் காண்.

மைச்சம்பா அரிசியானது அரோசிகம், வாதபித்த தொந்தம், வாதநோய், வாந்தி நோய் ஆகியவற்றைப் போக்கும்.

**கோடைச்சம்பா அரிசியின் குணம்**

கோடைச் சம்பாவரிசி கொண்டாற் றிரிதோஷ
வாடைக் கதிக வலியுமுண்டோ - நீடு
முறுப்பினுள்ள நோயெல்லா மோதாம லேகுங்
கறுப்பிலுயர் வார்குழலே காண்.

கோடைச்சம்பா அரிசியை உட்கொண்டால், வாதபித்த கபக் குற்றத்தால் பிறந்த வாத வலியும், சரீரத்திற் உள்ள சிற்சில நோய்களும் விலகும்.

### காடைச்சம்பா அரிசியின் குணம்

காடைச் சம்பாவரிசி கண்டுதரி சித்தவர்க்கு
நீடுற்ற வேகவன னிற்குமோ - சடைப்
பறவைபோ னோயும் பறக்கும் பலத்தி
னுறவை யெவர் சொல்வா குறை.

காடைச்சம்பா அரிசிக்கு பிரமேகச் சுரம், சிற்சில நோய்களும் விலகும். சுக்கிலதாது விருத்தியும், பலமும் உண்டாகும்.

### குன்றிமணிச்சம்பா அரிசியின் குணம்

குன்றிமணி சம்பா கொண்டா லனிலமறும்
வென்றி தருபல மிருக்குங்காண் - துன்றியநோ
யெல்லாம் பறக்குமுறை யிந்திரிய புஷ்டியுண்டாம்
நல்லா ரறிய நவில்.

குன்றிமணிச்சம்பா அரிசியை உட்கொண்டால் வாதநோய், சில நோய்கள் குணமாகும். சரீர பலமும், சுக்கில தாதுவும் விருத்தியாகும்.

### அன்னமழகி அரிசியின் குணம்

அன்ன மழகியரி யாரோக்கியங் கொடுக்குந்
தின்னவெகு ருசியாஞ் செப்பக்கே - ளிந்நிலத்து
நோயனைத்துந் தூளாய் நொறுங்கத் தகர்ந்துவிடுந்
தீயனலைப் போக்குந் தெளி.

அன்னமழகி அரிசியானது சகல சுரங்களையும், பித்த வெப்பத்தையும் போக்கி, சரீரத்திற்குச் சுகத்தைக் கொடுக்கும்.

### பச்சை அரிசியின் குணம்

சுத்த வனிலமந்தத் தோன்றுமெரி பித்தம்போம்
பத்தியத்தி லெண்ணார்கள் பண்டிதர்கண் - மெத்தவுமே

வைச்ச சுமைதாங்க வலியுண்டாந் தேகத்திற்
பச்சரிசியைப் புசித்துப் பார்.

பத்தியத்திற்கு விலக்கான பச்சரிசியினால் தனி வாதமும், எரிச்சலையுண்டாக்கக் கூடிய பித்தமும், மிகுந்த பலமும் உண்டாகும்.

### புழுங்கல் அரிசியின் குணம்

புழுங்க லரிசியது புத்திரர்க்கு மாகு
மழுங்குகின்ற வாயுவிற்கு மாகு -மொழுங்காய்
நிலைத்த பத்தியத்திற்கு நீட்டலா மெய்க்குப்
பலத்தைக் கொடாததனைப் பார்.

புழுங்கல் அரிசி குழந்தைகள், வருந்துகின்ற வாத நோயினர், அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்கு ஆகும். ஆனால் உடலுக்கு உறுதி இல்லை.

### பழமை அரிசியின் குணம்

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கு மாகு
மழன் மிகவுமாகு மருந்தி - விழலைப்போ
லாகு முடற்குளிர்ச்சி யையமறு நோயுற்றோர்க்
காகும் பன்னோய்போ மறி.

பழமை அரிசி விருத்தர், பாலர், நோயாளிகளுக்காகும். இவ்வண்ணத்தை உட்கொள்வோர்க்கு, குளிர்ச்சியும், பசியும், சிற்சில நோய்களும், கபமும் நீங்கும்.

### சவ்வரிசியின் குணம்

மேகமத்தி மேகஞ் சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றாதுவுஞ் சிலேத்மமுண் - டாகுமெழிற்
செவ்வரிசி படர்ந்தவுழித் தேமொழி மாதே வுலகிற்
சவ்வரிசியின் குணத்தைச் சாற்று.

சவ்வரிசியினால் பிரமேகம், சீழ்மேகம், இரத்தமேகம், வெண்மேகம் ஆகியவைகள் போய் சுக்கிலமும், கபமும் உண்டாகும்.

### மூங்கில் அரிசியின் குணம்

உதிரபித்தந் தீர்க்கு மோங்கு சுரத்திற்கு
மதிரவரு கண்ணோ யதற்கும் - புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கி லரிசி.

பாயாசம், பலகாரம் முதலியவை செய்வதற்கான மூங்கிலரிசி இரத்த பித்த நோய், கொடுமையான சுரம், கண்நோய் ஆகியவைகளைக் குணப்படுத்தும். மேலும் கஞ்சியாகச் செய்து உபயோகப்படுத்துவதற்கும், சிற்றுண்டிகள் செய்வதற்கும் உயர்ந்த அரிசியாகும்.

### திப்பிலி அரிசியின் குணம்

திப்பிலியின் றண்டடுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிரத்தை மேகத்தை யோட்டுங்காண் - தப்பாமல்
வாதசுரந் தனிக்கு மாகபரோகந் தொலைக்குந்
தாதுவை வளர்ப்பிக்குந் தான்.

திப்பிலி அரிசி, கபம், வயிற்று உப்பிசம், மேகம், வாதசுரம், விஷநோய் ஆகியவைகளைப் போக்கும். விந்துவை அதிகரிக்கச் செய்யும்.

### கோதுமை அரிசியின் குணம்

கோதுமையி னற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச் - சேதிக்கும்
பித்த மளிக்கும் பிரமேகத்தைக் கெடுக்கு
முத்தமமா மென்றே யுரை.

கோதுமை அரிசி உடலுக்கு நல்ல பலத்தையும், சுக்கிலத்தையும், பித்தத்தையும், அதிகப்படுத்தும். வாய்வு நோய்களையும், பிரமேகத்தையும் போக்கும்.

### கேழ்வரகின் குணம்

சுத்த வனிலந்தன்னைத் தோற்றுவிக்கு மல்லவெனிற்
பித்த மனிலத்தைப் பிறப்பிக்குஞ் - சித்ரமலத்

*தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற*
*கேழ்வரகின் செய்தியிது கேள்.*

பஞ்சன்தாங்கி என்கின்ற கேழ்வரகு வாதநோயை வருவிக்கும். பித்தவாதத்தையும் உண் டாக்கும்.

***குறிப்பு:-*** நீரிழிவு நோய்களுக்குக் கேழ்வரகு உயர்ந்த உணவாகும்.

**கம்பு அரிசியின் குணம்**

*கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவார்காண்*
*பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும் - வெம்பு*
*முடலின் கொதிப்பகற்று முட்பலமு முண்டாக்கு*
*மடலாயிற்கண் மாதே யறி.*

கம்பு அரிசி நெருங்கிய நமைச்சலையும், சிரங்குகளையும், வீரியத்தையும் உண்டாக்கும். சரீர வெப்பத்தை அகற்றிக் குளிர்ச்சியடையச் செய்யும்,

**சாமை அரிசியின் குணம்**

*உடலிறு தாக சுரமொடு மேகம்போ*
*மடலுறு கால்வீக்கம் மகலுங் - கடலிலிறை*
*யாமை யனையபதத் தன்னமே மேனியிடுஞ்*
*சாமை யரிசிக்குத் தான்.*

சாமை அரிசிக்குத் தாகசுரம், மேகம், வாதநோய், சோபநோய் ஆகியவை போம். சரீர வன்மை பெறும்.

**தினை அரிசியின் குணம்**

*சன்னி சுரமையந் தனிவாத மும்போகுந்*
*துன்னுபித் தத்தைமிகத் தூண்டிவிடுந் - தின்னப்*
*பினையும் பசியாம் பெருவீக்க நீங்குந்*
*தினையரிசி யின்குணத்தை தேர்.*

தினை அரிசி சன்னி பாத சுரம், கபநோய்,வாதநோய், சோபைநோய் ஆகியவைகளைப் போக்கும். பித்தத்தையும் பசியையும் உண்டாக்கும்.

### செஞ்சோள அரிசியின் குணம்

செஞ்சோளந் தின்னாற் சிறுசிரங்கு புண்ணுகளும்
விஞ்சு மொழிலான மேனிகெடு - நெஞ்செரித்து
மத்தமிகுந் தீபனம்போ மாறாக் கரப்பானுங்
கந்தமலர்ப் பூங்குழலே காண்.

சிவப்பு நிறமுள்ள செஞ்சோள அரிசியால் கிரந்திநோய், இரணங்கள், மந்தநோய், கரப்பான் ஆகியவைகளை அதிகரிக்கச் செய்யும். மேலும் அழகையும் பசியையும் விலக்கும்.

### கருஞ்சோள அரிசியின் குணம்

சொறியைச் சிரங்கைத் தொலையாத புன்னை
மறுவிலா மெய்யில் வளர்க்குங் - குறியா
வழகை கெடுக்கு மசதியை யுண்டாக்கும்
பழகு கருஞ்சோளமது பார்.

கருஞ்சோள அரிசியால் நமச்சல் கிரந்தி, இரணம், அயர்வு இவைகளையுண்டாக்கும். மாறு நிறமான அழகைத் தரும்.

## காய்த் தானிய வகைகள்

### துவரையின் குணம்

பஞ்சமுட்டிக் காகுமரும் பத்தியவி யஞ்சனமாம்
விஞ்சுசுரஞ் சன்னிகட்கு மெத்தநன்றாம் - பஞ்சின்
விழுந்துவரையாது மெலிந்தாரைத் தேற்றுங்
கொழுந்துவரை யாயினி கொள்.

நல்ல துவரை இலங்கண முடிவில் சேர்கிற பத்தியங்களுக்கும், உப்பில்லாப் பத்தியத்திற்கும், சுரத்திற்கும், சன்னிக்கும், தலையணையாகக் கிடந்து மெலிந்தவர்கட்கும் உதவும்.

### உளுந்தின் குணம் இதனை - உளுந்து என்பர்

செய்ய வுழுந்திற்குச் சிலேத்மவனிலம் பிறக்கும்
வெய்ய பித்தம்போமந்தம் வீறுங்காண் - மெய்யதனி
லென்புருக்கி தீரு மிடுக் கதிபலமா
முன்பு விருத்தியுண்டா முன்.

நல்ல உளுந்திற்குக் கபவாதம் பிறக்கும். ஆனால் இடுப்புக்கு உறுதியையும், அதிகப்படியான வீரிய விருத்தியையும், பைத்திய நோயையும், எலும்பு உருக்கி நோயையும் போக்கும்.

### கடலையின் குணம்

கடலை வயிறுதற் கன்றா றகஞ்செய்யுங்
குடலைவலிப் பித்து மலங்கொட்டுந் -
திடமருந்தைச்
சேதமுறப் பண்ணுந் தியக்கமொடு வாயுவையும்
போத வழைக்கும் புகல்.

கடலை வயிற்று உப்பிசம், பித்ததாகம், குடல் நோயுடன் கூடிய கிராணி, மயக்கம், மூலவாய்வு இவைகளையுண்டாக்கும். நல்ல மருந்துகளின் குணங்களைக் கெடுக்கும்.

### மொச்சைக்கொட்டையின் குணம்

அனிலபித்த வைய மனைத்தையு முண்டாக்குந்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டுந் - தனிவேள்
குனிக்குஞ் சிலைப்புருவ கோதையே நாளு
மினிக்கு மொச்சைக் கொட்டையே.

இனிப்புள்ள மொச்சைக்கொட்டையானது முக்குற்றங் களையும், இரைச்சலையும் தருவதுடன், வாயுவை அதிகரிக்கச்செய்யும்.

### பெரும்பயற்றின் குணம் - இதுவே பெருங்காராமணி

பெரும்பயற்றை மேன்மேலும் பேணியுண்ணு
வார்க்குப்
பெருஞ்சட ராக்கினிபோம் பின்னும் - வருமந்தம்
பேதி யதிகரிக்கும் பேராக் கபங்கதிக்கும்
வாதகுடி லம்பெருகும் வாழ்த்து.

பெரும்பயற்றை அதிகமாகத் தின்பவர்க்குப் பசி தீபாக்கினி கெடுவதுமன்றி, அசீரணம், அதிசாரம், கபநோய், வாதப்பிடிப்பு ஆகியநோய்கள் உண்டாக்கும்.

### சிறுபயற்றின் குணம்

ஐயைப் பித்தத்தை யாரோசகத்தைப் போக்கிவிடும்
வெய்ய வாதத்தை விளைவிக்கு - மைய
மறுவொழிந்த தூய வதிவதன மாதே
சிறுபயறு செய்யிஞ் செயல்.

களங்கமற்ற சிறுபயற்றினை உண்டால் கபநோயையும், பைத்தியத்தையும், அரோசகத்தையும், போக்கும். ஆனால் பித்த வாதத்தையுண்டாக்கும்.

### பச்சைப்பயற்றின் குணம்

பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை
யச்சமற நாளு மகற்றுங்காண் - கச்சுலவு
கொங்கைமட மாதே குளிர்ச்சியென்பா ரெப்போதுந்
தங்கு வாதத்தைத் தரும்.

பச்சைப்பயறு பித்தத்தை நீக்கும். வாயுவைக் கொடுக்கும். குளிர்ச்சியைத் தரக்கூடியது.

### தட்டைப்பயறு, வெண்பயறு கரும்பயறுகளின் குணம்

தட்டைப் பயறுமந்தஞ் சன்னிதரும் வெண்பயறு
முட்டியே மெய்யின் முதிர்வாதந் - தட்டருக்குங்
காணாய் கரும்பயறு கம்முநீர் வாதமுடன்
கோணு வாதத்தையும் போக்கும்.

தட்டைப்பயறு அக்கினி மந்தத்தையும், சன்னி பாதத்தையுண்டாக்கும். வெள்ளைப்பயறு ஓடு வாதத்தை போக்கும். கரும்பயறு கபவாதத்தையும், பக்கவாத நோயையும் குணப்படுத்தும்.

### கொள்ளின் குணம்

குடல்வாதங் குன்மமுண்டாங் கொண்மருந்தே நாச
மடலேறு பித்தமிக வாகுங் - கடுகடுத்த
வாதநீ ரேற்றமொடு மன்னுகுளிர் காய்ச்சலும்போஞ்
சாதிநறுங் கொள்ளுக்குத் தான்.

நரிக்கொள்ளுக்குக் குடல்வாதம், குன்மம், பைத்தியம் உண்டாகும். வாதவலி, நீர் ஏற்றம் குளிர் சுரம் ஆகியவை போம்.

### எள்ளின் குணம்

எள்ளு மருந் தைக்கெடுக்கு மேறனலாந் திண்மைதரு
முள்ளிலையைச் சேர்க்கு முதிரத்தைத் தள்ளு மிரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காசமுண்டாம் -
பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார்.

எள்ளினால் உஷ்ணம், கபம், காசநோய் இவைகளை வருவிக்கும். குரல் தொனியைக் கெடுக்கும். பெண்களுக்கு வயிற்றில் கட்டுப்பட்ட உதிரத்தை வெளிப்படுத்தும். கண்களுக்கு ஒளியைக்கொடுக்கும்.

# இறைச்சி வகைகள்

## வெள்ளாட்டு இறைச்சியின் குணம்

வெள்ளாட்டு நோயெல்லா மோடுமுடல் பருக்குந்
தள்ளாடு வாதபித்தஞ் சாந்தமா - வெள்ளாட்டி
னற்கரியை யுண்பார்க்கு நாடுகய ரோகமும்போ
மற்குரிய வன்பலனும் வாழ்த்து.

வெள்ளாட்டிறைச்சியை உண்பவர்க்கு உட்சுரங்களும், வாத பைத்தியமும், காசநோயும் போகும். சரீர புஷ்டியும், வீரிய விருத்தியும் உண்டாகும்.

## கொடியாட்டு இறைச்சியின் குணம்

கொடியாடு நற்கறியாய் கொள்ளும் வகைகேளாய்
தடியாமற் பூப்போற் சமைத்து - விடிகாலே
கொண்டா விடுப்புவலி குற்றிருமல் வெட்டையும் போங்
கண்டாலும் வாதமறுங் காண்.

கொடியாட்டு இறைச்சியைப் பூவைப்போல வேக வைத்துப் பாகஞ்செய்து காலையில் உட்கொண்டால் இடுப்புவலி, குத்திருமல், வெட்டை, காசம், உஷ்ணவாய்வு ஆகியவை போகும்.

## வரையாட்டு இறைச்சியின் குணம்

பத்தியத்திற் கொவ்வும் பாரநோயைத் துரத்து
மெத்த மெலிந்தார் மெலிவகற்றுஞ் - சுத்தமண
மூட்டுவரை யொத்தமுலை யொண்டொடியே பன்மூலிக்
காட்டுவரை யாட்டுக் கனி.

வனமூலிகைகள் தின்கின்ற வரையாட்டு இறைச்சிக் கனத்த நோய்களையும், மிகுந்த துர்ப்பலத்தையும் (மெலிவை) போக்கும். இக்கறி பத்தியத்திற்கு உகந்ததாகும்.

## செம்மறியாட்டு இறைச்சியின் குணம்

அம்புவிற் செங்கரப்பா னண்டுவது மாத்திரமோ
செம்மறி யாட்டுக்கறியைத் தின்றாக்காற் - கொப்பி
லிருந்து மதிப்பாற்போ லெப்பிணியு முண்டா
மருந்துயர நீங்கா தறி.

செம்மறியாட்டு இறைச்சியை உட்கொண்டால் செங்கரப்பானும், உடலில் முன்பு இல்லாத பலவித நோய்களையும் உண்டாக்கி சரீரத்திற்குத் துன்பத்தைக் கொடுக்கும்.

## குறும்பாட்டு இறைச்சியின் குணம்

மந்தமிகுந் தீபனம்போ மாறாவரோசகமாந்
தொந்தநோ யெல்லாந் தொடருங்கா - ணிந்துநுதன்
மானே கபமுயரும் வன்பள்ளை யாட்டுக்குத்
தானே மிகும்வாயு தான்.

பள்ளையாட்டு இறைச்சி மந்தத்தை அதிகப்படுத்தும். பசியைப் போக்கும், தொடர்ந்து இருக்கக்கூடிய அரோசகம், மாந்தம், தொந்த நோய்களெல்லாம், கப நோய்கள், அதிவாத நோய்கள் ஆகியவை உண்டாகும்.

## மான் இறைச்சியின் குணம்

குறும்பாட் டிறைச்சிதனைக் கொண்டார்கட்
கெல்லா
மெறும்பார் சொறிசிரங்கு மெய்து - மிறங்குங்
குடல்வாதஞ் சூலை கொடுமனிலக் கூட்ட
முடனே யடருமென வோர்.

குறும்பாட்டு இறைச்சியை உண்பவர்க்கு எறும்பு மொய்க்கின்ற நமைச்சலை ஒத்த கிரந்தியையும், சொறி சிரங்கு, குடல்வாதம், சூலை ஆகியவை உண்டாகும்.

## மான் இறைச்சியின் குணம்

மான்கறி யுண்டார்தமக்கு மாதொத்த நோய்க்கபநோ
யூன்பகந் தரங்கழலி நூதையோடு - தான்பரவு
வாதநமையும் விட்டு வாங்குங் கண்ணிற்புகையா
மோதுபித்தம் வீறுமென வோர்.

மான் இறைச்சிக்குத் தொந்தநோய், ஈளை, மாமிச பவுத்ரம், கட்டி, வாயு, வாதப்புடை ஆகியவை போம். ஆனால் கண் புகைச்சலும் பித்தமும் உண்டாகும்.

## கலைமான் இறைச்சியின் குணம்

தேகப் பிடிப்பகலு வெட்டை யனலுமறும்
போகமுறுப் பலனாம் பூவையரே - தேகத்திற்
பித்த வாதங்களறும் பேராவழலையும் போந்
தத்துகலை மான்கறிக்குத் தான்.

கலைமான் இறைச்சிக்கு மேகவாத பிடிப்பு, வெள்ளை, வெட்டை, சுரம், பைத்தியம், வாதம், உள்அழலை ஆகியவை போம். விந்துவும், சரீர பலமும் உண்டாகும்.

## கடமான் இறைச்சியின் குணம்

உடல் வலுவாகி யேங்கிப் பருக்குங்
குடலிலதி வாதங் குதிக்கும் - வடமார்
கடமா மெனுங்கொங்கைக் காரிகையே கானக்
கடமா னிறைச்சியுணுங் கால்.

கடமான் இறைச்சியை உட்கொண்டால் சரீரம், வன்மையோடு செழித்துப் பெருக்கும். ஆனால் குடல் விருத்தி நோய் உண்டாகும்.

### ஊர்ப்பன்றி இறைச்சியின் குணம்

வாதபித் தங்கள்சேரு மருவிய புண்ணுமுண்டாந்
தாதுவும் கபமும்பொங்குந் தாங்கொணா - வசதியாகும்
வாதுற வனந்தநோய்கள் வளர்ந்தெழுந் துன்பமெய்து
மோதியுண் மருந்துநாச மூர்ப்பன்றிக்கறி யுண்பார்க்கே.

ஊர்ப்பன்றி இறைச்சியை உண்பவர்க்கு வாதபித்த, தொந்த ரணம், சுக்கிலம், கபம், கைகால் விலவிலப்பு போன்ற பலவித நோய்கள், மனதுக்கம், மருந்து கெடுதி ஆகியவை உண்டாகும்.

### காட்டுப்பன்றி இறைச்சியின் குணம்

ஏறிய வாதம்போகு மெழுப்பிடுங் காசநோய்கள்
வீறிடும் விழிநோய்சீதம் விஷக்கடி - கிரந்தியுண்டாங்
கூறிடு மூலங்கீலங் குதங்குடல் வாதநாசம்
மாறிடு காட்டுப்பன்றி மதங்கிசந்தனை யுண்பார்க்கே.

காட்டுப்பன்றி இறைச்சியைத் தின்பவர்க்கு அதிகரித்த வாயு, சர்மநோய், ஆசன நோய், குடல்விருத்தி இவை நீங்கும். இருமல், கண்நோய், கபம், விஷக்கடி, இரணம் ஆகியவை உண்டாகும்.

### முள்ளம்பன்றி இறைசிச்சியின் குணம்

காட்டுப் பன்றிக்குணமுங் காயமெல்லா முள்ளை
நீட்டுப் பன்றிக்குணமு நேரொன்றாய் - காட்டுகினு
மிப்பன்றிக் கங்க மிறுகுவதா லிப்பன்றிக்
கெப்பன்றியு நிகரோ வெண்.

காட்டு முள்ளம்பன்றியின் இறைச்சி குணத்தில் நன்றாக இருந்தாலும், முள்ளம்பன்றியின் வலிமைக்கு எந்தப் பன்றியும் நிகரல்ல.

*குறிப்பு:-* இவ்விறைச்சியின் உப்புக்கண்டத்தைக் கக்குவான் நோய்க்குக் கொடுக்க நல்லகுணத்தைத் தரும்.

## முசல் இறைச்சியின் குணம்

கடுகிய நடையுண்டாகுங் கனத்ததோர் பித்தமேகு
முடுகிய வீளைகாச முதிர்ந்ததோர் சுவாசம்போகுஞ்
சடுதியில் வெருண்டேயோடுந் தனிமுசற் கறியினாலே
கொடுமயிர் கண்ணாய்வாதங் குறைந்திடு மலமிறங்கும்.

முசல் இறைச்சியால் விரைவான நடையுண்டாகும். பைத்தியமும், காசநோயும், இருமல் சுவாச காசம், வாயு, மலச்சிக்கல் ஆகியவை நீங்கும்.

## உடும்பு இறைச்சியின் குணம்

தொன்மைத் துவர்ப்பிணிப்பாற் துர்ப்பலம் தடிப்பு நன்மை
வன்மைக் கிராணிதலை வலியிவைக - ளின்மையுறு
மேற்றழல்புண் குட்டுகபமேகம்வெட்டை மூலமண்டங்
காற்றழல் விட்டிற்றடிரக்குச் சாண்.

உடும்பு இறைச்சியினால் துர்பலம், வீக்கம், சொறி, கிரகணதோடம், தலை, காதுகளை வருத்துகின்ற நோய்கள், இரணச்சூடு, இரணம், குட்டம், காசம், பிரமேகம், வெள்ளை, மூலம், குடல்வாதம், வாதபித்தம், பேதி ஆகியவை விலகும்.

## புலி, கரடி, சிறுபுலி இவ்விறைச்சிகளின் குணம்

வருபுலி மாங்கிஷத்தால் மாறுமுன் மாதரோகங்
கரடிமாங் கிஷத்தால்வாதங் கபங்கெடும் வலிப்புநீங்குந்
திரிசிறு புலியிறைச்சி நீர்த்திடுஞ் சிலரோகத்தை
வரிவிழி மாதேயிந்த வகையறிந் தோதுவாயே.

பெரும்புலி இறைச்சியினால் உன்மந்த நோய் போகும். கரடி இறைச்சியினால் வாயுவும், கபமும், வலிப்பாகிய மூர்ச்சை நோயையும் நீக்கும். சிறுபுலியின் இறைச்சி சிற்சில நோய்களை விலக்கும்.

## மாடு, முதலை இவைகளின் இறைச்சிக் குணம்

கோமாங் கிஸத்தைக் குறித்துண்ட யேருடம்பி
லாமா வியாதிக் களவுண்டோ - வாம
மதலைக் குறுசுக்கு வான்னிலஞ் சீத
முதலைத் தசைக்கிருக்கு மோ.

மாட்டிறைச்சியை உணவாக உண்டால் சகல நோயும் உண்டாகும். முதலை இறைச்சியால் குழந்தைகளின் கக்குவான், இருமல், வாயு, கபம் ஆகியவை போம்.

## பூனை இறைச்சியின் குணம்

பூனைக் கறியைப் புசித்தா லெழிலணங்கே
மேனிக் கழகுண்டா மேல்விரணந் - தானகலுஞ்
சூடு மதிகரிக்குஞ் சோறியது மேன்மேலு
நீடுமென நாளு நினை.

பூனையிறைச்சியை உண்டால் சரீர அழகும் வெப்பமும் இரத்த விருத்தியும் உண்டாகும். சரும தாதுவைப் பற்றிய கிரந்தி நோய் விலகும்.

## புனுகுப்பூனை இறைச்சியின் குணம்

இடுப்பி லுரத்தி லெழதோ யகற்றுங்
கடுப்புறு வாதத்தைக் கடுக்குங் - தொடுப்பி
லமிழ் தாதுவுநல் லரும்பசியு நல்குங்
கமழ் புனுகுப்பூனைக் கறி.

புனுகுப்பூனைக் கறியால் வாதம், கடுப்பு வாதம், மூலக்கடுப்பு ஆகியவைகளைக் குணப்படுத்தும். தாதுவையும், பசியையும் அதிகரிக்கச்செய்யும்.

## கீரியிறைச்சியின் குணம்

கீரி யிறைச்சிக்குக் கெம்பீர முண்டாகு
நீரிழிவு மேகுமென்பார் நிச்சயமே - வீரியமாஞ்
சில்விஷம் விட்டேகுஞ் சிரங்கு சொறியகலும்
பல்லரணை போகும் பறந்து.

கீரியிறைச்சிக்குத் தைரியமும், சுக்கில விருத்தியும் உண்டாகும். வெகுமூத்திரம், அர்ப்பவிடம், கிரந்தி, நமைச்சல், பல்லரணை ஆகியவை போம்.

## மரநாய் இறைச்சியின் குணம்

மரநா யிறைச்சிக்கு வன்கிரந்தி மேக
முரமாகவே யோடி யொளிக்கும் - விரைவாதஞ்
சூலைகன வாதந் தொலையுஞ் சுரம்போகு
ஞாலமிசை யிக்குணத்தை நாட்டு.

மரநாய் இறைச்சிக்கு சிரங்கு, பிரமேகம், குடல்வாயு, சூலைநோய், மகாபாதநோய், வாதநோய், சுரநோய் ஆகியவைகள் ஒழியும்.

## எலியிறைச்சியின் குணம்

எலியிறைச்சி குன்மம் பீலிக முரநோய்
நலிவித் திரப்புண் ணமைச்சன் - மெலிவோடு
மீதுமட் புடாப்புகை மேவச்செய் யும்புரணத்
தாதுவுக்கும் புஷ்டிதருந்தான்.

எலி இறைச்சிக்குக் குன்மம், பீலிகநோய், மார்பு வலி, பிளவை, தினவு ஆகியவை நீங்கும். சரீர வனப்பும், வீரிய விருத்தியும் உண்டாகும்.

## வெள்ளெலி இறைச்சியின் குணம்

சீதமையங் குன்மஞ் செரிமூலம் வித்திரிதி
பேதி தொந்தரோகம் பீலிகம்போந் - தாதுவுமான்

சேரு முதிரமது தேகமெல்லாம் பரவுஞ்
சாருமென்ற வெள்ளெலிக்குத் தான்.

வெள்ளெலி இறைச்சிக்குக் குளிர்ச்சி, கபநோய், குன்மம், மூலநோய், வெப்புறுதி கட்டி, அதிசாரம், கிராணி, தொந்தநோய், பீலிகநோய் ஆகியவை போகும்.

**பெருச்சாளி இறைச்சியின் குணம்**

வாதபித்தந் தாட்பிடிப்பு வன்பீனசங் குஷ்ட
மோதுதிர நோயா டுமைகீடம் - பேதியிவை
பேர்ந்தகல லோடும் பெருச்சாளி யின்கறியாற்
றீர்ந்தவெழி லோவியமே செப்பு.

பெருச்சாளி இறைச்சியால் வாத பித்த கப தொந்தம், பீனிசம், குட்டநோய், உதிரநோய், பேதி, இரத்தத் தாதுவைப் பற்றிய நோய், கிருமி, அதிசார நோய் ஆகியவை குணமாகும்.

## பறவைக் கறிவகைகள்

**கோழிக்கறியின் குணம்**

கோழிக்கறி நெருப்பாங் கொள்ளின் மருந்துறம்வங்
கூழைக் கடுப்புமந்தங் கூறரச - மாழ்கிப்போம்
நீளுற்ற போக நிணக்கிரந்தி பித்தமுண்டாந்
தூளித்த மெய்யிளைக்குஞ் சொல்.

சூடுள்ள கோழிக்கறியை உட்கொண்டால், மருந்துகளின் வேகத்தைக் கெடுக்கும். மகாவாதம், சுவாசம், தேகக்கடுப்பு, மந்தம், மூலம் ஆகிய நோய்களை உண்டுபண்ணும், சுக்கிலம், குருப்புள்ள இரணம், பித்தம் இவைகளை உண்டாக்கும் உடம்பை இளைக்கச் செய்யும்.

**கருங்கோழிக்கறியின் குணம்**

குட்டங் கடிகிருமி கோரவாதக் கூட்ட
மட்டிடாச் சூலையறு மாதரசே - துட்ட
கிரந்தியொடு புண்வலிபோங் கேளுடலுரக்கு
மருந்து கருங்கோழியூன் வை.

கருங்கோழிக்கறிக்கு குஷ்டம், கணாக்கடி, புழு, மகாவாதங்கள், சூலை, சொறி, சிரங்கு, கிரந்தி, இரணம், வலிப்பு ஆகியவைகளைப் போக்கி உடலை வளர்க்கச் செய்யும்.

**கானாங்கோழிக் கறியின் குணம்**

உத்தமனே நோயனைத்த மோடு மிறுமலறும்
பத்தியமாங் கரப்பான் பாருமே - முத்தவொளி
தானாங் கனிமொழியே சார்ந்த மறுவகலுங்
கானாங் கோழிக் கறியைக் காண்.

கானாங்கோழியின் கறியானது வாத கப நோயினங்கள், காசம், கரப்பான் ஆகியவை போம். பத்தியத்திற்கு உதவும்.

**வான்கோழிக்கறியின் குணம்**

போகமிகு மெய்யிற் புளகிதம்வான் கோழிதனக்
காக மதிலைய மதிகமுந் - தேகமெல்லாந்
தானே கரப்பானாகுஞ் சாற்ற வுரிசையுமாந்
தேனே யிதனைத் தெரி.

வான்கோழி கறிக்கு விந்தும், மகிழ்ச்சியும், கபமும், கரப்பானும் உண்டாகும்.

**சம்:பங்கோழிக்கறியின் குணம்**

வரட்சி சொறிசிரங்கு வன்கரப்பா னென்னுந்
திரட்சியொடு பலநோய் தீரும் பொருட்சிகரி

கும்பக் கடாக்களிற்றின் கோடெனெச்சொற்
பூண்முலையாய்
சம்பங் கோழிக்கறிக்குந் தான்.

சம்பங்கோழிக் கறியானது சுரசுரப்பு, கிரந்தி, கரப்பான் முதலியவை நீங்கும்.

### வாத்துக்கறியின் குணம்

வாத்துக் கறியருந்த வற்றியுலர் புன்சிரங்குங்
கோத்த கபமுங் குதிக்குங்காண் - ராத்திரியிற்
போக முறுதியுமாம் பொல்லா வரோசகநோ
யாகமதி லுறு மறி.

வாத்துக்கறியை உட்கொண்டால் கசிவு வறண்டு, சிவந்த இரணம், கிரந்தி, கோழை, அரோசிகம் ஆகியவை அதிகரிக்கும். சுக்கிலம் இறுகிக் கட்டும்.

### கோழி முட்டையின் குணம்

வாதபித்தஞ் சேர்ப்பிக்கும் வன்றோடம் புண்போக்குந்
தாதுவை மொத்தத் தழைப்பிக்கு - மோது
கபத்தை யடக்குங் கரப்பானுண் டாக்குவையு
மிபத்தையுறுங் கோழிமுட்டை யென்.

கோழிமுட்டை வாததோடம், இரணம், கபப்பிணி இவைகளை நீக்கும். வாத பைத்தியம், சுக்கில தாது, கரப்பான் இவைகளையுண்டாக்கும்.

### காடைக்கறியின் குணம்

கட்டிற் கிடப்பார்க்குக் காட்டிற் படுங்காடை
மட்டவிழுங் கோதாய் மருந்தன்றோ - விட்டமுறச்
சோறுபுகுஞ் சோபையறுந் துன்னோ யெலாமேகும்
மேறுமறுந் தேற்றுவதேன் விள்.

காடைக்கறிக்குச் சாப்பாடு செல்லும், வீக்கமும், மெலிவினால் இளைத்த உடலும், சகல நோய்களும் குணமாகும்.

**கவுதாரிக்கறியின் குணம் - இதுவே சிவல்**

சிவலிறைச்சி பித்தஞ் சிலேஷ்ம மந்தம்வாதக்
கவலையுற வோட்டியுடல் காக்கும் - புவனமதின்
மெய்க்குப் பலஞ்செய்யும் வீரியமு முண்டாக்குஞ்
சிக்கிய மலங்கழிக்குஞ் செப்பு.

கவுதாரிக்கறி பைத்தியம், கபம், மந்தம், வாதவலி, மலக்கட்டு ஆகியவைகளைப் போக்கி, வன்மையையும், வீரியத்தையும் விருத்தி செய்து உடலை இரட்சிக்கும்.

**ஊர்க்குருவியின் குணம்**

மருவிய திரிதோஷம்போம் மறப்புறாப் புணர்ச்சியுண்டாம்
பெருகிய சுரம்மேகம்போம் புறந்திடு மிளமைமெய்யிற்
கருகிய வன்னநீக்கிக் கனகம்போ லொளிவுசேரு
முருவமுந் திரமாநாளு மூர்க்குருவி யின்றசைக்கே.

ஊர்க்குருவிக் கறிக்கு வாதபித்த, கப, பிரமேகம், சுரம், வெட்டை, கறுமை நிறம் ஆகியவை நீங்கும். மேலும் இடைவிடாத கோபம், வாலிபத் தன்மையையுண்டாக்கி, பொன்சாயலையும், சரீர புஷ்டியையும் உண்டாக்கும்.

**வானம்பாடிக்கறியின் குணம்**

வெட்டை யனலொடு வீறுபல நோயகலு
மட்டிலாக் காமம் வளருங்காண் - மட்டணையுற்
கானம் பாடிக்களிக்குங் காமரசப் பைங்கிளியே
வானம் பாடிக்கறி வறு.

வானம்பாடி கறியால் ஆண்குறியில் விழுகிற வெள்ளை, வெட்டை ஆகிய நோய்கள் அகன்று விந்துவைக் கட்டி, அளவிலாத காமவீரிய விருத்தியை உண்டாக்கும்.

**விச்சுளிக்கறியின் குணம்**

ஐயுடன் பித்த வரோசகத்தை மாற்றிவிடுஞ்
சையோக போகந் தழைப்பிக்கு - மெய்யாகப்
பத்தியம் தாகும் பசுவிச் சுளிக்குருவி
யுத்தமத்தி லுத்தமமா மோர்.

விச்சுளிக்கறி கபநோயையும், பித்த அரோசிகத்தையும் போக்கும். விந்துவை வளர்க்கும்.

**தூக்கணாங்குருவிக் கறியின் குணம்**

ஐய மருசி யகட்டின் மலமும்போக்குந்
துய்ய பசியைமெல்லத் தூண்டிவிடு - மெய்வன்
மினுத்த வழகுண்டா மென்பத்திய மாந்
தனித்தூக் கணங்குருவி தான்.

பத்தியத்திற்கான தூக்கணங் குருவியின் கறி கபம், அரோசிகம், மலக்கட்டு ஆகியவைகளைப் போக்கிப் பசியையும் உடலுக்கு அழகையும் மிளிரச்செய்யும்.

**கருங்குருவியின் குணம் - இதுவே வலியன்**

வாதகா மாலையறு மாதே கபமும்போ
மூதுகா மாலைவிழுந் தோடுகாண் - வாதுசெய்
வந்த கரப்பானுடனே மாறாச் சொறியும்போங்
குந்து கருங்குருவி கொள்.

கருங்குருவிக்கறியை உட்கொண்டால் வாத காமாலை, விஷம், கபம், வாது காமாலை, கரப்பான், தீராத சொறி ஆகியவைகளைப் போக்கும்.

**சிட்டுக்குருவிக் கறியின் குணம்**

பூவிரணம் போக்கிவிடும் பொல்லாக் கிறுமிகளைப்
பாவுமலத் தோடிறங்கப் பண்ணுங்காண் - பூவணையிற்

கட்டுற்ற மாதர்களைக் கைகுவித்துக் கொஞ்சுவிக்குஞ்
சிட்டுக் குருவித் திறம்.

சிட்டுக்குருவியின் கறி ஆண்குறி மலரின் புண் களையும், மலக்கிருமிகளையும் போக்கும். புணர்ச்சியில் நீண்ட நேர நிர்வாகத்தையுண்டாக்கும்.

**உள்ளான் கறியின் குணம்**

உத்தமாம் பத்தியத்திற் கொவ்வுமுன் னான்கறிதான்
சத்தியங்காற் பித்தத்தைச் சாந்திசெய்யு - முத்த
நகையீர் மேகம் போக்கு நற்பசி யுண்டாக்குந்
தகைமந்தந் தீர்க்குமிது தான்.

பத்தியத்திற்கு உத்தமமான கறி வாத பித்த கபதொந்தம், பிரமேகம், அசீரணம் ஆகியவைககளைப் போக்கும். நல்ல பசியை உண்டாக்கும்.

**கொசு உள்ளான் கறியின் குணம்**

கொசுவுள்ளான் நன்கறியைக் கூட்டியுண் பார்க்குப்
பசியெழும்பு மேகம் பறக்கும் - பசபசத்து
நின்ற தினவகலு நீங்காத போகமுறி
மன்றலுறை வார்குழலே வாழ்த்து.

கொசு உள்ளான் கறியால் மிகுந்த பசியையும், மேகத்தையும் போகத்தில் பலத்தையும் உண்டாக்கும். சீழ்ப்பிரமேகமும் நமைச்சலும் விலகும்.

**கோரை உள்ளான் கறியின் குணம்**

நாட்டிலுள்ள பட்சிகளி னன்கிதுவே பத்தியமாங்
கூட்டிலுள்ள தோஷங் குலையுங்காண் - தாட்டிகமா
யாரென்ன சொன்னாலு மம்புவியி னோயோர்க்குக்
கோரை யுள்ளான் கறியைக் கூட்டு.

நற்கோரை உள்ளான் கறியால் சப்ததாதுக்களின் தோஷங்கள் விலகும். இக்கறி நோயாளர்க்கு மிகவும் உதவக்கூடியது.

## மயில்கறியின் குணம்

சூலைப் பிடிப்புகளைச் சோரிவளியைப் பித்தை
வேலைச் சிலேட்டுமத்தை வீட்டுங்கா - ணூலொத்த
வற்பவிடை மாதே யனலா மயிலிறைச்சி
நற்பசி யுண்டாக்கு நவில்.

மயில்கறி கீல்களில் குத்தல், வாத சோணிதம், கபபித்தம், அதிக கபம் ஆகியவைகளைப் போக்கும். பசி தீபனத்தைத் தரும்.

## குயில்கறியின் குணம்

நல்லதொரு பத்தியமா நாடாது வாதபித்தஞ்
சொல்லரிது தானே சொறியேகும் - வல்ல
குயிலருந்த மேகம்போங் குன்மவலி தீருந்
துயிலிமதி போகமுறுஞ் சொல்.

குயிற்கறியை உண்டால் வாதபைத்தியம், புடை, இரணம், பிரமேகம், வயிற்றுவலி ஆகியவை போம். வீரிய விருத்தியுண்டாகும்.

## கொக்குக்கறியின் குணம்

கொக்கருந்த மேகமுண்டாங் கூடுமரோசக நோய்
மைக்குழலே புண்கரப்பான் வந்துறையு - மெய்க்கு
நியத்தமருந் துண்ணிலித னீள்கவிச் சாகாது
வயிற்றுக் கிருமிபோ மால்.

கொக்குக்கறி உண்டால் சீழ்மேகம், அரோசிகம், கிரணம், கரப்பான் ஆகியவை உண்டாகும். அதிகக்கவிச்சு, அதனால் மருந்துகளுக்கு இவ்வாடை ஆகாது.

### கருங்கொக்குக் கறியின் குணம்

கருங்கொக்கின் நன்கறிக்குக் காணாக்கரப்பான்
மருங்கொக்கும் புண்ணும் வளரும் - பெருங்கிரந்தி
யுண்டாஞ் சிலேஷ்ம முலவுமுடல மெலாம்
வண்டார் குழலே வழுத்து.

கருங்கொக்குக் கறிக்குக் கரப்பானும், இரணமும், பெரும்சிரங்கும், சரீரத்தில் நீர் ஏற்றமும் உண்டாகும்.

### தாராக்கறியின் குணம்

தாராக் கறியருந்தத் தாதுமிக வுண்டாகும்
பேராக் கபம்தளரும் பெண்மயிலே - தீராத
வாந்தி யரோசகமும் வன்கரப்பன் புண்ணுமிகச்
சேர்ந்துவரு மிப்பலனைச் செப்பு.

தாராக்கறியை உண்டால் சுக்கிலம், கபம், வாந்தி, அரோசிகம், கடுகண், சிரங்கு ஆகியவை விருத்தியாகும்.

### நாரைக்கறியின் குணம்

நாரைக் கறியருந்த நாறுகரப்பான் புண்ணு
மூரைத் தொடர்ந்துதொடர்ந் தோட்டுங்காண்-பாரித்த
மேகமொடு தாகம் விளையுமே நீரிழிவுக்
காகு மென்பார்க ளறி.

நாரைக்கறியை உட்கொண்டால் சீழ்கரப்பான், கிரந்தி, கபமேகம், வாதம் ஆகியவை உண்டாகும். ஆனால் அதிமூத்திரத்தைப் போக்கும்.

### ஆள்காட்டிப் பட்சிக்கறியின் குணம்

ஆள்காட்டிப் பக்ஷிக் கடன்மேகம் போயொளிக்குந்
தோட்காட்டு வாதந் தொடரவே - வாட்காண்

ணரிவையே பத்திரியத்திற் காகும் புவியிற்
றெரியமறை யில்லாமற் செப்பு.

ஆள்காட்டிப் பட்சிக்கறிக்கு வாத பிரமேகமும், சுரவாத நோயும் ஒழியும்.

**கிருட்டிப்பட்சிக்கறியின் குணம்**

மருட்டு விழியுடைய மாதே புவிக்குட்
கிருட்டிக் கறியருந்திற் கேளாய் - மருட்டுபித்தம்
வாதங் கடுப்பு வளருமிரத் தக்கழிச்சற்
காதம்போம் வாந்தியறுங் காண்.

கிருட்டிப்பட்சிக்கறிக்கு பயத்தை கொடுக்கா நின்ற பைத்தியம், வாயுகடுப்பு உண்டாகும். இரத்தபேதி, வாந்தி நீங்கும்.

**சூரைப்பட்சிக் கறியின் குணம்**

குட்டங் கிருமிகுன்மங் கோரவாதஞ் சோபை
துட்டம் பகந்தரந் துலைக்குங்கா - ளிட்டமுறப்
பத்தியத்திற் காகும் பருகி லுரிசையுமாங்
கைத்திடாச் சூரைக் கறி.

சூரைக்கறிக்குப் புழு, வயிற்றுவலி, மகாவாதம், வீக்கம், ஆறகிரணம், பவுத்ரம் ஆகியவை நீங்கும். இது பத்தியத்திற்கான கறி.

**கிளுவைக்கறியின் குணம்**

பாலிலா மாதர்கட்குப் பாலுமுண்டாம் போகமுமாந்
தாலதுரை பித்தந் தரிக்குமோ - சாலச்
சிரங்குபுண்க ளெல்லாமே சீழ்வற்றி யாறு
மருங்கிளுவை வைத்தின் றறி.

கிளுவைக்கறியை உண்டால் பெண்களுக்கு முலைப்பால் சுரக்கும். அதிக வீரிய விருத்தியுண்டாகும். பைத்தியம், கிரந்தி, இரணம் ஆகியவை போம்.

## மடையான் கறியின் குணம்

அன்னநடை பின்னுசடை யங்கண்மட மாதேகேள்
வன்னமடை யான்கறியை மாய்தினர்க்குத் - தின்னு
கரப்பான் சொறிசிரங்குங் காணு மையவாத
முரப்பாக நீடு முறை.

மடையான் கறியை உட்கொண்டவர்க்கு கடுவனும் நமைக்கிரந்தியும், வலிந்த கபமும், வாததொந்தமும் உண்டாகும்.

## கூழைக்கடாக்கறியின் குணம்

நெடுநாளி றூரிழிவை நேராகக் கட்டு
மடலான சூலை யகற்று - மருவாருங்
கூழைக் கடாக்கறிதான் கோரகரப்பான் புண்ணை
பாழ்தேகத் திருந்து மாய்.

மடு, ஏரி, தடாகங்களில் கிடக்கும் , கூழைக்கடாக்கறி நீர்த்தவேருநீரையும், கபச்சூலையையும் நீக்கும். வாத கரப்பானையும், இரணத்தையும் உண்டாக்கும்.

## நமிட்டுப் பட்சிக்கறியின் குணம்

நமிடுகரப் பான்வாத நாட்சோபை மாற்று
மமிர்தகுண மாமுரிசை யாகுஞ் - சமமுறைக்கி
லெல்லாக் கறிக்கு மஃதின்பாகு மிக்கறிக்குப்
பொல்லாக் கயரோகம் போம்.

ருசியுள்ள நமிட்டுப்பட்சிக் கறியினால் கரப்பான், வாயு, வீக்கம், காசம் முதலிய நோய்கள் நீங்கும்.

### சிவிப்பட்சிக் கறியின் குணம்

வாராய் மடமானே வாதகப முண்டாகுஞ்
சேராச் சிறவிதனைத் தின்றாக்காற் - பேராத்
தினவு கரப்பான் கிரந்தி சேருமோ நாளுங்
கனவுறுதியாம் போகங் காண்.

சிவிப்பட்சிக் கறியை உண்டால் வாதகபம் உண்டாகும். புணர்ச்சியில் திடமும் உண்டாகும். தினவு, கரப்பான், சொறிகரப்பான், சிரங்கு ஆகியவை போம்.

### பொன்னாந்தட்டான் கறியின் குணம்

மேக வழறணியு மிக்கவழ குண்டாகும்
போகமீருங் கரப்பான் போகுங்காண் - பாகான
பொன்னாந் தட்டான்கறியைப் போற்றியுண்ணி
னற்சுவையா
மின்னாந் தேகம்புவியில் விள்.

பொன்னாந்தட்டான் கறியால் மேகம், வெப்பம், கரப்பானும் போகும். மேலும் செழிப்பும், வீரியமும் உண்டாகும்.

### கடல் இறைஞ்சிக் கறியின் குணம்

பத்தியத்திற் கொவ்வுமிந்தப் பாரிற் கடலிறஞ்சி
யுத்தமமா நோயனைத்து மோட்டுங்காண் - மெத்தச்
சொறிகரப்பான் வன்சிரங்கு தொன்மேகம் போக்குஞ்
செறிநரை நீக்குஞ்சுவையாஞ் செப்பு.

கடல் இறைஞ்சி கறிக்கு நமைச்சல், கரப்பான், கிரந்தி, நீடித்தப்பிரமேகம் முதலிய நோய்களைப் போக்கும்.

### வெண்புறாக்கறியின் குணம்

வெண்புறா வாதபித்தம் வீறுகப மேகமிவை
திண்புவியை விட்டோடச் செய்யுங்காண் -
பண்பரவு
வெண்குஷ்ட நீள்கரப்பான் மெய்வரட்சியும்
போக்கும்
பண்புற்ற பத்தியமாம் பார்.

வெண்புறாக்கறியை உண்டால் வாதபித்தம், மேகம், இரணம், வெண்குட்டம், கரப்பான், சொறி இவைகள் நீங்கும்.

### பச்சை புறாக்கறியின் குணம்

இச்சைதரும் புன்முறுவ லேந்திழையே மாந்தர்மிகப்
பச்சைப் புறாவூன் பருகினாற் - கொச்சை தரும்
வாதபித்த மையம்போ மாபலமுந் தாதுவுமா
மோது சீதங்காக்கு முன்.

பச்சைப்புறாக்கறியை உண்டால் முக்குற்ற தொந்தரவும், தேகபுஷ்டியும், வீரிய விருத்தியும் உண்டாகும்.

***குறிப்பு:-*** வாதம் பக்கவாதம், இளம்பிள்ளைவாதம் ஆகியவைகளைக் குணப்படுத்தும்.

### மாடப்புறாக்கறியின் குணம்

உண்டால் பசியா முறைதாது வும்பெருகுங்
கண்டாலும் வாதங் கலக்குங்காண் - வண்டாருங்
காரின்மிகு மைக்கூத்தர் காரிகையே பத்தியமாம்
பாரின் மாடப்புறாவைப் பார்.

மாடப்புறாக்கறியானது பசிதீபனமும், விந்துவும் பெருகும், வாதப்பிரமேகம் தீரும். இது பத்தியத்திற்கானது.

### வரிப்புறாக்கறியின் குணம்

வரிப்புறாவின் றசையோ மாவுருசி தின்றாற்
றிரிப்புறா வாதபித்தந் தானு - மரிப்பான்
சோப ரோகங்க டொடரா வெவர்களுக்கு
நீபா ரிலையிதற்கு நேர்.

வரிப்புறாக்கறியானது வாயுவோடு கூடிய பித்தம், பலவித வீக்கங்கள் போகும்.

### வண்ணப் புறாக்கறியின் குணம்

ஈளை யிரைப்போ டிரத்தபித்தம் போக்கிவிடும்
வாளைவென்ற கண்ணாய் மலங்கழிக்கு -
நாளுமோ
வன்னமூட்டும் பசியை மருசியோட்டும் நல்ல
வண்ணப் புறாவை நுகர் வாய்.

வண்ணப்புறாக்கறியை உட்கொண்டால் கோழை, சுவாசம், இரத்தபித்தம், உணவில் வெறுப்பு ஆகியவைகளைப் போக்கும். பசியை உண்டாக்கி உணவை உட்கொள்ளச் செய்யும். மலபந்தத்தைப் போக்கும்.

### மணிப்புறாக்கறியின் குணம்

கணிப்புறா வின்பக் களஞ்சியமே கேளாய்
மணிப்புறாப் பத்தியமாம் வாதப் - பிணிப்பறுமுட்
கொண்டாற் கயந்தீருங் குன்ம ரோகங்களறுங்
கண்டாலு மையம்போங் காண்.

மணிப்புறாக் கறியை உண்டால் வாதப்பிடிப்பு, காசநோய், வயிற்றுநோய், கபத்தின் ஆதிக்கம் ஆகியவைகளைப்போக்கும்.

### மனைப்புறாக்கறியின் குணம்

பத்தியத்திற் காகாது பன்மனைப் புறாக்கறிதா
னொத்த கரப்பான்சொறியை யுண்டாக்கு - மெத்தவுமே
நாவுருசி யாயிருக்கு நற்சுக்கிலம் பெருக்குத்
தாவு கயல்விழியாய் சாற்று.

மனைப்புறாக் கறியானது மருந்தை முறிப்பது தவிர, கரப்பான், சருமச்சொறி, தாதுவிருத்தி ஆகியவைகளை உண்டாக்கும்.

### தவிட்டுப்புறாக் கறியின் குணம்

ஓடுகரப்பான் சோபை யுட்சொறி காமாலைபித்த
மாடுபெரு மூச்சடைப் பும்போம் - நீடு
கவட்டுக் கலகவிழிக் காரிகையே நாளுந்
தவிட்டுப் புறாக்கறிக்குத் தான்.

தவிட்டுப்புறாக்கறிக்குப் பரவுகின்ற கரப்பான், வீக்கம், உட்புர நமைச்சல், காமாலை, சுவாசத்தடை ஆகியவை போகும்.

### நீர்க்காக்கைக்கறியின் குணம்

பாண்டோடு சோபை பருவயிறும் போங்கரப்பான்
மீண்டு சொறியு மொய்தவரை - நீண்டமத
னூர்க்காக்கு மாதரசே யோங்குபுலா னாற்றமுறு
நீர்க்காக்கை தன்னை நினை.

நீர்க்காக்கைக் கறியால் பாண்டு, வீக்கம், மகோதரம், சோபை ஆகியவை போம். கடுவனும் தினவும் உண்டாகும்.

### அண்டக்காக்கைக்கறியின் குணம்

பித்தவெட்டை சோபையறும் பேதித்தெழுந் துடலி
லொத்தபெரும் பாண்டுவகை யோடுங்கா - ணித்தியமோர்

கண்டங்செய் காமிலம்போங் காக்கைக்கு ளோர்பிரிவா
மண்டங்காக் கைக்கறியா லாய்.

அண்டங்காக்கைக் கறியால் பித்தமேகம், சோபை, வீக்கம், பாண்டு நோய்கள், காமாலை, மஞ்சள் காமாலை ஆகியவைபோம்.

### கோட்டான்கறியின் குணம்

கோட்டான் கறிக்குக் கொடும்பசியும் நோய்கடலை
காட்டா தடங்குமிது கைவல்யங் - காட்டானை
மாமதம்போற் காமமுறும் வன்மருந்திற் பத்தியமாம்
பூமியிலே யாவர்க்கும் போதி.

கோட்டான் கறியால் மிகுந்த பசியையும், சுக்கிலத்தையும், அதிகரிக்கச் செய்யும், மேலும் சிற்சில நோய்கள் குணமாகும்.

## *மீன்கறி வகைகள்*

### விரால்மீன் கறியின் குணம்

உடலை வளர்க்கு முறுபிணியைத் தீர்க்குங்
குடலுக் கதிகசுகங் கொடுக்குங் - கடலை
யுழக்கும் விராலைவிட்டிவ் வூர்க்குளத்துச் சேற்றை
யுழக்கும் விராலதனை யுண்.

குளத்து விராலை உண்டால் சரீரத்தில் உள்ள நோய்களைப் போக்கி, உடலை வளர்த்து உடலுக்கு சுகமளிக்கும்.

***குறிப்பு:-*** முதிர்ந்த விரால் மீனின் தலையில் உள்ள கல்லை எடுத்துப் பற்பம் செய்து உண்டால் காசநோய் விலகும்.

### குறவைக்கறியின் குணம்

முட்டு குடல்வலிபோ மூடிரும லேகுமலக்
கட்டுரக்கும் வாயருசி காணுங்காண் - முட்டத்
துறவைப் பெற்றோருந் துதிக்குமெழின் மாதே
குறவை மீனின் குணத்தைக் கூறு.

குறவைக் கறியானது குடலுக்குள் ஓடிக்கொத்துகின்ற நோயும், காசமும் போம். மலபந்தமும், அரோசிகமும் உண்டாகும்.

### அயிறைக்கறியின் குணம்

உயிரை வளர்க்கு முடற்பிணியை நீக்கும்
மயிரை வளர்க்கும் ருசிமாற்றும் - வயிரச்
செயிரையுறாச் சற்குணநற் றெள்ளமிர்தேநாளு
மயிரை யெனுமீ னது.

அயிறை மீனை உண்பவர்க்கு உயிர்க்கு ஆதாரமாகிய சரீரத்தையும், ரோமத்தையும் வளர்க்கும், தேகபுஷ்டியையும், அரோசிகத்தையும் நீக்கும்.

### இறால்கறியின் குணம்

வாதமொடு மந்தமுறு மாறாப் பொருமன்மிகுஞ்
சீதம் விளையுந் தினவுண்டா - மாதே
யுதிரமிகப் பெருகு மோங்குமிறா லுண்டா
லெதிரிலங்க ராங்கிசமா மெண்.

இறால் கறியினால் வாயு, அக்கினிமந்தம், வயிற்று உப்பிசம், சீதளம், நமைச்சல், இரத்த மாமிச தாது இவை விருத்தியாகும்.

**கெண்டைமீன்கறியின் குணம்**

அண்டையி னிற்பார்களுக்கு மாரோசிகங் காணும்
பண்டையுள நோய்முதிர்ந்து பாரிக்குங் - கெண்டை
யுண்டால்
வாயுமுண்டாகும் வயிற்றுவலி யுஞ்சேரு
நீரி மறிவாய் நிசம்.

கெண்டையை உண்டால் மிகுந்த அரோசிகத்தையும், சரீரத்தில் அடங்கியுள்ள நோய்களையும், வாத பிணிகளையும், குன்மநோயையும் அதிகரிக்கச்செய்யும்.

**சன்னக்கெண்டையின் குணம்**

மின்னை நிகருமிடை மெல்லியரே மேனியது
சன்னமீ னுண்டாற் றளராவா - முன்னைக்
கரப்பானும் புண்ணுங் கடிய கபமும்போ
முரப்பாக நாளு முரை.

சன்னக்கெண்டை மீனை உண்டால் சரீரத்தின் தளர்ச்சி நீங்குவதுமின்றி, கரப்பானும், இரணமும், கப ஆதிக்கமும் விலகும்.

**பேராரால் கறியின் குணம்**

வாராய் மடமானே வந்த பிணியனைத்தும்
பேராரான் மீனுக்குப் பின்னிடையும் - பேரா
திருந்த பழமலம்போ மெய்துமாரோக்கிய
மருந்தோடே யொக்குமென வை.

மருந்துக்குச் சமமான பேராரால் மீனுக்குத் தேகத்திலுள்ள பலவித நோய்களும், பழைய மலக்கட்டும் போக்கி, சரீரத்திற்குச் சுகத்தையுண்டாக்கும்.

## சிற்றாரால் கறியின் குணம்

சிற்றாரான் மீனருந்தச் சிக்கு மலசலம்போ
முற்றகபங் கரப்பா லுண்டாகுஞ் - சற்றேதான்
மந்தமுறுந் தீபனம்போம் வாயிற் சலமூறுங்
கந்தமலர்ப் பூங்குழலே காண்.

சிற்றாரால் மீனை உண்டால் மலஜலபந்தமும், பசியும் நீங்கும். கபம், கரப்பான், அக்கினி மந்தம், வாயில் நீர் ஊறல் ஆகியவை உண்டாகும்.

## கச்சற்கருவாட்டுக்கறியின் குணம்

வாதமறு மப்பொழுதே வன்பித்த முண்டாகுஞ்
சீதமகலுந் தினவும்போங் - கோதாய்கேள்
கண்டாற் பசியெழு ப்புங் கச்சற் கருவாடு
கொண்டாற் சுரமும்விடுங் கூடு.

கச்சற்கருவாட்டை உண்டால் வாதநோய்கள், கபநோய்கள், நமைச்சல், சுரநோய் ஆகியவை போகும். கபம், பித்தம், பசி ஆகியவை உண்டாகும்.

## உழுவைக்கறியின் குணம்

முழுதும் புசிக்கலா முள்ளுமில்லை யந்த
வுழுவைக் குடர்பிணி விட்டோடும் - வழுவான
முன்மலமுஞ் சாறு முதிர்க்கரப்பா னுண்டாகும்
வன்முலையாய் நீயறிந்து வை.

உழுவைக் கறிக்குச் சரீரத்திலுள்ள பல வித நோய்களும், பழைய மலமும் போகும். ஆனால் கரப்பான் உண்டாகும்.

## வாளைக்கறியின் குணம்

ஆளை வளர்க்குமதி யாண்மைதனை யுண்டாக்கும்
வாளைவென்ற கண்மாதே வாயுவாம் - வேளை

யறியாம லுண்டா லணுகுமே வாதங்
குறியார்கள் வாளைக் குணம்.

வாதகுணமுள்ள வாளைமீன் தேகத்தைச் செழுமையாகத் தாதுவிருத்தியை உண்டாக்கும். அகாலத்தில் புசித்தால் வாயுவை உண்டாக்கும்.

**சேல்கெண்டைக்கறியின் குணம்**

குடல்வாத சூலை கொடுக்குஞ் சேற்கண்டை
யுடல்வாத மேகமுண் டாக்குஞ் - சடமீது
புண்ணுஞ் சிரங்கும் பொருந்திநிற்கச் செய்துவிடு
முண்ண மிகுசுவையா மோர்.

அதிகப்படியான ருசியுள்ள சேல்கெண்டை மீன் குடல்வாதக் குத்தல், வாதபிரமேகம், இரணம், கிரந்தி ஆகியவைகளை உண்டாக்கும்.

**கடல் கெளிற்றுக்கறியின் குணம்**

நெய்த்திருக்கு தொய்த்திருக்கு நீங்காத சுக்கிலமா
மொய்த்திருக்கும் வன்கெளிற்றை யுண்டாக்கான் - மொத்தக்
கரப்பானும் புண்ணுங் கபமும் பெருகுந்
தரைக்கு ளெவருக்குஞ் சாற்று.

நெய்பசையும், மிருதுவும் உள்ள கெளிற்று மீனை உண்டால் மாருவீரியமும், அரைக்கடுவனும், கபமும், கிரணமும் பெருகும்.

**ஓலைவாளைக் கருவாட்டின் குணம்**

ஆலைவாய்ப் பித்த மணுகாதா மம்புவியி
லோலை வாளைக்கருவா டுண்டாக்காற் - காலப்
பசியாகும் பஞ்சாய்ப் பறக்குமே வாதம்
புசியார்க் கிதனைப் புகல்.

ஓலைவாளைக் கருவாட்டை உண்டால் வாதத்தை ஒத்த பைத்தியமும், வாதநோய்களும் நீங்கும். ஆனால் விரைவில் எரிச்சலும், நமைச்சலும் உண்டாகும்.

**சுறாக்கறியின் குணம்**

வாத கபமறுக்கு மன்னுகீடம் போக்கு
மூத்து குடல்வாத மோடுங்கா - ணாதரவா
மெல்லாப்பிணிக்கு மிதமாகு நல்லசுறா
நல்லா ரறிய நவில்.

சுறாக்கறியை உண்டால் வாத கப தொந்தம் கிருமி நோய், குடல்விருத்தி இவைகளை நீக்கி, சகல நோய்களைக் குணப்படுத்தும்.

**சுறாக்கருவாட்டுக் கறியின் குணம்**

சூலை கிராணிகுன்மத் துட்டவதி சாரமிவை
வேலை யுலகை விடுத்தோடுஞ் -சால
வறாப்பசி யுண்டாகு மபத்திய மல்லாத
சுறாக்கருவா டுண்பார்க்குச் சொல்.

சுறாக்கருவாட்டுக் கறியை உண்டால் குத்தல், கிராணி, வயிற்றுநோய் வாத அதிசாரம் ஆகியவை போகும். மிகுந்த பசியை உண்டாக்கும்.

**கொள்ளிக் கருவாட்டுக் கறியின் குணம்**

கொள்ளிக் கருவாடு கொண்டா லுடம்பெல்லாங்
வொள்ளிகொண்டு சுட்ட குறிப்பாகும் - விள்ளக்
கரப்பானும் புண்ணுங் கனசிரங்கும் பைய
வுரப்பா மழகுகெடு முன்.

கொள்ளிக் கருவாடை உண்டால் உடல் தீப்பட்டு ஆறிய தழும்பு, கரப்பான், இரணம், கிரந்தி ஆகிய நோய்கள் பெருகி, அழகு கெடும்.

## சன்னக் கூனிக்கறியின் குணம்

சன்னக் கூனிக்கறியைத் தானருந்தி லக்கணமே
தின்னப் படுமன்னஞ் சீரணமாம் - பின்னும்
பசிக்கு மதிநெருப்பாம் பாரினோ யெல்லா
நசிக்கு மெனவே நவில்.

சூடுள்ள சன்னக்கூனிக் கறியை உண்டால் விரைவில் சீரணம் ஆவது தவிர உடனே பசியை உண்டாக்கும். வாத மந்த நோய்கள் நீங்கும்.

## திருக்கைக்கறியின் குணம்

வாதமொடு தாதுவும் வளர்ந்துள்ளே சேருமென்று
மோதுபித்தஞ் சோபமிவை யோடுமென்றுங் - கீதச்
செருக்கை யடைவாரைத் திருத்துமொழி மாதே
திருக்கை மீனுண்பார்க்குச் செப்பு.

திருக்கைமீன் தின்பவர்க்கு வாத தாதுவும், சுக்கில தாதுவும் அதிகரிக்கும். பைத்தியமும் வீக்கமும் நீங்கும்.

*குறிப்பு:-* குழந்தைக்குத் தாய்ப்பால் இல்லாத தாய்மார்கள் இதை உண்டால் பால் சுரப்பு அதிகரித்து குழந்தைகளுக்குப் போதிய பால் கிட்டும்.

## மடவைக்கறியின் குணம்

சுரும்புமீன் பத்தியமாய்ச் சொல்லுவா ருள்ளி
லரும்பிணியை யெல்லா மகற்றும் -
பெரும்போகஞ்
தீபன முண்டாக்குமது தின்னச் சுவைகொடுக்குஞ்
சோபனமின் னாரரசே சொல்.

சுரும்பு மீனை உண்டால் வயிற்றுப்பிணிகளை நீக்கும். வீரியத்தையும், பசியை உண்டாக்கி பைத்தியத்தைத் தணிக்கும்.

### உல்லமீன் கறியின் குணம்

உல்லமெல்லாஞ் சன்னவெலும் போவியழும் யிக்கறிதா
நல்லகறி யாயதனை நாளுமுண்டால் - மெல்லக்
கழிச்சல் பிளவையொடு காணாக் கடியும்
விழிச்சுக் கொண்டாடுமெண் விள்.

மெல்லிய முட்களையுடைய நல்ல உல்லமீன் உண்டால் பேதியும், கிரணமும், காணாக்கடி விஷம் அதிகரிக்கும்.

### சுற்றளைமீன் கறியின் குணம்

கற்றளைமீன் றன்னைக் கருதிநித முண்பாருக்
குற்றவயிறோ வுறுமியெழுஞ் - சுற்றொழியாய்
பேதி யெடுக்கும் பிறகுகரப்பா னொழியுஞ்
சாதி மடமயிலே சாற்று.

சுற்றாளை மீனை உண்டால் குடல் இரைச்சலும், மாருதக் கழிச்சலும் உண்டாகும். கரப்பான் விலகும்.

### வெள்ளை வெளவால் கறியின் குணம்

வெள்ளை வவ்வாறன்னை விரும்புநித முண்பார்க்குத்
தள்ளுகின்ற பித்தம் தரிக்குமோ - துள்ளி
வருங்கரப்பா னேகு மயிலே புவியி
வரும் பத்தியா மறி.

வெள்ளை வெளவாலை உண்டால் பித்த மயக்கமும் கடுவனும் போம். இது பத்திய உணவாகும்.

### கருவவ்வால் கறியின் குணம்

செங்கரப்பான் மேகஞ் சிறு சிரங்குமுண்டாகும்
வெங்கொடிய நீரிழிவும் விர்த்தியாங் - கொங்கைகளிற்
பாலூறு மெத்தப் பருகிற் கருவவ்வால்
மேலூறும் போகம் விதி.

கருவவ்வால் மீனை உண்டால் செங்கரப்பான், பிரமேகம், கிரந்தி, சிரங்கு, வெகுமூத்திரம், வீரிய விருத்தி, முலைப்பால் இவை உண்டாகும்.

### நெய்த்தோலிக் கறியின் குணம்

மந்தமுறுந் தீபனம்போம் வாயிலைப்பு முண்டாகுந்
தொந்தமுறு வாதபித்தந் தோன்றும்பின் - னொந்தே
வயிறுப் பொருமல் வலியநெய்த் தோலிக்குத்
துயரமிகு மிதனைச் சொல்.

நெய்த்தோலி மீனை உண்டால் அக்கினிமந்தம், அரோசிகம், வாத பைத்தியம், வயிற்று உப்பிசம் உண்டாகும். பசியைக்கெடுக்கும்.

### மயறிமீன்கறியின் குணம்

மயறி கரப்பானும் வாத பித்தத்தோ
டுயருகின்ற சோப மொழிக்கு - நியமா
யுதரத்தி னுள்ளு முறைவாதம் போக்கும்
பதியிலிதனைப் பகர்.

மயிறிமீனை உண்டால் கரப்பான், கபம், வாத பித்தம், மூர்ச்சை, வயிற்றில் தங்கிய விருண வாதம் ஆகியவைகளைப் போக்கும்.

### விலாங்குமீன் கறியின் குணம்

விலாங்குமீன் றன்னை விரும்பிமிக வுண்டாற்
குலாங்கிஷமா யையுங் குலாவு - மிலங்கருதி
போகமொடு சொறியும் புண்கரப்பா னுங்குதிக்கு
கோகநக மாதே குறி.

விலாங்கு மீனை உண்டால் கப ஆதிக்கமும், அரோசிகமும், தாதுவிருத்தியும், தவளைச் சொறியும், இரணமும், கடுவன் நோயும் உண்டாகும்.

## கிழங்கான் மீன் கறியின் குணம்

பத்தியத்திற் கேற்ற பருங் கிழங்கான் மீனருந்த
வுற்ற பிணியனைத்து மோடுங்காண் - மெத்தப்
பசியெழும்புஞ் சேர்ந்த பருமலமுஞ் சாடு
முசியா துடல் வளரு முன்.

கிழங்கான் மீன் கறியால் சகல நோய்களும், பழைய மலச்சிக்கலும் போகும். பசியையும், உடல் செழுமையையும் உண்டாக்கும்.

## ஆற்றுமீன் கிணற்றுமீன் கறியின் குணம்

ஆற்றுமீன் தாதுவை யுண்டாக்கு மையவெப்பை
யூற்று மருசியை விட் டோட்டுங்காண் - சாற்றுங்
கிணற்றுமீன் வாதகுன்மங் கீறுபித்தங் குஷ்டம்
பணைத்த பீலிகமுறும் பார்.

ஆற்றுமீன் வீரியவிருத்தியை உண்டாக்கும், சீத சுரத்தையும், நாவில் சுரக்கின்ற அரோசிக நீரைப் போக்கும். கிணற்று மீன், வாயு குன்மம், பைத்தியம், குறைநோய், பீலிகநோய் ஆகியவைகளை உண்டாக்கும்.

## மடு, குளம், ஏரி இவைகளிலுள்ள மீன்கறியின் குணம்

ஓடுமடு மீனா லுலவைபித் தங்களறுந்
தாது மேகங் கபமந்தங் களுண்டா - மோதுகுள
மாருமீன் றன்னா வழற்பிணி மந்தந்தீரு
மேரிமீன் மேகமடு மென்.

மடு மீனால் வாயுவும், பைத்தியமும் போகும். சுக்கிலமும், பிரமேகமும், கபமும், அக்கினி மந்தமும் உண்டாகும். குளத்து மீனால் சுரமும், கபநோய்களும், விலகும். ஏரி மீனால் பிரமேகம் நீங்கும்.

### கடல் நண்டுக்கறியின் குணம்

குன்மவலி வாதங் கொடுங்கரப்பா லுண்டாக்குங்
கன்மச் சொறியைத் தருவிக்கும் - பின்னு
முதிரக் கழிச்சறனை யோங்குவிக்கு மாதே
யதிரக் கடனண் டது.

கடல் நண்டுக் கறியால் வயிற்று நோய், வாதநோய், கடுவன், சருமசொறி, இரத்தக்கிராணி ஆகியவைகளை உண்டாக்கும்.

### வயல் நண்டுக்கறியின் குணம்

வயலிலுரு நண்டருந்த வாதக் குடைச்
சயலினு மிருக்கா தணங்கே - துயிலவொட்டா
வன் சயித்தி யங்கரப்பான் மன்குட லிரைச்சலும்போ
முன்பயித்தி யங்கதிக்கு முன்.

வயல் நண்டால் வாதக்கடுப்பு, தூங்கவொட்டாத கபநோய், குடல் இரைச்சல் ஆகியவை போகும். பித்தத்தை அதிகப்படுத்தும்.

### நத்தைக்கறியின் குணம்

நத்தைக் கறிதனக்கு நாடாது மூலமத
லொந்தமல ரோகமெலா மோடுங்கா - ணித்தநித்தஞ்
தின்றாற் செறியாத் தேடறிய தாதுவிர்த்தி
நன்றாகு மாதே நவில்.

நத்தைக் கறியால் மூல முளையும், மலக்குடல் பிணிகளும் நீங்கும். இதைத் தினமும் உட்கொண்டால் அசீரணமும், சுக்கிலப் பெருக்கமும் உண்டாகும்.

## ஆமைக்கறியின் குணம்

ஆமைக்கறி யருசியையும் பித்துண் மூலஞ்
சேமக் கனல்சூதிதா மேக - நாமரத்தப்
பேதி கிராணிமலப் பேதியகற்றும் பசியுந்
தாதுவுமே ருங்கொடுக்குந் தான்.

ஆமைக்கறி, அரோசிகம், பித்தம், உள்மூலம், உட்சூடு, கர்ப்பமேகம், இரத்த அதிசாரம், சீதக்கிராணி, மலபேதி ஆகியவைகளை நீக்கும்.

## சுக்கின் குணம்

குலைமந்த நெஞ்சரிப்பு தோஷம்மேப்பம் மழலை
மூலமிரைப் பிருமன் மூக்குநீர் - வாலகப
தோஷ மதிசாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோஷ மாமம் போக்குஞ் சுக்கு.

வாதப் பிணிவயி றுதற் செவியாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழுநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகவிடி கபமார்.

சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
நெறிபடு மெனமொழி குவர்புவி தனிலே
யீதுக் குதவு யீதுக்குதவா தெனும்விதி
யிலைநவ சுறுகுண முளவே சுக்கு.

சுக்கினால் விலாக்குத்தல், அசீரணம், மார்பு எரிச்சல், புளியேப்பம், தோடங்களின் குணம், வெப்பம், ஆசனநோய், சுவாசம், காசம், கபபீனிசம், நீர் ஏற்றம், மேகவாதம், குன்மம், நீர்க்கோர்வை, சீர்க்க கிராணி, வாதநோய், சூலைவலி, சீதபேதி, பலவித அரோசிகம், பாண்டு, வயிற்றுக்குத்தல், கபம், சீதசுரம்

முதலியவை நீங்குமெனச் சொல்லுவர். ஆயினும் இதனால் உண்டாகும் ஆரோக்கியத்தைக் கருதுமிடத்து இந்நோய் களுக்கு உபயோகப்படத் தக்கது என்றும் கூறுவர்.

தேரையர் கூறிய இரண்டாவது செய்யுளில் முதியவர் என குணப்பாடங்களில் கூறியிருப்பதை உற்றுப்பார்க்கில் சுக்கு இந்நோய்க்கு உதவாது எனவும் சொல்லியிருப்பதும், தவிர இச்சுக்கு மூர்த்திகள் சொரூபம் என்று சொல்லும் திருக்கழுத்துக்கு முதல் மருந்தாயும், சித்தவைத்தியர்கள் கையில் எடுக்கக்கூடிய ஆயுதமாகும். சிருஷ்டிகளுக்கு கர்த்தாவாகிய பிரம்மனை தனக்கு அதிதேவதையாய் பெற்றிருப்பதாயும், பிரம்ம குலமாயும், பாகத்தின் பேதங்களையும், மருந்துகளாகவும், சஞ்சீவியின் பெயராகிய கோடதகம் என்றும் நாமங்களைக் கொண்டிருப்பதாலும், சகல நோய்களையும் நீக்கும் என்பது கருத்து.

**மிளகின் குணம்**

*சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்*
*வாத மருசிபித்த மாமூல - மோதுசன்னி*
*யாசம பஸ்மார மடன்மேகங் காசமிவை*
*நாசங் கறிமிளகி னால்.*

*கோணுகின்ற பக்கவலி குய்யரோகம் வாத*
*சோணிதங் கழுத்திற்குட் போன்று நோய் - காணரிய*
*காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீ*
*ரேதுநோய் காயிருக்கி லீங்கு.*

மிளகினால் குளிர்சுரம், பாண்டு, கபம், கிராணி, குன்மம், வாயு, அரோசிகம், பைத்தியம், மூலம், சன்னியாசம், அபஸ்மாரம், பிரமேகம், இருமல், பக்கவாதம், குய்ய நோய், சுரோணித வாதம், கண்நோய், காதுவலி, இரத்தக் குன்மம் ஆகியவை போம்.

### வெள்ளை மிளகின் குணம்

வெள்ளை மிளகருந்த வீறு கிரகணிபோந்
தள்ளுகப வாதந் தானேகு - முள்ள
சுரம்போகுந் தீபனமாந் தென்மேகம் போழுத்
திரம்பார்த் தெவர்க்குந் தெரி.

வெள்ளை மிளகினால் கிராணி, சிலேத்ம வாதம், சீழ்ப்பிரமேகம் இவை நீங்கும். சாடராக்கினி நீரை உற்பத்தி செய்யும்.

### வால்மிளகின் குணம்

வாதபித்த மையம் வயிற்றுவலி தாகஞ்
சீதம் பலநோய் சிதையுங்காண் - போத
வதி தீபனமா மணங்கரசே நாளுந்
துதி வான்மிளகருந்தச் சொல்.

வால் மிளகினால் முக்குற்றம், குன்மம், தாகம், வெட்டை முதலிய நோய்கள் விலகும், பசியுண்டாகும்.

### திப்பிலியின் குணம்

இருமல்குன்ம மிரைப் பாசயப்பிணி
யீளைபாண்டு சன்னியாசம் ரோசகம்
பொருமலுதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
பூரிக்குஞ்சல தோஷம்பீலிகமும்.

வருமலப்பெருக் கோடுமகோதரம்
வாதமாதிமுத் தோஷஞ் சுரக்குளிர்
பெருமலைப்புரி மேகப்பிடகமும்
பேருந்திப்பிலிப் பேரங்குறைக்கவே.

ஆசனநோய் தொண்டை நோ யா வரண பித்தமுத
னாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய் - வீசிவிடு
யங்கலாஞ் சனஞ்சிதையு மப்பா யழிவிந்தும்
பொங்கலாஞ்ச நக்கையர் கோட் போல்.

திப்பிலியால் காசம், கபகுன்மம், சுவாசம், ஈளை, இளைப்பு, பாண்டு, வயிற்று உப்பிசம், தலைவலி, மூர்ச்சை, நீர் ஏற்றம், பீலிகநோய், அதிசாரம், பெருவயிறு, திரிதோஷ நடுக்கல், சுரம், மேகக்கட்டி, ஆசனநோய், நெஞ்சு நோய், பித்தம், பீனிசம், விழிநீர்க் கம்மல், கர்ண நாதம், கிருமி, முகத்தில் எழும்புகிற கருப்பு மச்சம் ஆகியவை நீங்கும்.

### யானைத்திப்பிலியின் குணம்

வாதமறுந் தீபனமா மாறாக் கபங்கரப்பா
னோதுகுரற் கல்மலிவை யோடுங்காண் - பூதலத்திற்
சோணையைநேர் நாசியினீர் தோலாச்சுவாசமும்போம்
யானையினற் றிப்பலியா லாய்.

யானைத்திப்பிலியால் வாதம், கபம், கரப்பான், சுரநோய், நீர்ப்பீனிசம், இரைப்பு இவைகள் நீங்கும். பசியை உண்டாக்கும்.

### திப்பிலி மூலத்தின் குணம்

தாகபித்தஞ் சோகந் தணியாச்சுரமிருமன்
மேகங் குரற்கம்மன் மெய்க்கடுப்பு - மேருங்காண்
திப்பிலிமூ லங்கண்டத் திப்பிலிய தாறனுக்குத்
திப்பிலியென்றே யொருகாற் செப்பு.

திப்பிலி மூலத்திற்குப் பித்ததாகம், மூர்ச்சை, சந்த சுரம், தாகப்பிரமேகம், சுக்கிலநோய், சரீரவலி ஆகியவை போம். இதைத்திப்பிலி மூலம், கண்டத்திப்பிலி, நறுக்கத் திப்பிலி, நறுக்கு மூலம், தன் மூலம் எனவும் கூறுவர்.

### திரிகடுகின் குணம்

முக்கடுகா லாகியநோய் மூலங் கொடிறுபிணி
திக்கடு பாண்டோடு சிரத்துறுநோ - யக்கடுக்குந்
தாவரநஞ் சென்றுலகிற் சாற்றுகின்ற நோய்முழுதுந்
தீவரநஞ் சுண்டிதற்குந் தேர்.

திரிகடுகாற் சீதபித்தஞ் சிக்குவை நோய்க்கீட
மெரிக்கடுதே லீளையிருமல் முடுக்கு - தெரிசன்னி
யாமழிசி யபஸ்மார மற்புதப்புண் மிக்க
வீசுசர்க் கராநோய்போம் விள்.

திரிகடுகு என்பது சுக்கு, மிளகு, திப்பிலி ஆகும். இவைகளால் வாதம், காதுநோய், பாண்டு, தலைநோய், மூலாதாரத்தைப்பற்றிய நோய், தாவரவிடம், கபபித்தம், சர்ப்பவிடம், தேள்விஷம், கோழை, காசம், சன்னி, ஆயாசம், அரோசகம், அபஸ்மாரம், அற்புத ரணம், நாடிரணம் ஆகியவை விலகும்.

## கடுக்காயின் சிறப்பு

கடுக்காயுந் தாயுங் கருதிலொன் லென்றாலும்
கடுக்காயத் தாய்க்கதிகங் காணீ - கடுக்காய்நோ
யோட்டி யுடற்றேற்று முன்றவன்னை யோகசுவைக
ளூட்டியுடற் றேற்று முவந்து.

கடுக்காயும், தாயும் ஒன்றெென நினைத்தாலும், தாயைப் பார்க்கிலும், கடுக்காயே அதிகமாம். ஏனெனில் கடுக்காய் நோய்களை நீக்கிச் சரீரத்தைத் தேற்றக்கூடிய தாயானவள். அருசுவை உணவை ஊட்டி உடலை வளர்ப்பாள். பிணிகளை நீக்கினால் அல்லவோ உணவு மட்டும் ஊட்டும் தன்மையால் தாயினும் கடுக்காய் சிறந்ததென கூறினார்.

## கடுக்காயின் பொதுக்குணம்

தாடைக் கழுத்தக்கி தாறி குறியிவிடப்
பீடை சிலிபமுதற் பேதிமுட - மாடையெட்டத்
தூலமிடி புண்வாத சோணி காமாலையிரண்
டாலமிடிபோம் வரிக்கா யால்.

கடுக்காயினால் சுன்னம், சுனம், கண், நா, ஆண்குறி இவ்விடத்து நோய்கள் குணமாகும். மேலும் அதிசாரம்,

பக்கவாதம், அதிதூலம், இடிப்புண், சுரோணித வாதம், மஞ்சட்காமாலை, தாவரசங்கம விஷங்கள் ஆகியவைகள் போகும்.

### கடுக்காய்ப்பிஞ்சின் குணம்

வனதுர்க்கிச் சேய்க்கு மணித்தயிலம் பூசி
யனலிற் பொரித்தாங் கருந்தத் - தினமுமலச்
சிக்கிலக் கடுப்பநின்ற சீதமறுங் காற்றுகைத்த
முக்கலக் கடுப்பிருக்கு மோ.

கடுக்காய்ப் பிஞ்சானது ஆமணக்கு நெய்தடவித் தீயில் வறுத்து, தூள்செய்து அப்போதே உட்கொண்டால் மலச்சிக்கலும், எலும்பைப் போல் வருத்துகின்ற சீதமும் நீங்கும். மூலவாயுவினால் பிறந்த முக்கலும், ஆசனக்கடுப்பும் இருக்குமோ, இராது என்பது கருத்து.

### கடுக்காயின் பேதம்

ஆதிவிசய னரோகிணி யோட பிருதி
தீதிலமிர்த சிவந்தி மலை - மீதார்
திரிவிருந் தியபயன் செப்பிலிவை யேழா
மரிதகியின் பேர தறி.

கடுக்காய் 7 வகைப்படும், அவை விஜபன், அரோகிணி, பிருதிவி, அமிந்தை, சிவந்தி, திரளுந்தி, அபயன் என்பவனாகும்.

### 1-வது விசயன் கடுக்காயின் குணம்

விசயனெனுங் கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்
நிசமதுதான் வாதத்தை நீக்கு - முசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய் போலிருக்கும் பேரவந்தி யாதேசம்
வாய்ச்சிருக்கு மக்காயை வாழ்த்து.

பேய்ச்சுரைக்காய்க் குறியுள்ள விசையன் என்கிற கடுக்காய் வாதநோயைப் போக்கும். இது அவந்தி தேசத்தில் உற்பத்தி ஆகிறது.

**2-ஆவது ஆரோகிணிக்கடுக்காயின் குணம்**

ஓதுமரோ கிணிக்கா யொன்றுண் டானாற்சன்னி
பாதமொடு சீதம் பறக்குங்காண் - மீதுகுறி
நான்கு வரியாய்த்தோற்று நங்கா யதன்றோ
மாங்கு கன்னியாகுமாரி யாம்.

கன்னியாகுமாரி தேசத்தில் விளைகின்ற கடுக்காயால் சன்னிபாத நோயும், சீதமும் நீங்கும். இதன் மீது நான்குவரைக் கோடுகள் போல் குறி இருக்கும்.

**3-ஆவது பிருதிவிக்கடுக்காயின் குணம்**

தோற்றும் பிருதிவிதான் றோலாப் பயித்தியத்தை
மாற்றும் வயதை வளர்க்குமதன் - மேற்றோலோ
மெல்லியதா மக்கால் விளைதேச மேதென்னில்
வல்ல சவுராட்டிகமாய் வாழ்த்து.

மெல்லிய தோல் உள்ள பிருதிவிக் கடுக்காய் பித்த நோயை நீக்கும். ஆயுளை விருத்தி செய்யும், சௌராஷ்டா தேசத்தில் உற்பத்தி ஆகிறது.

**4-ஆவது அமிர்தக்கடுக்காயின் குணம்**

அமிர்த மெனுங்கடுக்கா யம்புவியி லுள்ள
திமிர்த சிலேட்டுமத்தைத் தீர்க்கும் - வமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றிலதன் றேசங்
கதிக்கொத்த காசியென்பார் காண்.

விம்மிச் சதை மிகுந்த அமிர்தக் கடுக்காய் கண்டத்தில் ஒரு ஒலியைத் தருகின்ற கபத்தை ஒழிக்கும். இது காசி தேசத்தில் உற்பத்தி ஆகிறது.

## சிவந்திக் கடுக்காயின் குணம்

சிவந்தியெனுங் கடுக்காய் செய்குணத்தைக் கேட்பாய்
விவர்ந்த மூலத்தையெலா மேய்க்குஞ் - சிவந்ததிகப்
பொன்னிறம தாயிருக்கும் பூங்குழலே யக்கடுக்காய்
தன்னுவனந் தோறுமுண்டாஞ் சொல்.

பொன்னிறச் சாயலுள்ள சிவந்திக் கடுக்காய் வாத மூலநோய்களை விலக்கும். இது காடுகளில் உண்டாகும்.

## திரிவிருத்திக் கடுக்காயின் குணம் - இதுவே மொந்தன்

திரிவிருத்திக் கடுக்காய் தேகத்தி னாளும்
வருவிரணம் போக்குமதன் வன்ன - மொருவிதமோ
பஞ்சவன்ன மூவரம்பு பற்றி யிருக்குமது
விஞ்சுமலை தோறுமுண்டாம் விள்.

வெண்மை, கருமை, செம்மை, பசுமை, மஞ்சள் என்னும் ஐந்து நிறங்களும், மூன்று வரியும் உடைய திருவிருத்திக் கடுக்காய் சகலவிதமான இரணங்களையும் நிவர்த்தி செய்யும். இது மலைகளில் உண்டாகும்.

## அபயனென்னும் கடுக்காயின் குணம்

அபய னெனுங்கடுக்கா யங்கநோ யெல்லா
மபயமிட் டோட வடிக்கு - மபயங்
கதிக நிறங்கறுப்ப தாகும் விளைபூமி
பொதிய மலையாம் புகல்.

கருமை நிறத்தையுடைய அபயன் கடுக்காய் எலும்பைப் பற்றிய நோய்களெல்லாம் நீக்கும். இது பொதிகை மலையில் உற்பத்தியாம்.

**சங்கரசாதிக் கடுக்காய் நான்குவகையில் 1-வது கருங்கடுக்காய் குணம்**

பழமலத்தைப் போக்கும் பகரி லுடலுக்
கழகுதரும் புத்தி யளிக்கும் - பழைய
மருங்கடுத்த வாதபித்த வன்பகத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்கா யென்றுளத்திற் காண்.

கருங்கடுக்காயாவது பழைய மலக்கட்டையும், திரிதோட நோய்களையும் போக்கும். அழகையும், அறிவையும் கொடுக்கும்.

**2-வது செங்கடுக்காயின் குணம்**

சுத்தியொடு புத்தி சுகமும் புகழுமுண்டா
மெத்தவொளிர் பொன்னிறமா மேனியெல்லாஞ்
சுந்தகப
வங்கடுத்த வீளைபல வன்காச மும்மலஞ்
செங்கடுக்காய்க் கில்லையெனத் தேர்.

செங்கடுக்காய்க்கு மலாசயசுத்தி அறிவு இன்பம், கீர்த்தி சரீரத்தில் பொற்சாயல் ஆகியவை உண்டாகும். கபக்கோழை, பலவித இருமல், மலக்கட்டு ஆகியவை விலகும்.

**3-வது வரிக்கடுக்காயின் குணம்**

மிடுக்காக்குந் தேகத்தை விண்டுவை யுண்டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந் துடுக்கான
வாதபித்த வையகற்றும் வன்னியொடு நவ்விதருஞ்
சாதிவரிக் கடுக்காய் தான்.

வரிக்கடுக்காய் சரீர வன்மை, தாதுவிருத்தி, அசனசீரணம், வாதபித்த தோடங்களை அகற்றும். அழகையுண்டாக்கும்.

**4-வது பால்கடுக்காயின் குணம்**

ஆமங் கெடுங்கா ணழகும் பொலிவுமிகுந்
சேமம் பெருமலமுஞ் சேருமே - தாமனெடும்
வேர்க்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே யெப்போதும்
பாற்கடுக்கா யுண்பவரைப் பார்.

பால் கடுக்காயால் சீதக்கிராணி நீங்கும். வனப்பு, சரீரவன்மை இவை விருத்தியாகும்.

**நெல்லிமுள்ளியின் குணம்**

ஆகவனலஞ் சசியர்க் கென்புருக்கி கண்ணோய்
தாக முதிரபித்தந் தாதுநட்டம் - மேனகத்தி
னில்லிமுள்ளி போலருக லெண்கா மியவியங்க
நெல்லிமுள்ளி யாற்போம் நினை.

நல்லநெல்லி முள்ளியது நாவுக் குரிசைதரு
மல்லல் விரிபித்த மகற்றுமதை - மெல்லத்
தலைமுழுகக் கண்குளிருந் தாவுபித்த வாந்தி
இலையிழி மேகங்களும்போ மெண்.

நாவுக்குரிசை தரா நின்ற நெல்லிமுள்ளியால் உட்சூடு, சோமநோய், மாதர்கள் ருது தோடம், மூலாதாரக் கொதிப்பு, தூம்பிரதகம், ரத்தப்பித்தம், விம்மி இரணம், அருகில் ஆண்குறி கொப்புளம், பைத்தியம், பித்தவாந்தி, பிரமேகம் ஆகியவை விலகும். இதை அரைத்துத் தலையில் கட்டி முழுக நேத்திரம் குளிரும்.

**தான்றிக்காயின் குணம் - இது தானிக்காயென மருவியது**

சிலந்திவிடங் காமியப்புண் சீழான மேகங்
கழந்திவரும் வாதபித்தங் காலோ - டடர்ந்துடலி
லூன்றிக் காய்வெப்ப முதிரபித்துங் கரக்குந்
தான்றிக்காய் கையிலெடுத் தால்.

ஆணிப்பொன் மேனிக் கழகு மொளிவுமிகுங்
கோணிக்கொள் வாதபித்தக் கொள்கைபோந் - தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகமறுங் கூறா வனற்றணியுங்
கண்டவர்க்கு வாதம்போங் காண்.

தான்றிக்காயால் சிலந்திவிடம், ஆண்குறிக்கிரந்தி, சீழ்ப்பிரமேகம், திரிதோட சுரம், வாதபித்த தொந்தம், பித்தநீர், உட்சூடு, வாதகோபம் இவை போம். அழகும், ஒளியும் உண்டாகும்.

## திரிபலத்தின் குணம் - இதுவே கடுநெல்லி தான்றி

வித்திரதி நாசிநோய் வெண்குஞ்ட மாசனப்புண்
குற்றிருமல் பாண்டுகுஷ்டங் குன்மமிரைப் -
பொற்றுமத
மூர்ச்சைபீ லிசும்பிரம மோடுறுபுண் சர்வவிட
மூர்ச்சையறு முப்பலத்தான் முன்.

திரிபலத்தால் வித்திரி, பீநஷம், வெள்ளைக்குஷ்டம், பசுந்தரம், புகையிருமல், பாண்டு, பெருவியாதி, குன்மம், சுவாசம், மதநோய், மூர்ச்சை, பீலிகட்டி, பிரமேகம், வயிற்றுநோய், விரணம், சர்வவிடங்களால் வந்த சோபம் ஆகியவை நீங்கும்.

## பேரீச்சங்காயின் குணம் - இதுவே கர்ச்சூர்க்காய்

வாயிலுண்டா முற்றலை மாற்றும் பசியில்லை
யாயிலுண்டா லுண்டா மதுமேக - நோயுள்
பெருநீர் மறுக்குமினுப் பெண்களைக் கூட்டுங்காற்
றருநீர்மை தருச்சூரக்காய் தான்.

பேரீச்சங்காய் உமிழ்நீர்ப் பெருக்கையும், மதுநீரையும் போக்கும். பசியையும் புணர்ச்சியில் நிருவாகத்தையும் உண்டாக்கும்.

## கண்டுபாரங்கியின் குணம் - இதுவே சிறுதேக்கு

கண்டுபாரங்கியெனுஞ் சிறுதேக்குண்டாற்
காலெங்கேபித்தமெங்கே கபந்தாமெங்கே
தொண்டுதொட்டுத் தொண்டர் சுவாசகாசமெங்கே
சுரமெங்கேவெறியெங்கே தொனிநோயெங்கே.

மீண்டுபுரிபீசநீர்க் கோவையெங்கே
வெளிநீருண்ணிரெங்கே விரற்காலெங்கே
யாண்டுபடாச்சீதசுரங் கடுப்புமெங்கே
யழலையகநோயெங்கே யறைகுவீரே.

கண்டுபரங்கியென்கிற சிறுதேக்கினால், திரிதோடவி குணம், காசம், சுவாசகாசம், ரூட்சை, பைத்தியம், சுரசாதம், நாசிநோய், சலதோடம், முந்நீர்கோவை, புச்சாவர்ந்த வாதம், குளிர்சுரம், உடல்வலி, உடல்காந்தல், மனச்சங்கடம் இவை போக்கும்.

## அரத்தையின் பொதுக்குணம்

தொண்டையிற் கட்டுங்கபத்தைந் தூரத்துரத்திவிடும்
பண்டைச் சீதத்தைப் பறக்கடிக்குங் - கெண்டைவிழி
மின்னே கரப்பனை வேறாக்கும் பசிகொடுக்குஞ்
சொன்னோ மரத்தைச் சுகம்.

மார்பை யடர்பிணி மாகவாச காசமூலஞ்
சேர்சோபை தட்டச் சூர்வாத - சோணிததி
சுரத்தை யடுபடாமற் றூறுக ணேரி
னரத் தெடுத்துகளி தாம்.

அரத்தை நெஞ்சுக்கோழை, சீதளம், கரப்பான், கிருத்ரோகம், ஈளையிருமல், மூலம், வீக்கம், தந்தநோய், வாதசோணிதம், தீச்சுரத்தால் பிறந்த கபம், தந்த மூலம், பிணி இவைகளைப் போக்கும் பசியைத்தரும்.

**பேர் அரத்தையின் குணம் - இதுவே தும்ராஷ்டகம்**

வாத மிவுசிவலி சன்னி பித்தத்தையும்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீ - ரோதுபல
வாங்கடுப் பூப்படரு மாறு மொளியாரு
மீங்கட்கும் பேரரத்தை யால்.

பேரரத்தையினால் வாதநோய், பின்னிசிவு, வலிப்பு, சன்னிபாதம், பித்தகபம், நடுக்கற்சுரம், கிளைக்கின்ற புண், சிரசில் நீரேற்றம், சலவிடம், பெண்களின் ருது தோடம் இவை ஒழியும். மேனி வனப்பு உண்டாகும்.

**சிற்றரத்தையின் குணம்**

வாந்திபித் தங்கரப்பான் வாதஞ் சிரரோகஞ்
சேர்ந்தகப முத்தோஷஞ் சீதமொடு - நேர்ந்தசுர
மற்றரத்தைக் காட்டி வருமிருமலுந் தீருஞ்
சிற்றரத்தை தன்மருந்தாற் றேர்.

சிற்றரத்தையால் சர்த்தி, பைத்தியம், கரப்பான், வாயுசிரஸ்தாபம், சிலேஷ்மம், சிரதோடம், சீதளம், பலசுரம், காரமும் போகும்.

**வசம்பின் குணம்**

பாம்பாகி நஞ்சற் புதப்புண் வலிவிட பாகங்குன்மஞ்
சூம்பாரித்த பித்தம் முகநாற்றம் வன்சூலைசன்னி
வீம்பாம் பைசாரம் பிலீகஞ்சிலிபதம் வீறிரு
றாம்பாக்கிருமி யிவையேகு மாசி வசம்பினுக்கே.

வசம்பை விரும்பி உண்டாயானால் சர்ப்பக்கீர தாவரகிதந்திரம் முதலியவிடங்கள் அற்புரவிரணம், விடபாக நோய், குன்மம், இரத்தப்பித்தம், வாய்நாற்றம், சூலை, சன்னிபாதம், பீகாசம், பீலி கம்பாதவன்மீகம், காசம், வயிறுப்பல் நீண்ட மலக்கிருமி இவை போகும்.

### வட்டத்திருப்பியின் குணம்

ஐயநஞ் சூதைபித்தத் திக்கறைவ மாபிரமி
வெய்யசுரம் பேதி விரணமெலாம் - வையம்விடுத்
தெட்டத் திரும்பிவிடு மென்பை யூணாக்குமன்றி
வட்டத் திருப்பிவிடு மால்.

வட்டத்திருப்பி, சிலேத்ம கோபம், விடவாத தோடம், பித்தநோய், மூலாதாரநோய், பிரமியம், பித்தசுரம், அதிசாரம், சிரங்கு ஆகியவற்றைப் போக்கி மாமிச தாதுவை விருத்தி செய்யும்.

### கோஷ்டத்தின் குணம்

திட்டிகவுள கடுகளஞ் சென்னி தாவா
தெறிபினவெப்ப தைப்புதா வர்த்தமூதை
முட்டியெழு முளைவிரணஞ் சுவாசகாச
மூடிகத்தோ டரவுமரவிடங்கண் மேகக்.

கட்டிய கல்லிவிட பாகம்பூத
கணம்பால கிரகமொடு தாதுநட்டஞ்
சொட்டிவரு பிரமித்த மிவையொருங்கே
தொலையும் விரணரிக்குச் சுகப்பேராமே.

கோஷ்டத்தினால் கண், தாடை, வயிறு, கழுத்து, சிரசு, நாவாய் இவ்விடங்களின் நோய்கள், தோட சரவீக்கம், உதாவர்த்தகம், கம்பவாதம், மூளை முலசம், ஈளை, இருமல், எலி, சர்ப்பம், நாவி முதலியவிடங்கள், மேகப்பிடகம், அஜகல்லிகா நோய்வி பாகம் 18வகைப் பூதளங்கள், பால கிரகதோடம், வீரியநட்டம், வெள்ளை வீழல், பைத்தியம் ஆகியவை விலகும். சுகப்பிரசவம் உண்டாகும் என்க.

### அதிமதுரத்தின் குணம் - இதுவே மதூகம்

கத்தியரி குப்பிணியால் வகுப்புண் டாகுங்
கண்ணோயுள் மாதம்விக்கல் வலிவெண் குட்டம்

பித்தமெலும் புருக்கிரிச் சரமா வாந்த
பித்தமத மூர்ச்சைவிட பாகம் வெப்பந்

தத்திவரு வாதசோ னிதங் காமாலை
சருவவிடங் காமியநோய் தாதுநஷ்டம்
குத்திரும் வாசியங்க மிதன்நோ யித்து
குயப்புணும்போ மதூரகமெனக் கூறுங்காலே.

அதிமதுரத்தினால் ஆயுதங்களாற் உண்டான சத்தியோவிரணம், வாதாதிகளாற் பிறந்த நிஜவிரணம், நாவறட்சி, நேத்திரநோய், உள்மாந்தம், இத்தியாதி நோய், 5வித வலிகள், வெண்குட்டம், பைத்தியம், மூலாதாரநோய், மூத்திரக்கிரிச்சம், அவர்த்த பைத்தியம், மதம், மூர்ச்சை, பித்தவிட பாகம், சுரம் வாத சோனித வாதம், காமிலம், தாவரசங்கம், விடங்கள், குய்யநோய், சுக்கிலநட்டம், புகையிருமல், முகபாகம், சிரநோய், உஷ்ணநோய், சோமநோய், ஸ்தன விதத்தின்கட்டி ஆகியவை போகும்.

**அதிவிடயத்தின் குணம்**

அதிவிடயஞ் சருக்காரார்ப் புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை - யெதிர்வாந்தி
யென்றுரைக்கு நோய்க்கூட்ட மில்லா தகற்றிவிடுங்
குன்றைநிகர் முலையாய் கூறு.

அதிவிடயம், சருக்காரர்புத விரணம், சுரம், தேகமுள்,, அதிசாரம், ஈளை, மேல் நோக்கிய சர்த்தி முதலிய நோய்களைப் போக்கும்.

**அக்கரகாரத்தின் குணம்**

அக்கர கார மதன்பே ருரைத்தக்கா
லுக்கிர காலத்தோட மோடுங்காண் - முக்கியமாய்
கொண்டாற் சலமூருங் கொம்பனையே தாகசுரங்
கண்டாற் பயந்தோடுங் காண்.

அக்கரகாரத்தால் பயங்கரமான காலதோடமும், தாகசுரமும் நீங்கும். இதை வாயில் அடக்கிக்கொள்ள நீர் ஊறும்.

### கடுகுரோகிணியின் குணம்

மாந்தஞ் சுரமையம் வாயுகரப் பானாமச்
சேர்த்த மலக்கட்டு திரிதோடம் பேர்ந்த பொட்சிப்
புண்வயிறு நோயிவைபோம் பொற்கொடியே
பேதியுண்டாந்
திண்கடுகு ரோகணிக்குந் தேர்.

கடுகுரோகணிக்கு க்ஷீராலஜீரம், கணசுரம், கபாதிக்கம், வாதகோபம், கரப்பான், சீதபேதி, பழைய மலபந்தம், தோடவிரணம், வயிற்றின் வலி இது விலகும். விரேசனம் உண்டாகும்.

### பீதரோகணியின் குணம்

படர்நீலகாசம் படலமொடு பில்லந்
தொடரிமை களிற் றோன்றுந் - தோடமரு
மருவியெனச் சொல்லுகின்ற வக்கிநோ யேகு
மொருபீத ரோகணியை யுன்.

பீதரோகணியால் கருவிழி, நீலகாசம், கிருஷ்ண மண்டலம், இமைப்பற்றிய நீர்ப்பில்லம், கிருச்சிரோன், மீலனம் முதலிய நோய்கள் கபஆதிக்கம் இவைகள் நீங்கும்.

### கிரந்தி தகரத்தின் குணம்

சிறுபித்த நோயுந் திரைபெரிதல் போலுமெறிந்
தேறுஞ் சுவாசநோ யென்பதுவும் - வீறிப்
பரந்தசர்க் காப்புமும் பண்ணப் புகுங்காற்
கிரந்தி தகரத்தாற் கெடும்.

கிரந்தி தகரத்தால் பைத்திய நோயும், சுவாசநோயும், சர்ககாரர் புதவிரணம் ஆகியவை ஒழியும்.

### செவ்வள்ளிக் கொடியின் குணம்

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குட்டமொடு
கவ்வ குறைநோய் கரப்பானு - மிவ்வுலகின்
மானே குடல்வாதம் வல்ல கடுவனுட
னானபரு மூலமும்போ மால்.

செவ்வள்ளிக் கொடிக்கு வீறுகுட்டம், பெருவியாதி, கடுவன், குடலண்டம், நகம், குதிக்கால்களைப் பற்றிய கொப்பளம், மூலம் இவை தீரும்.

### சவ்வியத்தின் குணம் - இது செவ்வியமென மருவியது

சூலை யுருசிசன்னி தொல்லீரும் பீளைபித்த
மேலைக் குரற்கம்மல் வெங்களநோய் - மூலசுரங்
கவ்வி யங்கத்தேறு கனதாவர விஷமுஞ்
சவ்வியங் கொள்ளவிடுந் தான்.

சவ்வியத்தால், குத்தல், அரோசம், சன்னிவாத சுரம், நீடித்தகாசம், கோழை, பைத்தியம், சுரபாதம், தொண்டைப் புராண சுரம், எலும்பைப்பற்றி ஏறுகின்ற தாவரவிடம் ஆகியவை போம்.

### சடாமாஞ்சியின் குணம் - இதுவே பருங்கோரை

குட்டம் சிலந்திவிடங் கோர புராணசுர
முட்டினங்கால் பேதிகண்ணோ யொட்டிருமல்-
சொட்டிரத்த
பித்தமிரைப் போகும் பெருங்கோரை
யென்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சிலதனைச் சொல்.

சடாமாஞ்சியால் குட்டம், சிலந்திவிடம், பழையசுரம், உட்சூடு, வாயுபேதி, விழிநோய், காசம், ரத்தபித்தம், சுவாசம் போம்.

### விலாமிச்சவேரின் குணம்

மேகம் விழியெரிச்சல் வீறிரத்த பித்தமொடு
தாகமத மூர்ச்சை பித்தஞ் சார்மயக்கஞ் - சோகஞ்
சிரநோ யிவையேகுஞ் செய்ய விலாமிச்சக்
கெரிகிரமு மின்றென் றிசை.

விலாமிச்சினால் மேகநீர், கண் எரிவு, உதிரப்பித்தம், தாகம், மதம், மூர்ச்சை, பைத்தியம், மயக்கம், கோபம், தலைவலி, சுரம்போம்.

### பறங்கிப்பட்டையின் குணம்

தாகம் பலவாதந் தாதுநட்டம் புண்பிளவை
மேகங் கடிகிரந்தி வீழ்மூலந் - தேகமுடன்
குட்டை பகற்தரமேற கொள்வமனம் போம்பறங்கிப்
பட்டையிலை யுச்சரித்துப் பார்.

பறங்கிப்பட்டையால் தாபம், பற்பலவாதநோய், விந்துநட்டம், விரணம், பிளவை, நீரிழிவு, கடிவிடம், சிரங்கு, மூலமுளை, முடவாதம், குறைநோய், கபம், பகந்த புரப்புண், வாந்தி இவை கெடும்.

### பிசின்பட்டையின் குணம் - இதுவே மயிலாலக்கடி

தசையிலுஞ் சோரி தனிலும் பறந்தே
வசிபோற் குத்திக் குடையும் வாய்வை - நிசமாகக்
கொல்லு முடம்பிசின் கொதிப்பை
யொருநொடியில்
வெல்லும் பிசின்பட்டை விள்.

பிசின் பட்டை மாமிசத்தையும் உதிரத்தையும் பற்றி இருக்கின்ற ஆவிருவாதத்தையும், சரீர வெப்பத்தையும் போக்கும்.

**வெள்ளிலோத்திரத்தின் குணம்**

தாவரநஞ் சென்புருக்கி தாழா மகோதரநோய்
கூவ வொட்டாத குரற்சாதம் - பூவுலகில்
வெல்ல வரிதாய வியங்குமுதா வர்த்தமும்போம்
நல்லவெள்ளி லோத்திரத்தினால்.

வெள்ளிலோத்திரத்தினால் விஷமூலிகைகளின் நஞ்சு, எலும்புருக்கி, பெருவயிறு, குரற்கம்மல், வியர்கரோகம், உதரவர்த்தரோகம் இவை தீரும்.

**லவங்கப்பட்டையின் குணம்**

தாதுநட்டம் பேதி சருவவிட மாசியநோய்
மீதகிரஞ் சிலந்திப் பூச்சுவிடஞ் - சாதிவிட
மாட்டுமிரைப் போடிரும்ப லாதியநோய்க்
கூட்டமற
வோட்டு மிலங்கத்துரி.

இலவங்கப்பட்டையானது சுக்கில நட்டம், அதிசாரம், பற்பலவிடங்கள், வாயையனுசரித்து வாதம், தேவபூதமாகிய கிரகங்கள், சிலந்திவிடம், பாம்புவிடம், சுவாசகாசம் முதலிய நோய்கள் நீங்கும்.

**சன்ன லவங்கப்பட்டையின் குணம்**

சன்ன லவங்கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கு
மின்னு மிரத்தக்கடுப்பை யீர்க்குங்காண் -
முன்னமுறு
முந்திக் கடுப்பகற்று முண்மூலப் புண்போக்குங்
கந்தமிகு பூங்குழலே காண்.

சன்னலவங்கப்பட்டை, ரத்தக்கிராணி, வயிற்றுப் பிடுங்கள், மூன்றாம் வலய மூலவிரணம் இவைகளைப் போக்கிக் குளிர்ச்சியைத் தரும்.

### லவங்கப்பத்திரியின் குணம்

மேகசுரம் சீதசுரம் வெட்டைசுவா சங்காசந்
தாகபித்தம் வாந்தி சாவாகியநோய் - வேகத்தின்
கட்டியொடு தாதுநட்டங் கைப்பருசி போக்கிவிடு
மிட்ட விலவங்கத் திலை.

இலவங்கப் பத்திரி, பிரமேககரம், குளிர்சுரம், வெள்ளை இரைப்பு, இருமல், பித்ததாகம், வமனம்வுயிர், தாசியம், சம்புவிர்தகரி, மேகப்பீடகம், விரைவில் விந்து வெளியாதல், வாய்க்கசப்பு, அரோசகம் இவை நீங்கும்.

### லவங்கப்பூவின் குணம்

பித்த மயக்கமறும் பேதியொடு வாந்தியும்போஞ்
சுத்த விரத்தக்கடுப்புந் தோன்றுமே - மெத்த
வில்வங்கங் கொண்டவருக் கேற்ற சுகமாகு
மலமங்கே கட்டுமென வாழ்த்து.

சுக்கில நட்டங்களைச் சூர்வியங்க லாஞ்சனந்தாட்
சிக்கில்விடாச் சர்வாசி யப்பிணியு - மக்கிக்குட்
டங்கப் பூவோடு நரிபகிருந் தோன்றில
வங்கப் பூ வோடுரைத்து வா.

இலவங்கப்பூ பித்தகோபம், அதிசாரம், சர்த்தி, உதிரக்கிரகணி, ஆசனப்பிடுங்கள், விரைவில் விந்து வெளியாதல், செவிநோய், சிவந்த மச்சம், கறுத்த மச்சம், விவுர்தம், சம்பிவிவுர்தம் என்ற வாதங்கள் கண்ணில் பூப்படை முதலியநோய்கள் போம். மலங்கட்டும், சவுக்கியம் உண்டாகும்.

### சாதிக்காயின் குணம்

தாதுநட்டம் பேதி சருவாசி யஞ்சிரநோ
யோது சுவாசங்காச முட்கிரணி - வேதோ

டிலக்காய் வரும்பிணிபோ மேற்ற மயல்பித்தங்
குலக்கா யருந்துவர்க்குக் கூறு.

சாதிக்காய்க்கு விந்து நட்டம், அதிசாரம் ஆகிய வாதங்கள், தலைநோய், இரைப்பு, இருமல், உஷ்ணவாதக் கிராணி முதலியரோகங்கள் விலகும். மயக்கம், பித்தம் அதிகரிக்கும்.

**சாதிப்பத்திரியின் குணம்**

சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியு
மோதுகின்ற பித்த முயருங்காண் - தாதுவிர்த்தி
யுண்டாங் கிரகணியோ டோதக் கழிச்சலறும்
பண்டாங் குரையே பகர்.

சாதிப்பத்திரிக்கு அழற்சுரம், கிராணி, சலமந்தபேதி இவை நீங்கும். பைத்தியமும், சுக்கிலப்பெருக்கமும் உண்டாகும்.

**தாளிசப்பத்திரியின் குணம்**

நாசிகளுக்குப் பிணிக ணாட்பட்ட காசஞ்சு
வாச மருசி வமனங்கால் - வீசிவரு
மேகமந்த சுத்திசுரம் விட்டேகுந் தாளிச்சந்தா
லாகுஞ் சுகப்பிரச வம்.

தாளிசப்பத்திரியால் பீனிசம், கிளரோகம், நாட்சென்ற இருமல், இரைப்பு, அரோசகம், வாந்தி, வாய்வு, சீழ்ப்பிரமேகம், அசீரணம், அஸ்ததாது, கதசுரம் ஆகியவை போம். சுகப்பிசவம் உண்டாகும்.

**மூப்பத்திரியின் குணம்**

பத்திரிகண் மூன்றிற் பயிலுங் குணங்கேளாய்
நித்தமலக் கட்டு நீக்கிவிடுஞ் - சுத்தசுரந்
தாகமொடு வாந்திவிக்க றங்காவெக் காலையிலுங்
கோகிலமே யிக்குணத்தைக் கூறு.

லவங்கம், சாதி, சாளிசம் என்ற மூன்று பத்திரிகளாலும், மலபந்தம், தனிச்சுரம், அதிசுரம், வமனம், விக்கல் ஒழியும்.

**கற்கடகசிங்கியின் குணம் - இதுவே கடுக்காய்**

முக்கலையங் காசகப மூடு கிராணிமூல
சுக்கிரத்த பித்தங் கறைப்பேதி - யுட்குடலிற்
றங்கொலிநீர்ப் புண்சுரஞ் சபீரம்விட வெப்பிவை போஞ்
சிங்கியினாற் போகமுறுந் தேர்.

கற்கடகசிங்கியால் முக்கல், ஆமம், இருமல், காயம், கிரகணி, மூலமுளை, ரத்தபித்தம், ரத்தபேதி, குடல் இரைச்சல், மேகவிரணம், சுரம், விஷசுரம் ஆகியவை போம். வீரியம் உண்டாகும்.

**நாகப்பூவின் குணம்**

மதமூர்ச்சை பிரமியஞ் சுவாச காசம் புகைச்சல்
வுதிர் குற்றகம்மல்கீட விடஞ்சருவாசி யந்தே
எதிகாரங் கமலப்பண்ணோ ரத்தமூலம் மேகஞ்
சதிநீர் வந்து லினட் டம்போமரி நாகமலரினுக்கே.

நாகப்பூவிற்கு மதமூர்ச்சை, பித்த பிரமியம், இரைப்பு, இருமல், கண்புகை, நடுக்கல், கபவாதம், எலி முதலிய விஷம், வாயைப் பற்றிய வாதரோகங்கள், தேள், விஷம், பேதி, புண்டரீகக் குட்டம், உதிரமூலம், பிரமேகம், வெப்பு, வெகுமூத்திரம், விரைவில் சுக்கிலம் வெளியாதல் ஆகியவை குணமாகும்.

**சிறுநாகப்பூவின் குணம்**

சிறுநாகப் பூவினது செங்கைதனைச் சொல்வோங்
குறியாடு மேகத்தைக் கொல்லு - நெறியைவிட்டுத்
தீதாற்சொல் வாயுவைத் தீர்க்குமிரு மற்போகுங்
கோதா யிதையறிந்து கொள்.

சிறுநாகப்பூவினால் ஆண்குறியில் விழுகின்ற வெள்ளை, மார்க்கந்தப்பிய ஆவிருதவிதம், காசரோகம் இவைகளை நீக்கும்.

**கண்டில் வெண்ணை கூகை நீற்றின் குணம்**

கண்டில்வெண்ணெய் மாதேகேள் காந்திப்
பிரதாபமுமாந்
தொண்டெயினுண் ணீர்க்கட்டு தூரிருமன் -
மிண்டிவரு
நீர்க்கடுப்ப க்ஷலத்து ணீர்க்குத்தலும் போக்கும்
பார்க்கு ளறியைப் பகர்.

கூகைநீற்றான் மாதர் குய்யநோய் வுத்திரிதி
யாகமெனு மார்பினோ யண்டுமோ - போகமதில்
வீரியமு முண்டாக்கும் வீழ்கிருமி நோயோடுந்
தூரிரும லீளையும்போம் சொல்.

கண்டில் வெண்ணெயினால், காந்தியும், பிரதாபமும் உண்டாகும். தொண்டையின் நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு இவைபோம். கூகை நீற்றினால் யோனி நோய், விப்புருதிக் கட்டி இருந்தவாதம், கிரிப்புழு, காசம், கோழை இவை போம். விந்து விருத்தியாகும் வலிமைபெறும்.

**நாகணத்தின் குணம் - இதுவே நகம்**

தலைவலி நீரேற்றந் தலையிடுப்புக் குத்தற்
றொலையாம லிட்டுநோய் சோமை -
நிலைவிழிநோய்
பாகனைய சொன்மின்னே பருமுதர ரோகமும்போ
நாகணத்தி லேநீ நவில்.

நாகணத்தினால் சிரஸ்தாபம், சலதோடம், தலையிற் குத்தலுடலிருப்பு, மலட்டுநோய், வீக்கம் நீங்காத கண்நோய், பெருவயிறு இவை ஏகும்.

**மாசிக்காயின் குணம்**

அக்கரங்கள் போக்கிவிடு மாறாத வெப்பகற்று
மெய்க்குறுதி மாசிக்காய் மென்மேலுந் - தக்கதொரு
பாலர்கண் நோய்போக்கும் பன்மேகமுந்
தொலைக்கும்
வேலனைய கண்ணாய் விரி.

மாசிக்காய் பித்த சிக்குசுவாக்கண்டம், மாறாத உட்சூடு, சிசுக்களின் கண்மேகங்கள் இவைகளைப் போக்கும். உடலுக்குப் பலந்தரும்.

**வலம்புரியின் குணம்**

பூத பைசாசம் பொறுக்கொணா நேத்திரச்சூர்
சீதமிகு செவிநோய் கேவல்விக்க லோதுருளிர்த்
தோடமொடு மேகங்கூன் சொன்னவை யெலாநடுக்கிட
யோட வலம்புரியை யுண்.

வலம்புரிக்காயில் பதினெண் பூதங்கள் சகிக்கா விழிநோய், கர்ணநோய், இருமலன் தீவரத்தால் வருகின்ற கேவல விக்கல், சீதசுரத்தின் ஆயாசம், மேகம், கூன்விழுதல் ஆகியவை போம்.

**வாய்விளங்கத்தின் குணம்**

பாண்டு குட்டகுன்மம் பருந்தூல நோய்வாதந்
தீண்டுதிய விடஞ்சி ரந்துண்டதீண்டமடி
நோய்விளக்கங் காட்டாத நுண்கிருமி யானப்புண்
வாய்விளங்கச் சாட்டவிடு மால்.

வாய்விளங்கத்தால் பாண்டு, குட்டம், குன்மம், அதிதூலாம், வாயு சர்ப்பசீட தாவர விடங்கள், சிரசு, நாசி, வயிறு இப்பிணி உள்ளது என்று அறிய சன்ன கிருமிபகந்தம் இவை போம்.

### தக்கோலத்தின் குணம் இதுவே தக்கோலப்பொட்டு

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேருந்
தீண்டுமுப யாசியிமுந் தீருங்கா - ணீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்த மலமுங்கட்டுங்
கோதகலுங் தக்கோலங் கொள்.

தக்கோலத்தினால் சுரம், பாண்டு நோய், சுரமும் இருவிதமாகிய வாதங்களும்போம். பலம், விருத்தி, மலக்கட்டும் உண்டாகும்.

### விழல் அசிரிசியின் குணம்

விழலரிசி யென்றான் மிருபித்த மேகு
மழல் குடலின்வாத மகலுந் - துழவு
பரிதோட மேகமிவை சேராவா நீயுங்
குறியா யிதையறிந்து கொள்.

விழல் அரிசியால் பித்த ஆதிக்கம், சுரம் ஆந்திர பித்தவாதம், வாதபித்த கபதோடம், சீழ்பிரமேகம் ஆகியவை விலகும்.

### கார்போக அரிசியின் குணம்

கார்போக மாவரிசி கண்டாற் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவை பித்தமுறும் - பார்மீதில்
வாதகப நமைச்சல் வன்சொறி சிரங்குமறும்
சீதமலர்க் குழாலாய் செப்பு.

கார்போக அரிசியால் கடுவன், விரணம், பயங்கரமான சர்ப்பசீட தாவர விடங்கள், வாதசிலேத்தும தொந்தம், தினவு, யானைச்சொறி, கிரந்தி ஆகியவை விலகும். ஆனால் பைத்தியம் அதிகரிக்கும்.

### வாலுழுவை அரிசியின் குணம்

வயிற்றுக் கடுப்புவலி மாறாக் கிராணி
பயித்தியங் காசமல பந்தஞ் - சயிக்கவொணாச்
சூசிகா வாதமும்போந் தொல்வா லுழுவைவிதைக்
காதிநவ சித்தர்மொழி யாம்.

வாலுழுவை அரிசிக்கு வயிற்றுப் பிடுங்கல், கறுப்பையுடைய ரத்தபேதி, பித்தம், இருமல், மலக்கட்டு, அச்சுச்சுரம் இவைபோம்.

### வெட்பாலை அரிசின் குணம்

வெட்பாலை தன்னரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத - முப்பிசத்தை
காணாமலே நாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணார் முலையாய் புகல்.

வெட்பாலை அரிசியானது பைத்திய வாத தொந்தம், கடுவன், குடல் விர்த்தி நோய், வயிற்றுப்பொருமல் இவைகள் விலகும்.

### காசினிவிதை, துளசிவிதை - இவைகளின் குணம்

காசினி விதைக்குக் கதித்த வரோசிசர்த்தி
காசினியை விட்டேகுங் காணனமே - பேச
மளவி கற்பம்போ மருசி நடுங்குந்
துளசி னறுவிதைக்குச் சொல்.

காசினி விதைக்கு அருசியும், வாந்தியும், நீங்கும். துளசிவிதைக்குச் சிலேத்தமும், அரோசகமும் விலகும்.

### புத்திரசீவி விதையின் குணம்

ஆகியதோர் மூலமன லம்வெட்டை மேகமும்போம்
போகம் விளையும் பொறுமலுறுந் - தாகம்போம்

புத்திர சீவியெனப் போற்றும் விதையதனா
லித்தரையுண் மாதே யியம்பு.

புத்திரசீவி விதையினால் மூலசுரம், வெள்ளைநீர்ப் பிரமேகம், வயிற்றுப்பிசம், நாவறட்சி இவைபோம், சுக்கிலம் அதிகரிக்கும்.

**சமுத்திர சோஷி விதையின் குணம்**

ஐய மகற்று மரோசகத்தை மாற்றிவிடும்
பையுதிர வாயுவையும் பற்றறுக்கு - மெய்யை
யமிழ்த்துகின்ற நீரை யனிலத்தைப் போக்குஞ்
சமுத்திரநற் சோஷிவிதை தான்.

சமுத்திர சோஷி விதையானது கபதோடம், சோணித மந்தம், அருசி, அதிமூத்திரம் வாதாதிக்கமிவைகளை ஒழிக்கும்.

**கசகசாவின் குணம்**

கிருமி நமைச்சல் கிராணி யதிசாரஞ்
சிரநீர் நித்திரைபோஞ் செப்பி - லுருவழகுங்
காந்தியு முண்டாகுங் கசகசாவின் குணத்தை
தேர்ந்தவர்க்கு விந்துவுமாந் தேர்.

கசகசாவினால் ரசதாது கிருமி தினவு, சீதரத்தக்கழிச்சல், மலபேதி, சலதோடம், நித்திரை, பங்கம் இவைபோம். தேகத்தில் சவுத்திரியம், வனப்பு, சுக்கிலம் விருத்தியாகும்.

**பெரிய ஏலத்தின் குணம்**

தொண்டைவாய் கவுடா லுகுதங்களிற்
றோன்றுநோய் திசாரம்பன் மேகத்தா
லுண்டைபோ லெழுங்கட்டி கிரிச்சுர
முழலைவாந்தி சிலந்தி விடஞ்சுரம்

பண்டைவெக்கை விதாகநோய்காசமும்
பாழுஞ்சோமப் பிணிவந்து நட்டமுள்
வண்டை மீளவன்பித்த மிவைக்கெலா
மலாமாம் பருமேல மருந்தே.

பருத்த ஏலமானது கறச்சினம், பிந்தமுகபாகம், தாரை பாகம், பித்த சிக்வாகண்டம், சருமசீலம், பேதி, அரையாப்புக்கட்டி, கிரிச்சரம், வாயுமுலைசர்த்தி, சிலந்திவிடம், ரூட்சை, உஷ்ணபேதி, விநாயகம், இருமல், சோமநோய், வயிற்றில் கபநிறைவு, நெஞ்சில் கோழை, ரத்த பித்தமாகிய நோய்களை விலக்கும்.

## சிறு ஏலத்தின் குணம்

மலவாத மோடு வயிற்றுக் கொதிப்பு
சலமூரல் வாயினிப்பு தாகஞ் - சலபேதி
வேர்க்குந் தலைநோய் மிகுரூட்சை யையமிவை
பேர்க்குஞ் சிற்றேலமெனப் பேசு.

சிறு ஏலம் மலவிருதவாயு, நுரைத்த மலம், உமிழ்நீரூருதல், வாதம், சலபேதி, வியர்வைத் தலைவலி, மிகுசுரம், கபம் தீரும்.

## மலை ஏலத்தின் குணம்

நாவறட்சி தாகசுர நாடா தகற்றிவிடுந்
தீவறட்சி நீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண் - மூவறட்சி
கூடுமோ ரசத்தைக் கூடாம லோட்டிவிடுந்
நாடு மலையேல நவில்.

மலையேலமானது நாவறளல், வரட்சுரம், பித்தசொறி, நீர்ச்சுருக்கு, திரிதோட வறட்சியால் பிறந்த அருசி இவைகளைப் போக்கும்.

### காட்டு ஏலத்தின் குணம்

தீராத வாந்தி சிலேத்ம மதிசாரம்
பேரா வருசிபித்தம் பேருங்காண் - சோறாமல்
காட்டேல் வார்க்குழலே காராம் பரிமளஞ்சேர்
காட்டேல மென்றுரைக்குங் கால்.

உரைப்பும், மணமும் உள்ள காட்டு ஏலத்தினால் நீங்காதசர்த்தி, கபம், பேதி, அரோசகம், பைத்தியம் இவை போம்.

### சீரகத்தின் குணம்

வாந்தி யருகுன்மம் வாய்நோய் பிலீகமிரைப்
பேந்திருமல் கல்லடைப்பு லாஞ்சனமுட் -
சேர்ந்தகம்ம
லாசன குடரியெனு மந்தக் கிரகணியும்
போஜன குடாரியுண்ணப் போம்.

வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது
காய நெகிழாது கண்குளிருந் - தூயமலர்க்
காரளகப் பெண்மயிலே கைகண்ட தித்தனையுஞ்
சீரகத்தை நீதினமுந் தின்.

சீரகத்தினால் பித்த சாந்தி, அரோசிகம், வயிற்றுவலி, முகரோகம், பீலகநோய், சுவாசகாசம், அசமறி மச்சம், சுரக்கினம், சீதரத்தகிராணி, வாதாதிக்கம், பீனிசம், பைத்தியமும் விலகும். சரீரத்திற்கு உறுதியையும், கண்ணுக்கு குளிர்ச்சியையும் தரும்.

### பெருஞ்சீரகத்தின் குணம் - இதுவே சோம்பு

யோனிநோய் குன்ம முருட்சை மந்தம்பொருமல்
பேனமரு காசம் பிலீசுமிரைப் - பீனவுரை
சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகந்தான்
மூக்குநோ யில்லை யொழி.

பெருஞ்சீரகத்தினால் வாமினியோனி ரோகம், வயிற்றுவலி, சுரம், அசீரணம், வயிற்றுப்பிசம், நுறைத்த கபயிருமல், பீலிகம், சுவாசம் தொனிகத்த வாதம், அதிதும்மல், பீனிசம் இவை போம்.

**கருஞ்சீரகத்தின் குணம்**

கருஞ் சீரகத்தாற் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சீராய்ப் பீநசமு மாறி - மருந்தினாற்
காச்சல் தலைவலியுங் கண்வலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை.

கருஞ்சீரகமானது மண்டைக்கரப்பான் விரணம், சீராப்பீநிச நோய், உட்சூடு, சிரநோவு, கண்ணோய் இவைகளைப் போக்கும்.

**காட்டுச்சீரகத்தின் குணம்**

கைகறுப்பு மாறுங் கடியமேகம் போகு
மெய்க்குத் தண்ணாயபித்தம் வீறாவாங் - கைக்கரிமாக்
கோட்டுப் பணமுலையாய் குன்ம வாதந்தொலையு
காட்நற் சீரகத்தைக் காண்.

காட்டுச்சீரகத்தால் உள்ளங்கைக் கரும்புள்ளி, பிரமேகம், பைத்தியம், வாதகுன்மம் இவைபோய் குளிர்ச்சியுண்டாகும்.

**பிளப்பு சீரகத்தின் குணம்**

உடலுக் கழகா முறைபித்த மேரு
மடலீறு வாத மதமாங் - கடிசேர்
தளவுநகைக் கோட்டுமுலைத் தையலே நாளும்
பிளவுநறுஞ் சீரகத்தைப் பேண்.

பிளப்பு சீரகத்தினால் நீங்காத பைத்தியமும், வாதகோபமும் நீங்கும். சரீரத்திற்கு அழகுண்டாகும்.

## கொத்தமல்லியின் குணம் இதுவே உருள் அரிசி

கொத்தமல்லி வெப்பங் குளிர்காய்ச்சல் பித்தமந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டங் - கத்தியெழும்
வாத விகாரமடர் வன்கர்த்தபி விரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று.

கொத்தமல்லியானது உட்சூடு, தளிர்சுரம், பைத்தியம், பைத்தியவேகம், அசீரணம், வாந்தி, விக்கல், நாவறட்சி, விரைவில் சுக்கிலம் வெளியேறுதல், பெரும் ஏப்பம், கர்த்த விரணம் இவைகளைப் போக்கும்.

## செங்கடுகின் குணம்

இடிகாச நாசிச்சூ ரீளைகபம் பித்தங்
கடிவாத சீதங் கடுப்போ - டுடலிற்
பங்கோட்டு நோயென்னும் பங்கிவளைச் செங்
கடுகோட்டு மேன்மருந்து காண்.

பந்தமயக்கம் வாதம் வாய்நீர்ச் சுடிற்றலறு
முந்து சுகப்பிரசவங்க ளுண்டா - மிந்துநுதன்
மானே கிரகணிக்குன்ம மாறுமுத் தோஷங்களறுந்
தானே கடுகிற்கு தான்.

செங்கடுகு தலையிழைப்பைத்தரா நின்ற இருமல், பீனிசம், கோழைக் கபம், பைத்தியம், காணா விஷக்கடி, வாதகபம், குடைச்சல், முடம், அக்கினி மாந்தம், வாததோடம், குழம்பிய உமிழ்நீர், கிராணி, வயிற்றுவலி, திரிதோடம் இவைகளை விலக்கும். சுகப்பிரசவத்தை அளிக்கும்.

## வெண்கடுகின் குணம்

பாலகிரகம்பூத பைசாச மோட்டி விடு
மால விஷங்கடிக ளாற்றுங்காண் - கோலமிகு
வள்ளைச் செவிமாதே மாபங்க நோய் விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி.

வெண்கடுகானது கந்தகிரகம் முதலிய பாலகிரகங்கள், தேவபூத முதலிய 18 வாத பூதங்கள், மகா சர்ப்பவிடம், வண்டு முதலிய விடக்கடிகள், பங்கு வாதம் இவைகளைப் போக்கும்.

### சிறுகடுகின் குணம்

தோலிரத நெய்யூன்மே தோதாது வின்வளிக்கு
மேலிரணப் பூச்சு விடங்கபநோய் - காலிங்
கெறியகடு விருமலும்போ மேந்தெழிலார் மாதே
சிறியகடுகின் குணத்தைத் தேர்.

சிறுகடுகினால் விடம், சிலேத்தும நோய், மூச்செறியச் செய்கின்ற வயிற்று விம்மல் இவை நீங்கும். இது சருமம், ரத்தம், மாமிசம், மேதை ஆகிய இத்தாதுக்களின் வாயுவினால் பிறக்கின்ற பிணிக்கு விரணம் உண்டாகும்படி பூசுகிற லேபன சிகிச்சைகளும் ஆம்.

### நாய்க்கடுகின் குணம்

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதகபமும்போம்
வாதவலிகுன்ம மடியுங்காண் - மாதுநல்லாய்
பேய்கட் புகைபோடப் பேசா தொழிந்துவிடு
நாய்க்கடுகை நீ விரும்பி னால்.

நாய்க்கடுகினால் வாதக சீர்க்காரம், வாதசோணிதம், வாதக்கடுப்பு, குன்மம் இவைபோம். இப்புகையால் பூதபைசாசங்கள் விலகும்.

### வெந்தயத்தின் குணம்

மேதிகண மத்திசு மேகங் கயஞ்சீத
பேதியதிசாரநோய்ப் பித்திரும லாதியநோய்
நீக்குமன றணிக்கு நித்தமுற விந்துவையுண்
டாக்கு மனமே யறி.

வெந்தயமானது கணமாந்தம், அஸ்திசுரம், பிரமேகம், க்ஷயம், சீதக்கழிச்சல், பேதி, இரத்தபித்தம், காசம், உட்சூடு முதலிய பிணிகளை விலக்கி நிரந்தரமான சுக்கிலத்தை விலக்குமென்க.

### ஓமத்தின் குணம்

சீதசுரங் காசஞ் செரியா மந்தம் பொருமல்
பேதியிரைச் சற்கடுப்பு பேரா - மோதிருமற்
பல்லோடு பண்மூலம் பசமில்லோ யென்செயுமோர்
சொல்லொடு போமெனச் சொல்.

ஓமத்தினால் குளிர்சுரம், இருமல், அசீரணம், வயிற்றுப்பிசம், அதிசாரம், குடல் எரிச்சல், ஆசனக்கடுப்பு, சீதபேதி, சுவாசகாசம், தந்தரோகம், தந்தமூலரோகம், குய்யரோகம் இவை விலகும்.

### குரோசாணி ஓமத்தின் குணம்

வெகுமூத்திர வாதம் வீரியநட் டம்புண்
ணுகுபேதி யுட்கடுப்பி னோடே - மிகுகரப்பான்
தீராக் கபமிவைபோஞ் செய்யகுரோ
சாணியென்றால்
வாரா மயக்கமுறு மால்.

குரோசாணி ஓமத்தினால், அதிமூத்திரம், வாத ஆதிக்கம், விரைவில் விந்து வெளியாதல், விரணம், வாதாதி சாரம், உடற்கடுப்பு, கரப்பான், நீங்காக்கபம் இவை போம். அதிமயக்கம் உண்டாகும்.

### சதகுப்பையின் குணம்

வாதமொடு சூதிகா வாதஞ் சிரசிநோய்
மோதுசெவி நோய்கபநோய் மூடுசுர - மோதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீநசப் போக்கு
ஞாலச் சதகுப்பை நாடு.

சதக்குப்பை, வாதரோகம், அசிர்க்கரம், தலைவலி, கர்ணசூலை, சலதோடம், கபரூட்சை, ஆசனக்கடுப்பு, சலபீனிசம் இவைகளை நீக்கும்.

### பெருங்காயத்தின் குணம்

தந்தவேதந்த மூலத்தெழுபிணி சருவகாளத்
திருட்சிங்கீடமா, யந்தவாத முதாவர்த்த மல்குனோய்
மார்பணங்கட்ட குன்ம மகோதர முந்துகெர்ப்பத்தின்
வித்திரஞ்சூலை குருதிரப் பூச்சி சிலேஷ்மத்
துறுவலி, வந்தமெய்க்கடுப் போடுவை முற்றுமே
மாயு நாறு காயங் கிடைக்கினே.

பெருங்காயத்தால், தந்தநோய், தந்தமூலநோய், சகல சர்பவிடம், தேள்விடம், கிருமி, அசீரணம், வாதாதிக்கம், உதார்த்தவாதம், யோனிநோய், இருதூமிவாயு, எண்வகைக் குன்மம், உதரத்ராகம், கர்ப்பவித்திரி சூலை, ரத்த கிருமி, கபநோய், குடைச்சல் தீரும்.

### வெள்ளைப்பூண்டின் குணம்

சன்னியொடு வாதந் தலைநோவு தாளின்வலி
வன்னிவரு நீர்க்கோபை வன்சீத - மன்னமோ
யுள்ளுள்ளிக் காண்பா யுளைமூல ரோகமும்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெகுண்டு.

வெள்ளைப்பூண்டினால் சன்னிவாத நோய், சிலத்தும சிரஸ்தாபம், வாய்ப்பூட்டு நோய், நீரேற்றம், சீதபேதி, அச்சம் இவை விலகும்.

### அபினியின் குணம்

நல்லபினிக் குணத்தை நாடறிய நாம்புகல்வ
நல்லல் குன்மவாத மருஞ்செவிநோய் - பல்லின்வலி
பேதியந்த மத்திநோய் பீநசம்போம் வன்மையுண்டாஞ்
சாதி யுதிரச்சுத்தி காண்.

அபினியால் வயிற்றுநோய், வாதாதிக்கம், கர்ணசூலை, தந்தநோய், அதிசாரம், அசீரணம், எலும்பிற்குடைச்சல், நாசிகாரோகம் இவை போம். சாதிலிங்க நிறமுள்ள உதிரச்சுத்தியும் உண்டாகும்.

### கஞ்சாவின் குணம்

மூலக் கிராணியறு முன்புள்ள பேதிகட்டுஞ்
சாலமயக்கும் பசியுஞ் சாருங்காண் - தூலஞ்செய்
வாதமொடு வைபவமும்போம் வன்கரப்பானுக்குந்
தொலையுங்
கோதறு கஞ்சாச் சடைக்கு.

கஞ்சாவிற்கு மூலவாய்வு, கிராணி, நீடித்த அதிசாரம், அதிதூலம், கபாதிக்கம், கரப்பான் இவைபோம். மிகுமயக்கமும் அதிதீபனமும் உண்டார்கும்.

### கரியபோளத்தின் குணம்

மார்புவலி வீக்கம் வயற்றுவலி பக்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம் - பாருலகி
நீளங் கைகாலி நிலைசூலியங் கறுத்த
போளந்தனைக் காணிற் போம்.

கரியபோளத்தினால் இருத்வாதம், சோபை, குன்மம், முடம், சிகமப்பிடகம், மகாவாதரோகம், கைகால் குத்தல் இவை போம்.

### ரத்த போளத்தின் குணம்

விழுந்திறத் தங்கிமிக வீங்கு முறுவிக்க
மெழுந்து நிற்கவொட்டா விசுவோ - டழுந்தி
யுரைத்த தமரும்வலி யோடு மெதிர்நிற்கா
திரத்த போளத்தை யெடு.

ரத்த போளத்தினால் விழுந்து இரத்தம் கட்டி, அதன் மேலதிகர்த்த நோவுடன் வீங்குகிற வீக்கம் எழுந்து நிமிர்ந்து நிற்க ஒட்டாத பக்க நோயும் மார்பின் உபத்திரவமும் நீங்கும்.

### வாலேந்திர போளத்தின் குணம்

சூலை சயரோகஞ் சொறிகரப்பான் குன்மமிவை
யாலைவாயின் கோற்போ லாருங்கா - ணீலசக்ர
வாளமெனத் தோன்றுமுலை மாதரசே வாளேந்திர
போளந்தனை யெடுக்கும் போது.

வலேந்திர போளத்தினால் பிடிப்பு, க்ஷயம், நமைச்சல், கரப்பான், வயிற்றுவலி நோய் விலகும்.

### வெளிச்சப்பிசின் குணம்

முகசன்னி பாதமொடு முட்டிவிரு நீரு
முகவாத சன்னிகளு மண்டா - மகிழுங்
களிற்றை நிகருமுலைக் காரிகையே நாளும்
வெளிச்சப் பிசினை விளம்பு.

வெளிச்சப்பிசினால் வாயுவாற் பிறந்த சிம்மகம்புகள், நேத்திரம், பிரலாபம், அந்தகம் என்றும் சன்னி பாதகங்களும் தீரும்.

### நாவியின் பொதுக்குணம்

வாதவலி மந்தமறன் மாறாக் கபப்பிணிக
ளோதுகுட்டு குன்மந்தே ளோடுங்காண் - காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வணைகுழலே
சுத்திசெய்த நாவியின்பேர் சொல்.

சுத்திசெய்த நாவினால் வாதக்கடுப்பு, அசீரணம், ஓதமுள்ள சலதோடங்கள், குட்டம், வயிற்றுவலி, தேள்விடம் இவை போம்.

**பச்சை நாவியின் குணம்**

கடியதொரு குட்டங் கனந்த விஷசன்னி
கொடியதொரு குன்மஞ் சூலையும் - படியிற்
றளிரத்தி வெப்புடனே தாகசுரந் தீரும்
வளர்பச்சை நாவிதனை வாழ்த்து.

பச்சை நாவினால் குறைநோய், விஷசன்னிபாதம், வயிற்றுநோய், அஸ்திச்சூடு, தாகசுரம் ஆகியவை கெடும்.

**வெள்ளை நாவியின் குணம்**

குட்டங் கடிசூலை கூடுபுரி வன்கிருமி
துட்டகுன்ம வாதந் தொலையுங்காண் - வட்டமுலைப்
பெண்ணே சுரந்தணியும்பேருலகத்தார் பகைக்குட்
வெண்ணாவி தன்னை விரும்.

வெண்ணாவியினால் குட்டம், காணாக்கடி, குத்தல், மார்பை வீங்கச் செய்கின்ற கிருமிரோகம், வாதகுன்மம், ரூட்சை ஆகியவை ஒழியும்.

**கருநாவியின் குணம்**

எண்ணாச் சுரம்போ மிறங்கும் பீலிகமறும்
புண்ணாறு மூவரும் புழுக்கள் விழுந் - தண்ணாறும்
வல்லை கவிதையொடு வாத சுரமிவைக
ளில்லையொரு கார்நாலிக் கே.

கருநாவிற்கு நாவொட்டிக்காய்ச்சல், நழுகிய பீலிகம், விரணம், கிருமிகள், வல்லக்கட்டி, மகோதரம், வாதசுரம் இவை தீரும்.

**சூத்திரநாவியின் குணம்**

காய்ச்சல் தலைநோய் கனத்தான்னி பாதமெரிப்
பூச்சி விடக்கடியுட் புண்குட்டங் - கூய்ச்சறகு

காத்திர தேளுங்குடிபோங் காரளகப் பைங்கொடியே
சூத்திர நாவிற்குத் துவண்டு.

சூத்திர நாவிற்கு சுரங் சிரஸ்தாபம், சன்னிபாதம், எரிக்கிருமி, சர்ப்ப விடக்கடி, உள்விரணம், சூறைநோய், தேள்கடி விஷம் இவை போம்.

## நில ஆவாரையின் குணம்

நிலாவாரை யின்குணந்தா னீகேண் மயிலே
பலமூல வாயுவெப்பு பாவைச் - சிலகிரந்தி
பொல்லாத குன்மம் பொருமுமலக் கட்டுமுத
லெல்லா மகற்றுமென வெண்.

நில ஆவாரை பற்பல மூலவாயுக்கள் சுரம், சீழ்ச்சிரங்குகள், வயிற்றுவலி, வயிற்றை உப்பச்செய்கின்ற மலக்கட்டு இவைகளைப் போக்கும்.

## சிவதைவேரின் குணம்

உள்ள மலமு முதாவர்த்த மும்வயிற்றை
கொள்ளுபித்த வாதமும்போங் கூறுங்காற் -
பிள்ளைகட்குச்
செப்பு கிரகமும்போந் தேனே யுலகத்துட்
டப்பிற சிவனைக்குத் தான்.

குற்ற சிதவதைக்குப் பழையமலம், உதார்த்தம், பித்த வாத தொந்தம், பாலகிரக தோஷம் ஆகியவை விலகும்.

## வெண்சிவதை வேரின் குணம்

கைப்புந் துவர்ப்புங் கலந்திருக்கும் பித்தத்தை
யிப்புவியி னாடொட்டா திவ்வளவே - செப்புதரத்
தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்
வெள்ளைச் சிவதைதனை விள்.

கசப்புந்துவர்ப்புமுள்ள வெண்சிவதை, பைத்திய கோபத்தையும், மலாசயக் கிருமியையும் போக்கும். விரோசனத்தைத் தரும்.

**கருஞ்சிவதை வேரின் குணம்**

காரமுடன் கைப்புண்டாங் காணாவெலி விடத்தைப்
பாரவனற் குன்மத்தைப் பற்றறுக்கும் - பாரிற்
றெரிஞ்சுரைத்தோம் பேதிதருந் தேன்மொழியேகேளாய்
கருஞ் சிவத்தைக் கந்தமது காண்.

காரமும், கசப்புமுள்ள கருஞ்சிவதை அறிவதற்கரிய எலிவிடத்தையும், பித்த குன்மத்தையும், நீக்கும். வீரோசனத்தைத்தரும்.

**நேர்வாளக்கொட்டையின் குணம் – இதுவே நேபாளம்**

ஒதிலுரதத் துறுமலம் பன்னோய் விலகும்
பேதி மருந்திற் பெரிதாகும் - வாதமறுங்
கூர்வாளை யொத்த விழிக் கொம்பனையே பண்டிதர் சொன்
னேர்வாளக் கொட்டைதனை நீ.

பேதி மருந்தில் முக்கியமாய் நேர்வாளப்பருப்பால் மலாசய பழைய மலமும், அதைப்பற்றிய பலப்பிணிகளும் வாதநோயும் போம்.

**வாளப்பருப்பு சிலநோய்க்கு ஆகும் ஆகாதெனல்**

உரைத்திடு வாதநோய்க்கு முறைகெடு விடஞ்சன்னிக்கு
நிறைத்திடு சூலைகுன்மம் நீடிடுமலக் கட்டிற்குங்
கரைத்திடு வாளந்தன்ணை கதித்திடு மேகத்திற்கு
மறைத்திடு பித்தந்தோர்க்கு மகற்றிய வதனைத் தானே.

வாளப்பருப்பை வாதரோகம், விடம், சன்னிபாதம், தேகக்குடைச்சல், வயிற்றுநோய், மலபந்தம் ஆகிய நோய்க்கு உபயோகப்படுத்தலாம். அதிமேக நீரையும் பித்தநோயும் உடையவர்க்கு நீக்கவும்.

### நீரடிமுத்தின் குணம்

நீரடி முத்திற்கு நீங்கா கிரந்தி குஷ்டம்
போரிடு வாதவினை போருங்காண் - காரடுக்கு
மென்குழலாய் பித்த மிகுமனல முண்டாகு
முன்கிளா நமைச்சலறு முன்.

நீரடி முத்துக்குத் தீராச்சிரங்கு, பெருநோய், வாதரோகம், தினவு இவை நீங்கும். பைத்தியமும், உஷ்ணமும் உண்டாகும்.

### சேங்கொட்டையின் குணம்

கிருமி கயஞ்சூலை கிரந்தி திமிர்வாதம்
பொருமுகுன்ம முன்மூலம் புண்ணைத் - தருமா
கரிமுகக் குட்டக் கடிவிடபா கம்போ
மெரிமுகிக்குச் சுகமா மெண்.

சேங்கொட்டைக்கு புழு, க்ஷயம், கீல்பிடிப்பு,சிரங்கு, சீமத்திமிர், மகாவாதம், வாதகுன்மநோய், உள்மூலம், விரணக்குஷ்டம், காணாக்கடி, விடபாகம் நீங்கும். வீரிய விருத்தியுண்டாக்கும்.

### தேங்காய்ப்பிண்ணாக்கின் குணம்

சொறிசிரங்கு புண்ணுமாந் தோலாக் கரப்பான்
வறுவாகு மேனியெல்லா மாதே - சிறுக
வயிற்றிற் புழுவினங்கண் மாறா துதிக்குஞ்
சுயத்தேங்காய்ப் பிண்ணாக்காற் சொல்.

தேங்காய் பிண்ணாக்கினால் நமைச்சல், சிரங்கு, விரணம், நீங்காத கரப்பான், மலாசய கிருமிகள் இவையுண்டாகும்.

**எள்ளுப்பிண்ணாக்கின் குணம்**

உள்ளிற்புண் ணுங்கிரந்தி யூரலுமிகக் கிளைத்தே
யெள்ளின் பிண்ணாக்குக் கெழும்புங்காண் - விள்ளுங்
கரப்பான் விரணங் கதித்த நீர்மேக
முரப்பாகு நாளு முறை.

எள்ளுப்பிண்ணாக்குத் தாதுவைப் பற்றிய விரணம், சிரங்கு, நமைச்சல், கரப்பான், புண், சலமேகம் இவைவிளைவிக்கும்.

**வேப்பம்பிண்ணாக்கின் குணம்**

சன்னியுடன் வாதந் தலைநோய்போம் வாதமறும்
முன்னின்ற தோஷ முறியுங்காண் - பன்னுதமிழ்
வல்லவரே வேம்பின்வழி வந்த பிண்ணாக் கென்றொருகாற்
சொல்ல வையம்போமோ தொலைந்து.

வேப்பம்பிண்ணாக்கினால் சன்னிபாதம், வாத சிரஸ்தாபம், வாதரோகம், திரிதோடம், சலாதிக்கம் இவைபோம்.

**இலுப்பைப்பிண்ணாக்கின் குணம்**

பொத்திக் கடுவனொடு புண்ணுங் கரப்பானும்போம்
வித்தைப்பு தோஷமிவை வீறாவா - மெத்தெனவே
யெண்ணெய்க் கசிவுகளு மேகு மிலுப்பை விதைப்
பிண்ணாக்குக் கென்றியப் பேசு.

இலுப்பைப் பிண்ணாக்கு கடுவன், விரணம், கரப்பான், பீஜவீக்கம், திரிதோடம் எண்ணெய்ச்சிக்கு இவை போம்.

**சாம்பிராணியின் குணம்**

வாதசீதங் கண்ணோய் மாறாத சென்னிவலி
யோதமுறு பீநசந்துண் போட்டுகாண் - பூதலத்தில்

வேம்பிது தானென்ன மிகுகசப்பைத் தானளிக்குஞ்
சாம்பிராணி சரக்குத் தான்.

வேம்பைப்போற் கசப்புள்ள சாம்பிராணி, வாதகபம், விழிநோய், நீங்காத சிரநோய், ஜலபீனிசம் இவைகளை விலக்கும்.

## கற்பூரத்தின் குணம்

கிருது சலதோஷங் கிளைப்புவலிப்பு சன்னி
பொருமுமந்த மங்கிபட்ட புண்ணோ - டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ் சீதமுறு வாதஞ் செவிமுகநோய்
சாந்திகருப் பூரமொன்றாற் சாற்று.

கற்பூரத்தினால் கிருமி நீரேற்றம், கசிவு, சன்னிபாதம், வாதாலசகம், தீப்புண், கோரசுரம், சர்த்தி, பைத்தியம், சிலேத்தும வாதம், கர்ணசூலை, சிலேத்தும பாக நோய் ஆகியவை போகும்.

## பச்சைக் கற்பூரத்தின் பொதுக்குணம்

அட்டகுன்மஞ் சூலையணுகாது வாதமொடு
துட்டமேகப் பிணியுந் தோற்றாவே - மட்டலறுங்
கூந்தன் முடிமாதே கொடிய கபம்போகுஞ்
சார்ந்த பச்சைக்கற்பூரத் தால்.

பச்சைக் கற்பூரத்தினால் 8வித குன்மநோய்கள், கால்களில் குத்தல், வாதநோய், சீழ்ப்பிரமேகம், சிலேத்தும கோபம் இவை போகும்.

## ஈசன் என்னும் பச்சைக் கற்பூரத்தின் குணம்

ஈசனென்னும் பூரணம் வெண்மையும் காரமுமாம்
பேசரிய சீதமுஷ்ணம் பித்தமயல் - வீசுகின்ற
பீனசமுட் டாகமிவை பேர்த்துவிடுங் காந்தி
யானதது வசிய மாம்.

வெறுப்பும், காரமும், தளதளப்புமுள்ள ஈசன் என்னும் பச்சைக்கற்பூரம், வசியத்திற்காகும். சிலேத்தும சுரம், பைத்தியம், மயக்கம், நாசிநோய், தாகரோகம் ஆகியவைகளைப் போக்கும்.

**வீமன் என்னும் பச்சைக்கற்பூரத்தின் குணம்**

வீமனென்னுங் கற்பூர மேகவெண்மை யாயிருக்குஞ்
சேமமுறுங் குளிர்ச்சி தின்றக்கா - னாமருபி
நோயகலுந் தாகமறு நுண்பேதியு மாகுந்
தூயமதி முகத்தாய் சொல்.

அழுக்கு வெண்மை கலந்த மேகநிறமுள்ள வீமன் என்னும் பச்சைக் கற்பூரத்தினால் கந்தாளி நோயும், தாகரோகமும் போம். சரீர சவுக்கியமும், குளிர்ச்சியும், அற்ப விரோசனமும் உண்டாகும்.

**பூதாச் சிறையன் என்னும் பச்சைக்கற்பூரத்தின் குணம்**

பூதாச் சிறையன் என்னும் பூரமஞ்சள் கைப்பாகுங்
கோதையர்க் காங்காசக் கொடுமேகம் - வாதாதி
யென்னுந் தனித்தோட மேறுமுத் தோடஞ்சொறுயுஞ்
துன்னிரண மும்போக்குஞ் சொல்.

மஞ்சள் நிறமும் கார்ப்புமுள்ள பூதாச்சிறையன் என்னும் பச்சைக் கற்பூரம், இருமல், அதித்திராமேகம், வாதபித்தம் என்கின்ற தனித்தனி தோடங்கள், திரிதோடம், நமை நெருங்கிய புண்கள் இவை நீங்கும். பெண்களுக்கு உபயோகிக்கின்ற ஔடதங்களுக்குமாகும்.

**புழுகுச் சட்டத்தின் குணம்**

ஆசுறாக் காந்தியுண்டா மசீரண வாதம் போகுந்
தேசுதான் வளரும்பித்த சிலேஷ்மமும் விடமுமேரு
மாசறு மாயுளுண்டாம் வசைமா தருளுஞ்சேரும்
வாசமார் புழுகுச்சட்ட மகிமையை யுறைக்குங்காலே.

மணமுள்ள புழுகுச் சட்டத்தினால் மந்த வாதமும், பித்தகபமும், விடமும்போம். ஒளியும், தேக வனப்பும், நிறையாயுளும், திருமகள் அருளும் உண்டாகும்.

### கஸ்தூரியின் பொதுக்குணம்

சொல்லரும் வசியங்காந்தி சுகமுத லனுகும்பின்னும்
மெல்லியார் தமக்கு வாத விருத்தியாந் தலைநோயேகும்
பல்லுரு கபமுந்தீரும் பகரொணாப் பலமுமுண்டா
மல்லடர் சன்னிரூட்டை மாறுங்கஸ்த் தூரிக்காமே.

கஸ்தூரி தலைநோய், கபந்தமூலம், சன்னிசுரங்கள் போம். வசியம், தேகசவுக்கியம், மாதர்க்கு நாதவிருத்தி வன்மை உண்டாகும்.

### கஸ்தூரியின் பேதம்

கஸ்தூரி யைந்தாங் சுரிகைதிலகை குளுந்தை
கைத்தபிண்டகைநா யகை முறையே - மொய்த்தசிவப்
பெள்ளு கொளுகட்டி சிறிதுபருமங் களென
விள்ளு மிவைக்கேகும் வினை.

கஸ்தூரி கரிகை, திலகை, குறுந்தை, பிண்டகை, நாசகை என 5 வகைப்படும். இவைகளில் கரிகை சிவப்பு நிறமும், திலகை எள்ளின் வடிவமும், குறுந்தை கொள்ளினது வடிவமும், பிண்டகை கட்டி கட்டியாகவும், நாசகை சிறிய பெரிய உருண்டைகளாகவும் இருக்கும். இவைக்கு சன்னிபாதம், அசீரணப் பிரசவ மலினம் முதலிய நோய்கள் விலகும்.

### சவ்வாதின் குணம்

சுரமுந் தலைவலியுந் துண்டத் தடைப்பு
முரமுந்து நோயோ டுடற்குட - யரவிமிகக்
குத்துகின்ற வாயுவும்போங் கோதிற் சவ்வாதினுக்கு
மெத்த வசியமுமாம் விளை.

குற்றமற்ற சவ்வாதுக்கு வாதகபரூட்சை, சிலேத்துமம், சிரஸ்தாபம், சலபீனசம், இருத்வாதம், அங்கலவாதம் இவை போம். வசீகரமாகும்.

**குங்குமப்பூவின் குணம்**

*விந்துநட்டத் தாகமண்டம் மேகசலஞ் சூலைகப*
*முந்துசுரம் பித்தங்கா லுச்சிவலி - முந்துகண்ணிற்*
*றங்குமப் பூவோடுறுநோய் சர்த்தியிவை நீங்கவென்றாற்*
*குங்குமப்பூ வோரிதழைக் கொள்.*

*குங்குமப்பூவைக் கண்டாற் கூறுகொண்ட பூநசநோய்*
*தங்குசெவித் தேடேஞ் சலதோடம் - பொங்கு*
*மதுர தோடந்தொலையு மாதர் கருப்ப*
*வுதிர தோடங்களறு மோர்.*

குங்குமப்பூவினால் சுக்கிலம், நாவறட்சி, குடல்விருத்தி, மேகநீர், கீல்பிடிப்பு, கபாதிக்கம், அதிரூட்சை, பைத்தியம், விருணவாதம், மண்டைவலி, கருவிழியிற் படற்கின்ற பூ, கண்ணோவு, வாந்தி, சலபீனிசம், காது மந்தம், நீரேற்றம், வாயிரிப்பு, பிரசவ மலினம் இவை தீரும்.

**கோரோசனையின் குணம்**

*நீரிழிவு மேகசுர நீங்காக் கனல்வேகங்*
*கூறிய வுன்மாதங் குழந்தைகணோய் - பாரகபம்*
*வீறு மசூரியும்போம் வேதந் தனிலிரண்டாய்*
*கூறுங் கோரோசனை கட்கு.*

ஆயுள் வேதங்கள் கூறிய இருவகை கோரோசனை களுக்கும், மேகநீர், மேகருட்சை, பித்தகோபம், உள்மாந்தம், சிசுக்களுக்குண்டாகும். கணமாந்த முதலிய நோய்கள், சிலேத்தும ஆதிக்கம், மசூர்கைப்புண்கள் இவை நீங்கும். இது மான் வயிற்றிலும், பசுவின் வயிற்றிலும் பிறப்பதாகும்.

**சந்தனத்தின் பொதுக்குணம்**

கோதில்சந்தனஞ் சீதோடணங் கொண்டிருக்கு
மச்சந்தம்
வாதபித்த வையமனப் பிரமை - யோதுசுரம்
மேகந் தனிதாகம் வெப்பு சொறியும்போ
மாகந் தனக்குருதி யாம்.

குளிர்ச்சியும், வெப்பமும் உள்ள குற்றமற்ற சந்தனம், திரிதோடம், சித்தப்பிரமை, ரூட்சை, ஒழுக்கு, பிரமேகம், நாவறட்சி, உட்சூடு, நமைச்சல் இவைகளைப் போக்கும். சரீரத்திற்குப் பலமாகும்.

**பச்சிலைக் கிச்சிலிக்கிழங்கு இவைகளின் குணம்**

பச்சிலைக்குக் காந்தம் பரிமளிக்கு மவ்விலையோ
வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச் -
சொச்சமற்ற
வோடுநற் கிச்சிலியு னொண்கிழங்குக் கபமும்
யூட்டுமுடமும் புண்ணும் போம்.

பரிமளமுள்ள பச்சிலையானது பித்தகப விரணத்தையும் ரத்த கபம், மலம் இவைகளைப்பற்றிய கிருமிகளையும், போக்கும். கிச்சிலிக்கிழங்குக்குச் சிலேத்தும நோயும் கீல்பிடிப்பும், விரணமும் போம்.

**உப்பின் பொதுக்குணம்**

அளத்திலுறை நல்லுப் பனல்வாத மாற்றுங்
களத்து நோய்தன்னைக் களையுங் - கிளைத்தகப
வாசுடைய வல்லைநோ யட்டகுன்ம மும்போக்குங்
காசினியுண் மாதே கழர்.

அளத்திலுள்ள நல்ல உப்பு, உஷ்ணவாதம், அண்ட வாத ரோகிணி, ஆமந்திரண்ட வல்லைக்கட்டி 8வித குன்மம் இவை போம்.

### கறி உப்பின் குணம்

மந்தம் பொருமலரும் வாய்வும்போந் தீபனமாந்
தொந்தித்த வையந் தொடருமோ - சந்ததமு
மக்கினியின் புட்டி யடருங் கறியுப்பாற்
சிக்குகின்ற நீரிறங்குஞ் செப்பு.

கறியுப்பினால் அசீரணம், வயிற்றுப்பிசம், வாதாதிக் கபம், நீரடைப்பு இவை போம். பசியும், சாமக்கினியும் விருத்தி ஆகும்.

### கல்லுப்பின் குணம்

ஐமறுஞ் சூலை யரோசிபித்தஞ் சாத்தியொடு
வெய்யபிணி யட்டகுன்மம் விட்டேகும் - பொய்வளையே
வாதமதி தரிக மலக்கட்டும் போமுலகிற்
கோதறு கல்லுப்பைக் கொடு.

கல்லுப்பினால் கபம், குத்தல், அருசி. பைத்தியம், வாந்தி, உஷ்ணம், வாயு 8வித குன்மவாத நோய், நாவறட்சி, மலபந்தம் இவை ஏகும்.

### கம்பி உப்பின் குணம்

மல்லாரு மட்டகுன்ம மாதருதரக் கட்டி
கல்லா மறைப்புநீர்க் கட்டருக - லெல்லாமே
கம்பிகம்பி யென்றுங் கருவுண்டா மங்கிநின்ற
கம்பிகம்பி யென்றுரைக்குங் கால்.

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்மமிதை மாறுங்காண் - மீதாங்
கொடிய வயிரிழியுக் கோழை கபமேகும்
வெடியுப்புத் தன்னை விளம்பு.

கம்பி உப்பினால் 8 வித குன்மம், கருப்பாயசக் கட்டி சோபை, மூத்திரக்கிரிச்சுரம், நீர்ச்சுறுக்கு, சூதிவாதம்,

மாதசோணிதம், சாமணிய வாதபித்த கபகுன்மங்கள், பெறுவயிறு, ஈளை, சிலேத்தும வாதம் இவை ஒழியும். பேரிளம்பெண் பருவங்கடந்த மாதர்கட்கும் கர்ப்பம் உண்டாகும்.

**அட்டுப்பின் குணம்**

பித்தங் குடிவிலகும் பேராத சூலையறுஞ்
சர்த்தி யருசியிவை சாரவா - மொத்தகச்சிற்
கட்டுப்படாக் கொங்கைக் காரிகையே சங்கையற
வட்டுப்பின் பேரை யறை.

அட்டுப்பினால் குத்தல் வாந்தி, அரோசமும் போம்.

**வளையல் உப்பின் குணம்**

துளையார் குடல்வாதந் தொந்த வாதந்தோ
டிளையரச் சுவாசமறு மின்னும் - வளையலுப்பாற்
குன்மவலி சூலைவெப்பங் கூறாப்பிலிக மிவை
சென்மம் விடுத் தோடுமெனத் தேர்.

வளையலுப்பினால் ஆந்திர பித்தவாதம், வாதபித்தம், இரைப்பு, வயிற்று நோவு, கீல்பிடிப்பு, சுரம், பீலிசும் இவைபோம்.

**இந்துப்பின் குணம்**

அட்ட குன்மமிந்த மசிர்க்கரச்சூர் சீதபித்தந்
துட்டவைய நாடிப்புண் டோடங்கள் - கெட்டமலக்
கட்டுவிட விந்துப்பைக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட யிந்துப்பை வின்.

சென்னி கண்ணாபற்றூர் செவிகள்கண்டம் பசுநோய்
சன்னியாசங் காசந் தாகமிரைப் புன்னிரத்த
மூலஞ் சிலந்திநளி மூடிகருஞ் சூதைவலி
சூலஞ் சிதையுமிந்தாற் சொல்.

இந்துப்பினால் எண்வித குன்மம், அசனம், அசிர்ச்சுரசப் பித்தம், கபாதிக்கம், நரம்புச்சிலந்தி, திரிதோடம், மலபந்தம், விடம், சக்கிலம், சிலேத்தும உபத்திரவம், கடுவன், தலைவலி, நாவு, தந்தமூலம், காது, கழுத்து, கண், யோனி இவ்விடத்து நோய்கள் சன்னிபாதம், நேத்திரகாசம், நாசிரோகம், சுவாசம், ரத்தமூலம், சிலந்தி, தேள், எலி இவற்றின் விடங்கள் வாதக்கடுப்பு, குத்தல் இவை கெடும்.

## பஞ்சலவணத்தின் குணம்

தீராமை யர்ப்புதமை நெஞ்சுவலி மாகுன்மம்
பேராக் கிராணி பலித்தந் - தீராக்கல்
விஞ்சவுப்படைக் குக்கிநோய் மெய்க்குளவையும் பறக்கும்
பஞ்சவுப்பைத் தின்னைபெனிற் பார்.

பஞ்சலவணம் பசித்திய குன்மம் போக்கும்
விஞ்சிய சிலேட்டுமத்தை வீழ்க்குங்காண் - கிஞ்சுகமே
தீபன முண்டாக்குந் திரிதோடம் போக்கிவிடுஞ்
சோபனமா மிம்மொழியைச் சொல்.

பஞ்சலவண உப்பினால் ஆமைக்கட்டி, அர்ப்புத விரணம், மார்புநோவு, வலி குன்மம், வாதகிராணி, பீலிகம், ஆமஜீரணம், மகாவாதம், மிகவும் பொருமுகின்ற சிலேத்தும குணம், தேகக்குத்தல், பித்தகுன்மம், கபாதிக்கம், முத்தோடம் இவை நீங்கி பசியுண்டாகும்.

## கந்தி உப்பின் குணம்

உடல் கரையச் செய்துவிடு மூட்டிணமாம் பொல்லாக்
குடல்வாதந் தன்னைவெட்டிக் கொல்லு - மடலாருந்
தந்திமந்தி மந்தகையத் தாவுகொங்கை மாதரசே
கந்தியுப்பை தன்றாய் கழுத்.

கந்தி உப்பானது அதிதூல ரோகத்தையும், குண்டலண்ட வாதத்தையும் போக்கும். ஆனால் வெப்பத்தை உண்டாக்கும்.

### சீனாக்காரத்தின் குணம்

சீனமெனுங் காரமிது சீறிவரு பல்லரணை
யானைக்கால் கண்ணோ யனிலமொடு -
மானிலத்திற்
றுன்மாங்கிசம் வாய்வு தோலாத வுள்ளழலை
குன்மமிவை போக்குங் குறி.

சீனாக்காரம் தந்தபிரலூணம், சிலிடதம், விரைவில் சுக்கிலம் வெளியாதல், வாததிமிர், அதிமாமிசம், வாதப்பிணி, உட்சூடு, குன்மம் இவை நீங்கும்.

### சவக்காரத்தின் குணம்

கப்பானை சீதத்தைக் கண்டிக்கும் பேதி
யுரப்பாக்கும் வாயுவை விட்டோடும் - தரைக்குள்
வழலை யெனப்பேர் வகித்த சவுக்கார
மழலைகுன்மம் போக்கு மறி.

வழலை என்கிற சவுக்காரம் கடுவன், சீதளம், வாதகோபம், உட்சூடு, வயிற்று நோவு இவைகளைப் போக்கும். விரோசனமாகும்.

### அப்பளக் காரத்தின் குணம்

குடல்வாதஞ் சீலை கொடிதான வாத
மடல்புரியு மைய மறுக்கு- நெடுவயிற்றி
னுப்பிசத்தினோடே யுயர் குன்ம நோயகற்று
மப்பிளக் கார மது.

அப்பளக்காரம் வாதக்குடல், விருத்தி, கீல்வீக்கம், மகாவாதம், கபாதிக்கம், வயிற்றுப்பிசம், வாதகுன்மம் இவற்றை நீக்கும்.

## நவாச்சாரத்தின் குணம்

குன்மங் குடற்சூலை கொல்லு மகோதரத்தை
வன்மையுறு கல்லடைப்பை மாற்றுங்காண் - சன்மக்
கவிச்சு முத்தோடங் கனவாத நீக்கு
நவாச்சார மாதே நவில்.

நவாச்சாரம் வயிற்றுவலி, குடலிற்குத்தல், பெருவயிறு, அஸ்மரி, சரீரத்தில் புலால் வாசம், திரிதோடம், வாதநோய் இவைகளைப் போக்கும்.

## யவாச்சாரத்தின் குணம்

குய்யன்களநா கொடிறுவா யிவ்விடநோ
வைய மிரைப்பிரும லாசனப்புண் - பையவுறு
கீடவிடஞ் சோபை கிராணியையும் பம்பரம்போ
லாயவிடு மெய்யவா க்ஷாரம்.

அட்ட குன்மஞ்சூலை யதிதூல முட்டினந்தா
லொட்டி வருவாத முதரநோய் - துட்டமந்த
நீடு:ப நீரடைப்பு நீங்காப் பிலீசுமிவை
யோடுமவா க்ஷாரத்தா லுண்.

யவாக்ஷாரம், வீரணப் பிரமேகம், களாகம், ஜிக்காலஜகம், தாளுகன், கண்பிகள், ஊர்த்தவகுதம், கபிவிருத்தி, சுவிசம், காசம், பகந்தவிரணம், செந்துவிடம், வீக்கம், வாதகிராணி, அவுத வயிற்றுவலி, குத்தல், அதிதூலம், சுவாலிதவாதம், சலோதரம், விடஜலம், கபநோய், மூத்திர ரோச்சகம், வாதபீலிகம் இவைகள் ஒழியும்.

## சத்திக்ஷாரத்தின் குணம்

மந்தமொடு தங்கு மலசலம் பிலீகமடி
யுந்தி வருகின்ற வொலியிருமல் - குந்தவைக்கும்
வாதவலி குன்ம மகோதரங் கிராணியும்போம்
மோதுசத்தி க்ஷாரத்தை யுண்.

சத்திக்ஷாரத்தினால் மந்தாக்கினி, சீரண மலமூத்திரம், சிலேத்ம பீலிசம், கோழை விழும்படி, சந்தியுடன் வராநின்ற க்ஷயகாசம், உருஸ்தம்பவாத வயிற்றுவலி, பெருவயிறு, கிரகணி இவை போம்.

**தும்ப க்ஷாரத்தின் குணம்**

குடல்வாதஞ் சூலை கொடுங்குணம் மோடும்
விடலரு நீர்க்கட்டும் விலகு - மடவார்
கமல வதனக் கனங்குழலே நாளு
முமிலிட் சாரத்தை யுரை.

உமிலிட்சாரத்தினால் வாதகுடல், விருத்தி, குத்தல், வாதகுன்மம், வாதமூர்த்திரக்கிரிச்சுரம் ஆகியவை விலகும்.

**துத்தத்தின் குணம் - இதுவே மடல்துத்தம்**

முற்றிற் குறிப்புண் முனைவிரணஞ் சென்னிதனைப்
பற்றிநின்ற வாதம் படர்கரப்பான் - சுத்தவிழிக்
காசங் கணப்பில்லங் கண்ணோய்க்
குந்தத்தொலையும்
வாசமிகு துத்தத்தால் வாழ்த்து.

துத்தத்தினால் வளரும் நோய், முலைகளுள்ள புண்கள், வாதரசஸ் தாபம், கரப்பான், கருவிழி மந்தாரகாசம், சுழிகணம், இமைப்பில்லா நோய், கண்ணோய், குந்தநோய் இவை போம்.

**துரிசின் குணம் - இதுவே மயில்துத்தம்**

புண்ணாற்றுங் காமியத்தின் புண்ணாற்றுங்
கண்ணோயை
விண்ணேற்று முத்தோட வீறடக்குஞ் - சண்ணுகின்ற
வாந்தியொடு பேதிதரும் வாய்நோய் சுரந்தணிக்குங்
காந்தி தருந்துரிசி காண்.

துரிசி வாகாதி தோட விரணம், அவமந்த குய்ய விரணம், கண்ணோய், திரிதோடம், சிலேத்தும முகபாகம், வாதசீத சுரம் இவைகளை நீக்கும். வீரோசனம், வனப்பு இவை யுண்டாக்கும்.

### அன்னபேதியின் குணம்

முளைவிரணஞ் சூலைமந்த முட்டாமைக் கட்டி
விளையறன் மகோதரநோய் வீட்டும் -
வளைமலைபோற்
காட்டு மன்னந்தன்னை கணத்திற் சலமாக்கி
காட்டுமன்ன பேதியது காண்.

அன்னத்தை நீராய் கரைக்கின்ற அன்னபேதி மூளைகட்டி, குத்தல், அசீரணம் பாய்கின்ற ஆமைக்கட்டி, வீறியசலோதரம் இவைகளைப் போக்கும்.

### மாங்கிச பேதியின் குணம்

துனமாங்கிசங் கரைக்குஞ் சோபை யழலையொடு
வன்மைமிகு சூடுகப மாற்றுங்கா - ணன்மயிலே
யொப்பனு பிலீகமென வோகட்டி
யைக்கொடுக்குஞ்
செப்பசய மாங்கிச பேதி.

மாங்கிசபேதி விரணாதிகளின் துர்மாமிசம், வீக்கம், வெப்பம், கீல்பிடிப்பு, கபதோடம், பீனிசக்கட்டி இவைகளை நீக்கும்.

### அம்பரின் குணம்

அனகமுள வாரமிர்தே யாண்மையை யுண்டாக்கும்
பளபளென மெய்யுரப் பாசக்குங் - குளகுளத்த
புண்ணாற்று மம்பர் பொரிகரப்பானைப் போக்கும்
விண்ணார்க்கும் வாசனை யாம் வின்.

பரிமளமுள்ள அம்பர் சுக்கில விருத்தியும், வனப்பையும், பலத்தையும் தரும். அவ்விரணத்தையும், கரப்பானையும் நீக்கும்.

### குந்திரிகத்தின் குணம்

காசசுவாசங் கனத்த மேகக்கட்டி
வீசு விடக்கடி விறுச்சுகுட்டம் - பேசு
படர்தா மரைசிங்கு பண்டை விரணங்க
ளிடர்செய்யிற் குந்திரிக்க மேந்து.

குந்திரிகத்தினால் இருமல், இரைப்பு, மேகம், பிடகம், பல விஷம், கிருஷ்ணகுட்டம், படர்தாமரை, சிரந்தி, நீடித்த சிரங்கு இவை போம்.

### குங்கிலியத்தின் குணம்

பெரும்பாடு மேகம்போம் பேரா துடலி
லரும்பிய புண்ணாற்று மிவைல்லாற் - றுரும்பா
கெலும்புருக்கி புண்சீழு மேற்கு முலகிற்
சலம்பருகுங் குங்கிலியத் தால்.

நீரையிழுக்கின்ற குங்கிலியத்தால் அசிர்க்கரம், தந்திமேகம், கிளைக்கின்ற விரணம், அஸ்திச்சிராகம், சீழ்விரணம் இவை விலகும்.

### வெள்ளைக்குங்கிலியத்தின் குணம்

வெள்ளை யளித்த விரண நாபிக்கமலத்
தொள்ளை விரணமேகந் தோற்றுகினு - முள்ளே
வருவரசே மேற்புண் வரினுஞ் சுவேதச்
சருவரச மேற்பழியைச் சாற்று.

வெள்ளைக்குங்கிலியத்தால் மேகத்தாற் பிறந்த நாளப்புண், உந்திக்கமலவிரணம், சீழ்மேகம், உள்மூலவிரணம் இவை நீங்கும்.

## குக்கில் குணம்

காததர நாசிநோய் கட்டிகடி மேகப்புண்
வாதவித் திரஞ்சூலை வன்குநக - மோதிவையித்
திக்கி லிருக்கத் திடமுளவோ வுபயக்
குக்கி லிருக்கநமக்குள்.

கருமை, செம்மை என்னும் இருவித குக்கிலால் கர்ண மூத்திரதோட ஓட்டம், கிராணி, பாகம்பீடகம், காணாவிடம், மேகவிரணம், வாதவித்திரிதி, கீல்பிடிப்பு, நகங்களைப் பற்றிய விரணம் இவை போம்.

## அரக்கின் குணம்

குட்ட மசிர்க்குபித்தங் குன்மமிரைப் பெண்புருக்கி
பட்டிடு புண்ணாகச்சூர் பங்கநோய் - கொட்டோ
ராக்கரக்குஞ் சன்னிசுர மையமிவைக் கெல்லா
மாக்கர க்கு நூலை யறி.

அரக்கு குறைநோய், அசர்க்கரம், சிலேத்தும பைத்தியம், வயிற்றுநோய், சுவாசம், அஸ்திசிராவசம், சந்தியோ விரணம், இருதாவிருத வாதம், மூடம், சந்திக சன்னிபாதம், கபாதிக்கம் இவைகள் கெடும்.

## மெழுகின் குணம்

அறைபக்க வாத மதைப்பைய மூதை
குறைவிந் திதழ்நோய் தேள்கூலி - கறையைப்
புழுகெடுக்க வங்கதுறு புண்ணிடிப்புண் உப்புண்
மெழுகெடுக்க வாங்கமலு மெய்.

மெழுகினால் பாரிசவாயு, வீக்கம், கபநோய், வாதகோபம், சுக்கில நட்டம், சிலேத்துமோஷ்வி நோய், தேள்விடம், பைசாசம், குட்டம், ஆகந்து, விரணம் இவை ஒழியும்.

## பலவகை மெழுகின் குணம்

பொன்மெழுகு மாரல்சுரங் கண்ணோய் போக்கிவிடு
நன்மெழுகு கண்ணோய்க்கு நஞ்சாகு - முன்னுங்
கொசுமெழுகு நாளுங் குறித்த வசியத்திற்
திசையு மெந்திரத்திற்கு மெண்.

பொன்மெழுகு திரியாகிய சுரத்தையும், கண்ணோயையும் போக்கும். நல்ல மெழுகு விரணத்தில் உண்டாகின்ற நோயையும் நீக்கும். கொசு மெழுகு வசீயத்திற்கும், யந்திரத்திற்கும் உதவும்.

## அப்பிரகத்தின் குணம்

அப்பிரகமான் றைந்த லண்ட மகோதரமு
வெப்பிர மியங்கலமுன் னீரிழிவும் வெப்புரற்
பேதமும் போகாமேகப் பித்தமுங் கண்ணோயும்பல்
வாதமும் போந்தாதுவுமா மால்.

அப்பிரகத்தில் குடலண்டம், பெருவயிறு, பிரமியம், அதிமூத்திரம், சுரம், நமைகள், மேகப்பைத்தியம், கண்ணோய், பாதாகோவுபம் முதலிய வாதரோகங்கள் இவை ஒழியும். வீரியவிருத்தி உண்டாகும்.

## கல்நாரின் குணம்

காசபித்தம் வாதம் கடுப்பீறு நோயெரிவு
வீசுசர்த்தி நீரடைப்பு விந்துநட்டம் - பேசுமசை
தின்னாரைக் கூவுமந்தந் தீக்குடர்க்கல் தாகமிவை
கன்னாரைக் கூவவிடுங் காண்.

கல்நாரினால் பித்தகாசம், வாதநோய், பற்குடைச்சல், பல்லரணை, நீர்குறி எரிச்சல், பித்த வாந்தி, மூத்திராந்தம், சீதசுக்கிலம், அஜீரணம், பித்தக்குடல் வாதம் இவை நீங்கும்.

## சகஸ்திரவேதியின் குணம்

அதித்சுரந் தாகசுர மசான விரத்தமொடு
குத்திவரு வாந்திகபங் கூறுசன்னி - மெத்த
நிகழ்த்துகண்ணோய் தாதுகட்ட நீட்டநீங்கா மேகம்போஞ்
சகத்திர வேதிக்குத் தளர்ந்து.

சகஸ்திரவேதிக்கு அஸ்திசுரம், நாகபூர்வ சாந்தி, இரத்தபேதி, வமணம், கபாதிக்கம், சன்னி கண்ணோய், வீரியக்குறைவு, பிரமேகம் இவை போம்.

## கல்மதத்தின் குணம்

கண்டபடி பிணிமேகங் கல்லொடுநீ ருனடைப்பு
வண்டற் கிரிச்சுரநோய் மாபிரமி - யுண்டலினாற்
பன்மதஞ்சேர் தாதுநட்டம் பன்னுமிந்த நோய்க் கூட்டத்துட்
கல்மதஞ்சேர் ரக்கரக்குங் காண்.

கல்மதத்தினால் அரையாப்புநோய், தந்துமேகம், அஸ்மரி, மூத்திரப்பிந்து, வாதவஸ்தி, சதையடைப்பு, தடித்த மூத்திரக்கிரிச்சரம், வாதப்பிரிமியம், அதிகொழுப்பினாற் பிறந்த தாது நட்டம் இவை தீரும்.

## சிலாசத்தின் குணம் - இதுவே கற்பூர சிலாசத்தம்

கல்லடைப்பு மேகங் கனதூலம் விந்திரிதி
சொல்லடைக்கு நீருரகற் கேரணிதந்தான் -
மெல்லிடை
கில்லசச்சந் தில்லையெனு மிந்திரிய நட்டமுமாங்
கல்லகச்சந் தில்லையெனுங் கால்.

சிலாசத்தினால் அஸ்மரி சீல்மேகம், அதிதூலம், வாத்திரி, திசிர்சரமா சோணி வாதம், சந்ததிக்கு ஏதுவாகிய விந்து நட்டம் இவை போம். இது மலைகளுக்குள்ளிருந்து வருவதால் கல்லகச் சத்தென்றார்.

## கோமூத்திர சிலாசத்தின் குணம்

கோமூத் திரசிலாசத்தாற் குறுகிப்
போமூத்திர மெரிவுட் புண்மேகம் - நாமேவு
மெப்புதிரவெப்புமறும் வீழிமுளி விம்பந்
துப்புமஞ்சு மெல்லிதழாய் சொல்.

கோமூத்திர சிலாசத்தால் மூத்திரக்கிரிச்சரம், நாளத்தெரிவு, உள்விரணம், பிரமேகம், நாவற்சூடு, ரத்தக் கொதிப்பு இவை போம்.

## சிலா ரசத்தின் குணம்

தலைவலி நீரேற்றந் தநுர்வாதஞ் சன்னி
சூலைகுலையுந் தும்மற் குடிபோஞ் - சிலை நுதலே
மாசுடையி வஞ்சுநிறம் வாய்ந்திருப்ப தன்றிமணம்
வீசு சிலா ரசத்தால் வின்.

மலின மேகநிறமும் மணமுள்ள சிலாரசத்தால் சிரஸ்தாபம், சலதோடம், தநூர்வாதம், கந்தி, அதிதும்மற் பீனசம் இவை போம்.

## நண்டுக்கல்லின் குணம்

நீரருக நீரடைப்பு நீங்காப் பெருவயிறு
நீரொழுகு மேகம்வெட்டை நீங்குங்கா - ணாரமிர்தே
பைய மறுக்கு மரியதொரு நண்டுக்கல்
செய்யுங் குணமிதுவாந் தேர்.

நண்டுக்கல் அடிக்கடி மூத்திரம், அஸ்தமரி, மகோதரம், சலப்பிரமேகம், வெள்ளை வீழல், கபாதிக்கம் இவைகளைப் போக்கும்.

### காவிக்கல், கடல்நுரை இவைகளின் குணம்

அடலுறுநற் காவிக்க லட்சுநோய் மேகம்
வெடியக்கி வாந்திபித்தம் வீட்டுங் - கடனுரையே
நேத்திரநோய் விரண நீடுகபங் குன்மமிவை
தீர்த்திடுங்காண் தப்பாது செப்பு.

காவிக்கல் கண்நோவு, மேகநீர்கிளை, அக்கிபித்த வமணம் இவைகளை நீக்கும். கடல்நுரை விழிநோய், புண்கடி, க்ஷயம், குன்மம் இவைகளை நீக்கும்.

### சுக்கான் கல்லின் குணம்

விரணந் தனையாற்றும் வீறுசந்தி நீக்கு
மரணஞ்செய் வாயுவையும் வாட்டுங் - கரணத்தின்
மிக்கான வின்பமருண் மெல்லியலே
தூயவெள்ளைச்
சுக்கா னெனுங்கல்லது சொல்.

சுக்கான்கல் புண்சந்தி, மகாவாதம் இவைகளை நீக்கும்.

### நான்குவகை நிமிளைகளின் குணம்

தாதுவை வளர்க்குந் தனிப்பித்தத் தைப்போக்கு
போதுசன்னி பாதத்தை யோட்டுங்கா - ணோத
வொரு நாவுறாதே யுயர்பொன் முதலா
மொருநால் வகை நிமிளை யும்.

பொன், வெள்ளி, வெண்கலம், செம்பு என்கின்ற நான்குவாத நிமிளங்களும் விந்துவை வளர்க்கும். அதி பித்தத்தையும், சன்னியையும் நீக்கும்.

### வெள்ளைச்சங்கின் குணம்

கசிவா மிரத்தபித்தங் கண்ணோய்க ளேரும்
பசியாரும் வாதம் பறக்கு - மிசிவுடனே

தங்குமு னாவிரணந் தானகலுமே வெள்ளைச்
சங்கமது வுண்டேயிற் றான்.

வெண்சங்கினால் உதிரப்பித்தமும், விழிநோய்களும், வாததோடமும், இசிவு மூளைக்கட்டி இவை நீங்கும். தீபனம் உண்டாகும்.

### முத்துச்சிப்பியின் குணம்

ஈளை விலகு யிருமல் குடியோடுங்
கோமவிழு நங்காய்நீ கூறக்கேள் - வாளுடலிற்
கப்பிவருமேகக் கட்டியையும் போமுகத்தின்
சிப்பிதனைக் கண்டவிடத் தே.

முத்துச்சிப்பியினால் கபக்கோழை, காசம் கூடிய நோய்கள், மேகப்பிடகம், சிலேத்தும ஆதிக்கம் ஆகியவை விலகும்.

### பலகறையின் குணம் இதுவே சுவடி

மாந்தந் தங்கிரணி மாவிடச்சுரங் கண்ணோய்
தொந்தம் பரிநாமச் சூலைசுய - மிந்த
வுலகறையைக் காலொடிவை யோடு நரைத்த
பலகறையைக் காணினியம் பார்.

வெண்பலகறையினால் அஜலம், தாகம், கிராணி, விடசுரம், விடநோய், வாததொந்தம், பலவிதக்குத்தல், க்ஷயம், கபவாதம் இவை போம்.

### கலைமான் கொம்பின் குணம்

அவயவத்தின் வெப்ப மதியத்தி மேகங்
கவிழ்திரி தோடம் பெருந்தாகங்க - ளிவைதர
ணிலைக்குமோ மார்புநோய் நேத்திரநோய் நீங்கும்
கலைக் கொம்பாற் பேயுமிலைக் காண்.

கலைமான் கொம்பினால் கைகால்களில் அரிப்பு, அஸ்திமேகமும், முத்தோடமும், வாதசுரங்கள், மார்புவலி, கண்ணோவு, பிசாகம் இவை போம்.

**சோகி பீங்கான் மிருகக்கொம்பு, பல், எலும்புகளின் குணம்**

சோகிபீங் கானறுக்குந் துன்மாங்கி சந்தனைக்
கோகுதிரை யொட்டை குரங்கமுவா - வேகப்
பலமிருகப் பல்வெலும் பல்விழிநோய தர்க்கு
கலமிகு மாதே நவில்.

பகலறை பீங்கான் வகைகள் விருத்தி மாமிசாதி நோயையும், பசு, குதிரை, ஒட்டை, குரங்கு, யானை, பன்றி முதலிய பல மிருகங்களின் நகம், என்புகலும் பற்பல விழிப்பிணிகளை நீக்கும்.

**பஞ்சலோக ஐந்தெண்ணெய், குதிரைக்குளம்பு, கழுதைக்குளம்பு, எருமைக்கொம்பு இவைகளின் குணம்**

பஞ்சலோகச் சார்வு பற்றலுக்குங் கண்ணோயை
யஞ்செண்ணெய் வாதசன்னி யைப்போக்கும்-விஞ்சு
குதிரைக் கழுதைக் குளம்பெருமைக் கொம்பும்
குதிரைவலி நீங்குங் குறி.

பொன், காரீயம், செம்பு, இரும்பு, துத்தநாகம் என்கின்ற பஞ்சலோகங்கள், விழப்பிணியையும், வேம்பு, புங்கு, புனனை, ஆமணக்கு என்கின்ற இவற்றின் ஐவித நெய்கள் வாதசன்னிகளையும், குதிரை வலியையும் நீக்கும்.

**சீலை, கம்பளம், மயிலிறகு இவ்வகைச் சாம்பலின் குணம்**

அத்திபிர மேகம்போ மாடையின்றன் சாம்பலுக்குத்
தத்திவரு ரத்தந் தடைப்படுங்காண் - சத்தியமாய்
கம்பளச் சாம்பல்சன்னி காதுமைஞ்ஞைத் தோகைபஸ்பங்
கும்புவிக்கல் வாந்தி கெடுக்கும்.

சீலைச் சாம்பலுக்கு என்புருக்கியும், கீறி ரத்தமும் போம். கம்பளச்சாம்பல் சன்னியையும், மயிலிறகுச்சாம்பல், விக்கல் சர்த்தியையும் நீக்கும்.

**ஒட்டறையின் குணம் இதனை ஒட்டடை என்பர்**

குட்டங்கள் நோய் குறுதிமூலம் பேதி
யுட்டங் சுசீரணமுள் ளுருகுன்மங் - கெட்டசிரா
வற்புதம்புண் சீதசுர மாப்பவகி நஞ்சிலைகள்
புற்புதம்போ லொட்டறையாற் போம்.

ஒட்டறையால் குறை நோய், சிலேத்துமங்கள், கண்டநோய், அதிசாரம், மந்தம், சிலேத்தும குன்மம், நரம்புகிரந்தி, கடுகஞ்சுரம், சிறுபாம்புவிடம் ஆகியவைகள் போகும்.

**இந்திர கோபப் பூச்சியின் குணம்**

கருமேகந் தாதுநட்டங் கக்கும்கபம் போக்குந்
தருமே நற்காய சித்தி தன்னை - வருமேக
காலமுறை வாளரகத் தையவே தன்மாரிக்
காலமுரை யீயலது காண்.

இந்திர கோபப்பூச்சி, கருமேகத்தையும், விரைவில் விந்து வெளிப்படுதலையும், சிலேத்தும ரோகத்தையும் நீக்கும். காயசித்தியைச் செய்யும்.

**முசுறு முட்டையின் குணம்**

துள்ளு மடல்வாதத் துன்பமந்தம் வல்லிசிவு
தள்ளு வலிக்குழு சதக்கபநோ - யுள்ளில்
விகிறு சன்னி பாதம் விலகும் தூகத்தார்
முசுறு முட்டைக் குணத்தை முன்.

இலுப்பமரத்து முசறு முட்டையினால் மகாவாதம், மந்தம், கசிவு, ஐவித வலி, நீர்க்கபநோய், சன்னி இவை விலகும்.

### பூ நாகத்தின் குணம்

*மாதனறு செய்வறட்சி மாறுமடங் காஞ்சன்னி*
*பாதவறுநோ யோடென்றும் பாறுமடல் - வாதமுறு*
*குண்டபத மீளு மோக்காள மையமும்போம்*
*கண்டபத மென்னுங் கால்.*

இதனால் மிகவும் துன்பம் விளைவிக்கின்ற தாக நோயும், 7வித அசாத்திய சன்னி பாதசுரங்களும், மகாவாதமாகிய புவியினால் கவர்ந்துக் கொள்ளப்பட்ட தொடையையும், ஓக்காளமும், சிலேத்தும நோயும் ஒழியும். இந்த மகா வாதத்தில் நின்றும் நீங்குவது அருமையாய் இருப்பினும் இது இதை நீக்கும் என்னுந் துணிவு தோன்ற அறுகுண்டபதம் என்கிறார்கள்.

### கற்பாசியின் குணம்

*பண்டை மேகத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்டு*
*மண்டையெறி வாசனையி லாருங்காண் -*
*தொண்டைக்*
*கனிக்குமொழி லுட்டுமிதழ்க் காரிகையே காரநற்*
*கனிக்குமொரு கற்பாசி தான்.*

மழையிற் பிறந்த கற்பாசி நீடித்த மேகத்தையும், அதிசாரத்தையும் நீக்கும். வாசனைத் திரவியங்களில் ஒன்றாகப் பொருந்தும்.

## பாஷாண வகைகள்

### பாதரசத்தின் குணம்

*விழிநோய் கிரந்தி குன்ம மெய்ச்சூலை புண்குட்*
*பழிகாலில் விந்துவி னாலத்தை - வழியாய்*
*விரியும் விதியாதும் புரியினோ யெல்லா*
*பிரியும் விதியாது மிலை.*

சாஸ்திர முறைப்படி சுத்தம் செய்து பிரயோகித்தால் நேத்திரநோய், நரம்பு கிரந்தி, அஷ்டகுன்மம், கீல்பிடிப்பு, மகாவிரணங்கள், பெருவியாதி, இரணவாதம் இவை முதலியநோய்கள் விலகும்.

**பாதரச தோஷத்தின் குணம்**

கலையைக்கிழிக்கு மவிழ்த்தெரியுங் கல்லைத்தேடி
யெடுத்தெரியு
மலையிற் குதிக்கும் புனன்மூழ்கி மருள்சேர்பித்தந் தனைக்
கொடுக்கும்
முலையினனல்போ னுடல் வெதுப்பு மோயாவுழலை
வியர்வாக்கும்
பலகாலமுமே வாய்பிதற்றும் பாதரசதோஷமு மிஃதே.

பாதரசத்தை சுத்தி செய்யாமையால் வரும் தோடங்கள், துணியைக்கிழித்தல், அதனை அவிழ்த்தெரிதல், கல்லா லடித்தல், மலைகளின்று குதித்தல், தண்ணீரில் மூழ்கி கிளம்பல், மயங்கிப் பித்துக்கொள்ளல், தேகத்தில் அழலை உண்டாகுதல், மாறாது வாயில் சலமூறல், அதிவேர்வை பெருகுதல், எப்போதும் பிரவாதித்தல் இவைகளாகும்.

**எண்வகைத் தோஷம், நீங்காதரசத்தின் குணம்**

சர்ப்பம் வங்கங் கந்தி வன்னி சஞ்சல கலங்காள
மொப்புண் மந்த மெண்டோட மோட்டிரத்தத்-தைப்
புசிப்பார்
கொப்புளங் குட்டங்கியெரி கோதுவிந்
திளைப்பிரத்த
லப்புளமூர்ச்சைக் குமரி யார்.

ரசத்திற்கு எண்வகை தோடமுண்டு அவை சர்ப்பம், வங்கம், கந்தி, வன்னி, சஞ்சலம், மலம், காளம், மந்தம், எண்பனவாம், அவைகளை நீக்காமல் அந்த ரச மருந்தை உண்பவர்கள் முறையே விரணம், பெருவியாதி, தீச்சுவளை,

தபித்தல், உதிரப் பசையற்ற தேகநிறம், வீரிய நாசம், மரணம், சோபம் என்கிற எண்வகை நோயை அடைவர்.

## ரசாஞ்சனத்தின் குணம்

அரியர சாஞ்சனத்தா லம்புவியி லுள்ள
விரிவிழி நோயெல்லா மறையு - மருவி
வருகாமிய விரண மாறும் புண்ணாறு
மொருமா மயிலே யுரை.

ரசாஞ்சனத்தினால் பூபடலம், விழிப்புண், குய்யரோகப் புண், ஆராக்கிரந்திகளும் விலகும்.

## ராசகற்பூரத்தின் குணம்

இடைவாத சூலை யெரிசூலை குன்மத்
தொடைவாளை வாதமாஞ் சோணி - யிடையாதோர்
வெக்கும் ரசகர்ப்பூர மொன்றே யளவொடுதல்
லிக்குவெல்லந் தெழு நாளீ.

சுத்திசெய்த ரசகற்பூரத்தைப் பிணிகளின் வன்மைக் கொப்ப நல்லவெல்லத்தில் தரணமாக வைத்துப் பத்தியத்தோடு 7 நாட்கள் கொடுக்க சகனாவர்த்தவாத பிடிப்பும், பித்தசூலை, வயிற்றுநோய், சிலேஷ்மவூரல், தம்பவாதம், வாதாதித்த சோறு, வாதம் இவை போம்.

## சாதிலிங்கம் குணம்

பேதிசுரஞ் சன்னி பெருவிரண நீரோடுதல்
காதுகடி காசங் கரப்பான் புண் - ணோத
யுருவிலிங்க சங்கதமாயூ றுகட்டியும் போங்
குருவிலங்க சங்கமதைக் கொள்.

ஆம் யிரதவுருக் காதலாற் சாதிலிங்க
மோதி லிரத்தகுண முற்றுடலிற் - றீதுபுரி
குட்டங் கிரந்தி கொடுஞ்சூலை வாதமுத
லுட்டங்கு நோய்களை யோட்டும்.

சிவந்த சாதிலிங்கம் முதலிய பாதரச உருக்காகையால் அந்த ரசகுணத்தைக் கொண்டு அதிசாரம், ரூட்சை, சன்னிபாதம், அற்புத புண், அதிமூத்திரம், காணாவிடம், இருமல், கரப்பான், சிரங்கு, நுணாக்காய் கிரந்தி, மண்டல குட்டம், இமை சரீரக்குத்தல், வாதநோய், அந்தர்முக நோய்கள் இவைகள் விலகும்.

### சவ்வீரத்தின் குணம்

குன்மமொடு குட்டங் கொடியவனிலந் திரட்டு
துன்மாங்கிசப் பெருக்கஞ் சூலைநோய் - வன்மையுறு
காமியப்புண் ணாதியநோய் கண்டாறகவ் வீரனெனுஞ்
சாமியினா மத்தையுச் சரி.

சவ்வீரத்தினால் குன்மம், குறைநோய், மகாவாதங்கள், வளருகின்ற துர்மாம்சங்கள், கீல்பிடிப்பு, அரிசோநோய் இவை போம்.

### நெல்லிக்காய் கந்தகத்தின் குணம்

நெல்லிக்காய் கந்திக்கு நீள்பதினெண் குட்டுமந்தம்
வல்லை கவிகைகுன்ம வாயுகண்ணோய் - பொல்லா
விடக்கடி வன்மேகநோய் வீறுசுரம் பேதி
திடக்கிரக ணீபம் போந் தேந்.

நெல்லிக்காய் கந்தகத்துக்கு 18 குட்டம் மலஜலம், அல்லைக்கட்டி, கவிகை, மகோதரம், குன்மம், குந்த நோய், மகாவிட மேகவியாதி, வாதசுரம், வாதாதி, கபகிராணி, கப ஆதிக்கம் இவை போம்.

### வாண கந்தகத்தின் குணம்

வாணக் குழாய்க்கந்தி வாசனையை கண்டவுடன்
காணக் கிருமிசொறி காணாவாந் - தோனும்
பெருவியாதிக் கூட்டம் பேருமத னூலின்
மருவியாழுங் கொடியே வாழ்த்து.

வாண மருந்துகளான குழாய் கந்தகத்தால் ரசத் தாதுக்களிற் பிறந்த சிறு கிருமி நமை குட்டங்கள் போம்.

### தாளகத்தின் குணம்

தாளகத்தின் பேருரைக்கந் தாலுகவு நோய்குட்டம்
நீளக் குளிர்க்காய்ச்ச னீர்பக்கங்க ணாளகங்கொள்
துட்டப் பறங்கிப்புண் குழமுகண் மண்டை நோய்
கிட்டப் படுமோ கிளத்து.

தாளகத்தினால், அதிசிக்வாதநோய், தாளுகச்சகபநோய், வெண்குட்டம், நடுக்கற்சுரம், க்ஷயகாச சுவாசம், துட்டவிரணம், ஜஸ்வரம், சிரஸ் தாபநோய் இவை விலகும்.

### சிவந்த அரிதாரத்தின் குணம்

சிவந்த அரிதாரமது செஞ்சிலைபோற் காட்டு
முவந்தனை யுண்முறையோ டுண்டா லீவர்ந்தாழ்
சுரங்களிர் மாவாதமுடற் சூலைநமை குட்ட
மிரங்குமென நாளு மிசை.

சிவந்த அரிதாரத்தை சுத்தி செய்து கிரமமாக உண்டால் குளிர்சுரம், மாவித ரோகம், சரீர குத்தல், தினவு கிடிபகுட்ட நோய் ஆகியவை போம்.

### மடல் அரிதாரக்கரடுகள் மனோசிலை இவைகளின் குணம்

மடலரி தாரத்தில் வருங்கர டிரண்டு
முடல்விடங் களைக்களையு முண்மை - கொடிய குட்டம்
காய்ச்ச னடுக்கலஜ கள்ளியிரைப் புச்சிலந்திப்
பேச்சறு மனோசிலைக்குப் பேசு.

மடலரிதாரத்தில் பலவகைக் கட்டி என்கின்ற வாத கரடுகளாலும், உடலூறிய விடங்கள் நீங்கும். மனோசிலையில் சமருகுட்டம், குளிர்சுரம், கள்ளியிரைப்பு நோய், சிலந்தி விடம் இவைபோம்.

## பொன் அரிதாரத்தின் குணம்

மந்தாரத் தாலே வளருஞ் சவாசநோ
யுந்திவரு தீச்சுரநோ யோடுங்காண் - முந்து
தொனிக்கயஞ் செய்யான் கடியுந் தோற்குட்டு மேகந்
தனிப்பொன் னரிதாரந் தால்.

பொன் அரிதாரத்தினால் சுவாச காசம், கொடிய சுரம், இளைப்பு நோய், செய்யான்கடி, தோலைப்பற்றிய குட்டம் முதலியன நீங்கும்.

## மிருதாரசிங்கியின் குணம்

மிருதாரசிங்கெனவே மெல்ல வுரைத்தாலு
முருவா ருடைகரப்பா வோடு - மொருவிதமோ
சாலச் சிரங்குபுண்ணுந் தப்பாம லாறிவிடும்
வேலொத்த கண்மயிலே வின்.

மிருதாரசிங்கியினால் உடம்பெங்கும் பரவுகின்ற பித்த விரணம், கரப்பான், கிரந்திக் கூட்டம், மகாவிரணம் இவை விலகும்.

## வெள்ளைப் பாஷாணத்தின் குணம்

வெள்ளைப் பாஷாணம் விடங்கடி திரும்பூசக்
கொள்ளைச் சுரந்தோடம் கோரசன்னி -
நொள்ளையுறு
நாசிப்புண் வாய்ப்புண் ணளைகிரந்தி போமுண்ண
வாசிக்குங் கும்பமுலை யாய்.

வெள்ளைப் பாஷாணத்தினால் விஷக்கடி, கொள்ளைக் காய்ச்சல், தோடம், சன்னி, மூக்குப்புண், வாய்ப்புண், கிரந்தி முதலியன நீங்கும். மற்றும் இதனால் யானைக்கால் சுரம், தோலைப்பற்றிய பிணிகள், சுவாச காசம் முதலியன போம்.

## கௌரிபாஷாணத்தின் குணம்

அவுரியொடு பாகலிலை யாற்சுத்தி செய்த
கவுரி பாஷாணத்தைக் கண்டாற் - கவுரியஞ்செய்
வாதநோய் மந்தமொடு வந்த சுரங்களெலாம்
காதிவிழுந் தோடுமெனக் காண்.

அவுரிசாறு, பாகற்சாறு இவைகளில் சுத்திசெய்த கவுரி பாஷாணத்தால் வாதநோய், மந்தம், சுரங்கள் நீங்கும்.

## நீலாஞ்சன பாஷாணத்தின் குணம்

வன்னியறு வெட்டுப்புண் மாபிரமி யாக்கிச்சூர
சன்னியனல் கீடவெட்டு தாகஞ்சூ - டுன்னசிர்க்கு
நீங்கு நிலாஞ்சனந்தா னீடொளிதன் ணேருக்க
மோங்கு நீலக்குயிலே யோர்.

நீலாஞ்சனத்தால், ரசவன்னிதோடம், ஆகந்து விரணம், பிரமேகம், விழிப்பிணி, சன்னிசுரம், புழுவெட்டு, விதாகம், உட்சூடு, ரத்தபித்தம் இவை விலகும். தேக வனப்பும் குளிர்ச்சியும் அழகு, பலம் இவை மிகும்.

## தொட்டி பாஷாணத்தின் குணம்

தொட்டிப் பாஷாணமெனச் சொன்னாற் சுரம்கிரந்தி
யெட்டிப் பார்க்கவா மிடகுறுக்க கிட்டிவரு
வாயுவின்றன் பெருக்குமந்த முளைக்கட்டி யும்போ
மாயினது வாதவித்தைக் காம்.

தொட்டிப்பாஷாணத்தால் சுரம், கிரந்தி, வாதமிகுதி, மந்தம், முளைக்கட்டி இவை போம். இது வேதைக்குதவும். மேலும் கிரந்தி, வாயு, விஷக்கடி ஆகிய பிணிகளுக்கும் இது பயன்படும்.

***குறிப்பு:-*** தொட்டி பாஷாணம், சரப்பராஜ குளிகை போன்ற பெரிய மருந்துகளில் சேர்க்கப்படுகிறது.

### பஞ்சபாஷாணத்தின் குணம்

பஞ்சபா ஷாணமெனப் பாரிலுரைத் திட்டாலும்
வெஞ்சதை யெணிப்புட்டும் வீறுங்காண் - விஞ்சுவார்
கண்புற்றுத் தீருமதி காய்ச்சல்குளிர் மேகம்போம்
பண்புற்று மாதே பகர்.

துர்மாமிசம், ஆணி, புற்று, கண்புற்று, அதிகாய்ச்சல், குளிர், சுரம், மேகநோய்கள் முதலியன பஞ்சபாஷாணக் கூட்டுச் சரக்கால் நீங்கும்.

### நவபாஷாணத்தின் குணம்

நவபாஷாணந்தன்னை நற்சுத்தி செய்தங்
குவகையாய்ச் சிந்தூரித் துண்டா - வைமாகக்
காய மிருகுங் கனத்தநோயும் போகு
மாயுநோ யெல்லா மதி.

நவபாஷாணத்தை நல்லமுறையில் சுத்திசெய்து, அதை செந்தூரித்து உண்டால், உடல் இறுகும். பெரும்பிணிகள் நீங்கும்.

## உலோக வகைகள்

### பொன்னின் குணம்

அடற் றாவரவிடங்க ளங்கொளி மங்கல்
தடத்தாழுந் தோடகயங் காச - முடற்றாபஞ்
சேகையிருந் தாதுநட்டந் திட்டிநோ யீளையிவை
யீகையிருந் தாலேகு மெண்.

பொன்னினால் தாவரவிடங்கள், உடம்பில் ஒளிக்குறைவு, சன்னி, இளைப்புநோய், காசம், உடல்வெப்பம், முதிர்ந்த கபக்குற்றம், தாதுநட்டம், விழிநோய், கோழைக்கட்டு இவை விலகும்.

## வெள்ளியின் குணம்

பாய்க்கூட்டங் காட்டப் பழையசுரந் தாருவிடம்
வாய்க்கூட்டாச் செய்மேக வாதமுத - னோய்கூட்ட
மண்டாது காணிகொளு மத்திமேகக் கசிவும்
வெண்டாதுகாணி மெய்யை மேல்.

இரத்தங் சுயம்பித்த மீளைகண்ணோய் காச
முரத்தைய மட்டகுன்மம் மூதை - வருத்தும்
விரணஞ் சிலேட்டுமநோய் மெய்ப்புளிப்
புண்ணுரண
மரணமுறும் வெள்ளியினால் வாழ்த்து.

வெள்ளி, படுக்கைக்குக் கனமில்லாதபடி, தூர்ப்பலஞ் செய்கிற புராண சுரம், மாவிடம், ஒருவரால் உணவை ஊட்டச் செய்கிற மேகவாதப் பிடிப்பு முதலிய நோய்களையும், ஒழுக்கு வெள்ளை, உதிரபேதி, சயம், பைத்தியம், கோழை, விழிநோய், இருமல், மார்புச்சளி, அஷ்டகுன்மம், வாதகோபம், கிரந்தி, நீர்க்கோவை, லாஞ்சனம், சிரங்கு, சொறி முதலியவை விலகும்.

## தாம்பரத்தின் குணம்

தாம்பரத்தாற் சோரிபித்தஞ் சன்னி வழுவைகபம்
வீம்பார பீலிகமந்தம் வெண்மேகஞ் - தேம்பமலை
சூதகநோய் புண்கிரந்தி தோடகவா சங்கிருமி
தாதுநட்டங் கண்ணோய்போஞ் சாற்று.

தாம்பரம் (செம்பினால்) இரத்தபித்தம், சந்நி, கல்லீரல், நோய், கபநோய், பீலிகம், அக்கினி மந்தம், வெண்மேகம், பித்தவழலை, சூதகநோய், புண், கிரந்தி, திரிதோடம், சுவாசம், கிருமி, கண்ணோய் முதலியன தீரும். தாது நட்டம் நீங்கும்.

## பித்தளையின் குணம்

தாதுவிர்த்தி யுண்டாகுந் தாபச்சுரம் போகுஞ்
சீதளமாம் வாதஞ் சிதையுங்காண் - பூதலத்துண்
மாட்டியதோர் பித்தகுன்ம மாறுமலர்ந் திருவே
நாட்டியதோர் பித்தளை யினால்.

பித்தளையினால் தாதுவிர்த்தியுண்டாம். சீதளம் விருத்தியாகும், தாபசுரம் போகும். வாதம் பித்த குன்மம் இவை நீங்கும்.

## வெண்கலத்தின் குணம்

நேத்திரநோய் சோமவினை நீர்பெருக் கிரத்தபித்தம்
வீழ்த்து சுவாசம்மந்த மோகமோ - டாழ்த்துகப
வாதவலி சூலை மகோதரம்போம் பித்தமொடு
தாதுவுமாம் வெண்கலத்தாற் ஞன்.

வெண்கலத்தினால் கண்நோய், சோமநோய், வெகுமூத்திரம், இரத்தபித்தம், சுவாசகாசம், மந்தம், வாத பிரமேகம், கபம், வாதவலி, சூலை, பெருவயிறு முதலியன நீங்கி, பித்தமும், தாதுவும் அதிகப்படும்.

## தராவின் குணம்

சூலையொடு மேகத்தை தோன்றாம லோட்டிவிடு
மேலை வருகாலை விலக்குங்கா - ணால
வாரமேவிய வல்கு லாரணங்கே வேட்டைத்
தராவெனு முலோகமது தான்.

வெட்டைத்தரா என்னும் உலோகம், சூலை, மேகம், கபவாதம் முதலிய நோய்கள் போகும்.

## வெள்ளீயத்தின் குணம் - இதுவே வெண்ணாகமம்

தாகங் கரப்பான் சலமேகம் பித்தகப
மேகமொளி மங்கல் வெப்புபல - மாகிரந்தி

துள்ளீய மந்தார சுவாசமுமந் தாக்கினியும்
வெள்ளீய மன்போக்கும் விதி.

தாகநோய், கரப்பான், சலப்பிரமேகம், பித்தகபத் தொந்தம், மேகம், வனப்பு, குன்றல், சுரம், துற்பலம், கிரந்தி, மந்தார சுவாசகாசம், அக்கினி மந்தம் இவைகள் வெள்ளீயம் நீக்கும்.

## காரீயத்தின் குணம்

பன்மரநஞ் சக்கிநோய் பாகர்த் தபிவிரணங்
குன்மங்கால் சூலங் குதவிரணஞ் - சன்மம்
பெருநாக மேகப் பிணிசுர மிவற்றைக்
கருநாகமே நீக்குங் காண்.

ஆற்றலரி முதலிய தாவரங்களினால் உண்டாகும் விடம், கண்ணோய்கள், கர்த்தபி நோய், குன்மம், வாதநோய், சூலை, பகந்தர விரணம், யானைக்குட்டம், மேகப்பிணி, சுரம் இவைகளை விலக்கும்.

## துத்தநாகத்தின் குணம்

மேகங்கிளர்பேதி வெட்டையழலைத் தணிக்கும்
வேகங் கிராணி விலக்குங்காண் - போகாப்
பரியமுளைப் புண்ணைப் பயித்தியத்தைப் போக்கு
மரிய துத்தநாக மது.

துத்தநாகம், மேகம், பேதி, வெள்ளி, உட்சூடு, கிரகணி, முளைப்புண், பித்தம் முதலிய நோய்கள் நீங்கும்.

## இரும்பின் குணம்

பாண்டு வெண்குட்டம் பருந்தூதநோய் சோபை
மாண்டிடச் செய்மந்தங் காமாலைகுன்மம் - பூண்ட
பெருந்தாகு நட்டமும் போம் பேதிபசி யுண்டாம்
கருந்தாது நட்டமிடுங் கால்.

இரும்பினால் பித்தபாண்டு, வெண்குட்டம், அதிநூல நோய், சோபை, மந்தம், காமாலை, குன்மம், சுக்கில நட்டம், கழிச்சல் இவை நீங்கும். பசி உண்டாகும்.

இளைத்தவர் இரும்பு உண்ண வேண்டும்.

**எஃகுவின் குணம்**

தந்தமந்த மூலவுரு தாது நாட்டஞ் சோபை கண்ணோய்
வந்த மந்தம் பாண்டுவினை வன்மைகுன்றன் - முந்த
பெருக்கிடையாய் நீட்டுகப பேத மிவைகட்
குருக்கிடையா தோட்டு முரை.

எஃகு தந்தரோகம், தந்தமூலநோய், சுக்கில நட்டம், வீக்கம், கண்ணோய், அலசம், உடல் வெளுப்பு, துர்பலம், படுக்கையே கதி என வீழ்த்தா நின்ற க்ஷயகாச நோய்களை ஒழிக்கும்.

**காந்தத்தின் குணம்**

காந்தத்தாற் சொபைகுன்மங் காமிலமேகம் பாண்டு
சேர்ந்திரி தோஷம்வெட்டை சீதங்கா - லோய்ந்தபசி
பேருதரங் கண்ணோய் பிரமிய நீராமையும்போ
மோரினிறை யாயுளுறு முன்.

காந்தக்கல், வீக்கம், குன்மம், காமாலை மேகம், பாண்டு, முத்தோடம், வெள்ளை வீழல், சீதளம், வாதநோய், மந்தம், மகோதரம், வீழிநோய், பிரமியம், நீராமைக்கட்டி முதலியன போய், பூரண ஆயுள் உண்டாகும்.

**மண்டூரத்தின் குணம்**

கிட்டமொன்றாற் சோபை கிளை வீக்கம் மத்திசுரந்
துட்டவிடபாகஞ் சுவரசகபங் - கெட்டகொடும்
பாண்டிரும நீராமை பாழும் பிரமியமுந்
தாண்டிவிடு முண்டிரத்த தாது.

மண்டூரத்தினால் வாதசோபை முதலிய வீக்கங்கள், அத்தி சுரம், கொடிய விடபாகம், இரைப்பு, கபகோபம், தேகம், வெளிறல், காசம், நீராமைக்கட்டி, பிரமியம் இவை நீங்கும்.

# நவரத்தின வகைகள்

## மாணிக்கத்தின் குணம்

சுரோகஞ் சன்னிகளின் தோட மதிதாக
முரமான மேக மொழியுந் - திரமாக
வூணிக்கோ ணேத்திரநேர யோடுமர வின்றவொளி
மாணிக்கத்தால் வசிய மாம்.

சர்ப்பம் கக்கிய மாணிக்கத்தால் சுரநோய், சன்னிபாத தோடம், அதிதாகம், வன்மேகம், நாட்பட்ட கண்ணோய் முதிலியன நீங்கும். வசியம் உண்டாகும். மேலும் இரத்த பித்தநோய், கபவாதம், க்ஷயம், பூதவேதாள் தோடம், விடம், கர்மநோய் முதலியன தீரும். விந்துவும், ஜீவ சக்தியும் அதிகரிக்கும்.

## வயிரத்தின் குணம் - இதுவே வச்சிரம்

ஆறுவித மாம்வயிர மவ்வவற்றுண் மாரசம்
வீறிநிலைத் திருக்கு மேன்மையினாற் - கூறுமவைக்
கெப்பிணியு நீக்கும் முனையில் வனப்புமுண்டாஞ்
செப்பிணையின் மாமுலையாய் செப்பு.

தேவ, பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர, சங்கர என்கிற ஆறுவகை வயிரங்களிலும் மகா சாரங்கள் தங்கியிருப்பதால், அவைகளினால் கண்நோய், பற்பலநோய் விலகி, சரீர அழகுண்டாகும். மேலும் உடற்சத்துக்களையும், வன்மையையும், விந்துவையும் பெருகச்செய்யும்.

### வைடூரியத்தின் குணம்

சீத வாதத்தொடு சலேஷ்மம் புளியேப்பங்
காதுசூலைப் பிணிக ளத்தகுன்ம - மோதுபித்த
மென்றுரைக்கு நோய்களன்று மெப்போதுந்
தோடமிலை
நன்று வைடூரியத்தி னால்.

வைடூரியத்தினால் கபவாதம், ஐயம், புளிஏப்பம், வருந்துகின்ற சூலைநோய், வாதகுன்மம், பித்தம், அபத்திய தோடம் முதலிய ஏழுவகைத் தோடங்களும் நீங்கும்.

### கோமேதகத்தின் குணம்

வாதபித்த கோபத்தை மாற்றுமலக் கட்டறுக்கு
மோதுமந் தாக்கினியை யோட்டுங்காண் - மீதி
லழறரு விகார மகற்று மொளிசெய்யுங்
கழறுகின்ற கோமேத கம்.

கோமேதகம் வாதபித்தம், மலக்கட்டு, அக்கினி மந்தம், சுரத்தால் பிறந்த துர்க்குணம் இவைகளை நீக்குவதுமன்றி சரீரத்திற்கு ஒளியைக் கொடுக்கும்.

### புட்பராகத்தின் குணம்

வீரிய விர்த்தியது மேன்மேலு முண்டாகுங்
கூரியதற் புத்தியுண்டாங் கூறுங்காற் - பாரிற்
பிணிவருக்க மேகும் பெரும் புட்பராக
மணியாற் புகழுமுண்டாம் வாழ்த்து.

புட்பரகாத்தினால் சுக்கில விருத்தியும், நுட்பமான அறிவும், கீர்த்தியும் உண்டாகும். மேகம் முதலிய நோய்க்கூட்டங்கள் விலகும்.

### பவளத்தின் குணம்

சுரதோட மையமுத் தோட சுரங்காச
மருசி கீடத்தாதா மாதம் - பெரும் விந்து
நட்ட மதிதாக நாவறட்சி போமொளியுங்
கிட்டும் பவளத்தாற் கேள்.

சுரத்திலுண்டாம் தோடம், கபம், சன்னிபாத சுரம், இருமல், அரோசகம், விடசந்துக்களினால் உண்டாவிடம், தாது நட்டம், நாவிலுண்டாகும். சுரசுரப்பு இவைகள் நீங்கும். சரீரத்திற்குக் காந்தி உண்டாகும்.

### முத்தின் குணம்

அத்திசுரஞ் சோபை யருசிதுர்ப் பலங்கண்ணோய்
பித்துவிடஞ் சீதளநோய் பேசுகபஞ் - சத்தத்
தயிரிய நட்டத்தோடு தாதுநட்ட மும்போ
முயிறுநண் முந்திருந்தா லோது.

எலும்பைப் பற்றிய சுரம், சோபை, சுவையின்மை, உடல் வன்மைக்குறைவு, கண்ணைப் பற்றிய நோய்கள், பித்த விருத்தி, விடங்கள், சீதள நோய்கள், கபவிருத்தி, மனவலிமையின்மை, இந்திரிய நட்டம் இவைகள் நல் முத்தினால் நீங்கும்.

### மரகதத்தின் குணம்

தாதுதரும் பூதபை சாகந் தமையோட்டு
மீதுவரு புண்ணை விலக்குங்காண் - டீதுபுரி
மச்சை யகற்றும் மதுமேகம் போக்கும்
பச்சை யதுமதுரம் பார்.

இனிப்புச்சுவையுடைய பச்சைத் தாதுக்களை விருத்தி செய்யும். பூத பைசாசங்களை ஒட்டும். உடல் மீது உண்டாகும் புண்களை நீக்கும். கெடுதலைச் செய்கின்ற மதுமேகத்தைப் போக்கும்.

### நீலத்தின் குணம்

குதிவலி மேகபித்தங் கூறரிய பாண்டு
மதிமயக்க மெல்லா மருளு - மதி நுதலே
புத்தியொடு மேன்மேலும் போகசுக முண்டாகுஞ்
சுத்தநறு நீலத்தாற் சொல்.

நீலமணி குதிக்கால் வலி, மேகம், பித்தம், பாண்டு, புத்திமயக்கம் முதலிய நோய்களைப் போக்குவதுடன் நுட்பமான அறிவை வளர்த்துப் போகச் சுகத்தை உண்டுபண்ணும்.

## வைத்தியாங்கம்

### மருத்துவன் குணம்

நெய்தவு பாசனை பல நூலெல்லை கண்டற்
றிரிகரண கத்திபன்னோய் தீர்த்துனாளு
வைகன்றதீரமதி நுட்பஞ்சான்றோ
நட்பொழுக்க மேன்மைகுண மண்புள்ளானாய்

மெய்வசுதைவிகலையணங் குறைபதார்த்த
விதியுடற்காதார மடலங்கிமாந்தந்
கைவரு மெண்பேதமெலா முணர்ந்துற்றானாய்க்
காணிவந்த மருத்துவன்கைக் கரண்யுண்ணே.

பல சாஸ்திரங்களை நன்றாக ஆராய்ந்து அறிவதால் மனம் வாக்குக் காயமென்னும் திரிகரண சக்தியால் பல வியாதிகளைத் தீர்க்குதல், நாளும் வியாதியைக் கண்டு அஞ்சாத தீரத்துவம் மிகுந்த வீட்பம், பெரியோர் சிநேகம், ஆசாரம் மேம்பாடு, நற்குணம் அன்பு இத்தன்மைகள் உள்ளவனாகித் தேகம், தோஷம், காலம், நோய் மருந்து, பதார்த்த குணம் உடம்புக்காதாரம், உதாரக்கினி , தேகபலம், ஆகாரம் செய்பாகம், இன்ன நோய்க்கு இத்தனை நாள் மருந்து

கொடுக்கவேண்டுமென்கிற காலஅளவு என்னும் இப்பேதங்களையெல்லாம் அறிந்திருப்பவன் கொடுக்கும் மருந்தைச் சஞ்சீவிக்கு ஒப்ப நினைத்து உன்.

**கைபார்த்த மருத்துவன் நடத்தை**

கன்மவுரு நோயதைமுக் கண்கொடறி வுற்றறிந்தோர்
தன்ம நீராடற் சகத்துடனெட் - டின்மையெனி
லங்கைபதத் தூய்மையின்யே வங்குவிபூ வெற்றிலின்றேற்
கங்கை பதம்புனிறு காண்.

நோயானது கன்ம ரூபமா கையால் அந்நோயை மூன்றுவிரலைக்கொண்டு பிணியாளனுடைய கைமுதலாகிய தசவிதநாடிகளையும், தொட்டறிந்து அதுவுமன்றி 8 வித சோதனைகளாலும், அறிந்த மருத்துவர்கள் முக்கியமாக நடத்துக் கொள்ளத்தக்க ஒழுக்கமாவது.

**பிணியாளன் குணம்**

அருப்ப முனரசெனினுந் தீர்ப்பானைக் கண்
டழைத்தவனை யாதியரு மவனென்றோர்தல்
விருப்பமுறத் தவசிருத்தன் மெய்யன்பாடல்
வேண்டுடலீந் திடலுறையேற் றுண்டலத்தைத்

திருப்பவருந்துயரற்றற் காதங்கூறற்
செப்புளொடுங் கற்பன் மருந்தெழித்தலூழா
மிருப்பகற்று முறைகுயிற்ற லிவையுள்ளாளே
லிவனாமம் புகலுகர்க்கு மின்றுநோயே.

அரசனேயாயினும், பிணியுற்றால் மருத்துவரை உப ஆசாரத்துடன் வரவேற்றல், தாய், தந்தை, குரு, தெய்வம், நமக்கு இம்மருத்துவரே என நினைத்தல். அரசர் மகிழுமாறு இருக்கை கொடுத்து, அவரிடம் உண்மையான அன்பு பாராட்டல், மருந்துக்கு வேண்டிய பொருட்களை கொடுத்தல், அவர்தரும் மருந்தை இரண்டு கைகளாலும்

பணிவுடன் பெறுதல், இம்மருந்தை வேண்டா என வேறு மருந்தை கொடுக்குங்கால், வருத்தத்தை பொருத்துக் கொள்ளல், மருந்து சாப்பிடுங்கால் உண்டாகும். குறைகுணங்களை அப்படியே கூறுதல், அவர் சொல்லுக்கு அடங்கியிருத்தல் பல மருந்துகளை உண்ணாமல் நீக்குதல், பழைய வினையால் பிணிதோன்றுவதால் அவ்வினையைப் போக்கிக்கொள்ளுதல் என்றும் இக்குணங்களை பொருத்தி யிருப்பானாகில் இவனை பிணி அணுகாது.

## பாகஞ்செய்வான் குணம்

பிணியார்க் குரியர் பிகுக்குணத்தை யொப்ப
ரணியிர் சிறந்தநட்ப ராம்பர் - பணியர்குட்
டுப்புறையை யுண்மைமிகு தூய்மையிவை யார்ந்தகரரை
யொப்புறையை யாடற் குவத்து.

பிணியாளர்க்கு மருந்து செய்பவர், உரிமையுள்ளவர் களும், நன்மையுள்ளவர்களும், வைத்தியர் மனதை ஒத்தவர்களாயிருக்க வேண்டும். அத்தன்மை இல்லாதவர்கள், மற்ற ஏவலாளிலிக்குள் தேகபலம், பிணியாளர்களுடைய ஆயுசு விருத்தியை விரும்புதல், புத்திநுட்பம், சத்தியம், பரிசுத்த மென்னும் நற்குணம் உள்ளவர்களை பரிசோதித்து மருந்து பாகம் செய்ய வைத்துக்கொள்ளவேண்டும் என்க.

## கருமை, செம்மை, வெண்மை, மஞ்சள் என்னும் நிறத்தையுடைய கலுவங்களின் குணம்

கருங்கற் கல்வத்தவுழ்தங் காணிலுடற் கின்பா
நெருங்கிவந்தக் கற்றோடநீக்கு - மொருங்கு வெள்ளைக்
கண்மருந்தோ வீரமோடு காரமுமின் மஞ்சளம்மி
யினமருந்தோ நோய்விலக்கா வெண்.

கரிய நிறமுள்ள கலுவத்திலறைத்த மருந்து உடலிற்கு நலஞ்செய்யும், சிவப்புநிற அம்மியானது சகல தோஷத்தையும் நீக்கும். சுத்த வெண்மைநிறக்

குழிக்கல்லினது மருந்திற்கு வீரமும், சுவையும், இன்மையாம், மஞ்சள் நிறக்கல் மருந்துப் பிணிகளை நீக்காது.

### மருந்தினது பக்குவ குணம்

பக்குவ பாகத்தை யுறுமருந்தும் பிறழ்
பக்குவ பாகத்துப் பருமருந்து - மெய்க்குறுங்கா
லக்கால மும்பருணவாழி வருந்துன் சிந்துசேடன்
சுக்காலமும் பொருந்துங் காண்.

தகுமான முறையினாற் செய்யப்பட்ட மருந்துகளே ஆனாலும், பக்குவ பாகத்தைப் பொருந்துமானால், அது தேவர்களுண்ணத் திருப்பாற்கடலில் உண்டான அமிர்தத்திற்கு ஒப்பாகும். கனமான முறையினால் செய்யப்பட்ட மருந்துகளேயானாலும், செய்த பாகங் கெடுமானால் அக்காலத்தில் ஆதிசேடன் கக்கிய விஷத்திற்கு ஒப்பாகும்.

### மறுபாகக் குணம்

மாசுமொட்டிக் குளிர்ந்த பாணியிர சாயனநல்
வேகவிவேகங் குடிநீர் மெய்ச்சுரச - மேகுமிரா
மீந்தவெஞ் சனாதிகளை மீளவொரு காவானடி
மாந்தநஞ்சம் வேறிருக்கு மா.

பக்குவமாகக் காய்ச்சி ஆறின வெந்நீர் ரசாயணம் நல்ல வீரியமுள்ள லேகியம், கஷாயம் இடித்துப் பிழிந்து முறிந்த சுரசம் சென்ற இரவில் மீந்த பதார்த்தம் முதலியவைகளை மறுபடி ஒருதரம் அடுப்பில் வைத்துப் பாகஞ்செய்து புசிக்க இதுவே விஷமாகும்.

### மருந்துவைக்கும் பாத்திரத்தின் குணம்

தெங்கின் குடுக்கை திகிரிதந்தப் பாத்திரத்தார்
நன்கிராப் பன்மருந்து நன்மருந்தாம் - வெண்கலந்தான்

மையிரும்பாற் கட்டைகளாற் கொம்பாற் பாத்திரங்கட்
செய்யினிரம் டாம்பட்சஞ் செப்பு.

தேங்காய்க்குடுக்கை, மூங்கிற்பரணை, தந்தச்சிமிழ் இவைகளில் வைக்கிற நலமில்லாத அற்பமருந்தும் உயர்ந்த மருந்தாம். வெண்கலம், இரும்பு, மரம், மிருகங்களின் கொம்பு இவைகளாற் செய்த பாத்திரங்களில் மருந்துகளை வைப்பது மத்திமபட்சமாகும்.

**மருந்தூட்டும் பாத்திரபேதம்**

வாதமுதன் முப்பிணியோர் வைத்திரயுன் பாத்திரத்தின்
பேத முறையேகேள் பெருங்கஞ்சஞ் - சாதகும்பந்
தாம்பர மா மின்னென்னிற் சக்கரிகைப் பாத்திரநன்
றாம்பரமாட் கொடுக்கு மாற்கு.

வாதநோயாளிகளுக்கு வெண்கலப் பாத்திரத்திலும், பித்த நோயாளிகளுகக்கு தங்கப்பாத்திரத்திலும், சிலேஷ்ம நோய்களுக்கு தாம்பர பாத்திரத்திலும், மருந்திழைத்துக் கொடுக்கவேண்டும். இவை இல்லை எனில் குயப்பாத்திரமே உத்தமமாகும். இதுவே பூரண ஆயுளைத்தரும்.

**மருந்தூட்டும் காலம்**

அனிலநோ யர்க்கசன மாகா முன்பிறந்த
துனியர்க் கசனநடு தூயை - யெனுநோயர்க்
கரசுரப் பின்னுமருந்தி லுறையப் பிணியாக்
கரசரப் பின்னுலகிற் றான்.

வாதநோயாளிகள் உணவு உண்ணும் முன்னும், பித்த நோயாளிகள் உணவின் நடுவிலும், சிலேத்தும நோயாளிகள் உணவு உண்டபின்னும் மருந்து உண்ணக் கொடுத்தால் அவ்வியாதியினாலேயே உலகத்தில் அவர்கள் இறக்கார்கள்.

## மருந்தருந்தியபின்பு வாயிலிடும் வஸ்துக்கள்

சீவற் கனமது தீராட்டை தும்பை மூக்குடிராகம்
பூவற சரநெற் பொரிச்சத்தூள் - பூவி
னிருந்துண்ட நீர்மைகுன்றா தேற்றுமேன் மக்கண்
மருந்துண்ட வாய்க்கிலையா மால்.

கொட்டைப்பாக்குச் சீவல், நாகப்பூ, தேன், திராட்சைப் பழம், வெற்றிலைக்காம்பு, கிராம்பு, ஒருவருடஞ்சென்ற நெற்பொறி, பச்சைக்கர்ப்பூரத்தூள் இவைகள் உண்ட மருந்தின் தன்மையையே கெடுக்காத பொருட்களாதலாலும், வெகுட்டினால் முகத்தின் சுபாவத்தன்மை மாறாமலிருக்கும்படிச் செய்யத்தக்கவையாதலாலும் அவைகளில் ஒன்றை மருந்து உண்ட மேன்மகள் வாய்க்குக் கொஞ்சம் கொடுக்கவும்.

## பகல் உறக்கத்தை நீக்கி மருந்தூட்டும் உபாயம்

வேசையர் கூத்தொன்றொருத்த வேறுவேறாங் கூத்தா
லாசியத்தாற் கீதந்தா லற்புதத்தால் - வீசுபுகழ்
றூக்கமரு ணீக்கியுரை துய்ப்புத்தணங்கை யுள்ளார்க்
கூக்கமருள் வார்மருந்து வர்.

பண்டிதர்களின் கணிகை மாதர், பாதக்கூத்து ஒன்று தவிர பலவித நாடகக்கூத்து, விகடம், சங்கீதம், அதிசயம் ஆகிய இவைகளினால் பகல் நித்திரை மயக்கத்தை விலக்கி நோயாளிகளுக்கு மருந்தூட்டி பலம் வரச்செய்வார்.

## சிகிச்சையின் பேதம்

சூதகந்தி தாதுபலஞ் சொர்ன்ன நாட்டார் சிகிச்சை
யோதரிய மூலியிம்மண் ணூர்ச்சிகிச்சை -
வேதடருஞ்
சத்திராட்ச ராக்கினி நிசாசரஞ் சிகிச்சையென்றே
முத்திராட்ச தாகுமொழி.

சிகிச்சை என்பது ஒன்றாயிருந்தாலும் அது மூவகைப் படும் அவையாவன ரசம், பாஷாணம், பஸ்பம், ஆதிகளைக் கொண்டு வைத்தியஞ் செய்வது தேவணைச் சிகிச்சை, விருட்சம் முதலிய மருந்துகளைக் கொண்டு சிகிச்சை செய்வது மானிடக் கணச்சிகிச்சை அறுத்தல், காரம் வைத்தல், அக்கினியாற் கடல் முதலியவை ராட்சதகணச் சிகிச்சையாம்.

**காலபேத விரோசனம்**

குடிநீர் கற்கந்தயிலுங் கோடைக்காம் பேதி
கடுமாரி மூடுபனிக் காயுங் - கெடுமிவைகள்
சோபிக்கு மெக்களிக்குஞ் சூதமுப்பிற்கும் பேதி
சோபிக்கு மெக்காலஞ் சொல்.

கஷாயம் அரைத்த மருந்து ஆமணக்குநெய் என்னும் இம்மூன்றும் கோடைக்காலத்து பேதி மருந்துகளாம். மழைக்காலம், பனிக்காலங்களில் கொடுக்கில் அவைகளின் குணங்கெடும். மேற்கூறிய 3 காலங்களிலும், நேர்வாளம் பலவிதக் கள்ளிப்பால் ரசம், உப்பு இவை சேர்ந்த மருந்துகளைக் கொடுக்கக் கிரமமாக பேதியாகும்.

# மருந்து வகைகள்

**அயச்செந்தூரத்தின் குணம்**

அயத்தில் வருசெந்தூரா மையமொடு சோபை
வயிற்றிலுரு காமாலை மாற்றும் - புயத்திற்குச்
செய்யபல முண்டாக்குந் தீபனத்தைத் தானெழுப்பும்
வெய்ய பாண்டோட்டமிது மெய்.

அயச்செந்தூரம் கபப்பிணி, வீக்கம், காமாலை, பித்த பாண்டு இவைகளை நீக்கும், புஜபலத்தையும், பசியையுந் தரும், தீனிப்பையன் நரம்புகளைப் பற்றிய மஞ்சள் நிறத்தால் பிறப்பதால் வயிற்றுலுறு காமாலை என்பர்.

### காந்தச்செந்தூரத்தின் குணம்

காந்தச் செந்தூரங் கருகரிய வுந்திவலி
போந்த வதிசாரம் பொங்கிவரு - வாந்திகப
காகச் சுவாசம் காமாலைப் பாண்டுவொடு
பூசல் வினைநீக்கும் புகல்.

காந்த செந்தூரம் நாபிவலி, பேதச்சுரம், வமனம், க்ஷயம், இருமல், இரைப்பு, காமிலம், பாண்டு, நீங்கா நோய் இவைகளை விலக்கும்.

### தாம்பரபஸ்பத்தின் குணம் - சந்தவிருத்தம்

உருவங் குறுபசியும் பெறுமுரமும் பெறுமிரமா
மிருகண்ட ருடநயன் பெறுமிகையும் பெறுகுவரே
வறுசெம் விறுவலினந் தெறிவகையும்
பொடிவகையும்
மருகும் பெருவிதமுந் தெரிபவரமா புவிமிசையே.

தாமர பஸ்பஞ் சகலகுட்டங் குறைநோய்
சோம்பு குட்டமெல்லாந் துரத்துமென்பார் - தேம்பி
யிருக்கின்ற பித்தமுட னீளை சுரஞ்சன்னி
குருக்கின்ற வாயுவும் போக்கும்.

செம்பில் பொருந்திய களிம்பை நீக்கும் வகையும் பஸ்மஞ் செய்யும் வகையும் இதனை உண்ணும் பெரிதான வகையும், அறிந்தவர்கள் வயிற்றிலுண்டாகும் பசியையும், பலத்தையும், தவத்தில் உயர்ந்த மிருகண்ட மகிரிஷி புத்திரராகிய மார்க்கண்டேயர் போல் ஆயுசு விருத்தியும் அடைவார்கள் என்க. உண்ணும்போது பிரமான அனுபான பத்திய வகைகளை அறிந்துண்ண வேண்டுமென்பதைப் பற்றிப் பருகும் பெருவாதமென்றார் என்க. மேலும் இது குன்மங்கள், பெருவியாதி, மூர்ச்சை, பல குஷ்டம், அதிபித்தம், சுரம், சுர, சன்னி, சுவாசம், வாயு இவைகளைப் போக்கும்.

### வங்கச்செந்தூரத்தின் குணம்

வங்கச் செந்தூர மடமேக நீரிழிவோ
டங்கமுறு தாப மகற்றுங்காண் - பொங்கிவரு
மோத வுதிரத்தா லுருவிரண நோய்போக்குந்
தாதுவை யுண்டாக்குமது தான்.

வங்கச்செந்தூரம், மதுநீர், அதிமூத்திரம், சுரம், ரத்த விர்த்தியினாற் பிறந்த புண் இவைகளை ஒழிக்கும், சுக்கிலத்தை வளர்க்கும்.

### ஆனந்த பைரவம், சுத்த பைரவம், சொர்ணாந்த பைரவம், பிரமானந்த பைரவம், ஆனந்தரசம், வினோத பைரவம் இவைகளின் குணம்

ஆனந்த பைரவம்பி னடர்சுத்த பைரவஞ்சொர்
னானந்த பைரவம் பிர்ம்மானந்த பைரவம்மா
வானந்த ரசம்வினோத மாம்பைரவ மிவற்றால்
வானந்த மேவுருட்சை வருதிரி தோடம்போமே.

ஆனந்த பைரவம், சுத்த பைரவம், சொர்னானந்த பைரவம், பிரிமானந்த பைரவம், ஆனந்த ரசம், வினோத பைரவம் இவைகளினால் முக்கியமான சுரமும், திரிதோடரம்ப நோய்களும் போகும்.

### சுத்த மண்டூரம், மகாமண்டூரம், சித்தமண்டூரம், திரிகடுகாதி மண்டூரம், நாராயண மண்டூரம் இவைகளின் குணம்

சுத்தி மண்டூரந் துதிமகா மண்டூரஞ்
சித்த மண்டூரந் திரிகடுக - மொத்திடு மண்
டூரநா ராயணமண் டூரமிளவைக்கு வெகு
தூரமாம் பாண்டொடு சோபை.

சுத்த மண்டூரம், மகாமண்டூரம் இவைகளுக்கு ஐவகை பாண்டு நோய்களும் 6வித சோப நோய்களும் ஒழியும்.

### வாத ராக்ஷச மாத்திரை, தசவித அக்கினி குமாரம் இவைகளின் குணம்

இகல்வாத ராக்ஷசனுக் கெண்பது வாய்வும்
புகலாம லோடும் புறத்தே - யிகலார்
தசவித வக்கினிக் குமாரர்க்குச் சன்னி
நசிசுரங் களும்போ நவில்.

வாதராக்ஷ மாத்திரையால் 80வித வாதநோயும், தசவாத அக்கினி குமர்த்தினால் சன்னியும், அசாத்திய சுரமும் போம்.

### கோரோசனாதிக் குளிகை, தாககோப சமன மாத்திரை இவைகளின் குணம்

கோரோச னாதிக் குளிகைக்குப் பித்தசுரந்
தீராத தாகஞ் சிறுவர்சுர - நேராது
தாககோபச்சமனந் தன்னாற் சுரஞ்சன்னி
தாகபித்தம் போமே தணிந்து.

கோரோசனாதி மாத்திரைக்குப் பைத்திய சுரமும், நீங்காத நாவரட்சியும், குழந்தைகள் ரூட்சையும் விலகும். தாககோப சமண மாத்திரையினால் சுரரோகமும், சன்னிபாதமும், பித்தவிதாகம் தீரும்.

### குன்மகுடாரம், சுயம், அக்கினி, பாஷாண பின்ன வச்சிராகம் இவைகளின் குணம்

குன்ம குடாரமெனக் கூறிவிட்ட குன்மமும்போம்
வன்னசுய மக்கினிக்கு வாதமந்தம் - பின்னமுறும்
பாடாண பின்னவச்சிர பாரசத்தைப் பார்த்தவுடன்
கோடாகுங் கல்லடைப்பிர் கே.

குன்மகுடார மாத்திரையினால் 8வித குன்மங்களும், அயம், அக்கினி மாத்திரைக்குத் தனிவிதச் சீரணமும், பாஷாண பின்ன வச்சிரத்தினால் 4 வகை அஸ்மாரி நோய்களும் கெடும்.

### மேககுலாந்தகன் சர்வசித்தி ரசம் இவைகளின் குணம்

மேக குலாந்தகனான் மேககுலம் போமரிசு
யோக சர்வ சித்திரச மொன்றுக்கே - போகும்
பெருமூத்திர மென்ற பேரும் போதித்து
வருமூத் திரமுமறி வாய்.

மேகுலாந்த மாத்திரையால் 20வித மேகங்களும் சர்வ சித்திராசத்திற்கு வெகுமூத்திரமும் பல சொட்டு மூத்திரங்களும் விலகும்.

### கோடா சலக்குளிகை மகாவன்னி ரசம் இவைகளின் குணம்

கோடா சலத்தாற் கொடும் பாண்டு சோகைமுத
லோடாக் கிரகணியு மோடுங்கா - ணீடுமகா
வன்னிரச மென்றுரைக்கில் வாடாச் சலோதரமும்
பின்னிடையுந் தப்பாது பேசு.

கோடாசலக் குளிகையால் பாண்டுநோயும், வீக்கமும், நீங்காத கிரகணியும் போம். மகாவன்னிச் சுரத்திற்குச் சலோதாரரோகம் ஏங்கும்.

### உலோகத்தம ரசம், வங்கேசுவரம், நாரசிங்கரசம் இவைகளின் குணம்

உனாத வுலகோத்தம ரசத்தா லுண்ணும்
வினோத மெனிம்பேதி விளையுங் - கனமான
வங்கேஸ் வரத்திற்கு வல்லைகுன்மம் போம்நார
சிங்கம் மூலச்சுந் தீர்க்கும்.

உலோகத்தமரசத்தால் பற்பல நோய்கள் குணமாகும். விநோத பேதியுண்டாகும். வங்கோல் வரதிற்கு வல்லைக் கட்டியும், குன்மக்கட்டியும் போம். நாரசிங்கத்திற்குப் புராண சுரம் விலகும். இது நகங்களில் உந்தியிலும் தடவினாலும், புஷ்பசெண்டில் தெளித்து, மோந்தாலும் பேதியாகும்படி செய்வதினால் விநோத பேதி என்றனர்.

## சிந்தாமணி திரிலோக சிந்தாமணி என்னும் இக்குளிகையின் குணம்

சிந்தா மணிக்குளிகை சேர்ந்தமலக் கட்டறுக்கு
முந்துசுர வாயுவையு மோட்டுங்கா - ணந்தாத
திரிலோக சிந்தா மணியென்னிற் சன்னி
திரிலோகத் தப்புரப் போந் தேர்.

சிந்தாமணிக் குளிகை பழைய மலச்சிக்கலையும், உஷ்ண வாயுவையும் நீக்கும். திரிலோக சிந்தாமணி மாத்திரைக்குச் சன்னி விலகும்.

## திரிலோக ச் சூடாமணி, திரிலோக ரக்ஷாமணி இவைகளின் குணம்

திரிலோக சூடா மணிக்குத் திறல்சேர்
திரிலோக ரட்சா மணிக்கு - முரவுநோய்
காசம் விக்கல்சன்னி கபந்தலைநோய் மத்தஞ்சு
வாசம் பாண்டும்போ மதி.

திரிலோக சூடாமணி மாத்திரைக்குத் திரிலோகரட்சா மணிக் குளிகைக்கும், மார்புவலி, இருமல், காசம், சன்னிபாதம், ஷயம், சிரஸ்தாபம், அலஜம், இறைப்பு, சரீர வெளிறல் இவை நீங்கும்.

## இராஜ மிருகாங்கம், மகாராஜ மிருகாங்கம் இவைகளின் குணம்

இராஜமிரு காங்கமது ராஜநோய் போக்குமகா
இராஜமிரு காங்கமது ராஜநோய்க் - காசகபம்
பாண்டு காமாலை பலபீநசஞ் சோபை
தாண்டுபித்த நோயகற்றுஞ் சாற்று.

ராஜமிருகாங்க மாத்திரை ராஜரோகம் என்கிற க்ஷயத்தையும், மகாராஜமிருகாங்க மாத்திரை க்ஷயகாசம், சுவாதம், பாண்டு, காமிலம், பற்பலபீனிசம், வீக்கம், பித்த கோபம் இவற்றை விலக்கும்.

### இராஜகண்டேச்சுரம், இராஜராஜேச்சுரம், இராஜகேசரிவடகம் இவைகளின் குணம்

இராஜகண் டேச்சுரமும் இராஜராஜேச் சுரமும்
வீசுசுர மெல்லாம் விலக்குங்காண் - இராஜநற்
கேசரிய தாம்வடகங் கேதஞ்செய் தோடசுர
நாசமுறக் காட்டுமதை நாடு.

ராஜகண்டேச்சுர மாத்திரையும், ராஜராஜேச்சர மாத்திரையும், வாதசுர முதலிய சகல சுரங்களையும் போக்கும். ராஜகேசரி, வடகம், திரிதோடங்களிற் பிறந்த 18 சன்னிபாத சுரங்களையும் கெடுக்கும்.

### சந்திரோதயம், சந்திரகாசரசம், சந்திரபிரபாவடகம், பூரணச்சந்திரோதயம் இவைகளின் குணம்

சந்திரோ தயத்தால் வெப்பந் தணியுஞ்சந் திரகாசத்தார்
பிந்துமுத் தோடந் சந்திர பிரபாவ வடகமோதான்
கைந்துநீர் போக்கும்பூர்ண மாஞ்சந்தி ரோதயத்தால்
விந்துவு மதிகரிக்கும் வீறுநோய் குழுவும் போமே.

சந்திரோதய மாத்திரையால் தாபச்சுர முதலிய சகல சுரங்களும் சாந்தமாகும். சந்திரகாச மாத்திரையால் திரிதோட விரணம் நீங்கும். சந்திர பிரபாக வடகமானது உபவாத மேகங்களையும் விலக்கும். பூரண சந்திரோதயத்தினால் வீரியவிருத்தியாகும். பல நோய்கள் விலகும்.

### வசந்த குசுமாசுர மாத்திரையின் குணம்

வசந்தகுசு மாகதத்தால் வல்லசயங் காச
முசந்தவிட பாண்டுகுன்மம் முற்றாயாக் - கசிந்தநீர்க்
கட்டுபுளி யேப்பமொடு கல்லடைப்புத் தாகமிவை
விட்டு விடுங்காண் விரைந்து.

வசந்த குசுமாகர மாத்திரையால் கபம், இருமல், விஷபாண்டு, குன்மம், சொட்டு மூத்திரம், புளியேப்பம், அஸ்மரிதாக நோய் இவைகள் போம்.

### மகாவசந்த குசுமாகர மாத்திரையின் குணம்

மகாவசந்த குசுமா கரத்தால் வந்த
வாயுகபம் பித்தமந்தம் வயிற்று நோய்கள்
விகார வுன்மாதங் காமாலை பாண்டு
விடுசிறுநீர் சுட்டுசன்னி குன்மஞ்சோபை.

யாகாத க்ஷயகாச சுவாசம் பிரமேக
மதிசார மெலும்புருக்கி விக்கன் மூலஞ்
சிகாவாதஞ் சுருங்ககுட்ட மார்பு நோயுந்
தீருமதற் கனுபானந் தெரியுங்காலே.

இதனைக் கொடுக்கிற அனுபானம் அறிந்து கொடுக்கில் திரிதோடத்தின் குணமும், அசலம், உதரநோய்கள், உன்மாந்தம், காமிலம் பாமிலம், பாண்டு, விடபேதி, மூத்திரவிந்து, வாதவிந்து, சன்னிகுன்மம், வீக்கம், க்ஷயம், காசம், சுவாசம், மேகநீர், பேதி, அஸ்தி சிராவம், இத்மா மூலம், சிரஸ்தாபம், குறைநோய், மார்புவலி இவை தீரும்.

### இலங்கேச்சுரம், பிரதாபலங்கேச்சுரம் இவைகளின் குணம்

இலங்கேச் சுரத்திற் கெழுசூதி ரைக்கா
விலங்கா கிரகணியு மில்லை - நலங்கொள்பிர
தாபலங் கேச்சுரத்திற் சாந்தமாஞ் சீதசுரம்
சோதமுறு நோயினமுஞ் சொல்.

லங்கேச்சுரத்திற்குச் சூதிகவாதமும், சிரகணியும், பிரதாபலங்கேச்சுரத்தினால் சீதசுரமும், மூர்ச்சை முதலிய நோய்கள் போம்.

### ஏகாதசருத்திர மாத்திரை சிந்தூர பூஷனம் இவைகளின் குணம்

ஏகாதச ருத்திர மென்னு மாத்திரைக்குப்
போகாத சன்னிசுரம் போகுங்காண் - வாகான
சிந்தூர பூஷண்த்தார் சீர்கருப்ப மாதருக்கு
வந்தசுரம் போமுணரு வாய்.

ஏகாத சருத்திர மாத்திரைக்கு அசாத்திய சன்னிபாதமும், சிந்தூர பாஷாணமுறையால் கருப்பஸ்திரீகட்டுற்ற சுரம் போம்.

### பூபதி மாத்திரையின் குணம்

நாவிலிட வன்னமுறு நாளும் விடம்போகு
மேவுசுரஞ் சன்னிகளும் விட்டுப்போங் - காவிவிழி
மானார் வசியமது வாய்க்கு மிலேயனமாந்
தானேகேள் பூபதிக்குத் தான்.

பூபதி மாத்திரைக்கு விஷசுரம், சன்னிபாதங்களும், விலகும். தீபனமும், ஸ்திரீ வசியமும் உண்டாகும். ஆண்குறி எழுச்சியடையும்.

### நவலோகபூபதி சூலைப்பூபதி இவைகளின் குணம்

நவலோக பூபதிக்கு நண்ணு சுரஞ் சன்னி
புவலோக வாழ்க்கைவிட்டுப் போங்கா -
ணொவுசீலைப்
பூபதிக்குச் சூலைசன்னி பொங்கலைத்
தென்றிசைவாழ்
பூபதிக்கு காளாகும் புகல்.

நவலோக பூபதி மாத்திரைக்கு சந்தசுரம், சன்னியும் விலகும். சூலைப்பூபதிக்கு கீல்பிடிப்பு, சன்னியும், தாபச்சுரமும் கெடும்.

## பூபதிரசம், ரசபூபதி இவைகளின் குணம்

பூபதி ரசத்திற்கு போஞ்சன்னி மந்தம் மிரத
பூபதிக்கு சன்னி பொருச்சிநோய் - கோபமிகு
காசங் சுவாசங் கடுஞ்சூலை பாண்டுமுத
னாசங் கபவாய்வு நாடு.

பூபதி ரசத்திற்குச் சன்னிபாதமும், அலரநோயும் போம். ரசபூபதிக்கு சன்னிபாத சுரமும், சோமரோகமும், இருமல், இரைப்பு, கீல்பிடிப்பு, பாண்டு ரோகம், சிலேத்தும வாத தொந்தம் இவை கெடும்.

## மருந்தருந்துங் கால அளவு கூறல்

தாதுநட்ட பஸ்மமாரந் சவாச காசந்
தனியுமா தன்னிவைக்காண்டுறையா மென்பர்
மோதுகிறிச் சரம் விரணங் கல்லடைப்பு
முதிர்மேக நீர்க்குமருந் தீரைந்திங்க
ளோதுமுதா வர்த்தமா தங்களேமென்
றுரைவித் திரிதிக்கு மருந்தாரையாண் டன்றி
மீதுவேள் டாவுரைத்த விம்மட் டுண்ணின்
விலகுமவை சடமற விரும்பிக்காணே.

சோகபசுந்தரமூல திமூரச்சூலை
குலைகுருதிக்குன்ம மசிர்குநோயா
நாகமூபயாட்டில் மெய்திமிரங்குன்ம
நாறுகயமிவைக் குசைசேணான் காந்திரங்க
ளாகமகுமூர்ச்சை தவுல்லிய கிரந்தி
யாமமிலபித்தஞ் சீதபித்தமுட்டி
யேகவருமதி மந்தஞ் சோமரோக
மிவைக்குறைமும் மதியுண்ணிளிமீளாவே.

வாந்தி விக்கல் கணமாந்தம் பேதிகட்கு
மண்டலமென் றுரைவாதங் கரமிலங்கட்
கேந்திரு மண்டமுறை பற்பாண்டுசோபை

யென்மகோ தரம்பிரி துனிக்கட்கூக்க
மோய்ந்திடமும்மண்டல நல்லுரை நாட்சென்று
மொழிவில் சுரங்கட்குறை மண்டலநான் குன்னி
மாந்திடபோமித்தினே சகலநோய்க்கு
மருந்துடின்மீட்டு மவை வாட்டவாரே.

சுக்கில நட்டம், அஸ்மரம், சுவாசகாசம், உன்மந்தம் என்றும் பிணிகளுக்கு ஒவ்வொரு வருட காலமும், கிரிச்சுரம், துஷ்டவிரணம், அஸமரி, மதுமேகம் இவைகட்கு 10 மாதமும் உதாவர்த்தம், பக்ஷகாதம் 7 வரை வித்திரி கட்டிகளுக்கு 6 மாதமும், பகந்தரம், மூலம் ரத்த சூலை, வாதசூலை, ரத்தகுன்மம், அசிர்க்காரம், ஆநாகம், அஷ்டிலம், பிருத்தியஷ்டிலம், திமிரம், குன்மம், கபம் இவைகட்கு 3மாதமும் வாந்தி, விக்கல், கணம், மாந்தம், அதிசாரம் இவைகட்கு 2 மண்டலமும் பலவகை பாண்டு, சோகை, அஷ்ட மகோதரம், துணி, பிரதிதுணி இவைகட்கு 3-மண்டலமும், புரணசரத்திற்கு 4-மண்டலம் மருந்து கொடுக்கவேண்டும்.

# பத்திய வகைகள்

## கஷாயம், சுரசம், ஸ்நானபானங்களுக்குரிய சலம் இவைகளின் உஷ்ண நிதானம்

கத்தநற்குடி நீர்காண்டஞ் சுரசமுண்டிடி லூரதைக்கு
மெத்தவுஞ்சூடாம் பித்தம் வெப்பிரத்தஞ் சன்னிக்கு
முத்தமங்குளிர்ச்சியாகு மோங்கைக்குச் சிறிய சூடாங்
கொந்தடர் தொந்த நோய்க்குக் குறிச்மோட்டின் மாங்கூரே.

பரிசுத்தமாகிய நல்ல கஷாயம், வெந்நீர், சுரசம் முதலியவைகளை அருந்துமிடத்து வாதநோய்க்கு மிகுந்த உஷ்ணமாகும். பித்தம், சுரம், சத்தியோ விரண ரத்தம், சன்னிபாதம் இவைகட்கு குளிர்ச்சியையும் அதிகரித்த சிலேத்தும நோய்க்கு, அற்பசுருகையும், தொந்த நோய்க்குச்

சம வெப்பமும், உத்தமம் என்க. சம வெப்பம் என்பது அதிக உஷ்ணம் குளிர்ச்சி, இளம்சூடு என்னும் மூவகை நீரையும், சமமாகக் கலப்பதாகும்.

### பிணியாளர்களுக்குத் தயிர் தோய்க்கும் விதி

காற்றொழிக்கச் கோட்டையுமக் காலொடு சேரையென்னுங்
கூற்றொழிக்க சுக்குங் குறுமிள - முற்றடுபித்
தம்மொழிக்க கட்டியும்பா றன்னிிட்டுத் தோய்ப்பர் பத்தி
யம்மொழிக்க மாட்டாத வர்.

தயிரை, மோரை நீக்காத நோயாளிகள் வாயுவை நீக்குவதற்கு இன்சியையும், வாதகபத்தை ஒழிக்க சுக்கும், சிறுமிளகும், பித்தத்தை விலக்க வெல்லமும், பாலிலிட்டுக் காய்ச்சித் தயிர் தோய்ப்பார்கள்.

### பிணியாளர்க்கு மோர்சேர்க்கும் விதி

கிரிச்சந் தனக்கு வெல்லங் கேள்பாண்டு நோய்க்கு
மரிப்பேதி கட்குஞ் சுக்காகு - மெரிப்பான்
மேகத் தனக்குத்தேன் மிக்குபிணி கட்களையு
ளுகங் கொடிவேலி யூட்டு.

கிரிசரத்திற்கும் வெல்லமும், பாண்டு, விதாதி சாரம் முதலிய நோய்கட்குச் சுக்கும், மேகத்துக்குத் தேனும், மந்தகினியாற் பிறந்த நோய்க்குச் சித்திரமூலப் பட்டையும், தயிரில் பிரமணமாக ஊறவைத்துக் கடைந்த மோரைக் கூட்டவேண்டும்.

### மருந்துண்பார்க்கு ஊறுகாய்

சுண்டைநெல்லி தேருகளா தூதுளை பாவட்டையா
தொண்டை நாரத்தங்கச் சறிஞ்சி - பண்டைநாட்
சென்ற வருணக்காயுஞ் சேரூரு காயென்னிற்
தின்ற மருந்தீனமுராதே.

சுண்டைநெல்லி, தேற்றான், களா, தூதுவளை, பாவட்டை, ஆ தொண்டை, எலுமிச்சை இக்காய்களும், நாரத்தம் பிஞ்சு, இஞ்சியும் நாட்பட்ட உப்பில் ஊறவைத்து புசித்தால் தின்ற மருந்தின் குணம் கெடாது.

**அயச்செந்தூரத்தின் பத்தியம்**

பத்தியந் திலங்கூஷமாண்டம் பரங்கிகொள் கடுகுதோரை
கத்திரி பிரமபத்திரி கட்கஞ்சா வபினிமாதர்
சுத்தமா காதுபானெய் துய்திடலாம் புளிப்புப்
புத்தம மகற்றலானா லுத்தமம் பழுதுமின்றே.

அயச்செந்தூரத்திற்கு பூசனி, கொள், கடுகு, மூங்கிலரிசி, கத்தரி, புகையிலை, கஞ்சா இவை ஆகரிணம் புணர்ச்சியோ எனில் பரிச்சேதங்கூடாது. பசுவின் பால் ஆகும். இதில் புளியும், உப்பும் நீக்கினால் உத்தமம். அன்றியும் உத்தமம் ஆகிய அம்மருந்து பழுதுபடாது.

**காந்தச் செந்தூரத்தின் பத்தியம்**

பத்தியம் புளியுப்பின்றேற் பலிதமாம் வாரத்துள்ளே
நத்திடி லிரண்டுமார நவிலுமிச்சா பத்தியங்கொள்
கத்திரிக்கா யகத்தி கடுகுகூஷ்மாண்ட மெள்ளு
கொத்தவரைக் காய்மாங்காய் கூலக்கா யிலையாகாவே.

காந்தச் சிந்தூரத்திற்குப் புளி, உப்பு நீக்கில் அது 1-வது வாரத்துக்குள் பயன் தரும். அவைகளை விரும்பினால் இச்சாப்பத்தியத்துடன் 2-வாரம் உண்ணவேண்டும். அதாவது அகத்தி, கடுகு, பூசனி, தீபம், கொத்தவரை, மாங்காய், பலாக்காய் இவை நீக்கவும்.

**தாம்பரத்தின் பத்தியம்**

புளியொன்று தவிரவெல்லாம் புசிக்கினு நவையுறாது
இளைபெரு நெருப்புக்கீர மில்லையென்பது போலாதி

மளைமுசலி குசங்காடி யாமிலமடாது பாகற்
சுளையற மகட்பழம்நெய் சுதைசருக்கரை மானன்றே.

இதற்குப் புளிப்பு ஒழித்த மற்றச் சுவையுள்ள பதார்த்தங்களை உண்டாலும் குற்றமில்லை. ஆனால் புளித்தத்தயிர், முயற்கறி, எலுமிச்சம்பழம், காடி, நெல்லிக்காய் இவை கூடாது. பலாச்சுளை, வாழைப்பழம், பசுநெய், பால்சர்க்கரை இவை நலமாம்.

### பாதரசத்தின் பத்தியம்

மற்சமுப்பு சீதோட்டின மந்தாதிவத் தெண்ணெய்
துற்ச மத்தியங்கைப்பு தொங்குபுளியைச் - சற்றுங்
கூட்டாமற் சூதங் கொடுப்பருண்டாரை நமன்பாற்
கட்டாமற் றாமிருந்தக் காண்.

ரசத்திற்கு மீன், லவணம், சீதள வெப்பமுள்ள பண்டம், அக்கினிமந்த வயிறு, எண்ணெய்கள், கசப்பு, புளிப்பு இவை கூடாது.

### பறங்கிப்பட்டையின் பத்தியம்

மஞ்சளோ டெண்ணெய்பாக்கு மாங்கிச மலுவாகார
மிஞ்சிகார் கடுகுகைத்த விழிவுறு புளிமண்ணுப்பு
மஞ்சுறு வாளைகோலா மடவைமீன் சன்னைவெளவால்
சிஞ்சித மருந்தினாலுங் கெடும்பறங்கித் தோன்மாதோ.

பறங்கிப்பட்டைக்குக் கறிமஞ்சள், நல்லெண்ணெய் களிப்பாக்கு, மிருக மாமிசம், காரம், இஞ்சி, கடுகு, புளி இவைகளும் கோலா, மடவை, சன்னை, வெளவால் முதலிய மீன்களும் லவேசமும் சேரலாகாகது. சேர்த்தால் மருந்தின் குணம் கெடும்.

## தைலங்களின் பத்தியம்

புலர்த்திய பின்பருந்து போசனத் தனிற்புளிப்பு
சலத்துறு ததிபால்பாகல் சரகம்மீ னிறைச்சியச்ச
நிலத்தெழு பிரமபத்திரி நித்திரை மடவாரின்னு
நலத்துறா வகைநீக்குப்பின் னாளும்பத்
தியத்துணில்லே.

தைலமாடி பீரந்து வட்டியவுடன் நீ உணவில் புளி, தயிர், பால், பாகற்காய், இலைக்கரி, மச்சவகை மாமிசங்கள், அகத்தி, புகையிலை, பகல்நித்திரை, புணர்ச்சி, தகாத நடத்தை இவைகளை நீக்குவதுமன்றி மறுநாளும் பத்தியம் இருக்கவேண்டும்.

## முக்கியமாக மருந்துகளுக்குதவாத வஸ்துக்கள்

சிந்தக் கனிமிகுந்த சீவனந்தாம் பூலம்வெல்லம்
பந்தப் பயற்றுப் பருப்புமோர் - சிந்து
கடலை யிவையற் றுரைகறித் திடார்தங்க
ளுடலை யிவையத்திருந்தா ருன்.

எவ்வித மருந்துகளுக்கும் முக்கியமாக உதவாத பதார்த்தம் புளி, அதிக ஜீலபானம், அடைக்காய், சன்னல், வெல்லம், காராமணி, பருப்பு, மோடி, கடலைப்பயிறு இவைகளாம்.

## பத்திய பதார்த்தங்கள்

பொன்னாங்காணி சிறுகீரை புதியநறுநெல்வரால் குறவை
சொன்னங்கோவைகாய் வற்றல் சுண்டையவரைப்
பிஞ்சுடனை
பன்னாவப்பை வெள்ளுள்ளிபரியமுருங்கையிளம் பிஞ்சும்
நன்னீர்விளைத்த சிறுபயறு நன்மாங்காய்க்கும் பிஞ்சு நன்றே

அத்திப்பிஞ்சுகருவாழை யதன்றன் பிஞ்சுபூவாகுங்
கத்திரியுமூக்குருவி கா டையுடனே சிவலாமை
சுத்தமாங்காய் நறும்ப குப்புந் சுறாமீன்றிருக்கைக்கரு
வாடாம்
பத்தியத்திலி வைதவிறப் பச்சைபீன்கள் பகையாமே.

வேண்டிய மருந்துண்பார்கள் விராலொடு குறவை தேனி
யாண்டிடுமயிரையூடா னானசன்னை யுந் சுதும்பு
மீண்டிடுமிருநோய்த்தோலி யிவைகளையருந்துங்காலை
மீண்டிவையுலர்ந்ததாகும் விரைமலர்க்குடிலினாளே.

காடையுடும்புகவுதாரி காட்டிடனெலியுமூர்க்குருவி
யாடுவிரும்பில் வெள்ளாடா மதுவுமுலர்த்திக்கறி கொள்ளு
நாடுதனில் வாழ்வரால்குறவை நலமாமிவையுமுலர்த்திக்
கொள்
கூடுங்கூடாதென்னாதே கூட்டின் மருந்துங்குணந்தருமே.

பத்தியபதார்த்தங்களாவது, பொன்னாங்காணி, சிறுகீரை, அன்றுருக்கிய பசு நெய், சுண்டை முதலிய வற்றல், அவரைப்பிஞ்சு, அப்பை, கோவைக்காய், வெள்ளைப் பூண்டு, முருங்கைப்பிஞ்சு, பனிப்பயிறு, மாவடு, அத்திப்பிஞ்சு, கருவாழைக்காய், பூவம்பழுப்பு இவைகளும் எரிவரால், குறவைதேனி, அயிரை, சிட்டுக்கருவி, காடை, கவுதாரி, ஆமை, விலாங்கு, கடல் குறவை, உடும்பு, காட்டெலி இவைகளின் கறிகளும், சுறா, திருக்கை, காடை, கவுதாரி, ஊர்க்குருவி, வெள்ளாடு, இருகுறவை இவற்றின் கருவாடுகளும் ஆகும்.

**பேதியைக் கட்டுகிற பதார்த்தங்கள்**

மானேவயிறுகழிவார்க்கு வாழைக்கச்சலத்திக்காய்
தானே திரியுமூர்க்குருவி காடையுடும்புகவுதாரி
தானேயாகுமுயலுலரிற் றக்குளத்துக் கருவாடா
மீனே விரும்பித்தின் பீரால் வீணேயுயிரை
யிழந்தீரே.

அதிசார நோய்க்கு வாழைப்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, சிட்டுக்குருவி, காடை, உடும்பு, கவுதாரி, முயல், குளத்துக் கருவாடு என்னும் இவைகள் ஆகும். பச்சைமீன் அருந்தில் உயிருக்கு அபாயம்.

**பேதியாகிற பதார்த்தங்கள்**

காரமணிக்கீரை காட்டுப் பறங்கியிலை
பேராம் பெரும்பயற்றின் பேரிலைகள் - சீரா
ரகத்தி பெருங்கத்திரிக்கா யாயிழையே மீன்கள்
பகைத்த திக பேதிதரும் பார்.

காராமணி, பறங்கி, பருங்காராமணி, அகத்தி என்னும் இக்கீரைகளும், கத்தரிக்காயும், பச்சை மீன்களும் மிகு பேதியை உண்டாக்கும்.

**அபத்திய பதார்த்தங்கள்**

கொள்ளுகாடி குமட்டிக்காய் கோழிபன்றிகொக்குடனே
முள்ளிற்பெரியபாகற்காய் முதிருமவரை பயற்றங்காய்
பள்ளத்தெழுநதமடற்சேம்பு படரும்வள்ளிபாலையிவை
யெள்ளத்தனைதான்றின் பீறே றெல்லாமருந்து மிழந்தீரே.

மாங்காயிளநீர்மாதுளங்காய் மாவின் பண்டம்புளிகடுகு
தேங்காய்நெய் பால்கிழங்குபழந் தின்னுங்காயம் வெங்காய
மீங்காதரிக்குஞ்சுராபான மீச்சங்கள்ளு பனங்கள்ளு
மாங்கேயிவற்றுளொன்றேனு வருந்தாதிருந்தால்
மருந்தாமே.

அபத்திய பதார்த்தங்களாவன கொள்ளு, காடி, குமட்டிக்காய், சேவல், வராகம், கொக்கு, கொம்புப் பாகல், முத்தின அவரைக்காய், காராமணி, சேப்பங்கிழங்கு, வள்ளிக்கிழங்கு, பாலைக்கீரை, மாங்காய், இளநீர், மாதுளங்காய், மாப்பலகாரம், புளி, கடுகு, வெங்காயம்,

எருமைநெய், கிழங்குகள், முப்பழங்கள், பெருங்காயம், வெங்காயம், கள்ளு, ஈச்சங்கள்ளு, பனங்கள்ளு என்னும் இவைகளாகும்.

## வாதரோகாரி வஸ்துக்கள்

செங்கழுநீர் கோட்டந்தேன் மிளகுநல் லெண்ணெய்
தங்குபெருங் காயந் தழுதாழை - யெங்கெங்குங்
கூட்டுசிறு முத்துநொய் கோதிலுழுந் திவைகள்
வாட்டும் வாதத்தை மதி.

செங்கழுநீர், கோஷ்டம், குறிஞ்சித்தேன், மிளகு, எள்ளின் நெய், பெருங்காயம், தழுதாழையிலை, சிற்றாமணக்கு நெய், உளுந்து ஆகியவை வாதரோகத்தைப் போக்கும்.

## பித்தரோகாரி வஸ்துக்கள்

கொம்மட்டு வாழைப்பன்னன் கொளுத்திய கரியினோடே
விம்மிய தண்ணீர்விட்டான் வேரெனுங்கிழங்குசாந்தஞ்
செம்மைசேர் நெல்லிமுள்ளி சேருமிம் மருந்தெல்லாமே
கம்மிய பித்தத்திற்குக் காலனென்றோது வாரே.

செம்புநாவல் பீத்தாருச் சருமழுமுத்தக் காகஞ்
செம்பருத்தியுற் செழித்த தெங்கிளம்பூவுங்கன்ன
லம்புயத்தாதினோடே யதனுறுவளைய நெய்தல்
வெம்பிய சீலைச்சாம்பல் வெள்ளைப் பூசினிக் காயென்னே.

கொளுஞ்சி, நாரத்தம்பழம், வாழைச்சருகு, சுட்டகரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, சந்தனம், நெல்லிமுள்ளி, சம்புநாவல், பெருமரப்பட்டை, கோரைக்கிழங்கு, செம்பருத்தி, தென்னம்பூ, கரும்பு, கேசரம், வஸ்திரஞ் சுட்ட சாம்பல், கலியாணப் பூசனிக்காய் இவை பித்தத்தைப் போக்கும்.

## சிலேஷ்மரோகாரி வஸ்துக்கள்

ஆவினது பாலரத்தை முள்ளங்கி மயிற்
றூவிநறுஞ் சாம்பல் தூதுளந்தேன் - மாவோமந்
துய்ய சருக்கரை தூழாய்விதை விளாம்பழமு
மையதை யோட்டு மறி.

பசும்பால், தும்பராஷ்டம், முள்ளங்கி, மயிலிறகு, சாம்பல் துளைச்ச மூலம், மலைத்தேன், ஓமம், வெள்ளைச் சருக்கை, துளசிவிதை, விளாம்பழம் முதலியவை சிலேத்தும நோயை விலக்கும்.

## மூலரோகாரி வஸ்துக்கள்

மருள்சா ரடைகருணை வச்சிரவல்லி காட்டுக்
கருணை புளிநரளை காராக் - கருணை
மெருகோடு வெள்ளறுகு வெண்சித் திரமூலம்
மருமூலம் போக்கு மருந்து.

மருட்கிழங்கு, வெண்சாரட்டை, சமூலம், கருணைக் கிழங்கு, பிரண்டை, காட்டுக்கருணை, புளி, நரளை, காராகருணை, மெருகின் கிழங்கு, வெள்ளறுகு, வெண் சித்திரமூலம் முதலியவை மூலரோகத்தைப் போக்கும்.

## விஷாரி வஸ்துக்கள்

பேய்ச்சுரை பேய்க்கொமட்டி பேய்பீர்க் கொடுதுமட்டி
பேய்ப்புடலை யுங்கழஞ்சிற் பேரறிவு - வாய்த்தமலை
வேம்பு சிவனார்வேம்பு வெள்ளெறுக்கு வெள்ளறுகு
சோம்புவிடம் போக்குமெனச் சொல்.

பேய்ச்சுரை, பேய்க்கொமட்டி, பேய்ப்பீர்க்கு, கொடுதும்பட்டி, பேய்ப்புடல், புங்கு, அழிஞ்சினால், காட்டு அவுரி, மலைவேம்பு, சிவதார் வேம்பு, வெள்ளறுகு, வெள்ளெருக்கு இவைகள் விஷத்தை நீக்கும்.

## பித்தாம திரவியம்

மொச்சை கடலைபெரு முற்கழுந் தேலம்வெந்தி
மெச்சுமிளகு சுண்டை வெண்ணெயிஞ்சி -
பச்சைநிறங்
காட்டுமப்பைக் கோவை கருதிம்பஞ் சிரகங்கள்
கூட்டுக்கறி பித்தசமங் கூறு.

வெள்ளை மொச்சைக்கொட்டை, கடலை, பெருங் காராமணி, உளுந்து, ஏலம், வெந்தயம், மிளகு, சுண்டைக்காய், பசுவின் வெண்ணெய், இஞ்சி, அப்பைக் கோவைக்காய், கரிவேப்பிலை, சீரகம் முதலியவைகள் சேர்ந்த பதார்த்தங்களில் பித்தகோபம் சாந்தியாகும்.

## திரிதோஷ சம திரவியம்

ஒன்றியவாதபித்த கபமிவையுராவண்ண
நன்றுறுகறிகளெல்லா நாளுமேசமைப்பராய்த்தோர்
தின்றிடுமிளகுமஞ்சள் சீரகமுயர்ந்தகாயம்
வென்றிகொள்சுக் கோடேலம்
வெந்தபமுள்ளிசேர்ந்தே.

மிளகு, மஞ்சள், சீரகம், பெருங்காயம், சுக்கு, ஏலம், வெந்தயம், வெள்ளைப்பூண்டு இவைகள் நல்ல பதார்த்தங்களில் விதிப்படிச் சேர்த்துத் தினமுண்ணில், திரிதோடம் ஒன்றுக்கொன்று மீறலாம்.

## அறுசுவைகளின் மிகுதிக்குணம்

புளிதுவர் விஞ்சுங்கறியாற் பூரிக்கும் வாதத்
தெளியுவர்கைப் பேரில்பித்துச் சீறுங் -
கிளிமொழியே
கார்ப்பிணிப்பு விஞ்சிற் கபம்விஞ்சும் சட்டிரதச்
சேர்ப்புணரி ணோயணுகா தே.

புளிப்பும், துவர்ப்பும் அதிகரிக்கில் வாதம் அதிகரிக்கும். உப்பும், கசப்பும் அதிகரிக்கில் பித்தம் அதிகரிக்கும். உறைப்பும், தித்திப்பும் அதிகரிக்கில் சிலேத்துமம் அதிகரிக்குமாதலால், அறுசுவைகளையுஞ் கிரமமாகப் பதார்த்தங்களில் சேர்த்தால் பிணிகள் சாராவாம் என்க.

### காலைக்கறிக்கான பயறு முதலியவை

காலைக் கறிக்காகுங் காராமணி யுளுந்து
தூலக்கடலை துவரைஎள்ளு - கால்மொச்சை
தட்டைச் சிறுபயறு தாழ்வில் கடுகுகறி
யிட்சு சுக்குகாய மிவை.

காலைப் பதார்த்தங்களுக்குதவும் பயறு முதலியவை யாவன காராமணி, உளுந்து, கடலை, நிலம், மொச்சைக் கொட்டை, தட்டைப் பயறு, கடுகு, மிளகு, சுக்கு, பெருங்காயம் இவைகளாகும்.

### மத்தியானகாலக் கறிவகை

சுந்த வருக்கங் கனிவருக்கம் வாதமெழு
மந்தவருக்க மாந்தமாம் வருக்கங் - கந்தமுறு
தண்டைவருக்கந் நதிமோ ரிவையென்னா
ளுண்டையாற் றோடமறு மோர்.

மத்தியான போஜனத்தில் கிழங்கு வகைகள், பழங்கள், வாதவஸ்துக்கள், மந்தபதார்த்தங்கள், மணமும், சீதளமுள்ள இலைக்கறிகள், எருமைத்தயிர், மோர் இவைகளையுண்ணில் சூரிய வெப்பத்தினாலும், தேக உழைப்பினாலும், அவைகளின் தோஷம் விலகும்.

### இராக்காலக் கறிவகை

அவரைப் பிஞ்சத்திக்கா யாப்பான் முருங்கை
துவரைப் பருப்பாற்றுத் தோணி - யெவரையுமோ

கண்டா லிழுக்குந் தடத்தூ துணமிவையா
லுண்டா விழுக்கு மிலை யுண்.

அவரைப்பிஞ்சு, அத்திக்காய், பசுவின்பால், முருங்கைப்பிஞ்சு, துவரம்பருப்பு, ஆற்றுமுள்ளிக்காய், யாரையுமுட்களால் விழுகின்ற காட்டுத் தூதுளங்காய் முதலியவைகளை மாலைக் கால கறிகளாக உண்ணில் குற்றமின்று.

**காலை மாலை போஜனத்தின் நெய் மோர் பேதம்**

காலைக் கெருமைநெய்மோர் காரத்தோ டுண்ணலாம்
மாலைக்காவின் நெய்மோர் வார்த்துணலா -
மேலையண்ட
வெப்புக் காலம் விரவிவர லாற்றுகளி
லொப்பப் பகற்கனற்கண் டுண்.

அண்ட வெப்பம்,பகற்காலத்திலும் குளிர்ச்சி இராக்காலத்திலும் மாறிவருதலால் வாயுவான எருமை நெய், மோர், காரவஸ்து இவைகளைப் பகற்காலத்திலும் உஷ்ண சம்பந்தமான பசுவின் நெய்,மோர் இவைகளை இராக்காலத்திலும் உண்ணலாம்.

**வாத முதலிய மூன்று தேகிகட்கும் உப்புவகை**

வாதபித்தை யென்றே வருதேகர்க்குக் கல்லுப்
போதவுப் பிந்துப்பா முணர்முறையோ -
யோதவெள்ளம்
வற்றியவிந் துப்பதனை வாதமுத லோரருந்தக்
குற்றமிலைக் குற்றமிலைக் கூறு.

வாததேகிக்குக் கல் உப்பும், பித்த தேகிக்குக் கடல் உப்பும், சிலேத்தும தேகிக்கு இந்துப்பும் ஆகும். வாத முதலிய மூன்று தேகிகளும் விரணத்திற்குப் பதில் இந்துப்பைச் சேர்த்து உண்ணலாம்.

## வாததேகிகட்குக் கறிவகை

மாட்டுப் பறங்கிவங்க மாமுருங்கை வெள்ளவரை
நாட்டுக் கூரபிஞ்சு நற்கருணை - காட்டுளுறை
மாகருணை யுங்கருவில் வாதத் தெழுந்துவந்த
தேகருணு நற்கறியயாந் தேர்.

வாததேகிகள் உண்ணும் கறிகளாவன கலியாணப் பூசனிக்காய், கத்திரிக்காய், முருங்கைப் பிஞ்சு, வெள்ளவரைக்காய், மிதிபாகல், பிஞ்சு காரக்கருணை, காட்டுக்கருணை முதலியவையாகும்.

## வாததேகிகட்கு கீரைவகை

மேனிமுன்னை யாரைநறும் வேளை மணத்தக்காளி
யானைநெருஞ் சின்முசுக்கை யப்பைநெடுங் - கானிலுறை
மூக்குரட்டை நல்வசலை முன்பிவைக ளாற்றீரை
யாக்குவர் வாயுந்தேகர்க் காய்ந்து.

இவர்கட்கு குப்பைமேனி, முன்னை ஆரை, நல்வேளை, மணத்தக்காளி, யானை நெருஞ்சில், முசுமுசுக்கை, அப்பக்கோவை, காட்டுமுக்குறட்டை, நல்வசலை இவைகளாகும்.

## வாததேகிகட்கு ரசவகை

சக்கரவர்த்தி வெள்ளைச் சாறடை பாகன்முருங்கை
தெக்கிலிளந் தண்டுநறுந் தூதுணம்வார் - மைக்குழலே
சீதமுறு காணியிவை செந்தளிர்க ளிற்றினமும்
வாததேகி கர்க்கிரசம் வை.

வாததேகிகளுக்குச் சக்கரவர்த்திக்கீரை, வெள்ளைச் சாரடைப் பாகல், முருங்கை, முளைக்கீரை, நல்லதூதுணம், பொன்னாங்கண்ணி இவ்விலைகளில் நித்தியமும், ரசஞ்செய்து உண்ணலாம்.

### வாததேகிகட்கு வற்றல்வகை

சுண்டைக்காய், பேய்ப்புடற்காய், தூதுளங்காய்,
நெல்லிக்காய்
தொண்டை மணத்தக்காளி தூதுவளை - பண்டை துள்ளிக்
காயிவற்றின் வற்றல்களிங் கான்பிரண்டை வற்றலுமாம்
வாயுதேகர்க் கறிந்து வை.

வாததேகிகட்குச் சுண்டைப் பேய்ப்புடல், தூதுளம் நெல்லி, ஆதொண்டை, மணத்தக்காளி, வெள்ளவரை, முள்ளி ஆகியகாய்களும் காட்டுப் பிராண்டையும் வற்றல் செய்வாயாக.

### வாததேகிகட்கு ஊறுகாய்வகை

நாரத்தை தான்றிகடு நற்றேற்றா னீடுகளா
வேரொத்த புன்களா விவ்வகைக்காய் - காருப்பப்
பூறிய காயாடி முயரிஞ்சியும் மமையுங்
கூறனில தேகிகளுக்கு.

வாததேகிகட்கு நாரத்தை, தான்றி, கடுதேற்றான், பருங்களா, சிறுகளா ஆகிய இக்காய்களும், இஞ்சியும், உப்பு நீரிலூறியதாகும்.

### பித்ததேகிகட்குக் கறிவகை

வெள்ளரி யிரண்டுபாகல் விரிபுடல் பீர்க்குசிம்பை
முள்ளரி பூசினிகத்தார் முருங்கைமா களவரம்பை
யெள்ளிலிக் காய்கள்வள்ளி யீருளிக் கதலிப்பூதண்
டன்னியுண் ணாஞ்செய்வ ரகும்பித்த தேகர்க்கென்றே.

வெள்ளரி, கொம்புப் பாகல், மிதிபாகல், நிலப்புடல், பீர்க்கு, அவரை, ஆற்றுமுள்ளி, கல்யாணப்பூசனி, கத்தரி, முருங்கை, பருங்களா, வாழையாகிய இக்காய்களையும், உள்ளிக்கிழங்கு, வெங்காயம், வாழைப்பூ, தண்டு இவைகளை உண்ணலாம்.

## பித்ததேகிகட்குக் கீரைவகை

புளியாரைக்கோவை முருங்கைவசலை நற்பொன்முசுட்டை
மிளகப்பை யோரிதாழ்ந் தாமரைப்பாலை வெளிமுசுக்கை
வளர் தூதுணஞ்சுரை வல்லாரைசில்லி மணத்தக்காளி
தளிரிளங் கீரைகள் புத்ததேகிக டாமுண்பரே.

இவர்கள் புளியாரை, கோவை, முருங்கை, வாலை, நல்பொன் முசுட்டை, மிளகு, அப்பக்கோவை, ஓரிதழ்த் தாமரை, பாலை, காட்டுமுசுக்கை, தூதுணம், சுரை, வல்லாரை மணத்தக்காளி, இக்கீரைகளை உணவில் சேர்த்து உண்ணலாம்.

## பித்ததேகிகட்டு ரசவகை

கொத்து வசலை கொடிவசலை நல்லசுத்தி
தந்துபுனல் வழுக்கை தைவேளை - நெய்த்தராச்
சாகங்களை யவித்துச் சாறுவகைத் துன்பார்பித்த
தேகங் களையுடையார் தேர்.

இவர்கள் கொத்து வசலை, கொடிவசலை, வெள்ளையகத்தி, பிரமியவழுக்கை, தைவேளை, தரா ஆகிய இலைகளை வேகவைத்து இறுத்துச் சலத்தில் செய்த இரசத்தை உணவுடன் சேர்ந்து உண்ணலாம்.

## பித்ததேகிகட்கு வற்றல் வகை

சுத்தமுள்ளி பேய்ப்புடல் தூதுணங்காய் சுண்டைகண்டங்
கத்தரி பயற்றைமணத் தக்காளி - நித்தமுறு
கஞ்சம் வல்லாரையிலை காய்த்தநறுங் காய்வற்றல்
விஞ்சுபித்த தேகிகட்காம் விள்.

பித்த தேகிகளுக்கு வெம்முள்ளி, பேய்ப்புடல், தூதுணம், காட்டுச்சண்டை, கண்டங்கத்திரி, பயிற்றங்காய், மணத்தக்காளி, தாமரை, வல்லாரை இவைகள் வற்றலாகும்.

**பித்ததேகிகட்கு ஊறுகாய்வகை**

பச்சைமிளகிஞ்சி தூதுளங்காய்முப் பலநாரத்தங்
கச்சைதமரத்தம்புன்னை வடங்கவில்தேற்றான்மா
கொச்சையிளம்பிஞ்சு மாகாளிக்கத்தங் கொளுஞ்சியெலு
மிச்சையுப் பூறியகாய்பித்த தேகர்க்கு மிக்குநன்றே.

இவர்கட்கு பச்சைமிளகு, இஞ்சி, தூதுணம், கடுநெல்லி, தான்றி, நாரத்தை, நமரத்தை, புன்னை, ஆல் விலா, தேற்றான், மா ஆகிய இவ்விளம் பிஞ்சுகளும், பருநன்னாரிக்கிழங்கு, கொளுஞ்சி, நாரத்தங்காய், எலுமிச்சங்காய் இவைகளும் உப்பில் ஊறியது மிக உத்தமம்.

**சிலேத்துமதேகிகட்குக் கறிவகை**

கத்தரிபேய்ப்புட லவரையிருபாகல் பருங்களா
கண்டங்கத்திரி
யந்திக் காய்களும் வருக்கைமர பயற்றை சுரையால்
பீர்க்கரும்பிஞ்சுவேர்
மொய்த்த சூரணங்கநலித்தண்டோப்
பூமிளங்கிமுருக்கரும்பு
மத்த பூசினிக்காயிருள்ளிவள்ளி யுங்கபத தோர்க்காண
மாமே.

சிலேத்தும தேகிகட்குக் கத்திரி, பேய்ப்புடல், அவரை, கொம்பு பாகல், மிதிபாகல், பெரியகளா, கண்டங்கத்தரி, அத்தி ஆகிய இந்நான்கும் பலா, பயற்றம் பிஞ்சு, கரை, ஆல்பீர்க்கு இவற்றின் பிஞ்சுகளும், கருணைக்கிழங்கு, வாழைத்தண்டு, பூமுள்ளங்கி, முள்முருக்கினரும்பு, வெங்காயம், வள்ளிக்கிழங்கு இவைகள் ஆகும்.

## சிலேத்மதேகிகட்குக் கீரைவகை

காரையிருகோவை முன்னை செம்மைபுடலை துயிரி
வழுக்கை
நெஞ்சுருசி லாரை புளியாரை முல்லை மருந்நெய்தன்
மேனிநல்வல்லா
ரைபொன்னா வாரைமுசுக்கை முருங்கையிருப்பிண் ணாக்
கோடுபண்ணை மணலிபிள்ளைக்
கீரைமுசுட்டையுங் காராமணி மாடங்கடலை புளி

வேளைமணத் தக்காளி மென்சீதை சக்கிரவர்த்தி
பீளைவசலை சுக்கு பெண்சுணங்கள் -
வேளையிவைச்
செந்தளிர் களைக்கீரை செய்வர்கப தேகர்நிதம்
வந்தளி யுணத்தான் மகிழ்ந்து.

இவர்கட்குக் காரை, அப்பக்கோவை, வரிக்கோவை, பசுமுன்னை, கருஞ்செம்பை, பேய்ப்புடல், துயிலி, பிரமி, வழுக்கை, நெருஞ்சில், நீராரை, புளியாரை, முல்லை, மருதம், நெய்தல், குப்பைமேனி, வல்லாரை, பொன்னாவரை, முசுமுசுக்கை, பெருபிண்ணாக்கு, சிறுபிண்ணாக்கு, பண்ணை, மணலி, முளைக்கீரை, முசுட்டை, காராமணி, உளுந்து, கடலை, புளிப்புள்ள மலைக்களா வேளை, மணத்தக்காளி, பொன்னாங்கண்ணி, சக்கரவர்த்தி, பீளை, வசலை, சுக்கு, கற்றாழை, நாய்வேளை ஆகிய இக்கீரைகளைச் சமைத்துப் போசனத்தில் உண்பார்கள்.

## சிலேத்ம தேகிகட்கு ரசவகை

கந்தவோமஞ் செங்கடுகு சதகுப்பை தரா
வெந்தியங் கொத்தமல்லி வேளைசுக்கு - முந்தகத்தி
தூறு குறிஞ்சாபாக றும்மையிச் சாகங்கள்வெந்த
சாறுகப தேகர்க்காஞ் சாற்று.

இவர்கட்கு ஓமம், செங்கடுகு, சதக்குப்பை, வெந்தயம், கொத்துமல்லி, வேளை, சுக்கு, அகத்தி, குறிஞ்சா, பாகல், தும்பை ஆகியவற்றின் இலைகள் அவித்திறுத்துச் சலங்களில் வைத்த ரசங்கள் ஆகுமென்க.

### சிலேத்ம தேகிகட்கு வற்றல்வகை

சுண்டைமணத் தக்காளி தூதுணம் புரண்டையா
தொண்டை முள்ளி பேய்ப்புடலை தொண்டைசிம்மை - கண்டயுரு
கத்திரி நெல்லிப்பிஞ்சு கானரத்தம் பிஞ்சுவகை
ளொத்த வற்றலையத் தேகர்க் குன்.

இவர்கட்குச் சுண்டை, மணத்தக்காளி, தூதுணம், பிரண்டை, கோவை, முள்ளி, பேய்ப்புடல், ஆதொண்டை, அவரை, கண்டங்கத்திரி இவையும், நெல்லி, காட்டு நாரத்தைப் பிஞ்சுகளும் வற்றல் செய்யலாம்.

### சிலேத்ம தேகிகட்கு ஊறுகாய் வகை

மஞ்சண் மிளகுசுண்டை வாழைத்தண் டோடுமாம்
பிஞ்சாலம் பிஞ்சத்திப் பிஞ்சுகளும் - விஞ்சுகப
தூதுநறுந் தூதுணமு நெய்யபாகற் பிஞ்சு
மூறுகாயத் தேகர்க் கோர்.

இவர்களுக்குப் பசுமஞ்சள், மிளகு, சுண்டை, வாழையிலைத்தண்டு, மாம்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, சபநாசனி என்கின்ற தூதுணம், மிதிபாகற்பிஞ்சு ஆகியவற்றின் ஊறுகாய்கள் ஆகும்.

### காலபேதங்களுக்கு அவிரோதபதார்த்தம்

எல்லாக் கறிகளுமே யெல்லுக்கா மல்லுக்கா
மெல்லக் கறிகளுமெல் லார்க்குமாம் - பொல்லாக்
கறிகளுக்குச் சத்துரு கலந்தமைத்து நன்றாங்
கறிகளுக்குள் வைத்தருந்துங் கால்.

தோஷமுள்ள பதார்த்தங்களையும், அவற்றுக்குச் சத்துருவாகிய வஸ்துக்களால் தோஷத்தை நீக்கி அந்தப் பதார்த்தங்களை நற்குணங்களையுடைய பதார்த்தங்களுடன் வைத்துக்கொண்டு உண்ணில் பகல் இரவு என்னும் இரண்டு காலங்களுக்கும் வாத முதலிய மூன்று தேகிகளுக்கும் விரோதம் செய்யாமல் சவுக்கியமாகும்.

### இவ்வித நோய்க்குத் தாம்பூலங் கூடாதெனல்

மதமூச்சா ரோக மகாசன்னிபாத
மதிரூட்சை சுட்சுநோ யானா - முதிர்விடங்கள்
பித்தங் கயஞ்சிரநோய் பேசுமிவைக் காகாது
சுந்தத் தாம்பூலமெனச் சொல்.

மதரோகம், மூர்ச்சை, அபிநியாச சன்னிபாதம், தாபச்சுரம், அதிகஷ்க நோய், தேகத்தில் ஊறிய விடங்கன், பைத்தியம், கபம், கிரஸ்தாபம் ஆகிய இவைகளுக்குப் பரிகாரமாகத் தாம்பூலங்கூடாது.

### இவ்வித நோய்க்கு நெய் கூடாதெனல்

தருண சுரஞ்சன்னி சலதோடத் தோட
மருணம் மகோதரமா நாகம் - வருணவதி
சாரங்க வீனவுரை தாவரிக்குன் மங்களுக்கா
தாரங்க வீனவுரை தன்.

தருணசுரம், சன்னிபாதம், நீர்க்கோவை, சப்ப தோஷம், பெருவயிறு, ஆனாசம், நோய் பபதி, தொனிக்கத்த விதம், குன்மம் என்னும் இவை அதிகரிப்பதற்கு நெய்யே காரணமாதலால் அதைத் தள்ளுவாயாக.

### இவ்வித நோய்க்குத் தயிர் கூடாதெனல்

குட்டமதைப் பக்கிநோய் குன்மங் காமாலைமந்தத்
துட்ட விடுசிக் களச்சூர் சோபைகபங் - கெட்டசுர

மீரமிவை பீநசம்பி லீகம்புண் பாண்டொடதி
சாரமிவைக் கில்லை ததி.

குறைநோய், வீக்கம்நேத்திரநோய், வாதகுன்மம், காமிலம், அலசம், விஷஊசி, களப்பிணி, சோபை, சலதோடம், விடசுரம், பீனிசம், பீலிகம், கிரந்தி, பாண்டு, பேதி இவைகளுக்குத் தயிர் கூடாது.

### தற்காலப் பலாபல பதார்த்தம்

திரிபதார்த்தம் பலமே செய்யு முடனே
திரிபதார்த்த மபலஞ் செய்யுந் - தெரிமுறையே
சிதவம் புணர்ச்சியூன் றேனுசொறி நறும்பா
லாதவம் புணர்ச்சி தைலம்.

குளிர்ந்த சலம், நாவுக்கு ருசியைத் தருகிற மாமிசம், பசும்பால் இந்த மூன்றும் தற்கால பலத்தைச் செய்யும், கடூர வெய்யில், புணர்ச்சி, நற்றயில ஸ்நானம் இந்த மூன்றும் துர்பலத்தைச் செய்யும்.

## வீட்டின் வகை

### சொர்ண வீட்டின் குணம்

மேனிதனிற் காந்தியெழில் வீறுமுத ராக்கினியு
ஞானமுமே தோதாது நண்ணுங்காண் - வானே
மிகைசேர் சகலகுண விர்த்திகளும் விர்த்தி
தகைசோர்சொர் ணத்தினில்லாத தால்.

சொர்ணவீட்டில் வசிப்போர்க்கு உலகில் விளங்குகின்ற, சூரியகிரணமுஞ் சந்திரகிரணமுமில்லை. அதனால் அழகும், வீரியமும், உதரக்கினியும் நீங்கிவிடும். கலகஞ்செய்கிற பித்தமும், மனத்துன்பமும், சிலேத்தும நோயும் மிகுதியாக உண்டாகும்.

## மேல்வீடு, ஓட்டுவீடு, புல்வீடு - இவைகளின் குணம்

நீட்டையுரு மேல்வீடு நீணிலவெப் போடுபல
வேட்டை யொழிக்குங்காண் மிக்கெழிலா - லோட்டையுரு
கல்வீ டுயர்வென்னுங் காலிமஞ்சாரா நலத்தாற்
புல்வீ டுயர்வாம் புகல்.

உயர்வான மெத்தை வீடானது பூமியின் உஷ்ணம் விட மிருக ஜந்துக்களால் உண்டாகும் பலவிதத் துன்பங்களை போக்கும். கல்வீடானது அழகினாலும் உயர்வினும் காற்றும் பனியும் சாராத தன்மையினால் விழல் தடுக்கு வீடே உயர்வாகும்.

## காலை விழிப்பின் குணம்

புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்குஞ்
சுத்த நரம்பினற்ற றூய்மையரும் - பித்தொழியுந்
நாலவழி வாதபித்தந் தந்தநிலை மண்ணுமதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்.

அதிகாலையில் விழிப்பவர்க்குப் புத்தித் தெளிவைத் தரும். சுத்த நரம்பு என்னும் நரம்பினது தூரத்தில் நிறைந்திருக்கின்ற நீரானது கலங்களின்றிப் பரிசுத்தமாய் இருக்கும். பத்திய கோபம் நீங்கும். உலகில் வாழ்கின்ற வாத பித்த கபமும் தங்கள் இடத்திலேயே பொருந்தும் என்க.

## விழித்தவுடன் சுத்தஜலம் அருந்தலின் குணம்

தூங்கி விழித்தவுடன் சுத்தோதக மருந்தி
லோங்கி நின்ற பித்த மொழிவதன்றித் - தேங்கு
மல மூத்திரத் தங்கா வாதியுந்தத்
நலமாத் திரமூலவுந் தான்.

எழுந்தவுடன் நீராகாரம் அல்லது நல்ல தண்ணீர் இவைகளில் ஏதாவது ஒன்றைப் பருகினால், பைத்திய

தோடம் விலகும். அன்றியும், மலஜல பந்தங்களும் நீங்கும். வாதம் முதலிய தோடங்களும் தத்தம் நிலையில் இருக்கும்.

### விழித்தவுடன் பார்க்கத்தக்க வஸ்துக்கள்

கஞ்சந் தங்கந்தீபங் கண்ணாடி யெல்லங்கி
செஞ்சந்த நீர்மண் சிவலிங்க - மஞ்சங்கல்
கற்றாத மதுவலக்கை மனைதட்டாரி யிவை
யுற்றால் விழிப்பிலுத் தமம்.

விழித்தவுடன் தாமரைப்பூ, தங்கம், தீபம், கண்ணாடி, சூரியன், புகையையழித்த நெருப்பு, செஞ்சந்தனம், கடல், வயல் சிவலிங்கம், முகில் சூழ்ந்த மலை கன்றையுடைய பசு, தமது வலக்கை, மனைவி, மிருதங்கம் இவற்றுள் ஒன்றைப் பார்க்கில் உத்தமமாகும்.

### விழித்தவுடன் கண்ணாடி பார்த்தலின் குணம்

தாதுவுங் களிப்புஞ் சகல வசீகரமும்
போத வரிவுமுண்டா பூதலத்து - ணாகமுறும்
பண்ணாடிப் பார்க்கும் பனிமொழியே நீவிழிப்பிற்
கண்ணாடி பார்த்திதனைக் காண்.

விழித்தவுடன் கண்ணாடி பார்த்தலினால் வீரிய விருத்தியும், மகிழ்ச்சியும், சர்வ வசியமும், ஞானமும் அதிகரிக்கும்.

### விழித்தவுடன் பார்க்கத்தகாத வஸ்துக்கள்

ஊனம் வத்திரம் பவங்கல்லாடை சங்கை
யூமைதட்டை செவிடிரங்கல்சடை நிராசை
கூனழுக்கு மேனிவிரி முர்த்தந்தூக்கங்
குட்டமற னொய்த்தலையா குலமுன் மாதந்

தீனமறற்கய மிவையுள் ளார் மூகத்து
தீட்டமுகைவிதவை வஞ்சியர் முகத்துங்

கானவரவிந்தி பலி மூரிமாறு
கயிறுலக்கை முறத் திடத்தும் விழித்தறீதே.

எழுந்த உடன் அங்க வீனமான வஸ்திரம், காவிவஸ்திரம், இரசங்கை, ஊமை, மொட்டைத்தலை, செவி, அழுகை, விரித்த மயிர்த்தலை, சதாநித்திரை, குட்டம், கொல்லை, எண்ணெய்த்தலை, மனோவியாகுலம், வன்மாதம், தரித்திரம், கபநோய் இவைகளை உடையவர் முகத்தையும், பாம்பு, பூனை, சாம்பல், எருமை, விளக்குமாறு, உலக்கை, முறம் என்னும் இவைகளைப் பார்க்க அன்றைக்குக் கெடுதி உண்டாகும்.

## சிலம்பம், மல்யுத்தம், குதிரையேற்றம், பாதநடை இவைகளால் உண்டாகும் குணம்

சிலம்பமுதன் மல்யுத்தஞ் தேசிநாட கொள்ளிற்
பலம்பரவு மெய்யிருக்கும் பன்னத் துலங்குபசி
யுண்டாங் கபவாத மோடுவலி சூலையம்போம்
பண்டா மலமிறங்கும் பார்.

காலையில் சிலம்பம், மல்யுத்தம், குதிரையேற்றம், பாதசாரியாக நடக்குதல் ஆகிய செய்கைகளினால் வன்மை தளர்ந்த உடல் இறுகுதல். அதிக தீபனம் இவை உண்டாகும். கபவாத தொந்தமும் வாதசூலையும் பழைய மலபந்தமும் விலகும்.

## மிதாமிதவார்த்தையின் குணம்

மிதவார்த்தைக் குள்ளறிவு மெய்ச்சுகமுகங் குன்றா
ததிவார்த்தைக் கவ்வுரை கெட்டபோ - டுதிரமிவை
சுண்டும் பொங்குபித்தஞ் சூழுதலா லையவினை
யண்டும் பொங்கும் புன்னோய்.

மிதமாக வசனித்தால் உன் அறிவும், சரீர சவுக்கியமும் உண்டாகும். அதிகமாக கவனித்தால் முற்கூரிய அறிவு

சவுக்கியங்கெடும். அன்றியும் சரதாதுவும் ரத்ததாதுவும் சுண்டும். இவை குறைவதினால் பித்தம் அதிகரிக்கும். அதனால் கபநோய் பிறக்கும். நீர்ரோகம் உண்டாகும்.

**வெயிலால் உண்டாகுங் குணம்**

வாதமொடு காந்திகெடு மாதுயரால் வேர்வைபல
மோறுபசி பித்தமிவை யுண்டாங் - காண்கீதக்
குயிலிசை பழிக்குங் கோதின் மொழிமாதே
வெயிலினுறு குணத்தை விள்.

வெய்யிலால் வாத ஆதிக்கமும், அழகும் விலகும். வருத்தம், வியர்வை, வன்னம், ஜடாக்கினி, பித்தகோபம் இவை அதிகரிக்கும்.

**காலை மாலை வெயிலால் உண்டாகும் குணம்**

காலைவெயிற் காய்ந்தார்க்குக் காணாப்பிணி யனைத்தும்
பாலைவெயிற் போலப் பரவுங்காண் - மாலைவெயிற்
காய்ந்தார்க் குறுபிணிமுற் காசறுமிலக் கணதூ
லாய்ந்தார்க் குறுவழிச்சேர லாம்.

காலை வெய்யிலில் காய்ந்தால் உடம்பில் முன்பில்லாத வியாதிகளெல்லாம் பரவும். மாலை வெய்யிலில் காய்ந்தால் பொருந்திய பிணிகள் யாவும் நீங்கும்.

**நிழலால் உண்டாகுங் குணம்**

மேனி தடிக்கும் விவர்ன்னவழ குண்டாகும்
போனவலி வாதமந்தம் பூரிக்குந் - தானே
வளர்ந்தேறுஞ் சோம்பல் மதிவதன மாதே
குளிர்ந்த நிழலின் குணம்.

குளிர் நிழலில் இருப்பவர்க்குச் சரீரந்துலத்தலும் வேறு நிறமான அழகும், நீங்கிய கடுப்பு வாதமும், அலசமும், அசதியும் அதிகமாகும்.

## மழைமந்தாரத்தின் குணம்

நித்திரை காந்தி நெடியபசி தாகம்போ
மொத்த மகிழ்ச்சிகுளி ரூதையொடு - மெத்த
வழைவந் திடச் செயிரைப் பாதியநோ யுண்டா
மழைமந் தாரத்தால் வழுத்து.

மழை மந்தாரத்தால் துக்கம், ஒளிவு, தீபனம், தாகம் இவை போம். சளிப்பு, நடுக்கல், சீதவாயு, சுவாசம் முதலிய பிணிகள் உண்டாகும்.

## தீக்காய்வதின் குணம்

தீக்காயில் வாதமொடு சீத நிவாரணமா
மூக்கமிரு தாகமதி யுட்டினமு - நீக்கா
விரத்தபித்த நோயு மிரத்தக்கொதிப்பு
முரத்தெழும்பு மென்றே யுரை.

தீக்காய்வதால் வாதக்கடுப்பு, சீதம் விலகும், உபசர்க்க தாகம், சூடு, ரத்தப்பித்தம், உதிரக்கொதிப்பு இவை அதிகரிக்கும்.

## வேள்விப்புகை, சுடுகாட்டுப்புகை, தயிலப்புகை இவைகளாலுண்டாகுங் குணம்

மகந்தூம மியாயுள் வளர்க்குஞ் சவஞ்சா
ரத்தூம மத்தை யழிக்கு - மகத்தா
மருந்தயிலத் தூம மடர்வாத வன்னோய்
விருந்தயிலு மென்றே விதி.

வேள்விப் புகையானது தீர்க்க ஆயுசு கொடுக்கும். சுடுகாட்டுப் புகையானது உள்ள ஆயுளையும் கெடுக்கும். மகாதயிலப் புகையானது வாதரோகத்தை விருந்தாக உண்டுவிடும்.

## மலசலம் விடுத்தலின் குணம்

இருமலங் கடங்கா வுறங்குங்காண் மூன்றா
மிருமலங்கா டங்கணிலை யெய்து - மிருபச்
சமனாக்கினி சாருஞ் சாராநோய் கூட்டம்
நமனாக்கினி சாரா தாம்.

மலஜலம் இரண்டையும் சிக்கலின்றி காலை, மாலை வெளியேற்றுபவர்க்கு வாதபித்த, கபங்கள், தந்தம் நிலைகளில் உலவும். ஜடாக்கினி அதிகரிக்கும். நோய்க்கூட்டம் ஒழியும் எமனாக்கினையும் செல்லாவாம்.

## பல்விளக்குவதின் குணம்

துகளிலை காட்டமிவை தொட்டுத் துலக்கிற்
றுகளிலை காட்டாது தோடந் - துகளிலைகண்
மெய்துவரை யொத்திருக்கினஅ மேனாள்
வரைமூரன்
மெய்துவரை யொத்திருக்கு மே.

தூள், இலை, கொம்பு இவைகளால் பல் விளக்கினால் பற்களுக்கு ஊனமில்லை, வாத பித்த கபங்களால் பல்லினிடத்தும், அவ்வோர்களிடத்தும் 23 ரோகங்களும் உண்டாகாது. ஆனால் அவைகள் இயல்பாகத் துவர் உள்ளதுகளாயிருந்தால் இறுதி நாள் வரைக்கும் பற்கள் மலைபோல் இருக்கும்.

## பல்விளக்கத்தக்க கொம்புகள்

வேலுக்குப் பல்லிறுகும் வேம்புக்குப் பற்றுலங்கும்
பூலுக்குப் போகம் பொழியுங்கா - ணாலுக்குத்
தண்டா மரையாளுஞ்சாருவளே நாயுருவி
கண்டால் வசீகரமாங் காண்.

கருவேல் குச்சியால் பற்களுக்கு உறுதியும், வேப்பங்குச்சியால் பற்களுக்கு ஒளியும், நீர்ப்பூலாக் குச்சிக்கு

வீரிய விருத்தியும், ஆலம்விழுதுக்கு லட்சுமி கடாட்சமும், நாயுருவி வேருக்கு முகவசியமும் உண்டாகும்.

### பல்விளக்கத்தகாத வஸ்துக்கள்

கல்லு மணலுங் கரியுடனே பாளைகளும்
வல்லதொருவைக் கோலும் வைத்துநிதம் - பல்லதனைத்
தேய்த்திடு வாராமாயிற் சேராளே சீதேவி
வாய்த்திடுவண் மூதேவி வந்து.

செங்கல், மணல் , கரி, தென்னம் பாளை, வைக்கோல் இவைகளால் பல் துலக்குமிடம் மூதேவி வந்து சேர்வாள்.

## ஸ்நான விதி வகை

### சுத்த ஸ்நானத்தின் குணம்

சுத்தப்புனலாடந் தென்னமைச்ச லாயாசந்
தொந்தெரிச்சற் பாரிப்பு தோன்றாவா - மெத்தனவுங்
காந்தி பலம்பசியுங் கட்டழகு முண்டாகு
மேந்து முலை மாதே யியம்பு.

ஆறு, மடுக்களில் அதிகாலையில் தினம் சுத்த ஸ்நானஞ் செய்வோர்க்குத் தினவு, சோர்வு, வெப்பம், தேகக்கனதி இவை நீங்கி, தேக வனப்பும், அழகும் தீபனமும் உண்டாகும்.

### காலை மாலை குளியலின் குணம்

காலைக்கும் கடும்பசி யுண்டா நோய்போ
மாலைக் குளிக்கவிவவை மத்தியமே - சோலையுடை
வாதநீர் சுத்தசலம் வன்னிநீ ராங்கால
தேசமுடற் பேதமுன்னிச் செப்பு.

மா, நெல்லி முதலிய இலைகளை ஊறவைத்து நீரையாவது, சுண்ணப்பொடி தூவிய பரிமள நீரையாவது அது

கலவாத சுத்த வெந்நீரையாவது கால தேச பேதங்களை உணர்ந்து அதிகாலையில் குளித்தால் ஜடராக்கினி புஷ்டியுண்டாகும். சகல வியாதிகளும் போம். இவ்வண்ணம் மாலை வேளைகளில் குளிக்க மேற்சொன்னவை மத்திபமாம்.

### மஞ்சட் குளியலின் குணம்

மஞ்சட் குளிதனக்கு மாறாத்துர்க் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விட்டகலுந் - தொஞ்சலுறு
மைய மொழியு மடர்வியர்வுங் காணாது
வையமத னூல் வருத்து.

பரிமள கலவையுள்ள மஞ்சள் காப்பிட்டுக்கொண்டு, குளிப்பவர்க்குக் கற்றாழை நாற்றமும் முகத்திலுண்டாகின்ற நோய்கள் சீரான சிலேத்துமமும் வியர்வையும் நீங்கும்.

### பஞ்ச கற்பத்தின் குணம்

மிருகமதம் பித்தமணி வேம்புகடு நெல்லி
கருகுறுதும் பாலரைத்துக் காய்ச்சி - யொருமிட
லிங்கற்ப நோய்க்கு மிடமின்றா மெய்ஞான்று
மைங்கற்ப மீதே யறி.

கஸ்தூரி மஞ்சள், மிளகு, வேப்பம்வித்து, கடுக்காய்த்தோல், நெல்லிப்பருப்பு இவைகளைக் கிராமப் பிரகாரம் காராம் பசுவின்பால் விட்டரைத்துக் கொதிக்க வைத்து ஒப்பற்ற சிரசிற் நெய் கொண்டு குளித்தால் எந்நாளும் பிணிகளுக்கு இடமேயில்லை. இதுவே பஞ்ச கற்பவிதி என்பர்.

### அப்பியங்கனத்தின் குணம்

தலைமுழுக்காற் சென்னிமுடிந் தாளிவைக்கு நீங்காப்
பலமுண்டாங் கேசம் படருந் - தலைநோய்போம்
பஞ்சேந் திரியம் பலத்துத் தெளிவையுறு
மெஞ்சாத் தொனியுமெழி மென்.

அப்பியங்கனத்தால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற உறுப்புகளும் பலத்துத் தெளிவு பெறும். சிரசு, முழங்கால் கட்டுப்பலமும், ரோம வளர்ச்சியும், நாற்றொளியும் உண்டாகும். தலைவலி விடும்.

### நித்திய அப்பியங்கணத்தின் குணம்

தினமப்பி யங்கனமே செய்யிற் சரும
மினுமினுக்குஞ் சோம்பல் விலகுந் - தனியான
ஐயமுத்தோட மருசிதந்த நோயொழியு
மெய்யுமிகப் புட்டியிடு மே.

தினமும் அப்பியங்கனம் செய்தால் தொக்கேந்திரியப் பளப்பும், தேகபுஷ்டியும் உண்டாகும். சோறாதல் தனிக் கபநோய், திரிதோட தொந்தம், அரோசகம், உபரிருச நோய் இவை நீங்கும்.

### பசுவினது நெய் முழுக்கின் குணம்

மைந்தர்முதன் முப்பருவ மாந்தர்க்கு மாமுடலின்
முந்தெரிச்ச லுன்மாத மூர்ச்சைகப - முந்திரந்த
பித்தம் மாதாகமொடு பேசுவிகா ரகங்களுக்கு
முத்தமமா னெய்முழுக் குன்.

பசுவின்நெய் முழுக்கிற்குப் பால்ய குமார விருத்தர்களுக்கும் ஆம். ரச தாதுவின் கொதிப்பாற் கண்ட எரிச்சல், உன்மாந்தம், மூர்ச்சை, மூளையைப் பற்றி கபம், ரத்தபித்தம், விதாகம் இவைகளை நீக்கி நன்மை அளிக்கும்.

### தைலாதிகளின் குணம்

எள்ளினெய்யு முக்கூட் டெணுநெய்யு மானெய்யும்
விள்ளுதயி லாதியென விறுநெய்யு - முள்ளபடி
வாரந் தனக்கிருநாள் - வைத்தாடி னோம்களதி
காரந் தனக்கிடமிற் காண்.

எண்ணெய் முக்கூட்டு நெய், பசுவின் நெய், உயர்ந்த தைலம் முதலியவைகளை 8 தினத்திற்கு 2 தரம் குளிக்கச் சகல நோய்களும் விலகும்.

### தைலம் தேய்க்கும் விதி

எடுத்தநற் றயிலநாசிக் கீரிரண் டாறுகாதுக்
கடுத்திடத் துளிவிட் டுச்சி யங்கந்தா னடிகனிற்கு
கொடுத்திடாத் தோய்த்தூறச்செய் திப்புறஞ்சிகைகாய் வெந்நீ
விடுத்துட னாடிநீரும் வியர்ப்புமற் றிடப்புலத்தே.

நல்லதைலங்களை மூக்கில் 4 துளியும், காதில் 6 துளியும் விட்டுச் சிரசு, உடம்பு, பாதத்தினடி இவைகளிலிட்டு சுடுகை பிறவாமல் தேய்த்து ஊறவைத்துப் பின்பு சீகைக்காய் தேய்த்து வெந்நீரில் குளித்து அந்நீரும், வியர்வையும் நீங்கும்படியாக உலர்த்தவும்.

### பாதாதிகளில் தைலமிடலின் குணம்

பாதத்திடிற் கண்ணோய் பாறுமக்கிட் கிடினோ
காதுற் றெழுநோய் போங் - காதுடிளில்
தலைநோ யகலுந் தலைக்கிடினோ யெல்ல
நிலையா வறலாடி னெய்.

எண்ணெய் முதலிய தைலங்களை உள்ளங் காலில் தேய்க்கக் கண்ணைப் பற்றிய நோய்களும், கண்ணுக்குக் கட்டினால் செவிநோய்களும், செவியிற்குத்தினால் தலைதாபங்களும் சிரசில் தேய்த்துக் குளித்தால் உடம்பிலுள்ள சகல நோய்களும் குணமாகும்.

### அரைப்பு வகை

சீக்கிராந் தூள்விரண தேகர்க் கரைப்பாகு
மாக்கிலும்பைக் கட்டிசொறி யாளர்க்குத் - தூக்குமணிப்

புங்கரைப்புஞ் சீய்க்காயும் போக்கடிக்கு
மெண்ணெய்களைக்
கங்குலுரை கூத்தன்மின்னே காண்.

பருப்பரைப்புக் கோடிநெங் பண்ணுமெண் ணெய்யாதிக்
கரைப்புச் சிகைக்காயு மாகுந் - தெருப்பன்றி
நெய்யாதி பாநெய்க்கு நீள்கரைப் பூண்டாதி
மெய்யாரைப் பாகும் விள்.

விரணதேகிக்கட்கு உசிலத்தூளும் சொறி, தினவை உடையவர்க்கு இலுப்பைப் பிண்ணாக்கும், எண்ணெய் முதலிய தைலங்களுக்குப் பொன்னங்காயும், சீகைக்காயும், பசுவின் வெண்ணெய்க்குப் பச்சைப்பயறு, பன்றிகாக்கை முதலிய நெய்கட்குக் காரைச்செடிகளின் தூளும் அரைப்பாகும்.

## ஸ்நானகால விதி

அயமானி வைக்கம் பதற்றுளியாழ் குளிர்க்கட்டத்துன்
வயமாகனிக்குங் கோல்கேட்டுநந் நான்குவின்மானி ரண்டே
பயமார் கடமர்ச்சத்திற்குந் திரிக்குட்பகர் திங்களி
னயமாந்தயிலங்களாடவரோகமெய் நண்ணுவரே.

சித்திரை, வைகாசி மாதங்களில் சூரியன் உதயமான 5நாழிகைக்குள்ளும், ஆனி, ஆடி மாதங்களில் 8 நாழிகைக்குள்ளும், ஆவணி, புரட்டாசி மாதங்களில் 3 நாழிகைக்குள்ளும், பக்குவ பாகமுள்ள தைலக்குளியல் செய்தால் அரோசிகத் தேகத்தைப் பொருந்துவார்கள்.

## க்ஷவரத்தின் குணம்

தூக்கம் விரணந் தொடைவலி சூலங்காசந்
தற்கால சாந்தஞ் சவரத்தால் - மிக்குடற்குச்
சாந்திமனப் பூரிப்பு கண்ணொளிரு காமமுமாஞ்
சேர்ந்ததிங்க ளுக்கிரண்டாந் தேர்.

ஒருமாதத்திற்கு இரண்டுதரஞ் செய்துகொள்கிற சவரத்தால் மனத்துயரம், புண், தொடை நோவு, குத்தல், இருமல் ஆகிய இவைகள் உடனே கொஞ்சம் சவுக்கியமாகும். தேகவொளியும், மனச்சந்தோஷமும், விழிக்குப் பிரகாசமும், தாதுவிருத்தியும் உண்டாகும்.

# வஸ்திர வகை

## சாலுவையின் குணம்

சலதோடம் போகுந் தலைவலியு மேரு
மூலவிவரு நோய்வாத மோடும் - வலிய
வயிற்றுவலி போங்குளிரை மாறாப் பனியைச்
சயிந்ததொரு சாலுவைக்குத் தான்.

நல்லசாலுவைக்கு நீரேற்றம், சிரோநோய், வலிவாதம், குன்மம், குளிர், மூடுபனி இவை ஒழியும்.

## பட்டு வஸ்திரத்தின் பொதுக்குணம்

பித்த கபமகலும் பேரா மகிழ்ச்சியோடு
புத்திமிகும் வியர்வை பூணுங்கா - ணித்தியமும்
காந்தியது வுண்டாங் கனஞ்சேர் பட்டுத்துகிலுங்
கேந்துமுலை மாதே யியம்பு.

உயர்ந்த பட்டுத்துணியினால் பைத்திய சிலேத்துமம் விலகும். மனக்களிப்பு, ஞானம், வியர்வு, வனப்பு இவை உண்டாகும்.

## வெண்பட்டு வஸ்திரத்தின் குணம்

வெண்பட் டுடையால் விரிசுரமும் சீதமும்போம்
பண்பட்ட வாதம் பறக்குங்காண் - பெண்கிட்டுங்
காந்தியு முண்டாகுங் கதித்த அழகுமுண்டாங்
காந்திமதி முகத்தாய் காண்.

வெண்பட்டு உடையினால், அதிசுரமும், குளிரும், வாதநோயும் போம், ஸ்திரீ வசியமும், ஒளியும், வனப்பும் உண்டாகும்.

## நாருமடியின் குணம்

சளியொடு நீரேத்தந் தங்கா தகலும்
வளியொடு சன்னியும்பின் வாங்கு - மளியினங்கள்
சேருமடிக் கூந்தமின்னே தேகய்கச் சுத்தியதாம்
நாருமடிக் கென்றே நவில்.

நாருமடிக்குக் கபக்கட்டு, சலதோடம், குடல் விருத்தி, வாதம், சன்னிபாதம் இவைபோம்.

## வெள்ளை வஸ்திரத்தின் குணம்

ஓடுந் திரிதோட மோங்கா யிசுப்பெருகும்
கூடுந் திருவழகுக் கூர்களிப்பு - நீடுமதி
போதமுறும் வெற்றிவரும் பூரிக்கு மெய்வியர்வு
பேதமறும் வெண்டுகிலுக் கே.

வெண்துகிலுக்கு வாதாதி தோடங்களும், வியர்வையும் விலகும், ஆயுசுவிருத்தியும், லட்சுமி விலாசம், வனப்பு, மகிழ்ச்சி, அறிவு, பலம் இவை உண்டாகும்.

## சிவப்பு வஸ்திரத்தின் குணம்

ஏந்துப்பித்த முட்டின மெதிர்ந்த தருணசுரம்
வாந்தி யருசிகப மந்தமிவை - சேர்ந்திடுங்காற்
செய்ய கடுஞ்சிவப்புச் சீலையுடுத்தா லவைகள்
பைய வதிகரிக்கும் பார்.

அதிபைத்தியம், உட்சூடு, தருணசுரம், வமனம், அரோசகம், சிலேத்தும கோபம், அலசம் என்கின்ற நோய்களில் ஏதாவது ஒன்று இருக்கும். காலத்தில் சிவப்புத்துணி உடுக்கலாகாது. மேற்சொன்ன வியாதிகள் விருத்தியடையும்.

**மஞ்சள் வஸ்திரத்தின் குணம்**

நீர்க்கடுப்பு காசமொடு நீடுவிஷ சுரமுஞ்
தீர்க்கநமையும் வெப்பஞ் சேர்மலமும் -
பார்க்குண்மிக
வஞ்சியே யேகுமஞ்ச ளாம்வத்திரம் புனைந்தால்
வஞ்சியே நன்றாய் வழுத்து.

மஞ்சள் உடையால் வாதநீர்ச்சுருக்கு, இருமல், விஷச்சுரம், மாறாதத்தினவு, தனிச்சுரம், மலபந்தம் இவை நீங்கும்.

**பச்சை வஸ்திரத்தின் குணம்**

மெய்யழலை யேகும் விழிக்குக் குளிர்ச்சியுண்டாம்
பொய்யி லுடலமெல்லாம் பூரிக்கு - மையமுறு
நஞ்சை நிகருநளின விழிப் பெண்ணமிர்தே
பச்சையுடை யின்குணத்தைப் பார்.

இதனால் உட்சூடு, சிலேத்தும தோடம் போம். கண்ணுக்குக் குளிர்ச்சியும், தேகப்பூரிப்பும் உண்டாகும்.

**கறுப்பு வஸ்திரத்தின் குணம்**

காசமொடு வெப்புங் கறுத்த கொடுவிடமும்
பேசுமந் தாக்கினியும் பித்தமும்போம் - நேச
வெறுப்புறா வின்பநய மெல்லியலே நீலக்
கறுப்பு நிற மாந்துகிற்குக் காண்.

கறுப்பு உடையால் இருமல், சுரம், மகாசர்ப்ப நஞ்சு, அக்கினி மாந்தம், பைத்தியம் இவைபோம்.

**அழுக்கு வஸ்திரத்தின் குணம்**

நோயடருங் கரந்திகெடு நுண்ணறிவும் போயொளிக்குந்
தீயகுளிர் துக்கந் தினவுசங்கை - வாய்பேசக்

கூசுதலு முண்டாகுங் கோதாரு மாசுடைக்குப்
பேசுதலு மியாதிதற்குப் பின்பு.

அழுக்கு உடையை உடுப்பவர்க்குப் பற்பல துன்பமும், மிருநளிர், துயரம், நமைச்சல், கிரகசங்கை, நாணம் ஆகியவை உண்டாகும். சரீர ஒளியும் நுட்பமாகிய அறிவும் விலகும்.

**கம்பளத்தின் குணம்**

பெரும்பா டசீரணங்கள் பேராக் கிராணி
யருஞ்சூலை பேதி யகற்றுங் - கருஞ்சீழைப்
போக்குங் குளிர்வாடை பொல்லாப் பனிநீக்கிக்
காக்கும் பருங்கம் பளம்.

சீதளக்கட்டையும், மூடுபனியையும் விலக்க உடலைக்காக்கா நின்ற பெரிய கம்பளம், அசிர்க்காரம், அசீரணங்கள், திரிதோடகரகணி, கீல்பிடிப்பு, அதிசாரம் கருப்பாக ஒழுகுகின்ற சீழ் இவை போம்.

**முண்டாசு கவசம் நடுக்கட்டு இவைகளின் குணம்**

முண்டாசு வாதபித்த முன்பொழிக்கு மெய்க்கவச
முண்டாயிற் காந்திபுட்டி யுண்டாகுந் - திண்டாடு
பித்தமறுந் தீயாம் பிணைத்தநடுக் கட்டுக்குத்
தொற்றமுறு வீரியமாங் கூறு.

சிரசில் கட்டுகின்ற முண்டாசு வாதபித்த கப தொந்தத்தைப் போக்கும். கவசம் என்கின்ற அங்கியினால் தேக ஒளியும், புஷ்டியும், உதராக்கினியும் உண்டாவதுந் தவிர பித்தகோபமும் நீங்கும். நகுக்கிட்டு என்கிற அரைக் கச்சைக்குப் பலம் பொருந்திய ஆண்மையுண்டாகும்.

**ஆபரணத்தின் குணம்**

ஆபரணஞ் சூடி லரியலீ லாலயமா
மாபரண மெய்க்குமதி மங்கலங்காண் - சோபமனத்

துக்கத்தோடு நோய்போஞ் சொல்ல வசியறும்
மிக்குக் களிப்படரு மெய்.

ஆபரணம் பூணில் அதுமதன் கூத்துக்கு ஓரிடமாய் இருப்பது தவிர சரீரத்திற்கு அழகிய பாணம் என்கிற கவசமுமாகும். இதனால் மங்களகரமும், வசீகரமும், மகிழ்ச்சியும் உண்டாகும். சோர்வு, மனத்துயரம், வியர்த்தியுன் மாதம் முதலிய ரோகமும் நிவர்த்தியாகும்.

# புசிப்பு வகை

## பசியின் குணம்

பசியா லழகாண்மை பூரிப்பு மோகம்
ருசியாவி வார்த்தை யிவைசோரும் - பசியாலாந்
தாதினத்தின் சீரணமுந் தள்ளு கிழத்தனமு
மோதினத்தின் பேதமுமா மோர்.

பசியினால் வனப்பு, பலம், மகிழ்ச்சி, ஆசை, ஆகாரம், உயிர், பேச்சு இவை நீங்கும். அன்னரசத்தால் வளருகின்ற சப்ததாதுக்களுக்கும் விகற்பமும், மூப்புத் தன்மையும், சுற்றத்தார் விரோதமும் உண்டாகும்.

## போஜன காலவிதி

தன்மமிரண் டேயுண் தப்பிமுக்காற் கொள்ளினினண்
சின்மதலை காளமுற்றற் சேர்பருவ - நன்முகூர்த்த
மொன்றுக்கு ணான்குக்கு ளோதுமிரண்டுக் குளுபாண்
நன்றுக்குத் தீயோர் நயந்து.

இரண்டு கால உணவே நலமாகும். அது தப்பி 3 கால உணவு கொள்ள வேண்டுமானால் சூரிய உதய முதலும் 3¼ நாழிக்குள்ளும் கானாப்பருவமாகிய 15 நாழிக்குள்ளும், மூப்புப் பருவமாகிய 7¼ நாழிக்குள்ளும் நலம் பெருவதற்குச் சாமக்கிரியையுள்ளவர்கள் கொள்ளுவார்கள்.

## காலாகால போஜன குணம்

மூன்றுநாள் காறென் முகூர்த்தங் களின்முறையே
ஞான்றுள் ளூண்ணுமந்த நறுமணவே -
தோன்றுடலுக்
கொக்குமித நோயரமு ரோகமுயிற் சுந்தரஞ்செய்
விக்குமித மாராய்ந்து விள்.

சூரிய உதயமாகிற 11¼ நாழிக்குள் உண்கிற நல்ல உணவு தேகத்திற்குப் பொருந்தும். 15 நாழிகை உணவு மிதம் என்கிற அளவிட்டுப் பிணிகளை விலக்கும். 22½ நாழிகையில் உண்ணும் உணவு ரோகசம்பவமாகும். 30 நாழிகையிலிருந்து உண்ணும் உணவு உயிருக்கு முடிவைத்தரும். இந்த 4 முதல் 2ம்கால உணவு மற்றவை அகால உணவாகும்.

## போஜனம் செய்விதி

ஆதி யினிப்பு நடு வாம்பிரநீ ருப்பொடுசா
காதியுறைப் பப்பா லந்தத்திற் கோதிருமாப்
பாத்தியும் பூறியகா யாதிவகை சேருணவை
மாந்ததி சகத்தையுறு வாய்.

உணவு முதலில் மதுரவகையதுவும், மத்தியில் புளிப்பு, உப்பு, உறைப்பு, இலைக்கறிகளும் முடிவில் துவர்ப்புச் சம்மந்தமான புளித்தத் தயிர், ஊறுகாய் நீ உண்ட உணவை உண்ணில் இன்பம் உண்டாகும்.

## போஜன அளவைக்கூறல்

முக்காலுணவன்றி யெத்தேகிகட்கு முழுவுணவி
லக்காரணமன்ன ராகாதி கூடி யரைதிற்பால்
சிக்காவமுதம் புதக்கிரங்காலுண்டி சேடமுழை
வைக்காவிடிலுண்டி வேகாதனலும் வளியுமின்றே.

சகல தேகிகளுக்கும் ¾ வயிற்று உணவேயன்றி முழு உணவு இல்லை. அதன் விவரம் அன்னமும் கறிகளால் கூட்டி

½ பால் மோர் நீர் கூடி ¼ ஆக முக்கால் வயிற்றுணவேயாம். இன்னும் ½வயிறு இடம் வைத்தற்குக் காரணம் சமன வாய்வும், அனல் பித்தமும் சொலிந்து அவ்வுணவைப் பற்பம் செய்வதற்காகவே.

### புசித்த புசிப்பின் பிரிவு கூறல்

பிலத்தமரு முண்டுப் பிரிவை யுருக்கிற்
பலத்த கிருமிகட்கோர் பங்கு - மலத்திற்கோர்
பங்குமுமாய் வில்லனற்கோர் பங்குமுடலினுக்கோர்
பங்குமுமாய்த் தங்குமுன்னிப் பார்.

துவரத்தையுடைய தீனிப்பையில் இறங்கவே உணவானது 4 பிரிவையுறும். அவை ஒருபங்கு கிருமிகளுக்கும், ஒருபங்கு மலத்துக்கும், ஒருபங்கு ஜடராக்கினிக்கும், ஒருபங்கு தேகத்திற்காகும்.

### புசித்த அன்னசாரச் செய்கைக் கூறல்

ஒரு நாளுண்டவிரத மிரத்தாது வைநனைத்தங் கூறிநிற்கு
மிருநாளுண்டிபுனஃதங் கிரத்தாது விலேறுமிவ்வாறேபின்
வருநாளுண்ணெழுநாலு மாழிநகு தெழுதாதுவையம்
வளர்த்தே
தருநாளுஞ் சோராதவலிவுதனை யெட்டாநாட்சடத்
தினுக்கே.

ஒருநாளுண்டவுனவில் நின்றும் பிரிவுற்ற அன்ன ரசமானது அன்றைக்கு ரசதாதுவை நனைத்து ஊறித்தங்கும். 2ம் நாள் உண்ட அன்னரசம் முன்பு ஊறிய ரசம் ரத்த தாதுவிற்பாயும், இவ்வாறே 3ம் நாள் மாமிச தாதுவிலும், 4ம்நாள் மேதோதாதுவிலும், 7ம் நாள் சுக்கில தாதுவிலுமாகச் சென்று அத்தாதுக்களை விருத்தியடையச் செய்து 8ம் நாள் தேகத்திற்குக் குன்றாத வலிமையைத் தரும்.

# உண்கல வகை

## தங்கக்கலத்தின் குணம்

தங்கக் கலத்திலுண்ண தாதுவிர்த்தி யும்பசியும்
பொங்க மிகுதிடமும் பூரிப்பு - மங்குறையும்
பித்த சோபைப் பிணியிப் பேருலகை விட்டகலுஞ்
சுத்தரசத் தீங்கினியே சொல்.

தங்கப்பாத்திரத்தில் புசிக்கச் சுக்கில விருத்தியும், சமாக்நியும், வன்மையும், உற்சாகமும் உண்டாகும். பித்தசோகை நீங்கும்.

## வெள்ளிக் கலத்தின் குணம்

வெள்ளிக் கலத்திலுண்ண வீறிவரு கசமுந்
துள்ளியெழு பித்தமும் போஞ் சொல்லவோ -
விள்ளிய
காந்தியுண்டா நாளுங் களிப்புண்டாத் தேகத்திற்
சேர்ந்துவரும் வாதமுண்டாஞ் செப்பு.

வெள்ளிப்பாத்திரத்தில் அருந்த சிலேத்தும கோப பித்த கோபமும் நீங்கும். வனப்பு மகிழ்ச்சி வாத ஆதிக்கம் உண்டாகும்.

## செம்புக்கலத்தின் குணம்

செம்பு கலத்திலுண்ண தேகா ரோக்கியமாம்
பம்பிரத்த தோடம் பறக்குங்கா - ணம்புவியி
லண்ணியிடுங் காந்தி யணங்கே விழியொளியாம்
புண்ணியமு நண்ணும் பகல்.

செம்புப்பாத்திரத்தில் உண்ண சரீர சவுக்கியம், வனப்பு, கண்ணுக்கொளிவு, சுசிர்தம் இவை உண்டாகும். ரத்த பித்த ரோகம் விலகும்.

## வெண்கலத்தின் குணம்

தாம்பரத்தில் வெள்ளீயந் தான்கலந்த வெண்கலமென்
றாம் பெயர் பெறுங்கலத்து ளன்னமுண்ணிற் -றேம்புகிறேன்
சோபமொடு ரத்தபித்தந் தோன்றவறி யாதனங்கள்
சாவமெனச் சொன்னுதலே சாற்று.

வெண்கலப் பாத்திரத்திற் உண்ணச் சோர்வும் உதிர பித்தமும் போம்.

## தாம்பரம், வெள்ளி, கலப்பு வெண்கலம் இக்கலங்களின் குணம்

தக்க தாம்பரத்தின் வட்டிற் றானத்திரத்தபித்த
மெய்க்குறாத கற்றும் வெள்ளி விலக்கிடு மையந்தன்னை
யொக்கவே கலப்புவட்டி லுறுதிரி தோடம்போக்குங்
கச்சிய வுதிரமேறுங் கனத்த வெண்கலத்திற்கென்னே.

செப்புக்கலம் ரத்தபித்தத்தை விலக்கும். வெள்ளிக் கிண்ணி கபத்துன்பத்தை நீக்கும். கலப்புலோக வட்டில் திரிதோடங்களை மாற்றும். உலோகத்தினால் குறைந்த தாதுவிருத்தி பெருகும்.

## உண்கலத்தில் இவைகள் முக்கியமெனல்

வாழை வெள்ளைப் பன்னதன்றா மற்றிலைகண் மத்திமமா
மாவைவெள்ளி வெண்கலமு மாநன்றாங் - கோழை
கயம்பாண்ட நோய்போகுங் கருதினிவைக் கெல்லா
யெப் பாண்ட மேல சனங்கொள்.

மன உற்சாக உணவிற்கு வெள்வாழையிலை நன்று. மந்தையிலை மத்தியமாகும். தங்கம், வெள்ளி, வெண்கலம் இவைகளாற் செய்த உண்கலங்கள் மிகவும் நலம். இவைகளைவிட மட்கலமே சிறந்தது. இதில் புசிக்க க்ஷயம் பாண்டு நோயாற் பிறந்த நீர்ச்சுரப்பு இவை விலகும்.

### வாழையின் குணம்

தொக்கி னுறுமின்னுஞ் சுகபோகமு மன்னு
மக்கினி மந்தம் மபலமொடு - திக்கிடுகால்
பாழை யிலைப்புமறும் பன்னுபித்த முஞ்சமனாம்
வாழையிலைக் குணறு வாய்.

வாழையிலைக்குச் சருமதாதுவிற் பளபளப்பும், சுக போகங்களும் பொருந்தும். மந்தாக்கினி, துர்மலம், க்ஷணவாதம், சிலேத்தும அரோசிகம் இவை நீங்கும். பித்தக்கோபம் சாந்தமாகும்.

### பலா இலையின் குணம்

பலாயிலையி லுண்ணப் பதுங்கி நின்ற பித்தங்
குலாவி யெழும்பிக் குதித்துத் - துலாவிவரு
குன்ம மகோதரநோய் காணா தகலாத
குன்ம மகலுங் குறி.

பலா இலையில் உண்ண அடங்கிய பித்தமும் அதிகரிக்கும். அழல் வந்த பெருவயிறும் குன்மமும் நீங்கும்.

### பாலுள்ள மரத்திலைகளின் குணம்

பாலிருக் கின்றமரப் பன்னங்களி லுண்டாற்
சோலிருக்கச் செய்வாதங் கோழைகபங் - கால
வசிர்க்கு பித்தந் தாகிமிவை யண்டா தகலு
முசிக்கு மதி சீதனமா மோர்.

பாலுள்ள மரத்தின் இலைகளின் உண்ண பக்கவாதம், க்ஷயம், அரோசிகம், பைத்தியம், தாகம் இவை நீங்கும். அதிகக் குளிர்ச்சியுண்டாகும்.

### தாமரை இலையின் குணம்

தாமரைப் பன்னத்தலுண்டாற் றாங்கரிய
விட்டினமாம்
நாமவா தஞ்சினந்து நண்ணுங்காண் - தூமமுறா
வக்கினி மந் தங்களுண்டா மன்றே மலர்த்திருவத்
திக்கினி லிராளெனவே தேர்.

தாமரை இலையிற் புசிக்க வெப்பமும், வாத நோயும், மந்தாக்கினியும் உண்டாகும். சம்பத்து நீங்கி விடும் என்க.

### கரபாத்திரத்தின் குணம்

கைப்பாத் திரத்திற் கலந்தன்னங் கொள்ளுங்கால்
வைப்பா மனச்சேட்டை மாறுங்கா - ணிப்பாற்
சருவ கிலேசமும்போஞ் சாற்றவன் றாலின்னும்
பெருவருசி நோயும்போ[illegible] பேசு.

சகல கறிகளுங்கலந்த அன்னத்தைக் கைப்பாத்திரத்தி லுண்ண மனசேஷ்டை மனோதுக்கப் பல அரோசகம் போம்.

# சோற்றின் வகை

### அதிகடுகை அன்னத்தின் குணம்

அதிகடுகை யன்ன மரத்தபித் தந்தாகம்
பிதிரேறு சித்தப் பிரமை - மதரோக
மென்றுரைக்கு நோய்கட் கிடங்கொடுக்குந் தப்பாது
குன்றுரைக்கும் பூண்முலையே கூறு.

நித்தியமும் புசிக்கின்ற மிகுசுடுகை அன்னமானது உதிரப் பித்தம், தாகபிரமை, மதரோகம் இவைகளை உண்டாக்கும்.

### அற்பச் சூடுகையன்னத்தின் குணம்

அற்பச்சூட் டன்னமவா தாதிகளாற் பீனசத்தா
லுற்பவித்த நோயை யொழித்துடாக்கு -
நற்பலத்தைச்
செய்யு மருசிதனைத் தீர்க்குஞ்சர் வோத்தகம்
பெய்யும் வளைக்கமாதே பேசு.

கொஞ்சச் சூடுகையுள்ள அன்னமானது உத்தமத்தி லுத்தமமாம், அதுவாதப் பித்த கபங்களிலுள்ள பீனசத்தாலும், விளைவிக்கின்ற நோயையும், அரோசகத்தையும் நீக்கும். சரீரத்திற்கு வன்மையைத் தரும்.

### புழுங்கலரிசி அன்னத்தின் குணம்

தென்புவிநாளுஞ் செழித்துவள ருஞ்சாலி
வன்பு புழுங்கல் வடிசாத - முன்புணவே
வாயுவிலை யத்தால் வலியும்வன் னோயுமின்
நோயுடையார்க்காகு நுவல்.

புழுங்கலரிசி அன்னத்தை உண்ண வாதக்கோபமும், பலமும், வலிரோகங்களும் இல்லை. இது நோயாளிக்கு உதவும்.

### பச்சையரிசி அன்னத்தின் குணம்

பச்சரிசிச் சோறு பலங்கொடுக்கும் வாயுவென்பார்
நிச்சயமாகப் பித்தை நீங்குங்கா - ணச்சமற
மூத்திரக் கிரிச்சரத்தை முன்பொழிக்குஞ்
சேய்க்குமந்த
மாத்திர முண்டாகும் வழுத்து.

பச்சரிசி அன்னமானது பலத்தையும், குழந்தைகளுக்கு மாந்தத்தையும் உண்டாக்கும். பித்த கோபத்தையும், கிரிச்சரத்தையும் நீக்கும். இதில் வாயு உண்டென்பர்.

### நன்றாகச் சமையாத அன்னத்தின் குணம்

நன்றாகச் சமையா நடுத்தண் டுலச்சோறு
தின்றால் மலஜலமுஞ் சிக்குமென்ப -
தொன்றோகேண்
மற்றைநா ளுஞ்சரிக்க மாட்டா ததுவுடலிற்
சற்றும் வியாபிக்காது சாற்று.

நட்டரியன்னத்தைப் புசிக்கில் மலசலம் சிக்குவதுந் தவிர அது மறுநாளும் சீரணச் சக்தியாகாது. அவ்வன்னரசம் உடலில் பரவாது.

### குழைந்த அன்னத்தின் குணம்

குழைந்த சோறுண்ணிற் கொடுமேகங் காச
மருந்து மந்தாக் கினியு மாறும் - விழுந்திடச்செய்
துர்ப்பலமும் பீநசமுந் தோன்று மரிவையர்க்குப்
பொற்படகு மாதே புகல்.

அளித்த அன்னத்தைப் புசிக்கில் வாதபிரமேகம், இருமல், அக்கினிமந்தம், துர்ப்பலம், பீநசம் இவை உண்டாகும்.

### சுத்த அன்னத்தின் குணம்

சுத்தவன்னங் குற்றமிலைத் தோஷங்களை யகற்று
முந்தரத் தேதிக்குமது முக்கியங்காண் - பத்தியத்திற்
காகுமது முப்பிணிக்கு மாமவிய சனங்கலந்து
ணேகுமுண் ணோயெல்லா மிரங்கி.

சுத்தமான அன்னத்தை நற்கறிகளோடுச் சேர்த்து உண்ணில் அது வாத பித்த சிலேத்துமம் என்ற மூவித நோய்களுக்கும் முக்கியமாக உதவும். பத்தியத்திக்கும் ஆகும். அன்றியும் குடல்நோய்கள் முழுமையும் விலகும், குற்றமில்லை.

## பொங்கல் அன்னத்தின் குணம்

பொங்கலெல்லா மந்தம் பொருமலெனு நோய்விளக்கு
மங்கமெலாம் வாத முண்டாக்குமன - லங்கொடுக்குஞ்
சம்பாநெற் பச்சரிசித் தன்பொங்கற் றாதுவிர்த்தி
யென்பார் பெரியோர்க ளெண்.

பச்சரிசிப் பொங்கல் அன்னமெல்லாம் சகல வாதநோய், வயிற்று உப்பிசம் அங்கமெலாம் வாதம் வெப்பம் இவைகளை உண்டாக்கும். சம்பா அரிசிப் பொங்கலன்னம் விந்துவை வளர்ப்பிக்கும்.

## பாலும் அன்னமும் புசித்தலின் குணம்

பாலுமன்ன மும்புசிக்கிற் பன்னுபித்தந் தாகமரு
மேலுமற்ப மந்தமென்பார் மேனியிடு - ஞாலமதி
லப்பொழுதே தாதுவிர்த்தி யாகுஞ் சிசுவாகி
யெப்பருவத் தர்க்குமா மெண்.

பாலுஞ்சோறும் உண்டால் பித்தக் கோபமும், தாகமும் விலகும். கொஞ்ச மந்தம், தேகபுஷ்டி, உடனே வீரிய விருத்தி இவை உண்டாகும். இது பால கவுமார விருத்தர் பரியந்த முதவும்.

## பசும்பாலின் பத்தியம்

ஆறின் முதன்டுவா காவரப்பாலை வளர்க்கு
பீறின் சுவையிரண்டேற்றென் பர்கார்ப் - பூறினுறுங்
கண்டோக்கு முண்ணென் களையொழிப்பாத் தோடருந்தப்
பண்டாக்கு முண்ணி பகர்.

பசும்பாலை சாப்பிட வேண்டுமானால், புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கைப்பு, கார்ப்பு, இனிப்பு என்னும் 6வகையில் 1வதும், 2வதுமாகிய 4 சுவையுள்ள பொருட்களை எந்தனையும், அனுசேர்த்துக் கொள்ளக்கூடாது. சுக்கிலத்தை

விருத்தி செய்யும்படியான கடைசியிற் சொன்ன 2 சுவையுள்ள பொருட்களை அனுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணலாம்.

**பால் அருந்துவதற்கு நாழிகையளவு கூறல்**

அன்பான் முகூர்த்தத் துளைங்கடிகைக் குள்ளுனது
மிப்பான் மனுவ ரமிர்தாகு - முப்பாயி
னஞ்சத்தான் காண்டற் கரியா னகிலமுன்
தஞ்சத்தா னுண்ட விருந்தாம்.

பசும்பால் கறந்த 3¾ நாழி அல்லது 5 நாழிகைக்குள் உண்ணவேண்டும். இவ்வாறு உண்டால் அதுதேவ அமிர்தத்திற்கு ஒப்பாகும். அதற்கு மேற்பட்டப் பாலை உண்டால் அதுவிடத்திற்கு ஒப்பாகும்.

**காலையில் பச்சைப்பால் உண்பதின் குணம்**

கையெரிவு காலெரிவு காமில மிரத்தபித்த
மெய்யெரிவு பாண்டுநோய் விந்துநட்டம் - வெய்ய
விநயகபம் போம்புட்டி யெய்துஞ்சேய்க் கொவ்வு
முதயமதிற் பச்சைப் பாலுண்.

காலையில் பச்சைப் பசுவின்பாலை உண்ணக் கைகால், உடம்புகளில் எரிவுற காமாலை, ரத்தப்பித்த ரோகம், பாண்டு, சீரண சுக்கிலம், உஷ்ணத்தால் பிறந்த மார்புச்சளி இவை நீங்கும். மேனியிடும், அன்றியும் குழந்தைகட்குப் பொருந்தும்.

**நெய் அன்னத்தின் குணம்**

வெறுநெய்யுஞ் சோறுமுண்ணில் வீருபல நண்ணுங்
கிறுகிறுத்த பித்தநோய் கிட்டாதறி விக்குங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி கட்டுமிகச் சீரணமா
முண்ணதற்கு பத்தியமா முன்.

நெய்யும், அன்னமும் கலந்துண்ணில் வன்மை விழிக் குளிர்ச்சி, சீரணம் இவை உண்டாகும். பித்த விகாரம் விலகும். இது பத்திய உணவாகும். இவ்வுணவு விருத்தர்கட்கே முக்கியமாகும்.

**எள்நெய் அன்னத்தின் குணம்**

எண்ணெய்யும் சோறு முண்ணி லென்றைக்கு மாபலமாம்
பெண்ணுக் கிளையாத பீடுமுறுஞ் - சண்ணுகின்ற
வாதகப மேகம்போ மாறாப்பசி யெழும்பும்
பூதலத்து ணாளும் புகல்.

அன்னத்தில் நல்லெண்ணெய் சேர்த்து உண்ணில் வன்மையும், புணர்ச்சியில் திடமும், நல்ல தீபனமும் உண்டாம். வாதக்கபப் பிரமேகம் நீங்கும்.

**ஊன் கலந்து சமைத்த உணவின் குணம்**

ஊனமைத்த வன்னமுண்ணி லுண்டா மதிகபலம்
போனமே தோதாதும் பூணுங்கா - ணானால்
விரணநோய்க் காகா மிகுமந்தச் சீணந்
தருணகப் பித்த சமனம்.

மாமிசம் சேர்த்துப் பக்குவம் செய்த அன்னத்தை உண்ணமிகுபலமும், வீர்த்த, மேதோதாவம், அதிமந்த முண்டாகும். கபமும், தந்தமும் சாந்தியாம் விராணத்தோர்க்காகாது.

## பதார்த்தங்களின் வகை

**சமைத்த துவரம்பருப்பின் குணம்**

தண்ணக் குறிஞ்சித் தலத்தாடகிப் பிளப்பை
வண்ணச் சுடற்குள் வைத்தாக்கி - யுண்ணற்
கடிக்கும் பசுவின்று மாச்சியத் தோடுபண்ணிற்
பிடிக்குப் பிடி சதையாம் பேசு.

துவரம்பருப்பை வெந்நீரிலிட்டுச் சமைத்துப் பசுவின் நெய்யுடன் அன்னத்திற் கலந்துண்ணில் ஒருபிடி அன்னத்திற்கு ஒருபிடி சதை வளரும்.

### நெய் சேர்த்து உண்பதின் குணம்

பருப்பிலெழு வெப்பும் பருங்குடன் முறைப்புந்
திருப்புறா முன்மலத்தின் சிக்குந் - தரிப்புறா
மெய்க்குள்ள காந்தி விலா தழகுறுநன்
னெய்குள்ள வுண்மை நெறி.

புத்திமிகுஞ் சிக்குவைநோய் போயொழியு
நேத்திரத்தின்
மெத்தஒளியும் விளங்கும் காண் - பித்தமொடு
வாதகப மாறா வறட்சியெல்லா நீக்குங்
கோதின்று நெய்யைக் குடி.

உணவு ஆரம்பத்தில் நெய் சேர்த்துண்பதில் துவரம்பருப்பினது உஷ்ணம் குடல் விருத்தம் பழைய மலபந்தம், சிக்வாகண்ட ரோகம், பித்தாதிக்கம், வாத கப தோடம் நீங்காத சொறி நீங்கும். அதி ஞாபக உடல் வனப்பும், கண்ணுக்கு ஒளியும் உண்டாகும்.

### பொரியலின் பேத குணம்

காரமிகு பொரியல் காயந்தனிற் கபத்தைக்
சேற வுறவாக்குந் திண்ணமே - சோரப்
புளியிட்டிடும்பொரியல் போர்மந்தத் தோடு
வளியிட்டிடுனத்துள் மவை.

உறைப்புச் சுவை அதிகரித்தப் பொரியல் கபத்தைத் தரும். புளிச்சுவை மிகுந்த பொரியல் மந்தநோயையும், வாதப்பிணியையும் விளைவிக்கும்.

### வரலின் பேத குணம்

இளவருப் பானமந்த மெழுப்புங் கருக
லுளவறுப்பன் முத்தோட மொங்கு - மளவருந்த
மையுவறற் பிணிக்கும் வாதமடு மாயினஃ
தைவறற் பிணிக்கு மாம்.

இளவறுப்பாக வறுத்தப் பதார்த்தத்தினால் மந்தமும், கருகும்படி வருக்கில் வாதபித்தக் கபதோடங்களும் உண்டாகும். நடுத்தரமாக வறுத்தல் தொந்த வாதத்தை நீக்குவதுமன்றி கபச் சம்மந்தமான சகல தோடங்களையும் நீக்க உதவும்.

### பச்சடியின் பேத குணம்

புளிப்பான பச்சடியாற் போம்பித்தங் கார்த்தல்
வளைப்பான பச்சடிக்கை வாத - மிளைக்கு
பினித்த பச்சடிக்கருகி யேகுந் துவரான்
சணித்த பச்சடிக்குறும் வாதம்.

புளிச்சுவையுள்ள பச்சடியால் பித்தப் பிரகோபமும், உறைப்புப் பச்சடியால் சிலேத்துமவாதம், இனிப்புப் பச்சடியால் ஆரோசகமும் நீங்கும். துவர்ப்புள்ளப் பச்சடியால் வாதாதிக்கம் உண்டாம்.

### துவையலின் பேத குணம்

புளிப்பா முலைத்துவையல் போக்கும் பித்தத்தைப்
புளிப்பா மிலைத்துவையல் பொல்லா - புளிப்பில்
வெறுந்துவையா னன்றதற்கு மிக்க வுறைப்பிட்ட
நறுந்துவைய னன்றினு நன்று.

புளியாரை முதலிய புளிப்பினைத் துவையலால் பித்த கோபம் நீங்கும். வெறும் புளித்துவையல் இரத்தத்தை முறிப்பதால் நல்லதன்று . புளிச்சேராத் துவையல் நலமாகும். அதிகக்காரம் சேர்ந்தத்துவையல் பசியை எழுப்புவதால் உத்தமத்திலுத்தமமாகும்.

**குழம்பின் பேத குணம்**

சொல்ல வுறைக்குங் குழம்பாற் றோன்றா தனிலம்
தில்லையெனில் வாதமிருக்குங்காண் - கொல்லுலகி
னீர்த்த காரக்குழம்பா னீடுமுத்தோட முன்பின்
பார்த்தோடு மென்றே பகர்.

உறைப்புள்ள குழம்பால் வாததோடம், சனிர்காவரம், அவ்வாறில்லாத குழம்பால் வாதசின்னம் உண்டாகும். காரத்தோடு நீர்க்கவைத்தக் குழம்பால் வாதாதி முத்தோடங்கள் விலகும்.

**துவரம்பருப்பின் ரச குணம்**

நவரைவாழைக்கனி பலவின்கனி
நல்லமாங்கனி பாலோடு நெய்க்கறி
கவரிலப்பொழுதே மந்தமாம்பரி
காரங்கேட்கும் பயித்தியக் காரரே

யெவருங்காண்க வறைகுது மன்னத்தி
லிட்டுணுங்கரி தன்னுடன்கூடவே
துவரைநீர் மிளகுள்ளி யிட்டுக்கொளீர்
துவட்ட வாதமுந் துஞ்சிடுமுண்மையே.

வாழை, பலா, மா என்கிற முப்பழங்களையும், பால், நெய், கறிகளையும் மிதமின்றிப் புசிக்க உடனே அக்கினி மந்தம் பிறக்கும். அதைப் போக்கத் துவரம்பருப்பு கட்டிறுத்த சலத்தில் மிளகு, வெள்ளைப்பூண்டு முதலிய சம்பாரங்கள் சேர்த்து ரசம் வைத்து அதை நற்கறிகள் சேர்த்த உணவுடன் சேர்த்துண்ண மேற்கூறிய அக்கினி மந்தமும் வாத பிரகோபமும் விலகும்.

**காடைச்சாற்றின் குணம்**

பொற்றொடிமாதேகண்ணின் புண்ணொடுபிணி
யெல்லாம்போம்
வற்றிய உடற்பருக்கும் வாதபித்தகையுமேகுஞ்
சுற்றிய கிராணிகுன்மஞ் சுரம் பலசுவாசகாச
மாற்றிடுங்காடைச் சாற்றா லாவியும் வளருங்காணே.

கடைச்சாற்றினால் போதகிவர்த்தம் முதலிய சில நேத்திர நோய்கள், சன்னிபாத தோடங்கள், கிரகணி, வயிற்று நோய், சுரம், சுவாசம், காசம் இவைபோம். இளைத்த உடம்புப் பருக்கும். ஆயுள் வளரும்.

**கொள்ளுச்சாற்றின் குணம்**

வற்றியவுடம்புதூணம் வாதமும் பிந்துங்குக்கி
சுற்றியகிராணிகுன்மஞ் சுரம்பலசுவாசகாச
முற்றடர் கண்ணின் புண்ணோ டுறுபிணியொழியும்
வெப்பைப்
பெற்றிடு கரணச்சாற்றாற் பெருஞ்சல
தோடம்போமே.

சூடுள்ள கொள்ளுச்சாற்றால் கட்கிய தேகம் பருப்பதுமன்றித் தம்பம் போல் உரக்கும். வாத தோட பித்த கோபம், கிரகணி, குன்மம், சரம், சுவாசம், காசம் விழியைப் பற்றிய விரண முதலிய சில நோய்கள் ஜலதோடம் இவை நீங்கும்.

**போஜன முடிவில் தயிர் உப்பு சேருவதின் குணம்**

மூத்ததயி ருப்புமுண்ண முண்பிறங்கு வந்துகளின்
கோத்ததிரி தோடங் குடிவிலக்கும் - பூர்த்தியா
யுண்டபிற குற்றநடு வுற்றவையெல் லாம்புழுக்கம்
கொண்டாடச் சீரண மாகும்.

உணவில் அந்தத்தில் புளித்தத் தயிரும், லவணமும் கூட்டி உண்ண அத்தயிருக்கும், நெய்க்கும் நவகத்தீனிப் பையிலிரங்கியிருக்கச் சகல பதார்த்தங்கூடிய உண்டியிலுள்ள திரிதோடங்கள் நீங்குவதுமன்றி அவ்வுண்டி புழுக்கங் கொண்டு நெருக்கமுற்றுச் சீரணமாகும்.

### மோரும் அன்னமும் பொசிப்பதின் குணம்

மோருமன்ன மும்புசிக்கின் மூளும் பசிமேக
நீருங்குதரங் குரமு நீள்பாண்டும் - பேராத
தாகங் கிராணி சலமேறு வீக்கமும்போம்
மாக விரணத்தில் விலக்கம்.

மோரும், அன்னமும் சேர்த்து உண்ணில் ஜடராக்கிணி அதிகரிப்பதுமன்றிப் பித்த மேக மூத்திரமும், முளைமூலம், பாண்டு, தாகம், கிரகணி, சிலேத்தும சோபை இவை விலகும். ரணங்களுக்கு ஆகாது.

### ஊறுகாயின் குணம்

ஊறுகா யெல்லா முதராக்கினி வளர்க்கும்
வீறருசி யென்பதையும் வெல்லுங்காண் - கூறுகின்ற
வையமொடு பித்த வனிலத்தையுந் தொலைக்குஞ்
செய்யவடி வேற்கண்ணாய் செப்பு.

உணவுடன் சேர்த்து உண்ணும் நெல்லிக்காய் முதலிய பற்பல ஊறுகாய்களும் தீபாக்கினியை வளர்க்கும். அரோசகம், சிலேத்தும வைத்தியந் தொந்தம், வாததோடம் இவைகளை விலக்கும்.

### உண்டபின் வெந்நீரருந்தலின் குணம்

உண்டபின் வெந்நீ ரொருதரமாக் கொண்டாக்கால்
மிண்டுசுரம் வாதம் விநாகமந்த - மண்டூரகந்
தார்ந்த பொருமலும்போ மாயுளுண்டா மாதர்தமைச்
சேர்ந்தனையத் தாதுவுமாந் தேர்.

உண்டபின் வெந்நீரைத் திருப்தி ஆகும்படி உண்டால் ரூட்சை, வாத ஆதிக்கம், விதாகம், மந்தம், வயிற்றுப்பிசம் ஆகிய இவை போம். ஆயுசும், சுக்கிலமும் விருத்தியாகும்.

### நீரருந்துங் கிரமம்

தண்ணீரன் ணாண்துண்டாற் சாருஞ் செவிமந்தங்
கண்ணகுனிந் துண்டாற் காசமுண்டாந் - தண்ணீர்
குடிக்கவென்றாற் பாத்திரத்தைக் கோதரவே வாயாற்
கடி தருந்தந் துன்ப மருங் காண்.

நீரை அண்ணாந்துண்ணலில் பாதிரிய வாதமும், குனிந்தருந்தில் இருமலும் உண்டாம். பாத்திரத்தைக் கடித்து அருந்தில் ஒரு நோயுமில்லை.

## கஞ்சி வகை

### பால் கஞ்சி, பொரி சேர்ந்த கஞ்சி, சுடுகைக்கஞ்சி இவைகளின் குணம்

சுரை தருபாலில் வெந்த சோறுகஞ்சிகொள்ளி
லெரி தருபித்தந்தாழு மெழுமதி விந்துவுந்தான்
பொரிதரு கஞ்சிபித்தம் போக்கிடும் சுடுகஞ்சிக்குத்
தரிதருமலமும் வாய்வுந் தாகமும் போகுங்காணே.

பசும்பாலில் பச்சரிசிச் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியில் பித்தவாயு நீக்கும். புத்தியும், சுக்கிலமும் விருத்தியாகும். நெற்பொரிக்கஞ்சி பைத்திய தோஷத்தைப் போக்கும். சாதத்தில் வடித்த கஞ்சிக்குப் பலமும் நோயுந் தாகவிடாயும் விலகும்.

### கொள்ளுக் கஞ்சியின் குணம்

கொள்ளுந் தண்டூலமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங் காற் றீபனத்தைக் கூறுவதே - யெள்ளை

நசுக்கிப் பிழிபலமு நல்விந்து விந்துவுமே
வசிக்குங் கிழவர்கட்கும் வை.

கொள்ளும், அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சிக்கு அதிபசி எள்ளைக் கையாற் கசக்கிப் பிழியும்படியான பலம் வீரிய விருத்தி ஆகிய இவைகள் கிழவர்களுக்கும் உண்டாகும்.

**ரவாக் கஞ்சியின் குணம்**

துன்பமின்றி யின்பருளச் சுட்க கபத்தோடு
மென்பதன்றி மூன்பசை யிழந்தோரும் - போத
போய்ச்சலுடன் வீழ்வாரு முன்னையடுப் பாரென்னிக்
காய்ச்சேவாக் கஞ்சியுரை காண்.

துன்பமன்றி, இன்பம் தராத கபநோயாளிகளும் மாமிசப்பசை இழந்தவர்களும், பலமற்றுக் கைகால் ஓய்ந்து வீழ்கின்றவர்களும் உன்னைப் பிரார்த்திப்பாரேயாகில் அவர்களுக்கு ரவா அரிசிக் கஞ்சியையே மருந்தாகக் கொடுப்பாயாக.

**கோதுமைக் கஞ்சியின் குணம்**

கோதுமைக் கஞ்சி கொடுஞ்சுர நீரேற்றமிவை
காதுமைக்குஞ் சன்னிக்குங் காதரமே - போத
வுடலுந் திடமா மெலிவண்டுங் கூற்றுங்
கடலும் பணிவிழியே காண்.

கோதுமைக் கஞ்சியானது வாதசுரம், ஜலதோடம், கபம், சன்னிபாதம் இவைகளை விலக்கும். தேகத்திற்கு வன்மையைத் தரும்.

**சிறுபயறு, உளுந்து, பச்சரிசி இவைகளின் கஞ்சிக்குணம்**

சிறுபருப்புக் கஞ்சிபித்தந் தீர்க்கு முழுந்தி
னுருபருப்புக் கஞ்சிவளிக் கூக்க - முறியகபம்

பச்சரிசிக் கஞ்சி பவனகபத்தைப் போக்குங்
கச்சிறுக்குங் கொங்கைமின்னே காண்.

சிறுபயறும், பச்சரிசியும் சேர்த்துக் காய்ச்சியக் கஞ்சி பித்த கோபத்தை விலக்கும். உளுந்து சேர்த்தக் கஞ்சி வாதத்திற்கு உரப்பாகும். பச்சரிசிக் கஞ்சி வாத சிலேத்துமத்தைப் போக்கும்.

**கஞ்சி அன்னத்தின் குணம்**

கஞ்சியன்னத்திற் காயம் பருத்திடு
மஞ்சிவெப்ப மகலுரு சிலேஷ் மமோ
டுந்சிற்றிடு மேனிமினுத்திடும்
பஞ்சிபோலப் பறந்திடும் பித்தமே.

வடித்த கஞ்சியும், அன்னமுமாய் குடிக்கில், தேகத்துலித்தலும், ஒளியும், கப ஆதிக்கம் உண்டாகும். வெப்பமும், பித்தமும் போம்.

**புனற்பாகத்தின் குணம்**

புனற்பாக முத்தோடம் போக்கு மருந்தி
னனற்பாகந் தன்னை யடக்குந் - தனிக்குணங்க
ளும்மட்டோ வாய்க்கிதமா மாரோக்கியங்
கொடுக்குங்
கம்மிட்ட பூவனமே காண்.

புனற்பாகமானது வாதாதிமுதன்று தோடங்களையும், சரவெப்பத்தையும் போக்கும். குடிப்பதற்கு இதத்தையும் சரீர சவுக்கியத்தையும் தரும். புனற்பாகமானது ஒருதரம் வடித்த அன்னத்தை மறுபடியும் உலையிட்டு வடித்தும் வடித்த அதை மறுஉலை பாய்ச்சிச் சலரூபமாகக் கொடுப்பதாகும்.

### பஞ்சமுஷ்டிக் கஞ்சியின் குணம்

பஞ்சமுட்டிக் கஞ்சிநெடும் பட்டினிற் கொள்ளுங்கால்
விஞ்சனில பித்தகபம் வீறாவாம் - விஞ்சு
மிளைப்பகற்றுந் தாரக விலங்கணத்திற் கேற்குந்
திளைப்ப வெரும் பூண்முலையே செப்பு.

தாரகபத்தியத்திற்குதான்ற பஞ்ச முஷ்டிக்கஞ்சியை நீடித்த லங்கன முடிவில் அருந்தில், திரிதோட விகாரம் அதிகரிக்ககாது, ஆயாசம் நீங்கும்.

பஞ்சமுஷ்டியாவதுந் துவரை, உளுந்து, கடலை, சிறுபயறு, பச்சரிசியில் 5ல் 1பங்கு எடுத்து தனித்தனியே மெல்லிய சீலைகளில் முடிந்து ஒருபாத்திரத்தில் போட்டு அதை ஆற்றுச்சலம் 2படி எடுத்து 8 பங்கு ஆகக் காய்ச்சுவதாகும்.

### முடிச்சுக் கஞ்சியின் குணம்

வாயுசுர நீரிரத்த வாறும் பசியெழுப்பு
மோயும் பலதணிக ளுண்மையே - யாயுங்கா
ளுண்டி பருத்திடுமெய் யுண்ணயேகும் முடிச்சுச்
சுண்டிய நீர்க கஞ்சியினாற் சொல்.

முடிச்சுக் கஞ்சியால் வாதசோகம், வெப்பம் சிவந்து இறங்குகின்ற மூத்திரம், பித்த ஆதிக்கத்தாலுண்டாகிய சிற்சில நோய்கள், குடலைப்பற்றிய செரியா மந்தம் முதலிய நோய்கள் விலகும். உதராக்கினி விருத்தியும் உணவுப் பெருக்கமாம்.

### வடிகஞ்சி, உறைகஞ்சி, கொதிகஞ்சி இவைகளின் குணம்

கஞ்சியெலா மந்தமவை கண்ணுக்குத் தான்குளிர்ச்சி
விஞ்சிவரும் பித்தமது விட்டகலு முஞ்சு
மதிகஞ்சி வாயுவதி சீதஞ் சேர்க்குங்
கொதிகஞ்சி வெட்டையை போக்கும்.

சாதக் கஞ்சியெல்லாம் மந்தமேயானாலும் விழிக்குக் குளிர்ச்சியாம். இதனால் பித்தக்கோபம் நீங்கும். உறைந்த கஞ்சியானது வாத ஆதிக்கத்தையும் கபப்பெருக்கையும் உண்டாக்கும். நீர்ச்சுருக்கையும் போக்கும்.

### பழஞ்சோற்றின் குணம்

பழஞ்சோற்றை யந்தப் பழைய நீராகாரக்
கொழுஞ்சேர்க்க யோடுதயங் கொள்ளி -
லெழுந்தாது
பித்தவாதம்போம் பெரும்பசியா மெய்யெங்கு
மெத்தவொளி வுண்டாம் விரி.

இரவில் நீர்ஊற்றிய அன்ன நீராகாரத்தைக் காலை வேளையில் அருந்தில் சுக்கில விருத்தியும், உதராக்கினியும், சரீரமுழுவதும் வனப்பும் உண்டாகும். பைத்திய வாத தொந்தம் விலகும்.

### மோர்சேர்ந்த பழையதின் குணம்

மோரும் பழையதுமாய் மோடெடுக்க வுண்டார்க்குத்
தீரு மெரிவெல்லாஞ் சேயிழையே - தீராத
பித்தப் பிணியும் பிரமைநோயும் பறக்கு
முற்றகபந் தூக்குமிகு முன்.

புரதான அன்னத்தில் மோர்ச் சேர்த்துத் திருப்தியாக உண்பவர்க்கு தேக எரிச்சலும், பித்த ரோகமும், பிரமை முதலிய நோயும் நீங்கும். சிலேத்தும ஆதிக்கமும் நித்திரையும் அதிகரிக்கும்.

### புளித்த சோற்றின் குணம்

புளித்தபழங் காடியன்னம் பொங்கனலா நாளுந்
தளிர்த்தபித்த கோபத்தைச் சாடும் - வெளுத்தமல
மந்தத்தை நீறாக்கும் வாந்திதனை யொழிக்கு
மந்தமுறு மணங்கே யாய்.

புளித்த பழைய காடிச்சாதம் உஷ்ணமாம், பித்த ஆதிக்கம் மந்தத்தினால் வெளுப்பாக இறங்கும். மலம், வமனம் இவை நீங்கும்.

**ஊசியச் சோற்றின் குணம்**

ஊசலன்ன முண்டாலுடனே வருமுறக்கம்
பேசுவதேன் வாதம் பிரபலமா - மாசித்துச்
சீதளமும் பித்தமும் விசேடிக்கும் வள்ளையொத்த
காதளவு நீள்விழியாய் காண்.

ஊசிய அன்னத்தை உண்டவுடனே நித்திரை வாதக்கோபம், சீதாதிக்கம், பித்தவிருத்தியுண்டாம்.

**கூழ், களி இவைகளின் குணம்**

கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்துமொடு
ஆழ்வயிறுஞ் சாந்தமென விள்ளுவர்காண் - காழாய்
களிக்கும் பலமுண்டாங் காணிலதி வாதத்
தளிர்க்கு முலகிலிதைச் சாற்று.

கேழ்வரகின் கூழினால் வாதபித்தமும், உதர ரோகமும் நீங்கும். மேற்படிக் களிக்கு வன்மையும், வாதகோபமும் உண்டாகும்.

**கம்பு சாதத்தின் குணம்**

கம்பினது சாதத்தாற் காச்சுவாசஞ் சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ் - செம்பாலோ
வற்றவது மன்றிநிற மாறுமென்பர் வாமமெலா
முற்று முலைமாதே மொழி.

கம்பஞ் சாதத்தினால் உதிரிஞ் சுண்டுவது இருமல், இரைப்பு, விரணம், சரீரந்தூரித்தல், விவர்ணமிவை உண்டாகும்.

### தினை மா சாதம், கஞ்சி இவைகளின் குணம்

தினைமா கபவாதந் தீர்க்கு மதன்சாதம்
புனைபித்த மாயினுநற் போகந் - தனைக்கொந்து
வாதம் போக்கங்கஞ்சி மாசோபைத் தோடமிதன்
பேதம் போக்குமெனவே பேசு.

தினை சிலேத்தும வாத தொந்தத்தை விலக்கும். மேலும் பித்தக் குணத்தையும் பெற்றிருந்தாலும், வீரியத்தை விருத்தி செய்து வாதகோபத்தை நீக்கும். கஞ்சி வீக்கந் தோட வருக்கங்களை ஒழிக்கும்.

### சாமைச்சாதம் அதன் கஞ்சி இவைகளின் குணம்

சாமைச்சோ றுண்டாற் றனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை - போமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசுமதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி.

சமைத்தச் சாதத்தை உண்ணில் வாதநோய், க்ஷயம், சிலேத்தும விருத்தி, வீக்கம் இவை போம். பித்தமும், சுக்கிலமும் விருத்தியாகும். அதன் கஞ்சிக்கு வாதாதி மூன்று தோடங்களும் விலகும்.

### வரகுச் சாதத்தின் குணம்

எரிகபத் தோடேபலநோ யெய்தும் வறட்சி
சொறிசிரங்கு பித்தந் தொடரு - நிறையுங்
கரகமெனப்பூரித்த கச்சுமுறை மாதே
வரகரிசிச் சோற்றால் வழுத்து.

வரகு சாதத்தினால் முச்செரிகின்ற சுவாசம் இதைச் சேர்க்கச் சிலநோய்கள், புடை, தினவு, கிரந்தி, பித்தாதிக்கம் இவை உண்டாகும்.

### சோளச் சாதங்களின் குணம்

கம்பினது சாதத்தாற் காச்சுவாசஞ் சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ் - செம்பாலோ
வற்றுவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்று முலைமாதோ மொழி.

கருமை, வெண்மை,செம்மை என்னும் சோளச் சாதங்களினால் தினவும், விரணமும், கரப்பானும் அதிகரிக்கும். தன் மருந்துகள் கெடும்.

### காடைக்கண்ணி சாதத்தின் குணம்

எரிவொடு பித்த மெழும்புமைய வாதங்
கருகிமுடிந்தோடிக் காக்கு - மரியசந்த
வாடை பொடிமணக்கு மாமுலை மாதேயுலகில்
காடைக் கண்ணிச் சோற்றைக் கண்டு.

காடைக்கண்ணில் சாதத்தினால் சரீர எரிச்சலும், பித்தாதிக்கமும் உண்டாகும். கபவாதந் தொந்தம் ஒளிக்கும் என்க.

### சித்திரான்ன பாற்பொங்கலின் குணம்

ஒப்பில்லாப் பாலில்வெந்த யுயர்சுவை யன்னமுண்ணில்
வெப்பில்லா வாதமுண்டாம் வெவ்வழற்பித்தந்தாழுந்
தப்பிலா விதிநெய்வெல்லஞ் சார்ந்திடுந் தன்மையாலே
செப்பிலக் கபுமேலாடுஞ் செம்பித்த மோடுங்குங்காணே.

ருசியுள்ள பாற்பொங்கலருந்துவதால் தனி வாத கோபமும், இதில் நெய்யுஞ் சர்க்கரையும் சேருவதால் சிலேத்தும ஆதிக்கமும் உண்டாகும். சுராந்தத்தில் சனித்தப் பித்தமும் நீங்கும்.

### பருப்புப் பொங்கலின் குணம்

போகமிக வுண்டாகு பொங்கிய பித்தந்தணியு
தேகமதில் வாதமிகச் சேழுங்காண் - வாகார்
பொருப்புப்போல் விம்முமுலைப் பூங்கொடியே பச்சைப்
பருப்புப் பொங்கற் சோற்றைப் பார்.

பச்சைப் பருப்புப் பொங்கலன்னத்தினால் வீரிய விருத்தியும், வாதப்பெருக்கமும் உண்டாகும். பித்த கோபம் விலகுமென்க.

### சர்க்கரைப் பொங்கலின் குணம்

வாயினரோ சகத்தை மாற்றியவமனம் போக்கு
மாயில்பித்த கோபத்தை மாற்றுங்காண் - நேயச்
செருக்கரை செந்தோளாற் றிருந்துமட மாதே
சர்க்கரைப் பொங்கற்சாதங் காண்.

சர்க்கரைப் பொங்கல் வாந்தி, பைத்தியம் இவற்றை விலக்கும்.

### மிளகோதனத்தின் குணம்

மிளகோ தனமருந்த விம்முகின்ற வாத
மிளகும் பசியு மெழும்புங் - களகளெனக்
கூவும் வயிற்றின் குடலிரைச் சலுங்கபமுந்
தாதுபித்தமும் தனியுஞ் சாற்று.

மிளகோதனம் உண்பதினால் பொருமுகின்ற வாயு குடலிரைச்சல், கபஆதிக்கம், பித்தக்கோபம் இவை விலகும். தீபனம் உண்டாகும்.

### புளியோதனத்தின் குணம்

வாந்தி யுரமொழிய வாய்நீர்ச் சுரப்போகுஞ்
சாந்தியுறாப் பித்தமது சாந்தியாம் - வாய்ந்த

வளியோ வயிலோ வென்றையுறச் செய்கண்ணோய்
புளியோ நனத்தால் புகல்.

புளியோதன்னத்தால் வமனவேகம், அருசி, பைத்தியம் போம்.

**கடுகோதனத்தின் குணம்**

உரியகடுகும் புளிவு மொவ்வக் கலந்தே
யரியமனத்தோ டமைத்த வன்னம் - பருகினால்
வாதமொடு வையமும் பின்வாங்கி விழிந்தோடுஞ்
சீதமலர் திருவே வோது.

கடுகும், புளியும் சேர்த்தமைத்து அன்னத்தை உண்டால் வாததோடம், சிலேத்துமமும் ஒழியும்.

**எள்ளோதனத்தின் குணம்**

செப்பரிய வாதபித்தத் தீமை யகலுங்கபம்
துப்பி வளரு முடலிருகு - முப்பழத்தின்
கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே நீகேளா
எள்ளோ தனத்தினாலே.

எள்ளோதனம் உண்டால் வாதப்பைத்தியந் தொந்தம் விலகும். சிலேத்தும ஆதிக்கமும், தேகவலுவும் உண்டாகும் என்க.

**உழுந்தோனத்தின் குணம்**

எஞ்சுகப வாதமிக வேறுமதி மந்தமும்
விஞ்சுபிந்தா தாழு மெய்யுரக்கு - மஞ்சு
மெழுந்தோதம் புக்கு மினியநடை மாதே
வுழுந்தோ தனத்திற் குறை.

உழுந்தோனத்தால் சிலேத்தும வாத தொந்தம், வாதநோய் சரீரதிடமதிகரிக்கும் பித்தக்கோபம் நீங்கும்.

### ததியோதனத்தின் குணம்

ஆறா வழலகற்று மாந்தபித்த நோய்போக்குந்
தேறாத மெய்யைமிகந் தேற்றுங்காண் - மாறா
மதியோதை கொள்ளும் வதன மயிலே
ததியோ தனமெலாஞ் சாற்று.

ததியோதனமானது மாறா உட்சூட்டையும், பித்த நோயையும் விலக்கும். உடலையிரட்சிக்கும் ஆதலால் இது சிறந்ததெனக் கூறுவாயாக.

### கட்டமுதின் குணம்

சூலைசுக்கி லாஸ்மரி சுவாச காசங்கண்ட
மாலை முதலியநோய் வந்தணுகு - மாலுலகிற்
றுட்ட மிரத்தமொடு தொன்மேக மும்பறக்குங்
கட்டமுதை நீயுண்ணுங் கால்.

கட்டமுதை நித்தியமும் புசிப்பாயாகில் தேக முற்றிலுங் குத்தல், சுக்குலாஸ்மரி, இரைப்பு, இருமல், கண்டமாலை முதலிய நோய்கள் உண்டாகும். இரத்தப் பிரமேகம், ஒழுக்கு, வெள்ளை நிவர்த்தியாகும்.

## பலகார வகை

### உளுந்து வடையின் குணம்

மெறுமுழுத்திற் செய்வடைக்கு மேன்மேலும் வாத
முறும்பித்தஞ் சற்றே யொடுங்கு - நறுந்நீ
பனம்போம் புசிப்பிற் பருகநன்றாய் வாலி
பயனம்போ ளடையா யறி.

உளுந்து வடையினால் வாத ஆதிக்கமாம் பித்த கோபமும், உதிராக்னியும் கெடும். இதை உண்டியோடுண்ணில் நலமாகும்.

## தயிருழுந்து வடையின் குணம்

உழுந்தின் பருப்பை யுலர்த்தி யூறச்செய்
தழுந்தா தரைத்து வடையாக்கிச் -செழுந்தேனிற்
கூட்டியுண வையபித்த சோபையறு மூதையிலை
நீட்டிவேர் கண்மாதே தேர்.

உளுத்தம் பருப்பைப் புளித்த தயிரில் உறையவைத்து அரைத்து பாகமாகச் சுட்ட வடையை நல்ல தேனில் தோய்த்து உண்ணிற் சிலேத்தும பைத்திய நோய், வாததோடமும் நீங்கும் என்க.

## பேயன் வாழைக்கனி சேர்ந்த வடைக்குணம்

பேயன் கதலியுலம் பெய்தமா ழுத்தின்வடை
நேயமுற வமைத்து நித்தலுமே - நேயமுடன்
றானருத்தில் வாதபித்தந் தந்தநிலை கொண்டமருந்
தேனருந்தாத் தேனே நெளி.

பேயன் வாழைக்கனி சேர்ந்த உளுந்து வடையை நெய்த்தொட்டு தினமுண்ணில் திரிதோடங்கள் அதனதன் இடத்தைப் பெற்றிருக்கும்.

## தோசையின் குணம்

மிகுந் தெழுந்த பித்தத்தை வீறாதபடகு
மகத்துளனில் கப மாற்றுஞ் - சகத்திலுறு
தோசை பெருமயிலே தின்னரிசேர் மாழத்தின்
றோசைக் குணமிதனைச் சொல்.

உளுந்தும், அரிசியும் சேர்த்துச் செய்த தோசையானது பித்த கோபத்தையும், வாதசிலேத்தும தொந்தத்தையும் நீக்கும்.

### சம்பா தோசையின் குணம்

காயமிளகிஞ்சி கருவேப்பிலை முதலாந்
தூயபல காரமிட்ட தோசைக்கு - வாயுவிலை
பித்தகப வேகப் பெருக்கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திலே சொல்.

பெருங்காயம், மிளகு, இஞ்சி, கருவேப்பிலை முதலியன சேர்த்தத் தோசைக்கு வாததோடமும், பைத்திய சிலேத்தும கோபமும் விலகும். சுக்கில விருத்தியாகும்.

### சுத்த இட்டிலி, சம்பா இட்டிலி இவைகளின் குணம்

வெறுமாக்க ளிட்டலிக்கு வேகமறுங் காரப்
பெறுமாக்க ளிட்டலியைப் பேசி - லறுமனில்
பைய பித்தங்க ளதிகரிக்கு மோமார
னையவெய்யுங் கண்ணாய் நவில்.

உழுந்தரிசியால் செய்த இட்டிலிக்குப் பித்த கோபமும் நீங்கும். காரஞ்சேர்ந்த படி மாவுகளாற் செய்தச் சம்பார இட்டிலிக்குத் திரிதோடங்கள் அதிகரிக்கும்.

### முருக்கின் குணம்

ஐயமொடு பித்த மதிகரிக்குந் தாழாத
செய்ய வினிலஞ் சிறிதடங்கும் - வைய
நிறுக்கு மிகு கற்பையுறு நேரிழையே நாளு
முறுக்கின் குணமா மொழி.

முருக்கு என்கின்ற ஒருவித பலகாரத்தால் சிலேத்துமமும், பித்தமும் விருத்தியாகும். வாதக் கோபந்தணியும்.

## தேன்குழலின் குணம்

ஓங்குங் கபவாத முட்டினமு மீறிவரும்
வாகுஞ் சலங் கொஞ்ச மந்தமுமாந் - தேங்குமிசை
யாண் குழலு மியாழுமிக வஞ்சுமொழிக் கிஞ்சுகமே
தேன்குலுங் காங்குணத்தைத் தேர்.

தேன்குழலுக்குச் சிலேத்தும வாத தொந்தமும், வெப்பமும், அதிதாகமும் உண்டாகும். பசி கொஞ்சம் மந்தப்படும்.

## அதிசாரத்தின் குணம்

ஐயமொடு பித்தமிகு மகரந்துநிக்க வுறுந்
துய்ய வனிலஞ் சுழிக்குங் காண் - சையத்
தெதிரசத்தை யூர்வோ னெனுங்கற்பு மாதே
யதிரசத்தை நன்றா யறி.

அதிரசத்தினால் கபமும், பித்தமும் விருத்தியாகும். தேவரட்சனைக்குரிய சுத்த வாதம் உள்ளடங்கும்.

## பிட்டின் குணம்

செம்புனலுங் கட்டுந் தெளியுமுர மாகும்
வெம்பினில் முட்புறத்தில் வீருங்காண் - செம்பழத்தை
வட்டைப் பழிக்கும் வன்முலைமா தேயரிசிப்
பிட்டைப் புசிப்பார்க்குப் பேசு.

அரிசி மாவு பிட்டால் வன்மையும், விள்ளில் வாத வெப்பமும் உண்டாம், மாதர்கட்கு ருது காலத்தில் மிதமின்றி ஒழுகுகின்ற உதிரம் கட்டுப்பட்டுத் தெளிவைவுறும் என்க.

## மோதகத்தின் குணம் - இதுவே கொழுக்கட்டை

வாதமுறு மந்தமிகு மாறாத வெப்பமு மாஞ்
சீத கபவிருத்தி சேருங்காண் - தீறுதுகட்

போதமுகஞ் செப்பும் பொருப்புதிகர் முலையாய்
மோதக முண்பார்க்கு மொழி.

மோதகத்தை அருந்துபவர்க்கு வாத விருத்தி, உதராக்கிணி மந்தம், சிலேத்தும ஆதிக்கம் ஆகியவைகள் உண்டாகும்.

**கோதுமை அடையின் குணம்**

தேகம்பலக்குமதி தீபனமுண் டாகுநிறை
மோகம் மூர்க்க மறுங் - கோபமிக
வோதி யடையு முயர் கொங்கை மாதரசே
கோதி யடையைக் கொடு.

கோதுமை அடையினால் சரவன்மையும், உதராக்கினியும், சுக்கிலதாதுவும் அதிகரிக்கும். சிலேத்தும கோபம் நீங்கும்.

**பொரியுருண்டையின் குணம்**

சாந்திபித்த வாதந் தணியும் வலுத்தெழுந்த
சுத்தகப வாத் தொலையுங்காண் - மெத்த
வரியுண்ட வேல்விழியாய் வையகத்திற் சாலிப்
பொரியுண்டை நன்றாய்ப் புசி.

பாகிற் சேர்த்துப் பிடித்த நெற்பொரியுண்டையை உண்பாயாகில் நலமாம். வாந்தி, பைத்தியம், வாதகோபம், கபவாதமிஸ்ரம் இவை போம்.

**சேர்க்கை உருண்டையின் குணம்**

பானெய்சோத் துண்ணிற் பலமாந் ததிகண்மந்தத்
தானெய்து மோரயர்வு தாகமெரி - தேனிருக்கு
மப்புளிய மஞ்சுங்கா லாகுமிரை யொழியு
மெப்புளியும் பித்தி லவலில்.

அவலில் பாலும், நெய்யும் சேர்த்துண்டால் சரீரத்திற்குப் பலம் உண்டாகும். அதைத் தயிர்களில் கலந்து உண்டால் மந்தம் உண்டாகும். மோரில் உண்டால் கோபமும், எரிவும் விலகும். உறுதியான வாய்வு உண்டாகும். ஆகாரம் ஏற்றுக்கொள்ளாது. ஏதாவது புளிகளில் சேர்த்து உண்டால் பித்தநோய் நீங்கும்.

### நெற்பொரியின் குணம்

நெற்பொரியைத் தின்றா னெடுத்தாகம் வாந்திமந்த
மற்பித்த வாத மதமூர்ச்சை - பற்பலவாம்
பேதி யரோசிகை பேரூலகை விட்டொழியுஞ்
சாதி மடமயிலே சாற்று.

நெற்பொரியை பாகப்படிக்குத் தின்னில் அதிதாகம், வமனம், மந்தாக்கின் பைத்தியவாத தொந்தம், மதநோய், மூர்ச்சை, அதிசாரவருக்கம், அரோசிகம் இவை நிவர்த்தியாகும்.

### அப்பளம் சோத்தப்பளம் - இவைகளின் குணம்

வாதத்தை யுண்டாக்கும் மாபலத்தை யுங்கொடுக்கும்
சீதத்தை மேவுகபந் நீர்க்குங்கா - ணோதுமுழுந்
தப்பளஞ் சோற்றப்பளங்கா லாதிகள்விஞ் சாதுநிலை
யொப்பவளஞ் செய்யு முறை.

உளுந்துமாவின் அப்பளம் வாதப்பெருக்கத்தையும், உடற்குறுதியையும் தரும். ஆமத்தைப் பற்றிய கபத்தை நீக்கும். அரிசிமாவினாற் செய்த சோற்றப்பளம் திரிதோடங்களையும் மீரவொட்டாமற் சமப்படுத்தும்.

### பாயாசத்தின் குணம்

பாயாசங் கொண்டாற் பழையமலம் வாந்திபித்த
மாயாசம் போங்கூறி வற்பமந்தந் - தூயசர்

வேந்திரிய நம்மை யெழில்வரி மனத்தெளிவோ
டாந்தபசி மேதையுமுண்டாம்.

பாலில் நெய் முதலியவை சேர்த்துக் காய்ச்சிய பாயாசத்தினால் மலபந்தம், வாந்தி, பித்தம், இளைப்பு இவை நீங்கும். அற்புமந்தம், பஞ்சேந்திரியங்கட்கு நலம், அழகு, பலம், மனத்தெளிவு, தீபனம், புத்தி இவை உண்டாகும்.

### பரமானந்தத்தின் குணம்

பரமானந்தத் தாற்பயித்தி யந்தாக மும்போ
முரமான ரூட்சை யுரக்குந் - திரமான
வங்கம் பருக்கு மதிகபல முண்டாம்
பொங்கமுறு மாதே புகல்.

பரமானத்தால் பித்த கோபமும், தாகமும் விலகும். சுரம் சரீரப் புஷ்டியும் மிகுவன்மையும் உண்டாகும்.

### அன்ன பின்னத்தின் குணம்

சோறுக்கேண் கூறுக்கந் தூரமா வல்லிவைக்கண்
கூருக்க நற்பழப்பால் கொள்ளிவைக்கெண் - கூரூக்க
முன்பல மிவைக்கெண் கூரூக்கஞ் சுகாசு கத்துந்
தான்பல வகைத்துப்புந் தான்.

அருசுவை உணவோடு உண்ணும் அன்னத்தை விட 8பங்கு பலத்தை மாவும், அவலும் தரும். இரண்டையும் விட 8 பங்கு பாலும்பழம் தரும். இவைகளைவிட 8 பங்கு மாமிசம், கிழங்கு தரும். இவைகளைவிட 8 பங்கு பற்பல நெய்களும் தரும். இவ்வாறே பலத்தையும் மிதந்தப்பினால் தீமையும் செய்யும்.

### உண்பதற்கு முன்பின் உண்ணுங்கனிகளின் குணம்

அருந்தற்கு முன்பருந்த லாமா மகல
மருந்தற்குப் பின்பிலத்தை யாகும் - பொருந்தியயெங்

காலுங் கபித்தக் கனியாகு மாகாவெக்
காலுங் கதலிக் கனி.

புசிப்பதற்கு முன் நெல்லிக்கனி, பின்பு இலந்தைக்கனி இவ்விரண்டு காலங்களிலும் விளாங்கனியும் உண்ணலாம், வாழைக்கனி எப்போதும் கூடாது.

### உண்டபின்பு குருநடை கொள்ளுதலின் குணம்

உண்டபின்பு நூரடிவைத் தோங்காக் குருநடையை
கொண்டவர்க்கு முன்புகுடர் கொண்டபருந் -
திண்டியெலாஞ்
சேர்ந்தொன்றாய்ச் சீரணிக்குந் தீயமுந் தோடங்களதி
லார்ந்தோன்ற மாட்டா லறி.

இரவு உணவு உண்டபின் தனது காலால் சிறுநடையாக 100 அடி உலாவிய பின் நித்திரை செய்தால் முன்உண்ட அன்னத்தின் சேர்ந்தவிடம் பதார்த்தங்களெல்லாம் கலந்து சீரணிப்பது தவிர அவ்வுண்டியில் திரிதோடமும் சாராதென்க.

## பரிமள வகை

### மணக்குழப்புப் பூசுதலின் குணம்

பூசுமணத் தாலின்ப பூணு மணுக்கிருமி
நாசமுறு முட்டீக்கு நல்வலியாந் தேசமறு
நாதவிந்துவும் விரைத்தீ நண்ணமிக விளையுஞ்
சீதவிந்துவின் குளிர்ச்சிபோந் தேர்.

புசித்தவுடன் பகலிரவிலும் பூசப்பட்ட மணக் குழம்பினால் மகிழ்வும், உதராக்கினியும், வன்மை இவ்வாசனைசயின் சூட்டினால் சுரோணித சுக்கில விளையும் உண்டாகும். ரசதாதுவில் ஊறுகின்ற அணுக்கிருமிகளும் சந்திரகிரகணத்தால் வரா நின்ற சீதளக்குளிரும் நீங்கும்.

### கார்கால மணப்பூச்சின் குணம்

கார்காலந்தனிப்பூசக் கற்பூரசந்தங்
கஸ்தூரியகிற்கூட்டு காந்தியுமுண்டென்பார்
சீர்மேவு சிறப்புண்டாஞ் சீர்த்தியு வந்தெய்தும்
தேகத்தின் வியர்வகலு மிளைப்போடும் சுரம்போங்

கூர்மேவுகாசமிழுப் பிருமலிவை விலகுங்
குட்சிவாய்வது தொலையு நேத்திரமுந்துலங்கு
மர்வமிகுந்தாகமறும் வீரியமுமுண்ணு
மறித்தென்று நடத்திடுவர்க்கம் புவியின் மீதே.

மழைக்காலத்தில் பரவைக் கற்பூரம், கஸ்தூரி, அகில் கூட்டு இவைகளைக்கிரமப்படி நல்சந்தனத்தில் சேர்த்து அரைத்துப் பூச அழகு, மேன்மை, கீர்த்தி, விழிக்குட்பிரகாசம், இச்சை, சுக்கில விருத்தி ஆகிய இவை உண்டாகும். வியர்வை, அயர்வு, உட்சுரம், இருமல், சுவாசகாரம், வயிற்றுவலி, தாகம் இவை விலகும். இது உஷ்ணம் என்பார்.

### பனிக்கால மணப்பூச்சின் குணம்

பனிக்காலத் தன்னைத்தேடிக் குங்குமச்சோரம்
பகருமாகில் கஸ்தூரி சாந்து சவ்வாதுடனே
பனிப்பகலச் சமஞ்சேர்த்துப் பனிநீர்குழைத்துப்
பண்புபெறப்பூசியிடி லூக்கமுடைமையதாஞ்

செனிப்பான தாகமொடு பித்தமறுங்கபம்போந்
தினவுகெடும் வீரியமாஞ் செயமுயரு மழகாந்
தனிப்பான செய்யமலர்த் திருவுமருங்கணைவாள்
சவுரியமுந்சேருமிகச் சந்தோடமுறுமே.

பனிக்காலத்தில் குங்குமப்பூ, கிச்சிலிக்கிழங்கு, அதிகசாந்து, கஸ்தூரி, சந்தனம், சவ்வாது இவைகளை முறைப்படி பன்னீர்விட்டு குழைத்துப் பூசில் சரீரபலம், தாதுவிருத்தி, மாதக்கூட்டம், வனப்பு, லட்சுமி, விலாசம்,

வீரியம், களிப்பு இவைகள் உண்டாம். தாகம், பைத்தியம், சிலேத்தும நமைச்சல் இவை நீங்கும்.

**மாலையணிதலின் குணம்**

முல்லைமுத வீடுமண மொய்த்தளர்ந்த தொந் தணிவாக்
கில்லையெனுந் தாதுநட்ட மில்லைமா - னொல்லை மனத்
துக்க மொழியுஞ் சுகமொழியும் பூரிப்பு
மிக்க மொழியவரு மேல்.

முல்லை முதலிய மிகுவாசனையுள்ள மலர் மாலையைப் புனைபவர்கட்குச் சுக்கில தாதுவிருத்தியும், மங்கள வார்த்தையும், மகிட்சி நிறைவும் பலர் புகழ்ச்சியும் உண்டாகும். மனத்துயரம் போகும்.

**பன்னீரின் குணம்**

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாரால் சுகசன்னிக்
கீந்நீருண் ணேரு மிளைப்புமறுஞ் - சன்னிகளும்
வாதபித் தையமொடு மானே வியாகுலமும்
பூதலம் விட்டேகும் புகல்.

பன்னீரை மருந்து அனுபானங் கூட்டி அருந்தினால் சுகசன்னியும், சன்னிபாதங்களும் விலகும். தனியே குடித்தால் ஆயாசமும், திரிதோடங்களும், மனச்சங்கடமும் நீங்கும். பன்னீர் பூசிய தோஷ்ண திரவியம் ஆதலால் இதை இறங்கிய நீரைக் குளிர்ச்சி என்பர்.

# தாம்பூல வகை

**தாம்பூலப் பொதுக்குணம்**

தக்கோலந் துவருறைப்பு காரமாமச்
சாரங்கடாயமதிற் சிலதோடம் போம்
நிற்காது கிருமியுந் தாகம் பன்னோய்
நிறைபசியாமாதர்குழா நெருங்கிமேலு

மிக்கான சுவையுதாஞ் சுத்தியாகும்
விடாய்நீங்கு மடிவொளிருந் தாதுமுண்டோ
மெக்காலுந் தருமமெய்துங் களையுஞ்சேரு
மெக்கரு மட்குமிஃ தேருங்காணே.

தாம்பூல ரசத்தினால் கிருமிகபம், தாகம், பலநோய் விடாய் இவை நீங்கும். பசி பெண்களின் உறவு , நாவரிசை, மலசுத்தி, நுண்ணறிவு, சுக்கிலவிருத்தி, தருமகுன்ம அழகுண்டாம் அன்றியும் மது சுபாவங்களுக்குதவும், தக்கோலம் - ஏலம் முதலிய வாசனைத் திரவியம், துவர்-பாக்கு, உறைப்பு- வெற்றிலை காரம் - சுண்ணாம்பு.

## கொட்டைப்பாக்கின் குணம்

கொட்டைப் பாக் கென்றுரைக்கிற் கோழைமலம் போமூலத்
தட்டைப்பார்க் குங்கிருமி சாமந்தக் - கொட்டைப்பாக்
கொந்தசுரத் தோர்க்குமருந் துண்டவாய்க்கும் மெடுத்து
மெத்தவுண்ணிற் சோபை வரும் விள்.

கொட்டைப்பாக்கினால் கோழை, மலம், மலப்பையினது அடித்தட்டிலிருக்கும் கிருமி இவை நீங்கும். இது சுரநோயுடையவருக்கும், மருந்துண்பவர்க்கும், வாயிற்போட்டுக்கொள்ள உதவும். அதிகமாகத் தின்றால் சோபரோகம் உண்டாகும் என்க.

## இளங்கொட்டைப்பாக்கின் குணம்

வளங்கட் டிலங்கைநகர் வாசியென வந்த
விளங்கொட்டைப் பாக்குண்பார்க் கொன்றுங் -
களங்கட்டும்
வாயுதேவ காமறவன் வல்லருசி யேருமகத்
தேயுவாகா மறைவே தோ.

வளப்பம் பொருந்திய இலங்கை நகராகிய கொளம்புத்தேசத்திலுண்டாகிற இளங்கொட்டைப் பாக்கை

உண்டால் தொண்டைக்குள் கோழையும், வாதமும் நீங்கா பலமும், வலியும், ருசியும் விலகும். பசி விலகாது. இது ஒளிப்பல்ல.

### இவ்வித பாக்குகளை நீக்க வேண்டுமெனல்

அதிபிஞ் சதிமூப் பதிபசுமை மேனி
யதிவீரம் பூச்சிக ளுள்ளாட - லதிசொக்க
லுள்ளவிதப் பாக்குகளி லொன்றேனு நேரிலதைத்
தள்ளவிதி முக்காலுந் தள்.

மிகவும் இளம்பிஞ்சு, அதிமுதிர்ச்சி, மிகப்புதிது, பச்சைப்புழு வாடல், சோறாதல் ஆகிய இக்குணங்களுள்ள பாக்குகளைத் தின்னாமல் நீக்கவும் என்க.

### சொற்றைப் பாக்கின் குணம்

சொற்றைப் பிளவடித்துத் தோயமதி லூரலிட்டுச்
சத்துவர நூறுவிசை தான்கழுவி - வைத்துலர்த்தி
வாசமலைத் துந்தின்ன மந்தமொடு தோடமறுந்
தேக மழறுமுறுஞ் செப்பு.

சொற்றைப் பாக்குகளை இடித்து நல்ல நீரில் ஒரு நாள் ஊறவைத்து நூறுதரங்கழுவி உலர்த்தி அதில் வால்மிளகு, வாசனைத்திரவியங் கலந்து தாம்பூலந் தரித்துக்கொள்ளில் அக்கினி மந்தம், திரிதோட கோபம், விலகும். உசிலமும், ஒளியும், அழகும் உண்டாகும்.

### களிப்பாக்கின் குணம்

களிப்பாக்குத் தின்றாக்காற் கண்டத்துட் கோழை
யொளிப்பாகக் கட்டு மிஃதுண்மை - தளிப்பான
பித்த வரோசகம்போம் பேதிமிக வுண்டாகுஞ்
சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு.

களிப்பாக்கைத் தின்றால் நெஞ்சிற்கோழை, அதிசுரம், மனமகிழ்ச்சி உண்டாகும். பித்த அருசி ஒழியும்.

**வெற்றிலையின் குணம்**

ஐய மறுங்கான தன் ணசாரங் கொண்டக்காற்
பையச் சயித்தியம் போம் பைந்தொடியே - மெய்யின்
கடியின் குணம் போகுங் காரவெற் றிலைக்குப்
படியுமுந் தோடமிதைப் பார்.

காரமுள்ள வெற்றிலை சாரத்தைப் பருகில் கபம், சீதளம், காணாக்கடியிந் துர்க்குணம், திரிதோடக்கபம் இவைகள் ஒழியும்.

**கம்மாறு வெற்றிலையின் குணம்**

ஏட்டிலொன் றிகிட்டினீ ரேற்றஞ் சிகராபார
மாட்டிவிடு சன்னி மாந்தமொடு - நாட்டிற்
பரியகுரற் கம்மல்வலி பண்டியுப் பிசம்போ
மரிய கம்மாறு வெற்றிலை.

கம்மாறு வெற்றிலையால் சலதோடம், சிரோபாரம், சன்னி, மந்தாக்கினி, குரற்கம்மல், வயிற்றுவலி, உப்பிசம் போம்.

**கற்சுண்ணத்தின் குணம்**

உண்டவனஞ் சீரணமா நெய்ச்சிக்கேகு
முறில்விந்து விற்கூக்க முறுங்காண் வாயில்
விண்டவெயிறி னு குமறற் பேதிவற்றும்
வெந்தளித்த நீர்ச் சுறுங்கும் விலகு மெய்யை

யண்டுபல விட மொழியுங் கறையேநீற்கு
மழலுறு புண்சிரங்கு நமை யழு புண்ணாறுங்
கண்டவுருவன் மீகஞ் சிநோய் சன்னி
களுங்கரக்குங் கற் சுண்ணங் காணுங்காலே.

கற்சுண்ணத்தால் அன்னஞ் சீரணமாவது தவிர குடலில் பிடித்த நெய்கிடுப் பேதி, வாதகிரிச்சம், பூரான்கடி முதலிய பல விஷம், காயங்களில் ஒழுகுகின்ற ரத்தம், நெருப்புச் சுட்டபுண், சிரங்கு, தினவு, அரித்த விரணம், கபநோய், மண்டைப்புற்று, தலைநோய், சன்னி இவை நீங்கிச் சுக்கிலத்திற்குப் பலமும், தந்தங்களுக்குறுதி உண்டாகும்.

### முத்துச்சுண்ணத்தின் குணம்

முத்துச் சுண்ணத்தான் முதிர்ந்தவதி சாரமையுங்
குத்துக் கிருமியோடு குன்மநோய் - நந்தியதோர்
வாத வரோசகமு மாரிவிடு மலர்ந்த
பேதிலுரை மாதே புகல்.

முத்துச் சுண்ணத்தினால் நீடித்தபேதி, கபக்கட்டு, மலக்கிருமி, வயிற்றுநோய், வாத அரோசிகம் இவைபோம்.

### தாம்பூலத்தில் காய்ச்சுக்கட்டி, சுக்கு, இலவங்கம் இவைகள் சேருதலின் குணம்

காய்ச்சுக் கட்டிக்கிறுகுங் கட்டவிழ்ந்த தந்தமங்கார்
பூச்சிக் குமிழாப் புனலிற்சா - மாச்சுக்
கிலவங்க மாதிகளா லின்புண்டா மின்னுஞ்
சொலவகை நோயுமறுஞ் சொல்.

காய்ச்சுக்கட்டி சேர்ந்த தாம்பூலத்தினால் அசையும் பற்கள் இளகும். அந்தச் சாற்றினால் மலக்கிருமிகள் கெடும். சுக்கு, கிராம்பு, மணவருக்கங் கூடிய தாம்பூலத்தால் முகக்களிப்புண்டாகும். சரீரத்தைப் பற்றிய நோய் அஜீரணம் முதலியவை நீங்கும்.

### தாம்பூலந்தின்னுங் காலபேதம்

காலை பிளவதிகக் கட்டுச்சி நீரதிக
மாலை யிலையதிக மாயருந்தில் - வேலைநிலக்

காலை மலங்கழியும் கட்டுச்சி தீபனமா
மாலை மணங்குலவும் வாய்.

தாம்பூலம் தின்கில் பாக்கைக் காலையில் அதிகமாய் சேர்க்கில் சரியாக மலங்கழியும். மதியத்தில் சுண்ணத்தை அதிகபடி உண்டால் நல்ல பசியுண்டாகும். மாலை வெற்றிலையை அதிகப்படுத்த வாயில் மணம் வீசும்.

**இதிலின்னதை முதலிற்றின்ன வேண்டுமெனல்**

வெற்றிலைக்கு முன்னம் வெறும்பாக்கை வாயிலிட்டாற்
குற்றமுறு முறவோர் கூட்டம்போம் - வெற்றிலையை
முன்னிட்டுப் பாக்கருந்து மூதறிவோர் தம்மார்பின்
பின்னிட்டு வாழும்பூ மாது.

தாம்பூலத்தில் முதலில் வெற்றிலையைத் தின்று முன்பு முறைப்படி பாக்கு வெற்றிலைகளைத் தின்ன வேண்டும். புழுவுள்ள வெற்றிலையை தவிர்க்கவேண்டும்.

சுண்ணம்பு தடவாத புனிதமுள்ள ஒரு வெற்றிலையை முதலில் மென்று அந்தச் சாற்றை விழுங்கில் நெஞ்சு வரளல் கபக்கட்டு மேற்கூரிய பாக்கின் தோடங்களும் விலகி, லட்சுமி வாசம் செய்வாள்.

**தாம்பூலத்தில் இன்னவை விலக்கவேண்டுமெனல்**

நீற்றிலையு மூக்கு நெடியநரம் புடனே
நீற்றும் புறவரியுந் தின்றக்காண் - மாற்றாறை
வெல்லப் போர்செய்யும் விறனெடுமா லாயிடினுஞ்
செல்லப்போய் நிற்குந் திரு.

தாம்பூலந்தின்னும் போது சுண்ணாம்புவைத்துக் காம்புநுனி நீண்ட நடுநரம்பு, பின்புறத்தோல் இவைகளை நீக்காத வெற்றிலையைத் தின்னலாகாது.

### தாம்பூலரசத்தின் குணம்

வாயுமந்தம் பீநசசுவாசகாசம் மருசி
யேயுதா தோடமிவை போக்குந் - தூயடற்குச்
காந்திதரும் புத்திக்குங் கட்குநலஞ் செய்யுமணஞ்
சார்ந்த தாம்பூல ரசம்.

வாசனை சேர்ந்தத் தாம்பூலச் சாறானது மணவாத்தவதாம், அக்கினி மாந்தம், நாசிரோகம், சுவாசரோகம், அரோசகம், வயிற்றைப்பற்றிய நோய், துர்க்குணம் இவைகளை நீக்கும். சரீரத்திற்கு ஒளிவையும், அறிவும் பெருக்கும்.

### தாம்பூலரசம் விழுங்கும் வகை

அடைக்காய் தின்பதி லூறு முதனீர் நஞ்சா
மதிபித்தமிரண்டாவ தூறுநீரே
கடையமிர்தமூன்றாவ தூறுநீர்தான்
கனமதுர நான்காவ தூறுமந்நீர்.

மடையென வேயைந்தாரிற் சுரந்துள்ளூரி
வருநீர்களைச்சுவைத்து மனங் கொண்டுண்டாற்
நடையுறாப் பித்தமொடு மந்தநோயுந்
தவிபாண்டுநோயுமுண்டாந் தரஞ்சொன்னோமே.

பாக்கு வெற்றிலை, சுண்ணம் இவைகளை மென்ற முதல் ஊறிய நீர் நஞ்சு. 2 -வது நீர் பைத்தியம், 3-வது நீர் அமிர்தம், 4-வது நீர் அதியிளிப்பு, 5-வது நீர்கள் பித்ததோடம், அக்கினி மாந்தம், பாண்டு ரோகம் இவைகளை உண்டாக்கும்.

## வாகன வகை

### யானையேற்றத்தின் குணம்

தாதுவிர்த்தி யும்பசியுந் தாடிது நற்பவமுந்
தீதுபித்த மும்வளருந் திண்ணமே-வாதமையே
மேழு கடலபுவியு ளெங்கு நிலையாவாம்
வேழநடாத்துவர்க்கு மெய்.

யானையேறி நடத்துபவர்க்குச் சுக்கில ஜடராக்கினி பலம் பித்தம் விருத்தியாகும். வாதகப தோடங்கள் ஒழியும்.

**குதிரையேற்றத்தின் குணம்**

உடலிறுகுந் தீபனமு முண்டாகு நாளும்
குடலிரங்கும் வெப்பாங் குளிரோ - குடிபோகும்
பொரியிருமற் போராடும் பூமாதுஞ் சார்வாள்
பரிநடத்து வார்தமக்குப் பார்.

குதிரையேறுதற்கு உடல் இருகல், பசி, குடலண்டம், உஷ்ணம், சிற்றிருமல், லட்சுமி விலாசம் இவை உண்டாகும். குளிர் நீங்கும் என்க.

**பல்லக்கேற்றத்தின் குணம்**

வாயுமிகு உண்டாகு மாறாத பித்தமறு
மேய பசிகலங்கி பெய்துங்காண் - நீயமதன்
வெல்லற் கரியகலை விள்ளுஞ் சுகவணங்கே
பல்லக்கிவர் வையெனிற் பார்.

பல்லக்கிலேறினால் வாதகோபம் கலங்கிய பசி உண்டாகும். ஒழியாத பித்த கோபம் விலகும்.

**தண்டிகையேற்றத்தின் குணம்**

கண்ணொளிவு தாதுபுஷ்டி காம மெழிலுடனே
யெண்ணொளிருஞ் காந்தி யிவையுண்டாம் - விண்ணுலகு
ளெண்டிசையு மெச்சு மிளம்மயிலே யெப்போதுந்
தண்டிகையை யூர்வார் தமக்கு.

தண்டிகை ஏற்பவர்கட்கு நேத்திர பிரகாசம் வீரிய விருத்தி, சையோக விருப்பு, அழகு ஒளிவு ஆகியன உண்டாகும்.

**ஓயில் வண்டியேற்றத்தின் குணம்**

சரீரமுறு நோய்போந் தணிவாத மேகுங்
சுரீரமென வூருபித்தங் காணா - தரிய

வயில்வண் டினந்தானென் றண்டி யஞ்சுங் கண்ணா
யொயில்வண்டி யேறுவோர்க்கென் றோர்.

ஒயில் வண்டி ஏற்பவர்கட்கு ஆவிரு வாதம் தணிவாத ரோகமும் அதிகப்பித்தத் தோடமும் நீங்கும்.

**பாதுகையிட்ட நடையின் குணம்**

பலமண் பேதத்தாற் படருகின்ற ரோக
குலமேகும் விந்துநெடுங் கூறி - னிலவரமே
வாதபித்த மையமறு மாதரசே நாடோறும்
பாதுகையை நீயணிந்து பார்.

மிதியிட்டு நடப்பவர்க்கு மண் பேதங்காய் வருகின்ற சேற்றுப்புண் முதலிய நோய்கள் சுக்கில விர்த்தி திரிதோடம் இவை விலகும்.

**கால்கவசமிட்ட நடையின் குணம்**

தரணிவெப்ப நோயுந் தரையாலா நோயு
மரணிகள் முள்ளா ளாமருப்புந் - தரணியடர்
நேட்புழக்க ளாதிகளாற் சேரும் பருவாலுங்
காற்கவசத் தாறிகின்று காண்.

காலிற் கவசமிட்டுச் சூரிய கிரணம் பட்ட பூமியால் வரும் நோயும், கட்டை, கல், முள் இவைகளால் உண்டாகின்ற ரணங்களும் தேள், கிருமி முதலியவற்றால் நின்ற இடருமில்லை.

**சதா பாத நடையின் குணம்**

சதாமிகுந்த பாதநடை தன்னா லொளிவுஞ்
சதாவங்க புடியொடு ததும்பு - நிதானமுறும்
வீரிய விர்த்தியும்போ மேனிகிழ மேனியதாஞ்
சீறியநற் கொங்கைமின்னே செப்பு.

எப்போதும் அதிநடை நடப்பதால் காந்தியும் சகதேக புஷ்டியும், பலமும் மத்தியமாம். சுக்கில சீணமும், கிழரூபம் உண்டாகும்.

### அதிக ஓட்டம், சதா உட்கார்ந்திருத்தல், நொந்த சோறுண்ணல், மிகுகாற்று விரும்புதல் - இவைகளின்குணம்

ஓட்ட மிதினு முளுக்கார்த் திருந்திடினுஞ்
குட்டாவி நொந்தபதந் துய்த்திடினுந் -
நாட்டிகமாய்க்
காற்றுடறிற் பட்டிடினுங் காரிகையே நோயுடலாஞ்
சாற்றுகின்ற வாதமுறிந் தான்.

இரைக்கும்படி ஓடுதல், சதா உட்கார்ந்து இருத்தல், சூடு புகைபடும்படி உலாவுதல், நொந்த சோருண்ணல் மிகுகாற்று விரும்புதல் இச்செயல்களால் முறையே க்ஷயம், அதிதூலம், நேத்திர ரோகம், அக்கினி மாந்தம், வாத நோய்களும் உண்டாகும்.

### ஊன்றுகோலின் குணம்

பலமிருந்தாலாம் பயமனைத்து நீக்கு
முலவுவிழு புத்தியிவைக் கொக்கும் - பலமருளும்
வீறு தயிரியமும் வீரிய முண்டாக்குங்
கூறிலயர் வோட்டுங்கைக் கோல்.

கையில் பிடிக்கின்ற தடி கண்ணுக்கும் அருவிற்கும் ஒத்திருப்பதுமின்றி நாய் முதலிய பற்பல மிருகங்களிடம் உண்டாகின்ற பயத்தையும் இளைப்பையும் நீக்கும். வன்மை திடம் பராச்சிரம் இவைகள் உண்டாகும்.

## சயன வகை

### புஷ்பணையின் குணம்

தீபாக்கினி தழையுந் தின்றமருந்தா லெழுந்த
தாபாக்கினியுந் தணியுங்காண் - யாபார
நன்புவரு விந்நூறு நாளுமுடலஞ் செழிக்கும்
புட்பவனைக் கென்றே புகல்.

முல்லை, மல்லிகை புட்ப மெத்தையில் துயில்பவர்கட்குப் பசி, போகத்தில் இட்டம், சுக்கில விருத்தி, சரீரம் செழித்தல் இவை உண்டாம். மருந்தினால் உண்டான உஷ்ணம் தீரும்.

### இலவம்பிஞ்சு, பருத்திப்பஞ்சு இவைகளின் குணம்

இலவம் பஞ்சுபடுக் கைக்கேகு மனபலம்
மலர்பருத்திப் பஞ்சி னணையோர் - உலவிரத்தம்
விந்திவைகளைப் பெருக்கு மேல்விரக
முண்டாக்குங்
குநது சுரத்தை யழைக்கும்.

இலவம்பஞ்சு மெத்தையில் படுக்க உட்சூடு நீங்கும். பருத்தி மெத்தை ரத்தம், விந்து, காமம், சுரம் இவைகளை விருத்தி செய்யும்.

### ரத்தினக்கம்பளத்தின் குணம்

பஞ்சவன்னஞ் சேர்நற்கம் பளத்துறுஞ்சல வைதோடம்
வித்திடும் பித்தந்தாது விர்த்தியுமுண்டாஞ்சீத
மஞ்சிடுங் கோபமைய மலைத்திடும் பாண்டுவோடு
நஞ்சு களெல்லாந்தீரு நலம்பெரு முஷ்ணமாமே.

வெள்ளை, சிவப்பு, மஞ்சள், பச்சை, கறுப்பு என்னும் 5-கிராம் ரோமங்களால் செய்த இரத்தின கம்பளத்திற்குச் சீதன தோடம், குளிர் கப ஆதிக்கம், பாண்டு வீக்கம், பற்பலவிடம் இவை நீங்கும். சுக்கில தாதுவும் அதிகரிக்கும். இது மிகவும் உஷ்ணமாகும்.

### சகலாத்தின் குணம்

குளிர்சுரத்திற் கேற்குங் குளிர்பனியைப் போக்கும்
வளர்பெரும் பாடதனை மாற்று - மளிசு
சகலாத் தேரிய லணியளக மின்னே
சகலாத் தெனவேநீ சாற்று.

சகலாத்து என்கிற ரோம உடை நடுசுரத்திற்கு உபயோகப்படும். குளிர்பனி அசிர்சுர நோய் இவை நீங்கும்.

அது உஷ்ணகுணமுடையது. வர்ண சேர்க்கையால் அனந்த பேதமுற்றிருப்பினும் அவைகட்கு அக்குணமேயாம் ஆனால் வெண்மை பசுவை நீலம், ஊதா நிறமுள்ளவை சற்று உஷ்ணமாகும்.

## தாழம்பாயின் குணம்

தாழம்பாய் வாந்தி தலைசுற்றல் பாண்டுபித்த
மாழஞ்சேர் நீராமை யாம்பிணியும் - வீழுந்தண்
ணீரிழிவு போக்குமிக நேசித்தவர் குலத்திற்
காரிழியுங் கூந்தனமின்னே.

தாழம்பாய் வமனம், தலைச்சுற்றல், பாண்டு, ரோகம், பித்ததோடம், நீரானம்கட்டி, வெகுமூத்திரம் இவைகளை விலக்கும்.

## கோரைப்பாயின் குணம்

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மத்தமறுங்
கூறிய தேகங் குளிர்ச்சியுறும் - வாகுலகி
னன்னித் திரைகூடு நாடாது ரூட்சையிதை
யுன்னிப் புவியி லுரை.

நற்குணமுள்ள கோரைப்பாயினால் அக்கினி மத்தசுர வேகம் நீங்கும். தேக குளிர்ச்சியும், சுக நித்திரையும் உண்டாகும்.

## சாதிப்பாயின் குணம்

சாதிப்பாய் சீதளமாஞ் சாருமித னான்மூலம்
பேதிக்குட் சீதம் பிசுறுங்காண் - வாதிக்குஞ்
சீதசுரங் காணுஞ் சிரசுமிகக் கணக்கு
மேதமிகு நோயாளர்க் கிசை.

பிரப்பம்பாயினால் மூலரோகமும், சீதபேதி, சீதசுரம், சிரோபாரம் உண்டாகும். இது சீதளமாம்.

### பேரீச்சோலைப்பாயின் குணம்

பேரீச்சப் பாயினிதம் பேரா துறங்குவர்க்குப்
பாரித்த குன்மம் பறக்குங்காண் - பூரித்த
வீக்கமருந் தீபனமா மெய்யைவெளுப் போடுட்ண
மாக்கிவிடு மென்றே யறி.

பேரீச்சோலை பாயினால் வாதகுன்மம், சோபை நீங்கும். பசி, பாண்டு, உஷ்ண ஆதிக்கம் உண்டாகும்.

### சிற்றீச்சோலைப்பாயின் குணம்

சிற்றீச்சுப் பாயிற் றினமும் படுப்பவர்க்கு
குற்றிடு மேகாந்த லுடம்புலருஞ் - சுற்றியதோர்
வாயுவுறும் பித்தமறு மற்றுங் கபந்தீருந்
தாயகமா மிக்குணத்தைச் சாற்று.

சிற்றீச்சோலைப்பாயினால் உஷ்ணம், தேக ஊரல் உண்டாம். ஆவிருவாதம், அதிபித்தம், கபச்சினம் இவையாம்.

### மூங்கிற்பாயின் குணம்

நீர்க்கடுப்பு மெத்தவுற நீடுபித்த மும்பெருகு
மார்க்கு மனல மதிகரிக்கும் - பார்க்குளுறை
கோங்கி னறியமுகைக் கொங்கை மலர்த்திருவே
மூங்கிலின் பாய்க்கு மொழி.

மூங்கிற்பாய்க்கு மூத்திரக்கிரிச்சரம், பித்தகோபம், மிகுந்த உஷ்ணம் இவை விருத்தி அடையும்.

### தலைக்கணையின் குணம்

கழுத்திற்குந் தோளிற்குங் கண்ட வுயர்வாய்
வழுத்து நீளத்தில் வைத்த மட்டா - யிழைத்தநறும்
பஞ்சின் றலைக்கணைக்கெப் பானரம்பு நன்குறும்போந்
துஞ்சின் றலைக்குமுச்சிச் சூர்.

கழுத்துக்கும், தோலுக்கும் மத்தியிலிருக்கும் அளவு உயரமுள்ளதாயும், நீளம் வேண்டிய மட்டாயும், இலவம்

பஞ்சினால் நைத்த தலையணைமேல் தலைவைத்து படுத்தால் பாதாதி கேசம்வரைக்கும் எந்தபாகத்து நரம்புகளும் பிசகாமல் சமமாவிருக்கம். தலையைப்பற்றிய நோய்கள் விலகும்.

# விசிறி வகை

### மயில் விசிறியின் குணம்

சந்நிவிடங் குன்மம் தலைச்சுழலல் பித்தம்விக்க
றுன்னு சுவோதம்வாத தோடமும்போம் - பன்னவதி
லுன்னடியாம் புந்தி யொளிரும் பசுந்தோகை
யிட்டமயில் விசிறிக் கே.

மயிலிறகினாற் செய்த விசிறி சந்நிபாதம், விடம், வயிற்றுவலி, தலைச்சுழல், பித்த கோபம் இவை குணமாகும்.

### வெட்டிவேரின் குணம்

வரசவெட்டி வேர்விசிறி வன்பித்த சோபமொடு
வீசு மெரிச்சலையும் வீழ்த்துங்காண் - பேசுங்காற்
றாகமற்றுஞ் சாடும் சகல மனோக்கியமா
மோகமருண் மாதே மொழி.

வெட்டிவேர், விசிறி, பைத்திய தோடம், தேக எரிவு, விதாகம் இவைகளைப் போக்கும். மனோசாகத்தை உண்டாக்கும்.

### பனையோலை விசிறியின் குணம்

பனைவிசிறி தன்னாற் பருத்ததொரு வாத
வினையைய நோயும் விலகும் - கனபித்த
நோயு மருசியென்ற நோயுங் குடியேகுந்
தேயுமிடை மாதே தெளி.

பனை ஓலை விசிறியில் வாததோடம், சிலேத்தும ரோகம், பித்த ஆதிக்கம், அரோசகம் நீங்கும்.

**வெண்சாமரையின் குணம்**

வெண்சாமரத்தால் வியர்வையா யாசமொடு
திண்சோபை மூர்ச்சைத் திருக்குமறுந் - தண்சாரத்
தாகமறும் வெப்பந் தணியுந் திருவமரும்
போகமுறு மாதே புகல்.

வெண்சாமத்தினால் வியர்வை, ஆயாசம், மயக்கம், மூர்ச்சையால் வராநின்ற ஞாபக மறதி, நாவறட்சி, உஷ்ணம் இவைபோம். புணர்ச்சியில் இச்சையும், லட்சுமி விலாசமும் உண்டாகும்.

## புணர்ச்சி வகை

**இவ்விதமாதர் போகம் கூடாதெனல் கலித்துறை**

துக்கம் பயமதிக் கேசந்தரி மலர்ந்துஞ் சல்லி
வெட்கம் பசிகருப்பந் தாகமூப்பு வெறுப்பசுபஞ்
சுட்க மலட்சியங்கோபம் ரூபமெய்த்துகந்தங்கோண்
முக்கதிநூவமுடை மாதர்போகம் வினைக்குவித்தே.

தேவ குருவரச தீனதூரத் தையலர்
பாவ வமங்கலமாம் பாவையர்பான் - மேவுமின்பம்
கண்டாரைச் சாறுமுறு கண்ணிடுக்க மின்றியே
விண்டாரைச் சாருமுன் னிவன்.

துயரம், அச்சம், தேக முழுவதும் ரோமம், திரிதோடம், கோபம், தூங்கிவிழித்தல், அரித்தன்மை, நாணம், பசிகருப்பம், தாகம், தன் வயதுக்கு மேற்பட்டவயது, புணர்ச்சியில் வெறுப்பு, சுபமின்மை, ருசி, முகயோனி ரோகம், அலட்சியம், கோபம், அழகின்மை, கற்றாழை

நாற்றம், கோள்சொல்லுதல் இவைகளையுடைய மாதர்கள் போகம் சகல நோய்களுக்கும் வழிசெய்யும்.

தேவஸ்திரீ, குருபத்தினி, இராஜபத்தினி, ஏழைப் பெண், தூரப்பெண், பழிமாது, விதவை இவர்களைப் போகிப்பவர்கள் தரித்திர துன்பமும் தொடரும் அல்லது இவர்களை விட்டு மற்றவர்களைத் தொடரும்.

### புணர்ச்சி செய்யும் விதி

அங்கமுற்றும் பாகியமா யார்வ மொன்றா
யங்கமுற்றும் போகமொன்றோ யாருங்கா - லங்கத்
துரையுஞ் சகசவிர லுற்ற கருவிங்க
ளறையும் பருவத்த வர்.

சுகபதம் என்கிற பருவமுள்ள பெண்ணும் ஆணும் சரீர முழுவதும் மறைப்பில்லாமல் இருவரும் ஆசை அன்பு போகம் ஒன்றாகி கூடுங்காலத்தில் உண்டாகும் கருவானது, தாய் தந்தையார் பலத்தைப் பெறும். ஆசை அன்பு என்பது எப்போதும் உண்டாயிருக்கும்.

### அரோம் சந்தானப் புணர்ச்சியின் குணம்

பதினா றெனுமியாயுட் பாவையு நாலைந்தென்று
உதியாயும் காளையுமெய் யொவ்வின் - மதியோ
தாமிர லுண்டாந் தநுசற்குந் தேகந்
தீரமிரவி மஞ்சசுறு சண்டோர்.

16 வயது பெண்ணும் 20 வயது ஆணும் மாதமொருநாள் இரவு காலத்தில் உறவு கொண்டால், பிறக்கும் குழந்தைத்தேகம் திடமாயும் வியாதியை எதிர்க்கும் வன்மையைப் பெற்றிருக்கும். பெண்ணுக்கு யோனியும், கருப்பையும் சுத்தமாயிருக்க வேண்டும். ஆணுக்குச் சுக்கில

வாதமும், இருதயமும் சுத்தமாகவும், வலிமையாகவும் இருக்கவேண்டும். சாஸ்திர விதிப்படிப் புணர்ச்சி நலம் பயக்கும் ஏனையவை மிகுநோய்களுக்கு வழிசெய்யும்.

### தினப்புணர்ச்சியின் குணம்

அநந்தவித பந்தத்தோ பல்லும் பகலு
மனந்தலிட்டுச் சேர்ந்தா ரக்கண்க ளிந்நோய்ச்
சங்கைக்கு மூப்புமிலைச் சார்ந்த மருத்துவர்க
டங்கைக்கு மூப்புமிலைந் தான்.

கொக்கோக நூலிற் சொல்லாத பலவித லீலைகளுடன் இரவும் பகலும் நித்திரையின் பெண் போகத்தில் மூழ்கியவர்க்கு வியாதிகள் மிகுதியுண்டாகும். அவற்றை நிவர்த்தி செய்யும் மருத்துவர்க்கும் கைக்கும் ஓய்வு இல்லை.

### சுக்கில நிரோதனத்தின் குணம்

விந்துவை மருக்குங்கால் வீக்கம் பிரமேக
முந்துவனி கல்லடைப்பு மூடுசுந் - சந்துகைகா
லாசனத்திற் பக்கமிடுப் பலவுழிநோய் மார்புவலி
விரணனீர்க் கட்டிவையா மே.

விருப்பமிருந்தும் போகியாமல், சுக்கிலம், பந்தஞ் செய்வதினால் சோபையும், சீழ்ப்பிரமேகமும், அண்டமும், அஸ்மரியும், நாமசுரமும், கில்கைகால், நாபரிசம், சகனம் ஆகிய இடங்களில் சரிக்கா நின்ற வியாதிகளும், மார்புநோயும், பித்த கிருச்சுரம் இவை உண்டாகும்.

### நித்திரை செய்வதின் குணம்

ஐந் திரியங்க ளசவுக்கிய மகலு
நைந்தமனத் துச்சாக நண்ணுங்காண் - பைந்தொடியே
மேனீட்டு மாயளுறு மெய்யு னயர்வொழியுங்
கானீட்டுப் பள்ளிக்கொள்ளுங் கால்.

முக்காடிட் டங்கமுற்று முடித் துயிலினிரண்
டக்கிக்குந் தோட்கு மதிபலமா - மிக்கான
சீதம்வெயில் தூசிபனி சீறியவரு காற்றிவையா
லோதவரு துன்பமிலை யுன்.

முறைப்படி இடதுபக்கம் கை கால்களை நீட்டி நித்திரை செய்தால், உடல் உறுப்புகளின் அயர்வும் சரீர வருத்தமும் தீரும். இளைத்த மனத்திற்கு உற்சாகமும் உண்டாகும். ஆயுசு விருத்தியாகும். தேகாதி பாதம் வரைக்கும் நுணியால் மூடி நித்திரை செய்ய நலம் பயக்கும்.

**தொக்கணத்தின் குணம்**

தொக்கணத்தி னாலி ரத்தந் தோலு னிவைகட்கு
மிக்க சவுந்திரிய மீரனும்போ - மெய்க்கதிக
பட்டிரக்கம் மீது புணர்ச்சி யிவை கதிக்கும்
பட்ட வலைச்சலறும் பார்.

தொக்கணத்தில் இரத்தச் சரும மாமிச தாதுக்களுக்கு மிகவும் சத்தைத் தருவது தவிர தேக புஷ்டியும், நித்திரையும், புணர்ச்சியால் இச்சையாம் அதிகரிக்கும். வாத ஆதிக்கமும் உழைப்பினால் வந்த வருத்தமும் நீங்கும். தொக்கணம் என்பது கையில் குத்தியிதமாக பிறப்பதாகும்.

**இரவில் நித்திரை பங்கத்தின் குணம்**

சித்தமயக் கஞ்செறியும் சீரைம்புலத் தயக்க
மெய்த்தலனுக் கமைந்த மென்மைக - ணித்தமுர
வண்டுசிலர் நாயாய்ப் பன்னோய் கவ்வுயிராக்
கண்டுஞ் சிலரைநம்பிக் காண்.

இரவித் துயலாதவர்களை ஐம்புல சோர்வு, கட்கம், பயம், அக்கினி மந்தம் முதலிய நோய் சேரும். மேலும் வேடருடைய நாய் கவ்வுதல் போல பல நோய்களும் வந்து சேரும்.

### பகல் நித்திரையின் குணம்

தண்ட மேட்டரக்ஷிய மூருத்தம் பஞ்
சருவாங்க மூக்கிராக் கிரகபஞ்சுப்தி
துண்டமுறு வனுந்தம்பந் திருக்குத்தம்பஞ்
சோணித மாட்டியப் புருவா டோபகந்தன்

னண்டு கிருத்தி சியூர்த் துவஞ்சம்பூத
மவபேதம் வதந்திர மவதானந்தாள்
விண்டவுவர் பதினெண் காற்கும்
வித்தாகும் பலகனந்தன் மேவின் மாதோ.

பகல் நித்திரை, தண்டம், மேட்டாட்சீயம், ஊதஸ், தம்பம், சருவாங்கம், உக்கிரகிரகம், சுப்தி, அனுஷ்தம்பம், திருக்குசோணிதம், ஆடிடியும் புருவோடபோகம், சிருத்திர ஊர்த்து, வம்சம், பூகம், அவபேதம், அவத்திரம், அதுதாமை என்ற 18 வகை வாதநோய்களை உண்டாக்கும்.

### பத்தியத்தோர் பகற்றுவின் குணம்

அண்டவங்கி யுண்டவுறை பங்கியரும், பத்திரத்தய
லண்டவகி மூன்றோ டளந்தலது - கொண்டவங்கி
கூடுங்கா நேத்திரநோய் கூடுமிரத்த பித்த
நீடுங்காண் விந்துவு நீராம்.

பத்தியங்கொண்டவர்க்கு சூரிய வெப்பம் மருந்துகளின் வெப்பம் என்ற 3ம் பகல் நித்திரை செய்வதால் பிரிக்கின்ற வெப்பமும் கூருமாயின் விழிநோய் உண்டாகும். வாதபித்த ரோகம் அதிகரிக்கும் விந்துவும் நீர்போல் ஆகிவிடும்.

### ரசம், கெற்பம் செய்நீர் - குளிர்ந்த நீர் இவைகளின் சீரண காலம்

பாரினின் மாந்தருண்ணும் பற்பல பண்டமெல்லாஞ்
சீரணமாகுங்காலத் தெளிவே செப்பக்கேண்மோ
காரணரசமோரேழு கடிகையாங் கற்கஞ்செய்நீர்
வீரணத் தண்ணீர்சாமம் வெந்நீரு மிரண்டேயாமம்.

உலகினில் மனிதர்கள் அருந்தும் பலவாகிய பதார்த்தங்களின் சீரணகால அளவை கூறுமிடத்துயாதொறு

மொன்றைப் பிழிந்த ரசம் 7 நாழிகையிலும் அரைத்த மருந்துகள் செய்நீர்கள், குளிர்ந்த நீர் இவைகள் ஒரு சாமத்திலும் வெந்நீர் உம்சாமத்திலும் சீரணமாகும்.

**காய்ந்தாரியசலம் - கஷாயம் - பழச்சாறு- சோறு - பால் - தேன் இவைகளின் சீரணகாலம்**

சாலவேகாய்ச்சியாறுஞ் சலம்பதமூன் றேமுக்காற்
சீலமாங்கடாயுமூன்று சேர்பழச்சாறுமாறாந்
தாலமாஞ் சோறிரண்டு சாமமாமிருபதாகும்
பாலுதேன் பன்னிரண்டு நாழிகைபகருவாயே.

மிகவும் காய்ந்தாறியசலம் மூணேமுக்கால் நாழிகை கஷாயம் 3 நாழிகை, களிரசங்கள் 6 நாழிகை, அன்னம் 1-சாமம், பால் 20 நாழிகை, தேன் 12 நாழிகையிலும் சீரணமாகும்.

**தயிர்சோறு, மோர்சோறு, நீர்ச்சோறு, வெண்ணெய்ச்சோறு, சாராயம் இவைகளின் சீரணகாலம்**

வார்துவை தயிர்சோறும் வகுத்திடிற் பதினொன்றாகு
மோர்விடு பதம்பன்மூன்று மொழிபதம் பதினெட்டாகு
மாறவச் சோறிரண்டு சாமமா மரியவெண்ணெய்ச்
சாருமா பன்னஞ்சாமஞ் சாராயங் கடிகையைந்தாம்.

தயிர் அன்னம் 11 நாழிகை, மோர் அன்னம் 13 நாழிகை, நீர் அன்னம் 13 நாழிகை, வெண்ணெய் அன்னம் 2 சாமம், சாராயம் 1 சாமம் அல்லது 5 நாழிகையில் சீரணமாகும்.

**சூரணம், தைலம், லேகியம், கிருதம், பஸ்பம், கறிகள், பழங்கள் இவைகளின் சீரணகாலம்**

சூரணந்தலமிலேசங் கிருதஞ்சொற்பனி ரெண்டென்னச்
சேருநாழிகையாம் பஸ்பஞ் சீரண மரைச்சாமத்திற்
கூறிய கறிகளெல்லாங் கூறினானாழிகையே யாகுஞ்
சீறியபழங்களெல்லாஞ் சீரணஞ் சாமந்தன்னில்.

சூரணம், தயிலம், லேகியம், கிருதம் இவை 12 நாழிகை, பஸ்பம் 3¼¼ நாழிகை நல்ல பதார்த்தங்களெல்லாம் 7 நாழிகை, உயர்ந்த பழவகையெல்லாம் 7½ நாழிகையிலும் சீரணமாகும்.

### கருணை முதலிய கிழங்குகள் வெந்துபதமான விதைகள், பழச்சாறுகள், பச்சையாய் அல்லது வெந்ததாயுள்ள ஆறுவகைச் சுவை அவைகளின் சீரணகாலம்

உரைகருணைக் கிழங்கோடுப்கிழங்களெல்லாஞ் சாமம்
விரைகளும் பழத்தினின்சாறும் வெந்திடிற் சாமமேயாம்
பரிசுறுவைகள் பச்சையதாய்த் தின்றாலுங்
சுரைவெந்ததைத்தின்றாலும் கடிகையைந்தன்மேலில்லை.

கருணை, காராக்கருணை, புளிக்கருணை, நீர்க்கருணை, சேனைக்கருணை முதலிய கிழங்குகளெல்லாம் 7½ நாழிகை வித்துக்களும், கனிரசங்களும், 7½ நாழிகை அறுசுவை பதார்த்தங்களைப் பச்சையாக அல்லது பாகஞ்செய்து உண்ணில் 5 நாழிகையாலும் சீரணம்.

### கழுநீர், காடி, மா, உருண்டை, பொங்கல், பசும்பால் இவைகளின் சீரண காலம்

காவி நேர் கண்ணோய் கேளாய் கழுநீர் தாடியுமைந்தாகு
மாவுடனுண்டை பொங்கல் வகைகேளடா வினற்பால்
மேவுமோர் தினத்திந் நான்கு விதுமுஞ் சேர்த்தருந்துமுண்டி
பூவினாலைந்து நாழி போயபின் சீரணிக்கும்.

கழுநீர்காடி 5 நாழிகையிலும், மா, பொரியுருண்டை, மிளகோதனம், பசுவின்பால் இவையெல்லாம் ஒன்றாகக் கலந்து ஓர் தினத்திலருந்தில் 20 நாழிகையிலும் சீரணமாகும்.

### கஞ்சிவகை, நல்ல வெல்லம், தேன், காய்கள், பச்சரிசி இவைகளின் சீரண காலம்

*வர்த்திக்கும் வடித்தகஞ்சி வகையொட்டிற் சீரணங்காண்*
*தித்திக்கு நல்லவெல்லந் தேனிருபது நாழிகைக்கு*
*ளுற்றிடுங் காயினங்க ளற்றிடு மெண்பதத்துட்*
*சுத்தும் பச்சரிசி நாலைங் கடிகையுட் சீரணிக்கும்.*

தேகத்தைத் தூலிக்கச் செய்கின்ற வடிகஞ்சி முதலிய கஞ்சிகள் 9நாழிகை நல்லெண்ணெய், தேன், பச்சரிசி 20நாழிகை, கத்திரிக்காய் முதலிய விழுக்கரி காய் 8 நாழிகையிலும் சீரணமாகும்.

### இளநீர், சர்க்கரை, பானகம், தயிர், மோர்களின் மேல் கலம், வறுத்தமா இவைகளின் சீரண காலம்

*இளநீர் சர்க்கரை பாணக்க மேழுநாழிகையிற் செரிக்கும்*
*வளமுள தயிரின்மேலும் வார்துணு - மாரின் மேலுந்*
*தெளிவுறு தண்ணீருண்ணச் செரித்திடுங் கடிகையத்தில்*
*தெளிதல்வறுமாநீருஞ் செரித்திடுங் கடிகை யேழில்.*

இளநீர், சர்க்கரை, பானகம் 7 நாழிகையில் செரிக்கும், தயிர், மோர், தண்ணீர் 5 கடிகையில் செரிக்கும். 7 கடிகையில் கடினமான நீர் சீரணிக்கும்.

### சுடுநீர், முக்காற் சுண்டிய நீர், ஆறியநீர் இவைகளின் சீரணகாலம்

*சுட்ட நீருண்ணுங்காலை சொல்லிய வாறா முக்காண்*
*மட்டிலே கொதித்தவெந்நீர் வகுக்கிலே டிரையேயாகுந்*
*திட்டமாய்க் குளிர்ந்த நீர்தான் செரிக்குமொன்பதின் மேலென்ன*
*மட்டிட்ட முலை யினாளே வழுத்து நாழிகையைத் தானே.*

சுட்ட நீர் உட்கொண்டால் 6 நாழிகைகளில் சீரணமாகும். முக்கால் கூறு சுண்டிய நீர் 7½ நாழிகையில் சீரணமாகும். அருந்தும் பதமாக ஆறிய நீர் 9 நாழிகைகளில் சீரணமாகும்.

## மரம், பூ, தளிர் இவைகளின் சீரண காலம்

தருசெடிகளிலும்பாங்கே சரங்கள் பூததொழுந்தே யெல்லா
மரிவையே தின்றிடிற்சீ ரணஞ்சாமந்தணி ரிவ்வாறே
திரவிய விசனங்கட்கெல்லாஞ் செப்பிடும் வேதமென்றே
குருபரனடியைப் போற்றுங் குறுமுனிரைத்த வாரே.

மரம், செடி, கொடி, புல் இவற்றால் உண்டாகின்ற பூ, தளிர் இவைகள் 7½ நாழிகையில் சீரணமாகும். இவ்வாறாகவே எல்லா பொருட்களுக்கு சீரண காலம் அளவையை சித்த மருத்துவத்தில் கூறுகின்றன. அகத்திய முனிவர் கூறியுள்ளார்.

## நோயணுகாவிதி

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொண்றைப் பெருக்காம - லுண்ணங்கா
ணிர்கழிக்கி மோர்பெருக்கி நெப்புருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி.

பாலுண்போ மெண்ணெய்பெறின் வெந்நீரிற்குளிப்போம்
பகற்புணரோகம் பகற்றுயிலோம் பருவ முத்த
வேலஞ்சேர் குழலிய ரோடின் வெயிலும் விரும்போ
மிரண்டடக்கோமென்றவிடோ மிடதுகையிற் படுப்போ

மூலமுஞ்சேர்கறி நுகரோ மூத்த தயிருண்போ
முதனாளிற் சமைத்த கறியமு தெனினு மருந்தோம்
ஞானந்தான் மடைத்திடினும் பசித்தொழிய வுண்ணோ
நமனார்க்கிங்கேதுகவை ஞாயிருக்குமிடத்தே.

உண்பதிருபொழுதொழிய மூன்றுபொழுதுண்ணோ
முறங்குவதிரா வொழியப் பகலுறக்கஞ் செய்யோ
மண்பரவுகிழங்குளிற் கருணையன்றிப்புசியோம்
வாழையிளம்பிஞ்சொழியக் கனியருந்தல் செய்யோம்.

பெண்கடம்மை திங்களுக்கோர் காலன்றிமருவோம்
பெருந்தாகமெடித்திடினும் பெயர்ந்துநீரருந்தோம்
நண்பெறவுண்டபின்பு குறுநடையுங்கொள்வோ
நமனர்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.

ஆறுதிங்கட்கொருதடவை வமனருந்தயில்வோ
மடர்நான்குமதிக்கொருகாற் பேதியுறைநுகர்வோந்
தேறுமதியொன்றைக்கோர் தரநசியம்பெறுவோந்
திங்களைரைக்கிரண்டு தரஞ் சவறவிருப்புருவோம்

வீறுசதுர்நாட் கொருக்கானெய் முழுக்கைந்தவிரோம்
விருதுகளுக்கஞ்சகன மூன்றுநாட்கொருக்காலிடுவோ
நாறுகந்தப்புட்பமிவை நடுநிசியின் முகரோ
நமனர்கிங்கேதுசுவை நாமிருக்குமிடத்தே.

பகத்தொழுக்கு மாதயாங்கந்துடைப்பமிவைதூட்
படநெருங்கோத்தீபமைந்தர் மரநிழலில் வசியோஞ்
சுகப்புணர்ச்சியன்ன சீரணத் தருணஞ் செய்யோந்
துஞ்சலுணவிருமலஞ் சையோக மழுக்காடை

வகுப்பெருக்கிறிகிந்துகசமிவை மாலைவிடுப்போம்
வற்சலந்தெய்வம்பிதுர் சற்குருவைவிடமாட்டோ
நகைச்சலமுமுனைச்சலமுந் தெரிக்குமிடமணுகோ
நம மார்க்கங்கோதுசுவை நாமிருக்கு மிடத்தே.

இரவில் பசுவின்பாலை தவிர மந்தம்தரும் வேறு எந்த பாலையும் உண்ணோம். எண்ணெயிட்டுத் தலைமுழுகும் போதெல்லாம் வெந்நீரிலேயே குளிப்போம். பகற் பொழுதில் புணர்ச்சியும், துயிலும் கொள்ளமாட்டோம். வயதிற் மூத்த மாதரையும் உடலிற்படும்படியான இளம் வெய்யிலையும் விரும்போம். மலசலங்களை அடக்கோம். இடக்கையை கீழமைத்தே உறங்குவோம். மூலநோயை உண்டாக்கும் கறிகளை உண்ணோம். புளித்தத் தயிரையே பெருக்கி உண்போம். முன்னால் சமைத்த கறி அமுதுக்கு ஒப்பேனும் அருந்தோம். பசித்தாலொழிய உணவு அருந்தோம்.

நாள் ஒன்றுக்கு இருமுறையின்றி மும்முறை உணவு அருந்தோம். இராக்காலந்தவறி பகற்காலத்தில் உறங்கோம். பெண்களை திங்கள் ஒருமுறையின்றி மற்ற காலங்களில் சேரோம். பெருந்தாகம் கொண்டாலும் உணவில் கடையிலன்றி மற்ற காலங்களில் நீரையருந்தோம். கிழங்கு வகைகளில் கருணைக்கிழங்கையே உண்போம். வாழைச் சலனதிக்கனியை அருந்தோம். உண்டபின் சிறுநடை கொள்வோம்.

ஆறுதிங்கட்கொருமுறை வாந்தி மருந்தையும், நான்கு திங்கட்கொருமுறை பேதி மருந்தையும், கொள்வோம். ஒன்றரை மாதத்திற்கொருதரம் தவியமும் வாரத்திற்கு ஒருமுறை சவரமும் செய்துகொள்வோம். நான்கு நாட்களுக்கொருமுறை தலைமுழுகுவோம். மூன்று நாட்களுக்கொருதரம் கண்களுக்கு, மையிடுவோம். வாசனைப் பொருட்களையும் பூக்களையும் நடு இரவில் முகரோம்.

விழுப்படைந்த மாதர்களிடமிருந்து உண்டாகும். மணம் ஆடு, கழுதை துடைப்பம் இவைகளிலிருந்து எழும் தூசுமேற்படும்படி நெருங்கோம். இரவில் விளக்கு, மனிதர் மரம் இவைகளில் நிழல்களில் தங்கோம், உணவு பக்குவமாகும் சமயத்தில் புனரோம், உறக்கம், உணவு, மலநீர்க்கழிவு, புணர்ச்சி, அழுக்குச் சீப்பீட்டுச் சீவும்போது சிந்துகின்ற மயிர் ஆகிய இவைகளை மாலைக்காலத்தில் விலகிடுவோம். கன்றுடன் கூடிய பசுவையும், தெய்வத்தையும், பிதுர்க்களையும், குருவையும் வணங்காதிருக்கமாட்டோம். நகத்தினின்று மயிரினின்றும் தெறிக்கும் நீர் உடம்பில் படும்படி அணுகோம்.

இத்தகைய நியதிகளைக் கொண்ட எம்மிடத்தில் எமனுக்கு என்ன வேலை? இறவாது நெடுநாள் நோயன்றி இருப்போம் என்பதே.

## தீநெறியிழிவு கூறல்

சொல்லாருந்தேக பேதங்களினூறிற் கவி தூதுகளுரைத்தற்
கில்லாதுமுள்ளதுமாகிய பதார்த்தங்களு மாற்றியலுஞ்
சொன்னோ
நல்லாரிந்நெறிநடப்பார் சிலர் பிறழ்ந்து நடப்பரெனினா
மென்செய்வே
பொல்லாவல்லாவுடனேழகுவர் பயனடைவர் புகலுங்காலே.

தேசங்கள் தோறும் உணவுகள் தவிர இந்நாட்டி லிருப்பவர்கள் உண்ணத்தக்க குற்றமில்லாத பதார்த்தங் களையும் அவைகளை பாகஞ்செய்து புசிக்கவேண்டிய இலக்கணத்தையும் சொன்னோம். விவேகிகள் இம்முறை நின்று நடப்பார். மாறி நடப்பவர்கட்கு நாம் பொருப்பாக மாட்டோம். இதனால் அவர்கள் விடத்தன்மையுடைய பலனையே அடைவர்.

**நன்னெறிப் பெருமை கூறல்**

திரவியலும் தில்லுணர்ந்தே தின்றனுப விப்பார்
பரவியநோய் காணாராய்ப் பால - ரரிவயதேர்
மெய்யங் களித்திடுகோன் மிக்காயுள் பெற்றீரேழ்
வையங் களித்துடவாழ் வார்.

பதார்த்தங்களின் குணங்களையும், அவைகளைப் புசிக்கவேண்டிய காலபேதங்களையும் பகுத்தறிந்து புசித்து அதனால் கிடைக்கின்ற சுகத்தை அனுபவிப்பார்கள். பலவாகக் கூறப்பட்ட பிணிகளையும் காணாதவர்களால் புத்திரர்களையும், மலைபோல் உறுதியான சரீரத்தையும், நீண்ட ஆயுளையும் பெற்று இன்புற்று வாழ்வர்.

***அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல***
***துய்க்க துவரப் பசித்து.***

ஒருவன் முன்னுண்டது அந்தப்படியை அறிந்து பின் மிகப்பசியை உண்ணுமிடத்து மாறுகொள்ளாத உணவுகளைக் குறுக்கிக்கொண்டு உண்ணக்கூடியவை மாறுகொள்ளாமை யாவது உண்பவன் சரீர சுபாவத்தோடு மாறுகொள்ளாமையும் கால இயல்போடு மாறுகொள்ளாமையும், மாறுபாடில்லாத உணவுகளேயானாலும் மனம் வேண்டிய மட்டும் உண்ணாமல் பிணிவரா அளவினால் உண்ணவேண்டும். இவ்வாறு உண்பவன் உயிர்ப்பிணிகளால் துன்பமுறாமல் சுகம் அடைவான்.

**பதார்த்த குணபாடம் மூலமும், உரையும் முற்றிற்று.**